உ

# திருக்குறள்
# தீபாலங்காரம்

திரிச்சிராப்பள்ளி ஜில்லா குளித்தலை தாலூகா

மருங்காபுரி ஜெமீன்தாரிணி

## ஸ்ரீமதி கி. சு. வி. இலட்சுமி அம்மணி அவர்களால்

இயற்றப்பட்டது.

அடியேன் மனத்தின்கண்
அல்லும் பகலும் அகலாத்
துணையாயிருந்து அருள்
புரியும் எமது ஆண்டவனும்
கலியுக
வரதனுமாகிய முருகவேளின் திவ்ய
பாத கமலங்கட்குத் திரிகரண சுத்தி
யுடன் இந்நூலை அர்ப்பணம்
செய்திருக்கின்றனன்.

கி. சு. வி. இலட்சுமி அம்மணி,

ஜமீன்தாரிணி, மருங்காபுரி.



கி. சு. வி. இலட்சுமி அம்மாள்

உ
சண்முகநாதன் துணை

# முகவுரை

இங்ஙிலவுலகின்கண் தோன்றிய ஆன்மகோடிகள் பலவற்றுள்ளும்,
" எண்ணரிய பிறவிதனின் மானிடப் பிறவிதான் யாதினும் அரிதரிதுகாண் "
என்னும் சிவஞானச் செல்வராகிய நம் தாயுமானப் பெருமான் அமுதவாக்கின்
படி, இம்மக்கட்பிறவியே மேலானது.

அஃதெதனலெனின் அறம், பொருள், இன்பம், வீடென்னும் நான்கு உறுதிப் பொருள்களையுமுணர்ந்து, பொருளல்லவற்றைப் பொருளாகக் கொள்ளும் மயக்கம் முதலிய குற்றங்களை யெல்லாம் அறவொழித்து நன்னெறியிற் செல்லும் சிறப்புடைமையினலேயாம். மக்கள் மேற் சொன்ன மேன்மையை அடைதற்கு அரும்பெரும் நூலுணர்ச்சியே அவசியமான கருவியாக விருக்கின்றது. அந்தகைய நூல்கள் எண்ணிறந்தன வுளவேனும், உத்தரவேதமென்று விளங்கா நின்ற திருக்குறளைப் போன்று உறுதிப் பொருள்களை புணர்த்தவல்ல அரிய நூல் இவ்வவனியில் யாதுமில்லை. இதற்குச் சான்றுகள் பலவுளவேனும், இக்காலத்தில் தெலுங்கு, இங்கிலீஷ், பிரான்சு , ஜர்மன் முதலிய பாஷைக்குரியவர்களும், தத்தம் பாஷையில் இதனை மொழி பெயர்த்துக்கொண்டு பொன்னேபோற் போற்றுகின்றதே பெருஞ்சான்ருகும். இவ்வரும்பெரும் நூலுக்கு மதிநுட்பமுடைய உரையாசிரியர்கள் பலர் பதவுரை, பொழிப்புரை, கருத்துரை, விசேடவுரை

முதலிய எழுதியிருக்கின்றார்கள். ஆயினும் அவ்வுரைகளெல்லாம் இலக்கண இலக்கியம் பயின்ற நுண்ணிய அறிவுடையவர்களே யன்றி ஏனையோர் எளிதிலுணர்ந்து தருமார்த்த காம மோக்ஷம் அடைவதற்கு வழியில்லாம லிருக்கின்றன வென்பது யாவரும் அறிந்த விஷயமே. அது கருதி இந்நூலை வசன ரூபமாக எளிய நடையில் எழுதுவதும், எவரும் அதனைச் சுலபமாக வுணர்ந்து அந்நெறிகளைக் கைக்கொள்வதும் அவசியமா மென்று ஸ்ரீமான் மு. ரா. அருணசலக் கவிராயரவர்கள் வசன ரூபமாக வெளியிட்டிருந்தார்கள். அந்நூல் பெரிதும் உபகாரமா யிருப்பினும், அஃது உரையாசிரியர் கருத்தொன்றையே தழுவி விரியாது சென்று கொண்டிருத்தலின், இடத்திற் கேற்றவாறு வியாச முறையில் பல தமிழ்ச் சரிதங்களை இடைப்பெய்து வழங்கின் பின்னும் உபகாரமாமென ஆன்றோர் பலர் உரை நிகழ்த்தினர். ஆகலின் அதனையே குருமொழியாக் கொண்டும், எல்லாம் வல்ல கருணாநிதியின்

திருவருளை முன்னிட்டும், நூற்கருத்தை யும் ஆசிரியர் பரிமேலழகர் உரைக் கருத்தையும் ஸ்ரீமான் கவிராயரவர்களின் வசன காப்பியத்தையுந் தழுவிக்கொண்டும் அடியேன் சிற்றறிவிற் கெட்டியமட்டும் எளிய வசன நடையில் எழுதிமுடிக்க நெடு நாளாக ஆவல்கொண்டு சில அதிகாரங்களை வசன நடையாகச் சிறு துண்டுக் கடிதங்களில் எழுதி வைத்திருந்



தனன். அவற்றைக் கண்ட சில பெரியோர்கள் அடியேன் ஆவலுக்கு அநு குணமாக, " நீவிரெழுதிய வியாசங்களை முறைப்படி எழுதி வெளிப்படுத்தினால், அது பலர்க்கு முபயோகமாகு"மென்று கூறி மிகவும் ஊக்கமூட்டினார்கள். அவர் கள் அங்ஙனம் செய்ததற்குக் காரணம் தமிழ் வேதமாகிய இத்திருக்குறளில் வைத் திருக்கும் அபிமானமும், அடியேனுடைய அறிவை அபிவிர்த்தி செய்விக்க வேண்டுமென்ற அபிப்பிராயமுமே யன்றிப் பொதுமக்களிடத்து வைத்திருக் கும் தண்ணளியுமாம். அப்பெரியோர்களுடைய அபிப்பிராயத்தையும், அடியேன் ஆவலுடன் கொண்ட முயற்சியையும் அசட்டை செய்ய வியலாமையால், தெய்வத்தன்மை பொருந்திய இத்திருக்குறளில் கூறப்பட்ட அறத்துப்பால் அதி காரங்கள் 38-னையும், பொருட்பால் அதிகாரங்கள்

70-ஐயும் ஆங்காங்கு ஒன்று சேர்த்துப் பிரித்த 51 அதிகாரங்களை 51 வியாசமுறையிலும், காமத்துப்பாலின் 25 அதிகாரங்களைச் சரிதப்போக்கிலும் சுருக்கமாக எழுதி முடித்தனன். இந் நூலை இதனினும் மிகத் தெளிவாயும் விரிவாயும் எழுதலாமென்று கல்விமான்கள் கருதலாம். ஆயினும் அதிக நூல் பயிற்சியும் கேள்விகளும் இல்லாத அடியேன்,

கான மயிலாடக் கண்டிருந்த
வான்கோழி
தானு மதுவாகப்
பாவித்துத்—தானுந்தன்
பொல்லாச் சிறகைவிரித் தாடினாற்
போலுமே
கல்லாதான் கற்ற கவி.

என்னும் ஆன்றோர் வாக்கியத்திற் கிணங்க இந்நூலை யெழுதலானேன். இந் நூலில் பிரயோகிக்கப்பட்ட வாக்கியங்கள் முரணாகவும், உதாரணங்கள் ஒவ்வாமையாகவும் இருக்கலாம். ஆயினும், அடியேன் புன்மொழிகளுக்கிடையே தெய்வப்

புலமை வாய்ந்த திருவள்ளுவ நாயனார் திருவாய் மொழிகளுஞ் சேர்ந்திருப்பதால் அந்த விசேடத்திற்காவது ஆன்றோர்கள் இந்நூலை அங்கீகரித்து, குற்றங்களை நீக்கிக் குணத்தைக் கொள்வார்களென்று நம்புகிறேன். இந்நூல் முழுவது மெழுதி முற்றுப்பெற அருள் புரிந்தவரும், "வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்" என்ற வேத வாக்கியத்தை மெய்ப்பித்தவரும், மெய்ப்பிக்கின்றவரும், மெய்ப்பிப்பவரும் ஆகிய நம் இறைவன் இவ்வுலகின்கண் இந்நூல் என்றும் நிலவத் திருவருள் செய்யுமாறு அவரை மனத்தாலும், வாக்காலும், காயத்தாலும் வணங்குகிறேன்.

Palace
MARUNGAPURI,
*Kulitalai Taluk,*
*Trichinopoly Dt,*
10—9—28.

கி. சு. வி. இலட்சுமி அம்மணி,
ஜமீன்தாரிணி, மருங்காபுரி.

# OPINIONS

**T. M. NARAYANASAWMY PILLAY**
TEPPAKULAM POST,
M. A., B. L., M. L. C.,
TRICHINOPOLY.
*Advocate.* *17th November, 1928.*

I welcome the " Thirukkural Deepa Alankaram " by Srimathi K. S. V.

Lakshimi Ammani the Zemindarini of Marungapuri. The Thirukkural, as every one knows, is the "great work" in Tamil. Its importance can be realised by the fact that it has been translated into almost all the European languages and has become the common property of almost all tne civilised world. It is one of the works which we ought to read and re-read and make it a part and parcel of ourselves. Our country will greatly benefit by a true and proper study of this great work. There are commen- taries for this work like the one by Parimelalagar. Such commentaries are not within the easy reach of an ordinary layman ; they can be made use of only by people well versed in Tamil literature. But the present "Thirukkural Deepa Alankaram" is not

of that kind. It lays bare and brings home the external truths enshrined in Thirukkural to the man in the street. The book is well arranged and the subjects have been well analysed. First the meaning by words given, then a general meaning and then something like a short essay on each subject illustrated by good stories called from our Puranas and epics. A reading of this work gives one not only an insight into Thiruk- kural but also acquaints him with several other works and our Puranas and epics. The style is easy, clear and lucid. As the title of the book indicates, the present work is like the "great Light" banishing away all darkness and beautifying the house.

The commentary speaks well of the talents

and the literary attain- ments of the Zemindarini which are of a very high order. The book will be of great help to understand and appreciate Saint Thiruvalluvar ; and the Zemindarini has laid the whole Tamil land under a deep debt of gratitude and once more let me say that I heartily welcome this work.

T. M. NARAYANASAWMY PILLAY,
*President District Board, Trichinopoly.*

viii.

K. G. SESHA AIYAR,
B.A., B.L., M.R.A.S.
TRIVANDRUM,
*Retired Judge,* *20th November, '28.* *Travancore High Court.*

Zemindarini Sri K. S. V. Lutchmiammani of Marungapuri has produced an exegetical work on Tirukkural and its teachings, under the name of திருக்குறள் தீபாலங்காரம். It is a work of rare charm and merit. It is written in excellent Tamil, in attractive style. I regard the work as a valuable addition to Tamil Prose Literature ; and I am sure it deserves to serve as a model of expository essays in that language. In my view, the book is certain to be welcomed by all lovers of good, readable and instructive Tamil prose. I must congratulate the learned authoress on the excellence of her work ; and I look forward with pleasure to other works of similar merit from her gifted pen.

K. G. SESHA AIYAR.

---

K. SUBRAMANIA PILLAI, M.A., M.L.,
EAST NEW STREET,
*Advocate*,
TINNEVELLY.
*Tagore Professor of Law.*

CAMP.

*29th November, 1928.*

'Tirukkural Dipalankaram' is a good prose work which expounds the ideas of Tirukkural in an intersting and lucid manner. It is written in an easy, sweet and popular style. It abounds with apt and beautiful illustrations drawn from Puranas and Ithihasas. The author exhibits no bias to any creed. Through- out the work, the grand purpose of devotion to the Supreme Being is kept in view. Although the work

is not characterised by anything in the nature of modern criticism, it will be, I am sure, of immense educative value to the masses from the moral and religious point of view. The author has laid the Tamil public under a debt of gratitude to her for this her very useful and edifying literary effort.

K. SUBRAMANIAN.

---

ix

M. S. PURNALINGAM PILLAI, THE
BIBLIOTHECA, B. A., L. T.,
MUNNIRPALLAM P. O.,
*Emeritus Prof. of English,*
TINNEVELLY DT.
*Bishop Heber College,*
*Trichinopoly.*
*31st*

*December, 1928.*

DEAR MADAM,

Thiruvalar T. Lakshmana Pillai Avergal, B. A. of Trivandrum was good enough to send me an advance copy of your Kural Dipalankaram for my opinion, and I am glad that a lady of your status and stamp has come forward with a clear exposition of each chapter of the famous Tamil classic in simple and intelligible prose. You have closely followed Parimelalakar's commentary and sensibly put together the substance of the chapters bearing on the same topic as 'Natpu', 'Avai', 'Iravu', 'Vali', 'Vinai', 'Ookam', 'Pagai', and 'Padai'. Your book dispenses with the Kavirayar's Kural in prose, with the volumes of Kural stories published for the

use of pupils in schools, and with the Kural Natakam of the Kamatthu Pal or the third book on Love. It augurs well for Tamil that a Zemindarini has taken a deep interest in Tamil Literature.

Soliciting your reply,

I am,

Yours truly,

M. S. PURNALINGAM PILLAI.

---

*ஸ்ரீமதி மருங்காபுரி ஜமீன்தாரிணி அம்மணியார் அவர்கள் இயற்றிய "திருக்குறள் தீபாலங்காரம்" என்னும் திவ்ய நூலைப் படித்துப் பார்த்தேன். அது, திருக்குறள் என்னும் தமிழ் மறைக்கு விரிவுரை மொழிந்து, தென்மொழி வடமொழிகளின்கண் ணுள்ள சிறந்த சரித்திரங்களிலிருந்து அரிய உதாரணங் களும் அத்தாட்சிகளும் பொருந்தக்காட்டி, அதன் உண்மைகளை வற்புறுத்தி மெய்யாகவே அலங்காரம்*

செய்கின்றது. இப்படி நூலியற்றல் இருமொழியினுமுள்ள இலக்கிய நூல்களையும் ஞான நூல்களையும் கசடறக் கற்றுணர்ந்து அரிய சொல்லாற்றலும் வாய்ந்தவர்க்கல்லாது இயலாதென்பது இந்நூலை வாசிப்போர்க்கு அகங்கை மணிபோல் விளங்கும். இவ்வம்மணியார் அவர்கள் திருக்குறளின் தத்துவங்களை இவ்வளவு நுட்பமாய் ஆராய்ந்துணர்ந்திருக்க, "நிற்க வதற்குத் தக" என்றபடி தமது வாழ்விலும் அவற்றின் சாரங்களை

சுவானுபூதிக்குக்கொணர்ந்தே

*

யிருப்பர் என்பது உய்த்துணரக் கிடக்கின்றது. இந்நூல் செந்தமிழ் நன்னடையில் எழுதப்பெற்று ஞானச்சுவையும் பக்திச் சுவையும் பழுத்து விளங்குகின்றதால், தமிழபிமானிகளாகிய எல்லோராலும் ஆதரிக்கத்தக்கது. தமிழுலகுக்கு இவ்வம்மணியார் அவர்கள் செய்த அரிய உதவிக்கு அவ்வுலகம் " வையகமும் வானகமும் மாற்றலரிது "

கவி

செந்தமிழ்க் கடல்கடைந்த தன் அமுத
முண்டதனை
நந்தமிழ்ப் பெருமாயினர் அருந்தி
நன்னிலைசேர்
தந்தமில் பயனடைய வைத்தார்
இலக்குமிப்பேர்ச்
சிந்தை நன்மணிஉயர் செமீந்தாரிணி
தெளிந்தே.

திருவனந்தபுரம், 1—10—1928. | தி. லக்ஷ்மண பிள்ளை, பி. ஏ., பென்ஷண்டு டிவிஷனல் ட்ரெஷறி ஆப்பீஸர், திருவனந்தபுரம்.

---

Sister

*Ice House*, TRIPLICANE, *11—10—28.* | R. S. SUBBALAKSHMI AMMAL, B. A., L. T.,

திருவள்ளுவ நாயனாரது "திருக்குறள்" என்னும் அரியநூல், பல மதத்தினரும் பல ஜாதியாரும் தம் தமது பாஷையில் மொழிபெயர்த்து அதன் அருமை பெருமைகளை உணர்ந்து அனுபவிக்கும் ஒரு அழகிய நூல். தமிழுலகில் ஒவ்வொருவரும் வேதத்துக்குச் சமானமான இந்நூலைத் தினமும் பாராயணம் செய்து நன்னெறியிற் செல்லவும், தம் தமது கடமைகளைச் சரிவரச் செய்யவும் வேண்டிய நீதிகளை இதிலிருந்து கற்றுக்கொள்ள வேண்டியது அவசியமாகும். சாதாரணமான கல்வியறிவுள்ள ஆண்மக்களும் பெண்மக்களும் கூட திருக்குறளின் சாரத்தை அறிந்து அவ்வானந்தத்தை அனுபவிக்கச் சாதனமாய் நமது சகோதரி ஸ்ரீமதி லக்ஷ்மி அம்மணி அம்மாள் அவர்கள் இந்நூலை எளிய வசனநடையில் எழுதி மூலமாகிய பாடங்களையும் விடாமல் சேர்த்திருப்பது மிகவும் புதியதோர் முறையாகும். பள்ளி மாணவர்களும்கூட இவரது திருக்குறள் வசனத்தைப் படித்து மிகுந்த

தன்மையைப் பெறலாம். அறிஞர்கள் பலர் இவ்வரிய நூலைப் பாராட்டிப் பலருக்கும் பயன்படுமாறு செய்வார்களென நம்புகிறோம். இதுபோன்ற இன்னும் பல உபயோகமான புத்தகங்களை எழுதும் ஆற்றலையும் ஊக்கத்தையும் இந்நூலாசிரியருக்குக் கடவுள் கொடுப்பாராக.

(Sd.) R. S. SUBBALAKSHMI B. A., L. T.,
*Head Mistress, Lady Willingdon Training College, Triplicane.*

## xi

**சென்னைக் கோமளேசுவரன் பேட்டை, ஆசிரியர் - ஸ்ரீமத் கோ. வடிவேலு செட்டியாரவர்கள் அபிப்பிராயம்.**

மேன்மை பொருந்திய கே. எஸ். வி. இலட்சுமியம்மணி ஜமீன்தாரிணி யவர்களெழுதிய திருக்குறள் தீபாலங்காரமென்னும் வசன வடிவப் புத்தகத்தை முற்றும் படித்துப் பார்த்தேன்.

திருக்குறளைப் பரிமேலழகருரையோடு விடாது படித்துவரும் எனக்கு இப்புத்தகம் பெருவியப்பை யுண்டாக்கியது. ஜமீன்தாரிணியாரவர்கள் திருக்குறளின் கருத்துக்களைப் பரிமேலழகருரையைத் தழுவி உதாரண வாயிலாகவும், உபமான வாயிலாகவும், புராண சரித்திரங்கள் வாயிலாக வும், பழமொழி வாயிலாகவும் விளக்கியெழுதிய விஷயம் மிகவும் வியக்கத்தக்கதாக விருக்கின்றது. ஜமீன்தாரிணியாரவர்கள் தமக்குள்ள வேதாந்த சாஸ்திரப் பயிற்சியை வேண்டுமிடங்களில் நன்ருக விரித்து விளக்கியிருக்கின்ருர்கள். இதுவும் வியக்கத்தக்கதாக விருக்கின்றது. திருக்குறளின் கருத்துக்களை மிகத் தெளிவாக விளக்கி யுள்ள இப்புத்தகம் தமிழ் மக்கள் ஒவ்வொருவர் கரத்திலும் இன்றியமையா திருத்தற் குரியதாமென்பது தெனதபிப்பிராயமாம். ஞானத் தாயாகிய ஔவையாரைப்போன்று சிறந்து விளங்கும் ஜமீன்தாரிணியாரவர்கள் திருக்குறள் தீபாலங்காரமெழுதித் தமிழுலகத்திற் குபகரித்தாற்போல நூல் பல

வெழுதி உபகரித்து வாழும்படி

27—10—1928.

**Mahamahopadyaya**

**V. SWAMINATHAIYAR,**

***Madras.***

எல்லாம்வல்ல இறைவனைப் பிரார்த்திக்கின்

**கோ. வ.**

---

"TYAGARAJA VILAS"

*Tiruvettiswaranpet*

*4—11—28.*

திருக்குறளுக்குச் சமானமான நீதிநூல் வேறு

இல்லையென்பது ஆன்றோர் கருத்து. அது பலவேறு பாஷைகளிலும் பல பலவாறாக மொழி பெயர்க்கப் பெற்றிருத்தலே அதன் பெருமையை நன்கு தெரிவிக்கும். திருக்குறளையே ஆதாரமாகக் கொண்டு எழுதப்பெற்றுள்ள செய்யுள் நூல்களும் வசன நூல்களும் பல இக்காலத்தில் வழங்கி வருகின்றன. அவற்றுள்ளே கௌரவம் பொருந்திய மருங்காபுரி ஜமீன்தாரிணியவர்களால் சமீபத்தில் எழுதி வெளியிடப்பெற்ற "திருக்குறள் தீபாலங்கார" மென்னும் வசன நூலைப் படித்துப்பார்த்து மிக்க மகிழ்ச்சியடைந்தேன். அதன்கண் அமைந்துள்ள பலவகைக் குறிப்புக்களும், மேற்கோள்களும், வசனநடையும் ஜமீன்தாரிணியவர்களுடைய கல்வியறிவை யும், ஆராய்ச்சி வன்மையையும், தமிழ்ப் பாஷையிலுள்ள அன்பையும் செவ்



வனே எடுத்துக் காட்டுகின்றன. பொருட் செல்வத்தோடு கல்விச்செல்வமும் அவர்கள்பால் அமைந்திருப்பது யாவரும் பாராட்டத்தக்கது.

இவ்வசன நூலை யாவரும் வாங்கிப் படித்துப் பயனடைவார்களென்று நம்புகிறேன்.

---

T. V. UMAMAHESWARAM PILLAI,
B. A., B. L.,
*Pleader*,
*Karuntattankudi*,
*Tanjore.*

மருங்காபுரி சமீன்தாரிணி திரு. இலக்குமி
"திருக்குறள் தீபாலங்காரம்" என்னும் உரை

இங்ஙனம் :

**வே. சாமிநாதையர்.**

**KARANTHAI,**

15—11—1928,

# அம்மணியவர்கள் இயற்றிய நூலைப் பெருமகிழ்வுடன்

பார்வையிட்டேன். அம்மையாரது பெருநோக்கமும், பரந்த நூலறிவும் தெற்றெனை வெளிப்படுகின்றது. உயர் பதவிகளிலுள்ள ஆடவர் பெண்டிர் அனைவரும் புலனுகர்ச்சிகளை நாடுவதும், கல்வி நுகர்ச்சிகளைப் புறக்கணிப்பதும் நாம் காணும் தமிழ் நாட்டின் பெரு வழக்காக இருக்கின்றது. கல்லாத மாந்தர் கைக் கொண்டொழுகும் இந்நெறி, மானுடம் பெற்றூர்க்கு இழிதகவு தருவதை நன் குணர்ந்த இந்நூலாசிரியர், தமது எய்ப்பில் வைப்பாகத் தமிழ் நாட்டினர் போற்றி வரும் தமிழ் மறையாகிய திருக்குறள் முதலிய உறுதிப்பொருள் பயக்கும் நூற் களை ஆராய்ந்து, அவற்றில்

செம்பொருளெனத் தான் கண்டவற்றைக் கற்றோர்க்கே யன்றி மற்றோர்க்கும் பயன்படும் வண்ணம் எளிய நடையில் எழுதி வெளியிட்டது நாட்டினர் பாராட்டத்தக்க தொன்றாம். இந்நூலாசிரியரும் அவர்களது நன்முயற்சியின் பயனாகிய "திருக்குறள் தீபாலங்கார"மும் நீடு நிலவுமாறு இறைவன் திருவருள் புரிவாராக.

கரந்தை, உமாமகேசுவரன், 15—11—1928.

(ஒப்பம்) த. வே.

தலைவர், கரந்தைத் தமிழ்ச் சங்கம்.

---

N. M. VENKATASWAMI NATTAR
*Thirunavukkarasu Tamilakam,*
*Lecturer in Tamtl,*
Rock Fort, Trichinopoly. *Bishop Heber College.*
*27—11—1928*

மருங்காபுரி ஜமீன்தாரிணியார் மாண்புடைய K. S. V. லக்ஷ்மி யம்மணி அவர்களால் இயற்றப்

பெற்ற "திருக்குறட் டீபாலங்காரம்" என்னும்



நூலின்

சிற்சில பகுதிகளைப் படித்துப் பார்த்தேன். இந்நூலில், திருக்குறட் பொருள் முழுதும், ஒவ்வொரு தலைப்பின்கீழ் வியாசம் எழுதுவது போன்ற புதிய முறை கொண்டு, சிறுவர் சிறுமியர் உள்ளிட்ட யாவரும் படித்துணருமாறு, எளிய இனிய உரை நடையில் எழுதப் பெற்றுளது. இதில் முன்னிரண்டு பால்களின் பாக்கள் உரையின் இடையிடை தரப்பெற்றுள்ளன ; நாலடியார், திருமந்திரம், பட்டினத்தார் பாடல், தா யுமானவர் பாடல் முதலிய வேறுபல அரியநூற் செய் யுட்களும் அமைக்கப் பெற்றுள்ளன ; இந்நூல் கூறும் நீதிகட்கு உதாரணமாகக் கூடிய புராண இதிகாசக் கதைகளும் ஆங்காங்கு இடைமடுக்கப் பெற்றுள்ளன. ஆக்கியோரின் மதிநுட்பம், நூற்பயிற்சி, வேதாந்த விசாரம், உயர்ந்த கருத்து, உரைத்திறன் என்பன இந்நூலால் நன்கு வெளியாகின்றன. மாதர்கள் எத் தகைய கல்வி கற்கவேண்டு மென்பதனையும், அங்ஙனம் கற்றலால்

அவர்கட்கும் நாட்டிற்கும் உண்டாகும் நலத்தினையும் இந்நூலைப் பார்த்தபின் யாவரும் தெளிவாக அறியக்கூடும். அம்மணி அவர்கள் இதுபோலும் அரும்பணி பல ஆற்றித் தமிழ் மாதரார்க்கு எடுத்துக் காட்டாக நெடிது நிலவ வேண்டுமெனத் திருவருளைச் சிந்திக்கின்றேன்.

ந. மு. வேங்கடசாமி நாட்டார்.

---

திருவாரூர், மடப்புரம்.
21—11—28.

"திருக்குறள் தீபாலங்கார"மெனும் உயரிய புதிய நூலொன்று வரப் பெற்றேன். அதனைப் பெருமுயற்சி யேற்று விரிவுரை விளக்கி வரைந்தவர் மருங்காபுரி ஜமீன்தாரிணி ஸ்ரீமதி இலட்சுமி அம்மணி யம்மாள் என்றறிகிறேன். தனித்தமிழ் அணங்கின் மணிமுடியின் நடுநாயக மணியாகவும், முதனூலாகவும், முக்காலத்தும் ஒப்புயர்வற்ற உண்மை நூலாகவும் மிளிரும் தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனாரின்

திருக்குறளில் தனக்கேற்பட்ட பெரும் பற்றே இம் முயற்சியில் தலையிடும் பேரூக்கத்தினை இவ்வம்மைக்கு எழுப்பிய தென்பதில் ஐயமில்லை. ஆங்கிலப் பட்டதாரிகளாக வெளிவரும் ஆடவருடன் சமத்துவம் விரும்பிப் பட்டமும் பதவியும் வேட்டுப் பெண் மக்களும் வெளிவருவதே பெரு நாகரிகமாக மதிக்கப்படும் இந்நாளில் தாய் மொழியில் ஆர்வம் கூர்ந்து, தான் பெற்ற இன்பம் பெருக இவ்வையகம் எனும் பெருமித நோக்கம் அரும்பி, ஒரு ஜமீன்தாரிணியாகிய பெண்ணரசு முன் வந்திருப்பதை எவ்வுரை கொண்டு போற்றவல்லேன். இனி இவ்வம்மணியின் நூற் குறிப்புக்களை முற்றும் நோக்கும் அவகாசம் வாய்க்கப் பெற்றிலேனாயினும் அம்மை யொருவரால் மேற்கொளப்பெற்ற அருமுயற்சிக்காக மட்டில் மனத்தெழும் வெள்ளத்தினை-சொல் வரம்



புக்குட்படுத்த வியலவில்லை. இவ்வம்மையார்போல் இன்னும் சிலராவது இத் தகைய தாய்மொழித்

தொண்டில் இறங்கி நவீன உலகை விழிப்புறச் செய்வார்க ளாக. அம்மையார் மேலு மேலும் இத்தகைய தெய்வத் தொண்டாற்றி நீடூழி வாழ்வார்களாக.

இங்ஙனம் :

**பண்டிதை - அசலாம்பிகை யம்மாள்.**

---

யாழ்ப்பாணம், நல்லூர் சைவப் பிரகாச வித்தியாசாலைத் தலை வர் திருவாளர் - **த. கைலாச பிள்ளை அவர்களின்** அபிப்பிராயம்.

" திருக்குறள் நீதியலங்காரம் " என்னும் இந்த நூலிலே திருவள்ளுவ நாய னூர் எடுத்துக்கொண்ட விஷயங்களையே விஷயங்களாக எடுத்துக்கொண்டு வியா சங்கள்போ லெழுதி, அவற்றிற்குத் திருக்குறட் செய்யுட்களைப் பிரமாணங்க ளாகக் காட்டி, அந்தக் குறள்களிலுள்ள பொருணுட்பங்கள் பல விளங்க வைக்கப் பட்டிருக்கின்றன. தொல்காப்பியம் முதலிய பழைய பெரிய

இலக்கணங்கள் கற்றவர்களே விளங்கவேண்டிய ஒரு அரிய நூலைத் தமிழில் எவ்வளவு அற்ப அறிவுடையவர்களும் விளங்கத் தக்கதாக எழுதுவது மிகவருமையான ஒரு வேலையாகும். விஷயங்கள் கோக்கப்பட் டிருக்கிற முறை ஒவ்வொரு செய்யுட் கும் முறை சொல்வது போலிருக்கின்றது. மூன்றாவதாகிய இறுதிப்பாலை முடித்திருக்கிற வகை மிகவும் ஆச்சரியப்படத் தக்கது. இப்படிச் செய்து முடித்த மருங்காபுரி ஜமீந்தாரிணி ஸ்ரீமதி இலட்சுமி அம்மணி அம்மாளவர்க ளுடைய திறமையை மிகவும் பா ராட்டுகிறேன் . இந்த நூலைக் கண்டவுடனே ஜமீந்தாரிணியவர்கள் திருவள்ளுவர் குறளின்மேற் கொண்ட ஆர்வம் எவ்வள வென்றும், அவர்களின் அறிவின் பெருமை எவ்வளவென்றும் அறிந்து கொண் டேன். இந்நூல் பிறர் சிலர் எழுதி வெளியிடும் நூல்கள்போல வியாபாரத்துக் காகச் செய்யப்பட்டதாகத் தோன்றவில்லை. நல்ல காகிதத்தில் நல்ல எழுத்தில் பெரும் பொருட் செலவில் அச்சிடப்பட்

டிருக்கின்றது. திருக்குறள் படிக்கவும் தருமநெறி ஒழுகவும் விரும்புகிறவர்கள் யாவரும் இந்த நூலை வாங்கிப் படிக்க வேண்டும். இந்நூலானது யாவராலும் விளங்கத் தக்கது. இனி ஜமீந் தாரிணி யவர்கள் முகவுரையிலேயே " இவரது மதம் இன்னதென்று எவ்விதத்தி லும் நன்கு விளங்கவில்லை " என்று எழுதி யிருக்கிறார்கள். இதன் கருத்து அவருடைய நூலைக்கொண்டு அவருடை மதம் இன்னதென்று விளங்கவில்லை என்பதேயாம் ; வேறன்று. இதுவுமொரு புகழாப் புகழ்ச்சி. வேதம்போல இந்நூலும் பொதுநூலு ம் மறைநூலுமாகச் செய்யப்பட்டமையின், ஆயனூர் அப்படியே இதனையும் விளங்காதபடி வைத்தனரெனக. அவருடைய சரித்

XV

திரத்தினாலும், ஆருகதர் பௌத்தர் முதலானோர் இவரைத் தம்மதத்தினரென்று எங்காயினுஞ்

சொல்லாமையாலும், இவருடன் பிறந்தவர் யாவருஞ் சைவரா யிருந்தமையாலும், இவருடைய நூலுக்குச் சிறப்புப் பாயிரஞ் செய்த இவர் காலத்தவராகிய சங்கப் புலவர்கள் இவருடைய நூலை ஆரியருடைய நான்கு வேதங்களின் சாரமென்று பாடியிருத்தலினாலும், பிறவாற்றாலும் திருவள்ளுவ

நாயனார் சைவரே யென்பது நிச்சயம்.

யாழ்ப்பாணம், நல்லூர்.
விபவஸு கார்த்திகைமீ 11உ.

---

பா. வே. மாணிக்கம் நாயக்கர், B. E.
சிவபுரம் ஜமீன்தார்,
ஈஸ்வர்பாக்,
மௌபிரேஸ் ரோட்டு, மயிலாப்பூர்,
மதராஸ்.

மருங்காபுரி ஜமீந்தாரிணியாரவர்கள் எழுதிய

இங்ஙனம் :

## த. கைலாச பிள்ளை.

சென்னை

6—12—28

## " திருக்குறள் தீபாலங்காரம் "

என்னும் நூல் கிடைக்கப்பெற்றுப் படித்து மகிழ்ந்தேன். திருக்குறளையே முதன்மையான மேற்கோளாகக் கொண்டு ஒவ்வொரு அதிகாரப் பொருளைப்பற் றியும் பெருஞ்சொல் நிகழ்த்தும் முறையில் நுண்ணிய ஆராய்ச்சித் திறத்துடன் வரைந்துள்ளார்கள். நூலின் அருமை ஒரு பாலாகப் பண்டைக் காலத்துத் தமிழ் நாட்டுப் பெண்மணிகள்

சங்கப் புலவர்களோடு ஒக்கவிருந்த சீரும் சிறப்பும் குன்றினவே எனக் கவன்றிருக்கும் இக்காலத்து இப்பெண்மணியாரின் கல்வித் திறனும் அறவொழுக்கமும் காண யானடைந்த ஆறுத லளவிலது. ஆங்கிலத் துடன் தமிழ்மொழி பயின்று வரும் என தருமைச் செல்விகளையும் இந்நூல் பெரிதூக்கியது. அவ்வாறே நம் நாட்டுப் பெண்மணிகள் அறநூல் கற்க இந்நூல் ஊக்குமென நம்புகின்றேன்.

**பா. வே. மாணிக்கம் நாயக்கர், B. E.**

---

**XVI**

Diwan Bahadur
S. BAVANANDAM PILLAI
*I. S. G. O. B. E. F. R. H. S. (Lond)*
*M. R. A. S. (Lond)*
Justice of the Peace (Retd.)
**Ex. Sheriff of Madras.**

*Bavanandam Academy*
*Newton House*
Church Road, Vepery,
*Madras N. C. 13—1—1929.*

மருங்காபுரி ஜமீன்தாரிணி சீமாட்டி இலக்ஷ்மி அம்மாள் அவர்கள் எழுதியுள்ள “திருக்குறள் தீபகாலங்காரம்” என்னும் புஸ்தகத்தைப் படித்து நான் மிகவும் மகிழ்வுற்றேன். இது மிகத் தெளிவான எளிய நடையில் திருக்குறளின் முப் பாலையும் அதிகார அடைவின்படியே மேற்கோள்களோடும் உதாரணங்களோடும் புராணக் கதைகளைக் கொண்டும் நன்றாக விரிவாக விளங்க எழுதப்பட்டிருத்த. லின் பலர்க்கும் பெரிது பயன்படுமென்று நான் நம்புகிறேன். அறத்துப்பால், பொருட்பால் ஆகிய முன்னிரண்டு பகுதிகளிலும், குறட்பாக்களையுஞ் சேர்த்துக் காட்டியிருப்பதால் இதைப் படிப்பவர்கள் திருக்குறளின் ஒப்புயர்வற்ற சிறந்த கருத்துக்களையே யன்றி பொய்யாமொழிப் புலவரின் வாக்கு விசேஷத்தையும், சொல்லழகையும், செய்யுளமைப்பையும் அறிந்து அனுபவித்து மகிழ்வதற்கும் இது பேருதவியாக இருக்கும். பண்டைக் காலத்தில் ஔவையார், நப்பசலை யார், காக்கைபாடினியார் போன்ற பல

வித்துவசிரோமணிகள் விளங்கிய நமது நாட்டில் இக்காலத்திலும் நமது தாய்பாஷையை அபிமானித்து நன்று கற்று பல நூல்களை யும் ஆராய்ந்து இத்தகைய சிறந்த நூலொன்றை இவர்களியற்றியது மிகவும் நயந்து பாராட்டற்பாலது. இதனை இயற்றியவர் கல்விச்செல்வமும் பொருட் செல்வமும் ஒருங்கு வாய்க்கப்பெற்ற பெண்பாலார் ஒருவரென்று அறிந்து, யாவரும் இதனிடத்துப் பின்னும் அதிகமான அன்புபாராட்டிப் படித்து இன்புறுவார்கள் என்பதற்கு இறையும் ஐயமில்லை.

**ச. பவானந்தம் பிள்ளை.**

---

சென்னை இராயப்பேட்டையில் வதியும், காலஞ்சென்ற சென்னை ஹைகோர்ட்டு நீதிபதி சர். டி. சதாசிவ அய்யரவர்களின் மனைவியார் மங்களம்மாள் அவர்களின் அபிப்பிராயம்.

மாதுஸ்ரீ சகோதரி ஜமீன்தாரிணி K. S. V. லக்ஷ்மி அம்மணி அவர்களால் இயற்றப்பட்ட

"திருக்குறள் நீபாலங்காரம்" என்னும் நூலானது அநேக புராணக் கதைகளை உபமான உபமேயமாகக் கொண்டு சிறந்து விளங்குகின்றது.

ஜனவரி 1929 }
சென்னை }
மங்களம்மாள்.

XVII

NATIONAL COUNCIL YOUNG MEN'S CHRISTIAN ASSOCIATIONS

*India, Burma & Ceylon.*

5, Russell Street, Calcutta,

*February 16, 1929.*

ஸ்ரீமதி K. S. V. இலட்சுமி அம்மணி அவர்களால் எழுதப்பெற்ற "திருக் குறள் நீபாலங்காரம்" என்னும் நூலை யான் மகிழ்ந்து படித்தேன். திருக்குற ளானது தமிழ்நாடெங்கும் மிக்க சிறப்பமைந்த நூலென்று புலவர்களும் தமிழ் நாட்டார் யாவரும் மதிக்கின்றார்கள். எனினும், இக்காலத்தில் அநேகர் அதை வாயினால்

புகழ்ந்துரைக்கின்றது மாத்திரமன்றி அந்நூலின் கருத்துக்களையும் நோக்கங்களையும் உய்த்துணர வேண்டும் என்று விரும்பிப் படிக்கின்றிலர் என்பது மிக விசனப்படத்தக்கது. அந்நூலின் கல்லுரைகள் திருவள்ளுவர் காலத்தின் சந்தர்ப்பங்களுக்குச் சம்பந்தமுள்ளன என்பது மாத்திரமல்ல, நிகழ்காலத்திலும் அதிசமயோசிதமா யிருக்கின்றனவென்பதற்கு ஐயமின்றே. ஆதலால், திருக் குறளின் கருத்துக்களை விளக்கி விவரிக்கும் நூற்கள் மிகவும் பயன்படும். திருக் குறள் தீபாலங்காரமெனும் இந்நூலானது அவ்வாறு செய்யும்பொருட்டு எழுதப் பெற்றது. ஜமீன்தாரிணி அவர்கள் இந்நோக்கங் கொண்டே ஒவ்வொரு அதிகாரத் தையும் எடுத்துப் பல சிறந்த உதாரணங்களைக் காண்பித்து, அதிலுள்ள குறள் பாக் களை மிகவும் நன்னயமாக விளக்கி யுரைத்தார்கள். சுருங்கச்சொல்லல், விளங்க வைத்தல் முதலிய நல்ல குறிப்புக்களுடன் ஸ்ரீமதியவர்கள் எழுதியது மிகவும் புக ழத் தக்கது. இது தெளிந்த நடையும் சொற்சுவையும் பொருள்மேன்மையுமுள் ளது. குறட்பாக்களை எடுத்து

ஒவ்வொன்றின் கருத்தையும் ஒன்றோடொன் றின் சம்பந்தத்தையும் ஒவ்வொன்றுக்கும் ஏற்ற உதாரணங்களையும் கற்பிக்கின் றது. திருக்குறளைப்படிக்க விரும்புவோர்க்கு இந்நூலானது அதிக பிரயோஜன மானதென்று அறிய வேண்டியது. ஸ்ரீமதியவர்கள் இத்தகைய அரும்பெரு நூலை இயற்றினதால் தமிழ் மக்கள் யாவரும் நன்றி பாராட்டவேண்டியது. இவ்விடத்தில் யானும் அவர்களுக்கு மனமிசைந்த நன்றி கூறுகின்றேன்.

(Sd.) H. A. POPLEY, *Calcutta, 14—2—29.*

---

## xviii

Mrs. S. MUTHULAKSHMI REDDI,
M. B. & C. M., M. L. C.

*6. Rundalls Road,*
Vepery, Madras,
*18—2—29.*

" திருக்குறள் " உண்மையை இனிய கதைகளால் விவரித்துப் பாமர ஜனங்கள்

உணரும்படி எளிய நடையில் எழுதியிருக்கும் இப்புஸ்தகம் தென் னிந்தியர்களுக்கு ஓர் அரிய பெரிய கொடை யென்றே சொல்லலாம். இதன் ஆசிரியர் ஸ்திரீ ஜாதியினர். அவர் ராஜரீகஸ்தானத்திலிருந்த போதிலும் செந்தமிழ் ஆராய்ச்சியும் பழைய நூல்களின் அறிவும் அவர்க்கு மிகுந்திருக்கிறதென்று இந் நூலை வாசிப்பவர்கள் நன்குணர்வார்கள். இவ்வம்மையார் சிரமம் பாராட்டாமல் தன் நாட்டினராய தமிழ் மக்களுக்கு நன்மை புரியவேண்டித் தான் எடுத்துக் கொண்ட சிரமத்திற்கு நாடோறும் நம்மவர்கள் நன்றி பாராட்டுவோர்கள் என்று நம்புகிறேன். இவ்வம்மையாரின் கல்வி அறிவு நற்குணம் கற்பு மிகவும் புகழத் தக்கதே. ஸ்திரீ ஜாதிக்கே ஓர் அணிகலமென்று சொல்லும்படியான இவ்வம்மை யார் நீடூழி வாழ்க. இவ்வம்மையாரின் அறிவு செழித்தோங்க. இவ்வம்மையார் இயற்றும் காவியங்கள் யாவருக்கும் பயன்படுக.

---

மதுரைத் தமிழ்ச் சங்கத்து

வித்துவான்
திருப்பரங்குன்றம் - திருவாளர் ச. ரா.
அருணாசலக் கவிராயரவர்கள்

இயற்றியது.

## அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

உலகினுக்கிவ் வொருநூலே போதுமென
வள்ளுவர்முன் னுரைத்த நூலென் றிலகுதிருக்
குறளுரையை யிருவர்செய்து மெல்லாரு மெளிதி
லுண்மை கலக்கலக்கத் துணையின்றிக் காணுமா
றின்மையினாற் கற்றோர் சொற்ற பலவியின்
மேற்கோளு முலகநடைக் கதைகளும்பற் பலவும்
காட்டி: (1) என்னயங் களுமலியத் தீபாலங்

கார மெனு மிந்த நூலை
யின்னமும்பார்த் திடுவமெனக் கல்லாருங் களிகூர
வெழுதி யீந்தான் பன்னருமிவ் வுலகோப காரஞ்செய்
தார்யாரோ ரற்பன் னூலுந் *தன்னமுஞ்
சந்தேகமின்றி யாராய்ந்த நுண்ணறிவின் றகைமை
சான்றோன். (2) காட்டிலுயர் பாண்டிமருங் காபுரியில்
வாழ்மகா ராணி யாகும்

ஈட்டியசி குருவமையு மிலக்குமியம் மணியம்மா
னென்னும்போரான்

---

* தன்னம் - சிறிது. கனம் - மேன்மை.
* இது - தீபாலங்கார நூல்.

## XIX

பாட்டிலுயர் புலவரெலாம் பாடுபெரும் புகழ்பெற்றான்
பரவை ஞாலங் காட்டியபெண் கட்காசி கட்கருளே
யணியென்னக் கவினப் பூண்டான். (3)

பேதைமையென் பதுமாதர்க் கணிகலமென்
றெனவைமுன்னம் பேசுஞ் சொல் மாதாசிக்
கன்றிமற்றோர்க் கென்னயாம் வற்புறுத்தி வழக்கெஞ்
ஞான்று [லிம் மோதலுற நின்றவிவ ளேபுகழோ
டெம்பெடுத்தா ளுலகின் மாதர்
காதல்கல்வி மேற்செலுத்திப் பயிலுவரே
லிவள்போலுங் கனங்கொள் வாரே.(4) இன்னுமித்தக்
கற்பாசி யிதுபோல நீதிநூ லெவற்றி னுக்கு

மன்னுமுதா ரணங்களாற் றெளிவாக விளங்குமெத்த
வகையி னுலுந் தன்னுதரு மங்கருதி யெழுதல்சன்ரு
மதற்கிந்தத் தொல்லை ஞால மின்னுதவஞ்
செய்திருக்க வேண்டுமே கிடைத்த மட்டும் வியப்புற்
ரேமே. (5)

---

சேது சமஸ்தான மஹாவித்வான்

இராமநாதபுரம் பிரம்மஸ்ரீ ரா.
**இராகவையங்காரவர்கள்**

இயற்றியது

**சந்தவிருத்தம்.**

தொன்மருங்குயா புலவாவள்ளுவர் பன்மருங்கினு
மோர்ந்துசெய்
தூயகற்குற ளாயஞானசு காலயத்தழ கறிதாத்
தின்மருந்துயில் கொண்மருமல தெம்மருங்கினு
மறிவையோ
தெரிவரின்றிருள் செறிதல்கண்டொளிர்

திருவிளக்கணி செய்தனன்
சன்மருங்கெழு நன்மருந்துநி கர்ப்பநிற்பவன்
கலைமகள்
கருணையிற்றமி ழூனபுலத்துறை கற்றகற்பக
மொப்பவன் தென்மருங்கையி னரசிலக்குமி
யம்மணிப்பெயர் செகமெலாம்
திகழவந்தவன் மகளிருக்கொரு
திலகமிக்குணர் செல்வியே. வெண்பா.

வற்றாத ஞான மணியாம் திருக்குறட்குக் கற்றோர்
மனக்கண் களிப்பெய்த—நற்பால் விதியிற் சிறந்த
விளக்கணிசெய் வித்தாண் மதிலக் குமியம் மணி.

---

XX

நாகை நீலலோசனிப் பத்திராதிபர்
திருவாளர் ஜி. சதாசிவம்

பிள்ளை அவர்கள்

இயற்றியது.

திருமகளும் மருமகளும் ஒருமகளாய்த் திருவுருவஞ்
சேர்ந்தாற் போலப்
பொருள்மகளாய்க் கலைமகளாய்ப் புகழ்மகளா
யவதரித்த புண்ய ரத்னம்
தெருள்மகளாய் மருங்கையெனுந் திருநகர்ச்செங்
கோல்செலுத்துஞ் ஜீவ ரத்னம்
அருள்மகனாம் இலக்குமியம் மணியென்னுந்
திருநாம வரச ரத்னம். (1)

கலையறிவார் கவிபுனைவார் பலர்கேட்பப் பிரசங்கங்
கவினச் செய்வார்
இலையென்னுஞ் சொல்லொன்றும் அறியாதே
யீத்துவக்கு மின்ப முள்ளார்
மலைவிளக்கா யொளிர்கிருஷ்ண விஜயபூஜ்
ஜெயராஜன் மகிஷி மேலாங்
குலவிளக்காய்க் குடிகளுக்கோ ரன்னையாய்க்
குலவிவருங் குணப்பூம் பாவை. (2)

ஔவையோ ஆண்டாளோ அருள்காரைக் காலம்மை
யாரோ வன்றிச் செவ்விமிகுந் தமிழறியும்

பெருமாளோ செய்ததெனச் செப்பும் வண்ணந்
தெய்வமாத் திகழ்ந்துவரும் வள்ளுவர்செய்
திருக்குறளைச் செம்மை யாக நவ்வியரும் படித்துய்ய
நல்லமுத வசனமா நல்கி னரே.
(3) இருக்குமுதன் மறைப்பொருளை யெவ்வெவருக்
தெரிதரச்செ யிந்த னூற்கே திருக்குறளின் தீபாலங்
காரநல் வசனமெனச் செய்தார் நாமம் பெருக்குமன
விருளோட்டி மெய்ஞ்ஞானச் சுடர்பரப்பும்
பெருமை தன்னால் அருக்கனிகள் தீபாலங் காரப்பே
ராய்க்தமைத்த தமைவே யம்மா. (4)
பூமலிநீர்த் தடஞ்சூழும் மருங்கைநகர்ப் புரந்துவரும்
புகழ்க்கோ மாட்டி தேமலிசெந் தமிழ்மணக்கும்
மாமதுரச் செங்கனிவாய் திறந்து செய்த பாமலியித்
திருக்குறளின் தீபாலங் காரம்போற் பன்னூ லாற்றி
யேமலியிந் நிலவுலகிற் பல்லாண்டு பல்லாண்டா
யினிது வாழி. (5)

---

திரிசிரபுரம் வித்துவானும்
பிஷப்ஹீபர் காலேஜ்
தமிழ் லெக்சாருமாகிய

வித்துவான்

திருவாளர் அமிர்தசுந்தரநாதனுர்

இயற்றியது.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

உலகுதித்த நாண்முதலா இன்றுவரை இவ்வுலகில்
உரமா வாழ்ந்த இலகுபெரும் புலமையினர்
தம்முள்ளே எவரம்மா இனிய எங்கள் நிலவுதிருக்
குறளைப்போல் ஒருநூலைச் செய்திட்டார் நிறையப்
பின்னும் குலவவரும் எவராற்ருன் உரைக்கவரும்
இதனருமை கூற வற்றே. (1)



சீர்பூத்த மறைப்பொருளைச் செந்தமிழான்
முன்னுரைத்த செந்நாப் போதார் பேர்பூத்த
வள்ளுவரின் திருக்குறளாம் தமிழ்மறையைப்
பெரிதும் மக்கள் நீர்பூத்த குவலயத்தே கண்டுணரப்
பொருள்செய்த நிறைந்த கல்விக் கூர்பூத்த
பதின்மருளே எம்பரிமே லழகர்திறம் கூறற்

பார்ரே. (2) எப்பொருளுங் கண்டிடவே
இலஞ்சியமா இருக்குமொரு எழிலார் தெய்வச்
செப்புதிருக் குறண்முழுதும் எழுத்தெண்ணிக்
கற்றிட்ட திறத்தா லீங்கே ஒப்புதிருக் குறட்டீப
அலங்காரம் எனுநூலை உரைத்தா னென்றும்
வெப்புமொழி புகன்றறியா லட்சுமியம் மணியம்மாள்
விரும்ப மாதோ. (3) நல்லமருங் காபுரியின்
நயவேந்தன் கலைவல்லான் நாடு மெச்சும்
வல்லமையான் சுற்கிருஷ்ண விஜயப்போர்
நாதிபனின் வாழ்க்கைத் தேவி அல்லலற வருதிருவும்
அவாவுமெழில் இலட்சுமியம் மணியாம் அம்மை
சொல்லுதிருக் குறட்டீப அலங்காரம் வாழிபுவி
செழிக்க மாதோ. (4)

---

திருக்கைலாய பரம்பரைத்
தருமபுரவாதீனம் வித்வான் ஸ்ரீலஸ்ரீ -
**சட்டைநாத முனிவரவர்கள் அருளிச்செய்த**
**வெண்பாக்கள்.**

சாதிக்கொவ் வோர்விதியாச் சாற்றும் வடமறையின்
பேதத்தா லிவ்வுலகம் பேதுரு—தோதிப்
புவனமெலா மெய்க்நெறியிற் போதவிடுக் தேவர்
கவனக் குறட்பொருளைக் கண்டு.
(1) வல்லவர்கள் கல்வியினின் மாட்டாதா ரானவுல
கெல்லவரு முள்ளத் திருளோட்ட—வல்லமைகொ
டைபாலங் காரத்தைச் செய்தளித்த பெண்மணியார்
மாபா ரகமதனில் வந்து.
(2) பொன்வளமும் பூவளமும் போற்றறிவா
மெய்வளமுந் தன்வளமாக் கொண்ட
தயைமாது—நன்மருங்
கைப்பதியான் கேயஸ்வீ கான்வட் சுமிஅம்ம
ணிப்பேர் ஜமீன்தாரி ணி.
(3)

---

xxii

திருக்கைலாய பரம்பரைத்

தருமபுரவாதீனம் திருப்புள்ளிருக்கு
வேளூர்க் கட்டளை

விசாரணை

ஸ்ரீலஸ்ரீ இராமலிங்கத்
தம்பிரானவர்க ளருளிச்செய்த
அறுசீர்க்கழிநெடிலடி
ஆசிரியவிருத்தம். தேவருயர் மொழியாகுந்
திருக்குறளாந் தமிழ்வேதத் திறத்தை மண்மேல்
யாவர்மொழி பெயர்த்தாலு மத்தனைக்கு
மெய்ப்பொருளே யீயும் வாக்கை பூவிலுயர்
நற்றவருங் கற்றவரு மற்றவரும் பொருந்தித் தேற
காவிலுய ரிலக்குமியம் மணியம்மை யலங்கரித்தா
ணவதீ பந்தான். (1)

தான்குறட்குப் பதின்மருரை தனைச்சகத்தோ
ரெளிதாகச் சாரும் வண்ணந் தேன்மணக்கு
மருங்கைநகர்ச் செல்விமரு மகளாகுஞ் செய்தி
யார்க்குந் தான்றெரிக்க விரும்பியெழிற் றீபாலங்
காரமெனத் தந்தா டன்னை யான்றெரிந்து
நினைக்கின்றே னிருகமலத் துறைமாத ரிவடா

னென்றே. (2)

---

தஞ்சாவூர் வித்துவான் திருவாளர்
சபாபதிப்பிள்ளையவர்கள்
இயற்றியது.
அறுசீர்க்கழிநெடிலடி.

**ஆசிரியவிருத்தம்.** வாணிதன தருக்காந்து வந்தனரோ
வெனப்புகழ மருங்கை மன்னன் சேணிலுயர்
பெரும்புகழ்ப்பூச் செயகிருஷ்ண விஜயன்செய்
தவத்தைத் தேற்ற ஏணியலு மனைவியரா
மிலக்குமியென் பெயர்புனைந்தா ரினிமைப் பாவைக்
காணியென வுறையிடமா மருந்ததிக்குக் கற்பினியல்
கற்பிப் பாரால். (1) திருக்குறளின்
கருத்தையெலாந் தெரிந்தபரி மேலழகர் செஞ்சொற்
றோரத் திருக்குறளுங் கருத்தினரைத்
தெருட்டுதற்காத் தீபாலங் காரஞ் சார்ந்த திருக்குறளி
லிருக்குமுதற் செய்யகலைப் பொருள்களெலாந் திகழச்
செய்தார் உருக்கினரு மிலக்குமியா முத்தமியார்
பெருமைதனை யுரைக்கற் பாற்றே. (2)

---

மருங்காபுரி ஜமீன் மேலூர்
கிராமகர்ணம்
திருவாளர் M. அழகப்பெருமாள்
பிள்ளையவர்கள்
இயற்றியது.

பெருகிதிசே ரைக்குலப் பெருஞ்செழிப்பும்
புகழ்மிகுக்கும் பெருக்கத்தாலுந் தருமலியும் வேழகிரி
வெள்ளாற்றின் பாலாற்றின் றகவி னாலும்
பொருள்மலியுங் கழனியெலாஞ் செஞ்சாலி
விளைவேறிப் பொலித லானுந் தெருமலியு
வமணிசே ரைத்தவள நாடென்னுந் திருநா டாமே.
(1)



கன்னாட்டின் திருநகரி னமேணிபோ லேற்றமிகு
கயமார் தெய்வப் பொன்னாட்டி னுயர்மருங்கா
புரியரசோர் குடைகிழற்கீழ் புரிந்த கோமான்

வின்னாட்டுக் திறமையுளான் விதாணஞ்சேர்
சஞ்சகுல வீர தீரன் சொன்னாட்டுங்
கிருஷ்ணவிஜ யப்பூச்ச யேந்திரவனல் சுகிர்த னை.
(2) மன்னன்மண மாலைதரு மகாராணி மனுநீதி
வாய்மை யேற்கும் கன்னல்கிளர் மொழித்தேவி
கருணையினி லறச்செல்வி கலைதேர் வாணி நன்னகரக்
தனிச்செங்கோல் நாட்டியனை வோருக்கு நயம்பா
ராட்டி இன்னிலத்து மெல்லிலத்துங் கற்பகம்போற்
கீர்த்திநல மிசையு மிக்கார். (3) புகலரிய
நிறைகுணங்க ளொருங்குலவும் நளினமலர்ப்
பொன்மா மேரு தகவுடைய பொறைவளர்க்கும்
புவியரசி யருந்ததிநேர் தருங்கோ மாட்டி பகவனரு
முக்கடவுள் பதமலரை மறவாது பக்தி பூணு
மகங்கனிந்த சிந்தனையா ளருட்டிறமும்
பொருட்டிறமு மறையும் பெற்றி. (4) பண்டமரு
மிலக்கணநூற் பயனறிந்தே யின்னமுதம் பயக்குஞ்
செஞ்சொற் கண்டெனவொண் பொருண்மூன்றும்
யாவருக்கு மெளிதாகக் கருத்துத் தோன்ற
விண்டருளுந் திருக்குறள்நீ பலங்கார மெனுநூலை
விளங்கச் சொற்றூர் தண்டமிழ்ப்பா மாலைபுனை

இலக்குமியம் மணியென்றுக் தழைத்து வாழி.
(5)

---

## மருங்காபுரி - திருவாளர் சாமி - நல்லசிவன் பிள்ளையவர்கள்

*இயற்றியது.*

### அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

செங்கமலப் பூந்தடஞ்சூழ்ந் தெழில்காட்டு
மருங்கைநகர் சிறந்தெங் காளு மங்கலநல் வளங்காட்ட
செங்கோலுண் மனுநீதி வளமை காட்ட
இங்கிதஞ்செய் பாவாண ரிசைகாட்ட
முறைசெலுத்து மியல்வி வேகி நங்கையர்க்கோர்
திலகவதி நவில்வதற்கோ ருவமையிலா நளினச்
செல்வி. (1) திருவளரு மார்பகத்தான்
செயம்வளர்சிங் காதனத்தான் செல்வம் பூத்த
தருவளருங் கொடைக்கரத்தான் தயைவளரும்
பெருங்குணத்தான் சாற்றுந் தூய உருவளரு
மால்கிருஷ்ண விஜயபூச் செயன்மகிஷி யோங்கு
முன்னத் தருள்வளரு முறையெனவே கொலைபுரியா

தெறியுணர்த்து மவைதே ரவ்வை (2) சுத்தநதி
யணிபரம னருட்குமரன் திருவடிக்கே சூட்டும்
ஞான வித்தகர்தேர் கலைவாணி வியன்கொற்றக்
குடைநிழற்கீழ் விளங்குந் தேவி இத்தலஞ்செய்
நற்றவமே யெனப்பலரு மியம்பமிகு வினிமை
தாங்கு முத்தமப்பேருமயார்சி இலக்குமியம்
மணியன்பி னுலகம் போற்ற. (3)

XXIV

சீர்த்திபுனை வள்ளுவனார் செய்ததிருக்
குறளெனுமொண் டெய்வநூற்கே
வார்த்திகம்போன் றுதாரணத்தாற் றெளிவுபெறுங்
காதைபல வயங்கக் காட்டி
ஆர்த்தியுட னெல்லவரும் படித்துய்ய மலேயிலக்கா
வமைத்துத் தந்த
கீர்த்திமிகுக் கீபாலங் காரமெனு மிதன்பெருமை
நிகழ்த்தப் பாற்றோ. (4)
புத்தமுதத் தாய்மொழியாற் புகலுதலு
மிழிவென்னப் புரைமே னாட்டுப் பித்தநல்
மதிமயங்கித் தடுமாறு மிங்காளிற் பெரிது மோர்ந்தே

உத்தமயிக் னூலதனு லொளிபரப்பும் பெண்ணரசிவ்
வுதவிப் பாரோர்க்
ஒத்தகைய தமிழ்த்தொண்டு பலவாற்றி நீடூழி
யினிது வாழி. (5)

---

மருங்காபுரி சமஸ்தான வித்வானும்
குடந்தை பாரதமித்திரன்
பத்திராதிபருமாகிய
**திருவாளர் ஆ.**
**சத்திவேற்பிள்ளை அவர்கள்**
இயற்றியது.

**அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.**

சீர்கிறை திரைநீர்ச் செழுந்தமிழ் புனைபூச்
செல்வியின் றிருமுக மாகு மேர்கிறை தருமுத்
தமிழ்வளர் தேயத் திரவியம் புலிக்குலத் திலங்கு
தார்கிறை தடந்தோ ளரசர்நாட் டிடையிற் சகத்துயர்
வளனெலாஞ் சார்ந்த கார்கிறை சாரற் கடிவரை
யரண்சூழ் கவின்மருங் காபுரி நகரில். (1)
அம்புவி யதன்கண் ணவிர்தரு பாவை யாறுமுன்
றதிற்றெழுங் ககத்த கம்பனச் சில்ல வார்குலங் கவினக்

கருதுநாற் படைகொடு மேவிச் செம்பது மத்தார்
செல்விவாழ் கோயிற் றிருமணிச் சியவா சனத்தி
லிம்பரி னாச ரிறைஞ்சியேத் தெடுப்ப வேறிவீற்
றிருக்திசை மேவும். (2) மாமலை பெரிய
மலையுயர் வேழ மலைவளஞ் சேர்கிரி மழைசூழ்
காமரூஉம் போடி கிரியெனு நாமக் கார்வரை
யைந்தகா ராறு
தேமலர்ப் படப்பைச் செம்பியர் நாட்டின்
றென்றிரு வரம்பெனத் திகழும் பூமலர் தருவென்
னாறுபா லாறு புகலுமூன் றூறுகோ நாடு.
(3) வளமலி வயல்சூழ் மருங்கைமா நாடு வருபழி
யஞ்சிவா யெர்த்த தனவநா டிலகு தனிவள நாடு
சாற்றுநா டைந்தகுன் றரண்சார் பளகறு
மருங்கை யூர்முல்லை வாகை பாவெனு மாலைமூன்
றார்வோ குனமுணர் கவின வயப்பரி முழமே
மூயர்கரி படைகொடை யொளிரும். (4) மங்கல
முரச மூன்றுகோ னரிமா வானரக் தர்க்கென
வயங்குர் றுங்கமார் தவச மூன்றெரு
செங்கோல் சூழ்தசாங் கங்களின் றெளிரக்

கங்கையார் சடைசொக் கேசர்மீ னாக்ஷி சரிகிரி
வரதரா ஜன்சீர் தங்குசேர் கிரிவாழ் சண்முகப்
பெருமான் றனிக்கரு வரையுறை புடையார். (5)

அணிகிளர் பூசை மாடமீ னாக்ஷி யம்மைதுன்
டிக்கருப் பெல்கைத் திணிகிளர் காவ னிலிசெல்
லாண்டி ஜெயமிகும் வீரமா காளி
மணிகிளர் பூத காச்சிநல் லம்மை வழுத்துமிக் கடவுள
ரருளாற் பணிகிளர் முடிமேற் பார்வழி வழியாய்ப்
பரித்துவாழ் பார்த்திப ராய. (6) பூச்செயன்
மாபின் புகழறி யாதார் பூவல கத்தெவர் புகவின்
பாச்செய வலசிற் றம்பலக் கவிஞன் பகர்தபின்
ளைக்கவிக் குவந்து மாச்செயார் கண்ண மங்கலப்
பட்டி வனமலி காரைச்சூ ராம்பூங் காச்செறி பட்டிப்
பெயரிய கிராமங் களையளித் துயர்புகழ் கண்டார்.
(7) கற்றமிழ் தேர்மாம் பழக்கவிச் சிங்க நாவல
ராதிபல் கவிஞர்
சொற்றநற் பிரபந் தம்பல பெற்றுச் சுவர்ணமா
மழைசொரிந் துயர்ந்த கொற்றவர் வழியிற் குவலய

மகிழக் கோவுய ரிலக்கணங் குலவ வெற்றிசேர்
கிருஷ்ண விஜயபூச் செயப்பேர் வேந்தன்வந்
தறித்தன னிக்கோ. இந்திரன் றன்னை யிலகுபல்
வளத்தா லிரதினா யகன்றனை யெழிலாற் குந்திமுன்
னீன்ற குரிசிலைக் கொடையாற் கோனராக்
கோவினைக் கலையான் மந்தியம் படைகொண்
மன்னனை வலத்தான் மதியுதிட் டிரன்றனைப்
பொறையாற் சந்ததம் வென்று தாணியோர் மகிழத்
தனியர சாட்சிசெய் திடுவோன். (9) முத்தமி
ழமுத மொழியினைத் தனது முன்னவர் போலுல
முதிர்ந்த பத்தியின் வளர்க்கும் பண்பினன் சிவசண்
முகப்பெயர்ப் பாவல னிவன்சீர் கத்தியோர் காத
னவின்றிட மகிழ்ந்து நனிநிதி வழங்கின னயந்து
புத்தமு தாம்பின் னைக்கவி யாலும் புகன்றிட
வதனையுட் பொருந்தும் (10) அன்புடன்
கேட்டு மகிழ்ந்துசன் மான மளித்தது மன்றியென்
றனக்குத் தன்பெருஞ் சமஸ்தா னத்துவித் வானும்
தனிப் பெரும் பதவியு மளித்தா னின்பால் வேந்த
னினியதன் கிழத்தி யிடம்புவிக் கிழத்தியை
யிருத்திப் பொன்புலம் விரும்பிப் புக்கன னந்தப்

புரவலன் சீர்சொலப் போமோ. (11)

வேறு

விண்ணகம் புகுந்த வேந்தன் வியன்முதற் றேவி யாகி
மண்ணகம் விரும்ப வாட்சி மாட்சியிற் புரிகின் றாரைக்
கண்ணகம் கவருங் காட்சிக் கதிர்விரி மணியன் னாரைப்
பண்ணக மொழியி னாரைப் பலகலை யறிவி னாரை. (12)

4

xxvi

அச்சநாண் மடம் பயிர்ப்பா மாணிடை நிற்கின் றாரைப்
பொச்சமி லன்பு கொண்டு புலைகொலை விலக்கி னாரை
யிச்சைகொ ளிரக்கம் வாய்மை யீகைசேர்
குணத்தி னாரை நச்சுதன் குடிகட் கீன்ற
வன்னையி னடக்கின் றாரை. (13)

அருந்ததி யென்கோ சீதை யாமென்கோ தாரை
யென்கோ திருந்தெழிற் பாவை யென்கோ
திரௌபதை யென்கோ தேவர் மருந்தினு மினிய
சந்த்ர மதியென்கோ வாண்டா ளென்கோ
கருந்திரைப் புணரி மேய காரைக்கா லம்மை
யென்கோ. (14) சங்கிலி யென்கோ
சாவித் திரியென்கோ வௌவை யென்கோ
மங்கையர்க் கரசி யென்கோ மதிதம யந்தி
யென்கோ
துங்கக லிகைதா னென்கோ சொன்னளா
யணியென் கோபூண் டங்கெழில் சார்ந்த மண்டோ
தரியென்கோ தமியன் றேர்ந்தே. (15)
கோமக ளாயு ஞானங் குலவிய கல்வி தன்னு
ளாமக ளாயுஞ் செல்வ நலத்தினுற் றழைத்து
நீண்ட
காமக ளாயுந் தீட்டற் கரும்பெருங் கவினு
ளோங்கு
பூமக ளாயு நின்று பொலியுநல் லரசி யாய்ந்தே.
(16) கறங்கினோர் பிறவிப் பௌவங் கடந்திடல்
வேண்டும் வேண்டி லறம்பொரு ளின்ப மூன்று
மடைதால் வேண்டு மந்தச்

சிறந்தமூன் றினையுஞ் சோத் தேற்றிடு நூல்யா
தென்னின் மறந்தவிர் தேவர் சொற்ற மாண்குற
ளொன்றே யாகும். (17) செந்தமிழ்
நூல்க டம்முட் சிறந்தன வாறவ் வாறுட்
சுந்தரக் குறளு லொன்றே துகளறத் தலைமை
யெய்தி
யிந்தநல் லுலகில் யாரு மேற்றிட நின்ற தென்ன
வந்தநல் லறிவாற் றேர்ந்து மனங்கொடவ் வழியே
நிற்கும். (18)
பெண்ணியல் நிறைந்த கற்பின் பெருந்தகை யரசி
தன்போன் மண்ணியன் மாந்தர் யாரு
மதிநலம் பெறுவான் வேண்டிப் புண்ணியக்
குறணூல் கூறும் பொருள்களி னவத்தை
யெல்லாங் கண்ணிய பன்னூன்மேய கதைகளான்
விளக்கிக் காட்டி. (19) கற்றவர் கண்டு
போற்றக் கவின்கொள்கத் தியமாச் செய்து
மற்றது தீபா லங்கா ரப்பெயர் மருவச் சாத்தி
யுற்றநீ ருலகிற் சீர்த்த வோங்கிலக் குமிப்பேர்த்
தேவி
வெற்றிவேற் காச்செவ் வேளின் விழியருட்

கருணையாலே. (20)

## xxvii

தாங்கிய செங்கோற் செல்வம் தழைவுற வரிமாத்
தாங்கு மோங்குமா தனமேன் மேவி யுயரிய
வாட்சி செய்து
பூங்குழ லெழிலார் செல்வப் புத்திரி யொடுமிப்
பூவிற்
றீங்குதீர் மகிழ்மீக் கூரச் சிறந்துநீ டூழி வாழி.
(21)

---

திரிசிரபுரம் சூசையப்பர் கல்லூரித்
தலைமைத் தமிழ்ப்புலவர்
திருவாளர் அ. சிவப்பிரகாசர்
கூறிய

சிறப்புப்பாயிரம்.

சீர்திகழ் திலத்துப் பேர்திகழ்

மொழியெலாம்
தோன்றுமுன் மக்கள் என்றதம்
மறிவோ
டொருங்கு வளர்ந்து மருங்கியல்
முற்றிப்
பாலி பாகிதம் நூலிலகு ஆரியம்
மொழிக டந்தவை வழிபட விளங்கும்
தண்டமிழ்த் தனிமொழி கொண்டு
வளஞ்செயும்
வண்டமிழ் நாட்டுள் தொண்டர்
குழாமலி
சூழர் குடிவளர் சோழநன் னாட்டில்
முதல்கரு வுரிப்பொருள் பதந்திக
ழொழுக்கமும்
நிலந்தரு வளமும் புலந்தரு நயனும்
சுருங்காச் சிறப்பின் மருங்கா
புரிக்கிறை
வடதலை யோங்கிய வடுக மன்னவர்
விசயர் மருகன் விசய பூச்செயன்
கண்கவ ருருவன் பண்கவ
ரின்சொலன்

கடையும் மடையுங் கொடையுஞ் சிறந்தோன்
மெய்ப்புல னைந்து மெய்ப்பின்று துய்க்கக்
கண்டு வரித்த வொண்டொடி மகளிர்
ஐவரு ளிடைபயி லைவரு கட்புலன்
அனைய ளாயுயிர்க் கினையல் தவிர்ப்பான்
பெண்ணிற் பெருந்தகை நுண்ணிய லுணர்வினன்
இலக்குமி யம்மணி திலக்கணி யாமணி
மருங்கா புரிச்சமீந் தாரிணி யாசி
அறனு லெனுந்தகைத் தேவர் குறளால்
எவ்வா மக்கட்கு மூவா மருந்து
வாழ்க்கை நெடுங்கடற் காழ்கொ ளருங்கல

மின்ப விலைாட் டன்புக் கைமரம்
புரைநெறி தட்கும் பாரைக் குன்று
இரட்பா லடையெனக் குறட்பா
வியன்று
பன்னூல் பயின்றோர்க் கல்லதை
நன்னூல்
பயிலாப் பேதைமை யியலார்க்
குறுபயன்
நல்கா வகையோர்க் கொல்கா
வுரிமையின்
காட்டு மறம்பொரு ளாட்டின் பால்பகர்
முப்பா னூற்பொரு ளெப்பா லாரும்
மெல்லிதி னுணர்தரச் சொல்லினி
துரைநடை
நற்றாய் மகட்குப் பற்று லூட்டுமா
றொருபொருட் பலவழி கார
மொருவழி
செறிவித் தொருமுறை பரிவிற்
றந்தனன்

திருக்குறள் தீபாலங் காரமென்
பெயரால்
சேயரைத் தெருட்டுந் தாயரு
முளரென
இலகு முறைநா டுலகம்
நலமிகழ் கனிபூத் துவகை யெய்தவே.

---

“நவசக்தி” ஆசிரியர்

**திருவாளர் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள்**

யாத்தது

உலகுவிழை பொருளெல்லா முவந்தளிக்குங்
குறள்வரைக்குப்
பலகலையா ளாடவர்கள் படியெடுத்தார்
பன்னெடுநாள்
இலகுச்சி யொளியாட எவரேனுந்
தமிழ்விளக்குத்
இலகுநுதல் மதியினருள் திருத்தொண்டு
நிகழ்த்தினரோ. (க)
கலைகுடைந்த பொருளெடுத்துக்

கருத்தென்னுந் தகழியமைத்

தலைகடந்த வேதாந்த ஆராய்ச்சி நெய்சொரிந்து

நிலைகடவு பகுத்தறிவாம் நெடுந்திரியிட்

டேற்றினரால்

மலைகடலும் புவிவனமும் மகிழ்வுறச்செந்

தமிழ்விளக்கே. (உ)

சங்கமறும் தமிழ்வளர்த்து தகைமைநெறி

நாடளித்த

மங்கையர்க்குத் தமிழரசி மருமங்கையர்க்குத்

தனியரசி

பொங்குதிரு பொறையடக்கம் புகழீகை

அருள்கொழிக்குஞ்

செங்கைவேற் கண்புடையார் செம்மலரம்

மணியாரே. (ரு)

---

# பொருளடக்கம்

# திருவள்ளுவ நாயனர் சரிதம்

மகா சிறப்புப் பொருந்திய கைலாசகிரியின்கண், சிவ பெருமான் முப்பத்து முக்கோடி தேவர்கள், நாற்பத்தெண்ணுயிரம் முனிவர்கள், கின்னரர், கிம்புருடர், கருடர், காந்தருவர், சித்தர், வித்தியாதரர் முதலானவர்கள் புடை சூழ்ந்து துதித்து நிற்கவும், சிவ கணங்கள் பல வாத்தியங்களை முழக்கியும் வெண்சாமரை வீசியும் ஆலவட்டம் அசைத்தும் நிற்கவும், தமது அருட் சத்தியும் உலக மாதாவுமாகிய பார்வதி

தேவியார் இடப்பாகத்தில் எழுந்தருளியிருக்கவும், அளவற்ற பெருங் கருணையோடு திருவோலக்கமாக எழுந் தருளி யிருந்தார். அப்போது பார்வதியார் எழுந்து பரமனை வணங்கி நின்று, " சுவாமி ! திரிலோகத்திலே, இல்லறத்தை வழு வாது நடத்திக் கதியடைந்தவருண்டோ ? அங்ஙனமாயின் அவரது வரலாற்றைத் திருவாய் மலர்ந்தருளவேண்டும் " என்று விண்ணப் பித்தார். அப்போது, சிவபெருமான், "உமையே! தேவலோகத்திலே வசிஷ்டர், அகத்தியர், அயன், புயங்கன், சம்புவென ஐவரும் பூலோ கத்திலே திருவள்ளுவரென் றொருவரும் தென்புலத்தார் கடன், தேவர் கடன், விருந்தோம்பல், சுற்றந்தழுவல், கபிலை பூசைசெய்தல் முதலியன முடித்துக்

கற்பின் வழுவாத நற்குண நற்செய்கைகளை யுடைய மனைவிகளோடிருந்து, இல்லறம் நடாத்திக் கதியடைந்த னர் " என்றருளிச் செய்தார். மறுபடியும்

அம்மையார் சுவாமியை நோக்கி, "சுவாமி! பூலோகத்திலுள்ள திருவள்ளுவர் என்பவர் யார்? அவர் சரித்திரத்தைக் கேட்க விரும்புகிறேன் " என்றார்.

சிவபிரான் அம்மையாரை நோக்கி, ளயம் வந்தது. அது வருமென்று

" பூர்வத்திலே ஒரு பிர

முன்னரேயறிந்த பிர

மன் அதிலே இறவாது பிழைக்கும்படி வேற்றுருவமெடுத்து, ஒரு கரைக் கூட்டைத் தனக்கிடமாகக்கொண்டு

அவ்வெள்ளத்திலே மிதந்து வந்தான். அதுகண்ட நாம் இதற்குள்ளிருப்பவன்

யாவ
னென்று கேட்க, அவன், 'நான் வரும் காலமறிந்து செய்தத் தேற்ப வன்றவன்' என்றான். இப்பிரளயத்தில் எப்படிப் பிழைத் திருக்கின்றாய் என்றோம். அப்போது, பிரமன் நம்மை அறிந்து

௪

கொண்டு, பேரானந்தத்தி லழுந்தி, அப்பிரளய காலத்தை நீக்கி யருளவேண்டுமென்று வேண்டிக் கொள்ள, 'நாம் அவ்வதிகாரம் உமக்கே கொடுத்தோம்' என்றுரைத்து, முன்போலவே உலகத்தை அவனாலேயே படைப்பித்தோம். அத்தன்மையுடைய பிரமன் பூமி யிலே பிறந்த காரணமுஞ் சொல்லுகிறோம்.

ஆதிகாலத்தில், பூமியிலே பாண்டிநாட்டிலே மதுரைமா நகரத்தி லிருந்த

சங்கப் புலவர்கள் நம்மை ஒருகால் அவமதித்ததற்காக அவர் கள் கர்வத்தை யழிக்கப் பிரமனைத் திருவள்ளுவராகவும், மஹா விஷ்ணுவை இடைக்காடராகவும், சரஸ்வதியை ஔவையாகவும் அவ தரிக்கும்படி அனுப்பினோம். முன்னே, பிரமபுத்திரர்களாகிய காசிபர் முதலிய நவபிரமாக்களில் காசிபர் ஊர்வசியைச் சேர்ந்து வசிஷ்டரைப் பெற்றார். அவர் அருந்ததியைக் கூடி சத்தியரைப் பெற்றார். அவர் புங்கநூர்ப் புலைச்சியை விரும்பி பாராசரரைப் பெற்றார். அவர் மச்ச கந்தியோடு முயங்கி வியாசரைப்பெற்றார். இவர்கள் நால்வரும் வேதங் களுக்குரியவ ரானார்கள். பின்பு, பிரமன் இன்னுஞ் சில புத்திரரால் வடமொழியையும், தென்மொழியையும் விளங்கச் செய்ய வேண்டு மென்றெண்ணி வேதவிதிப்படி

ஒரு யாகஞ்செய்ய, அதன்கண் வைத்திருந்த கும்பத்திருந்து கலைமகள் அவதரித்தனள். அவளைப் பிரமன் விவாகஞ் செய்து கொண்டான். அகத்தியர் குறுகிய வடிவோடு அக்கும்பத் துதித்தனர். அவர் சமுத்திர கன்னிகையை மணந்து பெருஞ்சாகர னென்பவரைப் பெற்றார். அவர் திருவாரூர்ப் புலைச்சியால் பகவன் என்பவரைப் பெற்று அவருக்குச் சகல சாஸ் திரங்களையும் கற்பித்தார். அந்நாளில், பிரமவம்சத்திலே தவமுனி யென்பவர் அருண்மங்கை யென்னும் பிராமணப் பெண்ணைக் கூடி ஒரு பெண் குழந்தையைப் பெற்றுவைத்து விராலிமலை யில் தவமியற்றச் சென்றார். அக் குழந்தையை உறையூர் பெரும்பறையன் கண்டெடுத்து வளர்த்து வரும்போது, அக்

குழந்தைதவிர மற்றவர் யாவரும் இறக்கும்படி அச்சேரியில் யாது காரணத்தாலோ மண்மாரி பெய்தது. பின்பு, அக்குழந்தை அதற் கடுத்த மேலூர் அகாத்திலே நீதியையர் கிருகத்தில் வளர்ந்திருந் தது. அப்போது, சகல சாத்திர பண்டிதரான பகவன் என்பவர் யாத் திரை செய்யவேண்டுமென்ற அவாமேலிட்டுக் காசிக்குப் புறப்பட்டுச்

ரு

செல்லுங்கால், அவ்வகாத்துக் கடுத்த சத்திரத்திலிறங்கி நித்திய கரு மங்களை முடித்துக்கொண்டு சமையல் செய்திருந்தார். அங்கு உறையூர்ப் பெண்வரா அவனைக் கண்டு அவர் அருமைகொண்டு, "நீ யார்? புலைச்சியோ? வலைச்சியோ? இங்கு ஏன் வந்தாய்?" என்று வெருட்டி, மிகுந்த

கோபங்கொண்டு சட்டுவத்தால் அவளது சிரசில் இரத்தம் சிந்தப் புடைத்தோட்டிவிட்டுப் பின்னும் ஸ்நானஞ் செய்து உணவருந்திப் புறப்பட்டார். அவர் காசிக்குச் சென்று கங்காஸ்நானஞ் செய்து, பிரயாகையிலிருந்து தீர்த்தக் காவடியுடன் திரும்புவாராகி, மீண்டும் முன் தங்கிய சத்திரத்திலேயே வந்து தங்கினர். அப்போது, முன் சொல்லிய பெண்ணனவள் யௌவனமும், பேரழகும் உடையவளாயிருக்கக் கண்டு அப்பெண் மேல் காதல்கொண்டு நின்றார். அக்குறிப்பினை அச்சத்திரத்திற்கு அதிபதியாகிய நீதியையருணர்ந்து, 'என் பெண்ணை நீரே விவாகஞ் செய்துகொண்டு இங்கேயே இருக்கலாம்' என்று சொல்ல, அதற்கவர் ' நான் கொண்டு வந்த கங்கையை இராமேச்சுரத்திற் செலுத்

தித் திரும்பிவந்து விவாகம் செய்து கொள்கிறேன் ' ' எனத் தெரிவித்துச் சென்று, இராமலிங்கத்திற்கு அபிஷேகம் செய்து திரும்பி வந்தார். அப் போது நீதியையர் விவாகயத்தனம் பண்ணி பந்து மித்திரர்களோ டிருந்து அக்கன்னிகையைப் பகவானுர்க்குப் பாணிக்கிரகணஞ் செய்துகொடுக்க, நான்கு நாள் சடங்குகளும் விமரிசையாக நடந்தேறின. ஐந்தாநாள் மங்கள ஸ்நானஞ் செய்விக்கும்போது பகவ னென்பவர் அந்தப் பெண்ணினுடைய தலையில் எண்ணெயைப் பெய்யும்படி மயிரை வகிர்ந்தார். அப்போது தான் முன் சட்டு வத்தாலடித்த வடுவைக் கண்டு, ' ஆதியளல்லவா ?' என்று சொல்லிவிட்டு ஓடுவாராயினர். அதுவே, அவளுக்கு "ஆதி" என்னும் காரணப் பெயராயிற்று.

அவ்வாறேடிய பகவனென்பவர் பொழுது போகையால் எதிரே கண்ட பாணர் சேரியிலிருந்த ஒரு மண்டபத்திலே தங்கினர். ஆதியென்பவளும் அவர் பின்னே தொடர்ந்து சென்று, ஆங்கு அவரைக் கண்டு வணங்கி நின்று, 'தெய்வச் செயலால் உமக்கும் எனக்கும் இக்காரியம் நடந்திருக்கச் சகல நீதிகளையுமுணர்ந்த நீர் என்னைவிட்டு நீங்குதல் தகுமோ? அல்லது தர்மமாகுமோ? உம்மை நீங்கினல் உயிர்வாழ்வேனோ' வென்று மிகவும் இரக்கத்துடன் சொன்னுள்.

பிராரத்துவத்தால் அவர் புத்தியிலும் அது சரியென்றுபட்டு, " பெண்ணே! என்னிடத்தில் உனக்கு அன்பிருக்குமாயின், நான் சொன்னபடி கேட்கவேண்டும். அஃதாவது உனக்குப் பிள்ளைகள் எங்கெங்கே பிறக்கின்றனவோ

அங்கங்கே அவைகளை அப்பொழுதே விட்டுவருவாயானால், நான் உன்னைக்கூடச் சம்மதிப்பேன் " என்றார். அவள் அதற்கு உடன்பட்டபடியால் அன்றிரவு அம்மண்டபத்தி லிருவரும் கூடினார்கள்.

அப்போது அவர்களுக்கு ஒரு பெண்குழந்தை பிறந்தது. ஆதி என்பவள் முன்பு பகவனுக்கு வாக்குத்தத்தம் செய்திருந்தபடி, அக்குழந்தையை விட்டுப் பிரிகையில், அதனை யாவர் காப்பாற்றுவா ரென்று வருந்தி நிற்க, அதுகாலை சரஸ்வதியின் அம்சமாகிய அந்தக் குழந்தை கடவுளருளால் உண்மைபுணர்ந்து,

" இட்டமுட னென்றலையி லின்னபடி யென்றெழுதி

விட்டசிவ னுஞ்செத்து

விட்டானோ—முட்டமுட்டப்

பஞ்சமே யானாலும் பாரமவ னுக்கன்றோ

நெஞ்சமே யஞ்சாதே நீ."

என்று கூற, அதுகேட்டுத் தாய் மனந்துணிந்து போயினள். பின்பு அக்குழந்தையை அச்சேரியிலுள்ள பாணர்கள் எடுத்து வளர்த்தார்கள். அது நன்றாக வளர்ந்து, இயல்பாகவே கலைமுழுவதும் அறிந்து, ஔவை யெனப் பெயர்பெற்று, 'சீதக்களப' என்னுங் கணபதி அகவல்பாடி அவரை உபாசித்து, உலகோபகாரமாக ஆத்திசூடி,கொன்றை வேந்தன், மூதுரை, நல்வழி, குறள், அசதிக்கோவை, நன்னூற் கோவை, பந்தனந்தாதி, அருந்தமிழ்மாலை, தரிசனப் பத்து முதலியன வுஞ் செய்து, ஒவ்வோர் காரியத்தின் பொருட்டுத் தனிக்கவிகள் பல பாடி, பல அற்புதங்களையுஞ் செய்து வருநாளில் ஒரு

நாள் கணபதி பூஜையை விரைவாகச் செய்தாள். அப்போது கணபதி, 'வழக்கப்படி யன்றி விரைந்து செய்வது ஏன்?' என்று கேட்க, 'சுவாமி! சுந்தரமூர்த்தி சுவாமிகளும், சேரமான் பெருமாணயனாரும் கைலாயத்துக்குப் போகிறார்கள் ; என்னையும் அழைத்தார்கள்' என்ன, கணபதி, 'அவர்களுக்கு முன்னே உன்னை அங்கே விடுவேன் ! நீ பூசையை வழக்கப் படி முடி' என்றான். ஔவையார் தன் பூசையை வழக்கப்படி முடித்தாள். உடனே, கணபதி ஔவையாரைத் தன் துதிக்கையால் எடுத்துவிடக் கைலாய மலையை அடைந்தாள். முன்னே புறப்பட்டுப் பின்னே வந்த நாயன்மார் ஔவையாரைக்கண்டு அதிசய மடைந் தார்கள். திறக்.

பிறகு, ஆதியும் பகவனும் தொண்டை நாட்டில் வெற்றக்காடென்னும் ஊரிலுள்ளதோர் மடத்திற் சென்று கூடினர்கள். அப்போது உப்பை யென்பவள் பிறந்தாள். "இக்குழந்தையை யாவர் காப்பாற்றுவார்?" என்றெண்ணி அதைவிட்டு நீங்கத் தாய் வருந்தும் போது, அது,

"அத்தி முதலெறும்பீ றானவுயி ரத்தனைக்குஞ்
சித்த மகிழ்ந்தளிக்குந் தேசிகன் -முற்றவே
கற்பித்தான் போனானே காக்கக் கடனிலையோ
வற்பனோ வன்னா யான்" 1

என்ன, அதுகேட்டுத் தாய்

மனந்துணிந்து போயினள். அவ் வுப்பை முற்பிறப்பிலே பிருகுவின் பத்தினியாகிய 'நாகவல்லி' என்பவள். திரிமூர்த்திகளும் 'அவள் அழகின் மிக்கவள்' என்று கேள்விப்பட்டுப் பார்க்க மாறுவேஷங் கொண்டுபோய் நிர்வாண பிச்சை கேட்டார்கள். அவள் மகா பதிவிரதை யாகையால் இவர்களைப் பாலராக்கி அப்படியே பால் கொடுத்துத் தன்னைப் பரி சோதித்ததற்குக் கோபங்கொண்டு அவர்களை மூன்று சனனம் எடுக்கும்படி சொன்னாள். அதுகண்ட திரிமூர்த்திகளும் தங்களை அவள் மதிக்காமல் பாலராக்கி மூன்று சனனம் எடுக்கும்படி சொன்னதற்காகச் சினங்கொண்டு, "நீ அழகின்றி மாறுவடிவாகக் கடவை" என்று சபித்துப் போயினர். பின்பு, பிருகுவானவர் இவள்

வேற்று வடிவைக்கண்டு ''நீ பூமியில் பிறக்கக் கடவை'' என்றனர். அவள் தனது கணவன் கட்டளையின்படி 'உப்பை' என்பவளாக அவதரித்து,
வண்ணார் வளர்க்க வளர்ந்து,
உலகமெல்லாந் தன்னைப்போற்ற இப் போதும் அவ்வூரில் மாரியம்மை யென்னுந் தெய்வமாக இருக்கின்றனள். நிற்க.

முன்பு போன ஆதியும் பகவனும் சோழ தேசத்திற் கருவூரை யடைந்து, ஒரு சோலையிற்கட 'அதிகமான்' என்பவர் பிறந்தார். அம் மகவை விட்டு நீங்கத் தாய் வருந்தும்போது, அது,

அ.

கருப்பைக்குண் முட்டைக்குள் கல்லினுட்
டேரைக்கும்
விருப்புற் றமுதளிக்கும்
மெய்ய—னுருப்பெற்று
லூட்டி வளர்க்கானோ வோகெடுவா

யன்ளுய்! கேள்
வாட்ட முனக்கேன் மகிழ் "

என்று கூறியது. அதுகேட்டுத் தாய் மனந்துணிந்து போயினள். பின்பு, அக்குழந்தை சேரமான் எடுத்து வளர்க்க வளர்ந்து, வேதம் முதலிய கலைகளெல்லா மொருங்கே கற்று, முடி சூட்டப்பெற்று, மதுரை யிலே நாம் திருமுகமெழுதிக் கொடுக்க பாணபத்திரருக்கு வேண்டிய திரவியங்கள் கொடுத்து, பொன்வண்ணத் தந்தாதி என்ருேர் பிரபந்தம் பாடிச் சிதம்பரத்தில் அரங்கேற்றி, அரசுசெலுத்தி, சுந்தரமூர்த்தியின் நட்பைப் பெற்றிருந்து, அவர் கைலைக்கு வருங்கால் உடன் வந்து, தாம் பாடியருளிய 'ஆதியுலாவை' அரங்கேற்றி நமது அனுக்கிரகத்தைப் பெற்றது.

பிறகு, ஆதியும் பகவனும்

காவிரிப்பூம்பட்டினத்தையடைந்து, ஒரு மண்டபத்திற் கூடினார்கள். அப்போது 'உருவை' என்பவள் பிறந்தாள். அதை விட்டு நீங்கத் தாய் வருந்தும்போது, அது,

" சண்டப்பைக் குள்ளுயிர்தன் றுயருந்தத் தானருந்தும்
அண்டத் துயிர்பிழைப்ப தாச்சரியு—மண்டி
அலைகின்ற வன்று யானுடைய வுண்மை
நிலைகண்டு நீயறிந்து நில் "

என்ன, அதுகேட்டுத் தாய் மனந்துணிந்து போயினள். பின்பு, அப்பெண்ணைக் கள்விற்போரெடுத்து வளர்க்க, அது வளர்ந்து, தவம் செய்து, பத்திரகாளியாய்த் தாருகனைக் கொன்று, திருவாலங் காட்டில் நம்முடனே நிருத்தஞ் செய்து, அதிலே தோற்று அகோர வீரபத்திரரை விவாகம் பண்ணிக்கொண்டு அவ்விடத்தில் இருந்தாள். நிற்க.

காவிரிப்பூம் பட்டினத்தை விட்டகன்ற பகவனும் அவர் மனைவியும் திருவாரூரையடைந்து ஒரு மடத்திற்கூடக் கபிலர் என்பவர் பிறந்தார். அந்தக் குழந்தையை விட்டு நீங்கத் தாய் வருந்துப் போது, அது,

"கண்ணுழையாக் காட்டிற் கருங்கற் றவளைக்கு
முன்னும் படியளிக் கிட்டமவர்—என்றும்
நம்க்கும் படியளிப்பார் காரியோர் பார்க்கத்
தமக்குத் தொழிலென்ன தான்"

என்றது. அதுகேட்டுத் தாய் மனந்துணிந்து போயினள். அக்குழந்தையைத் தமக்குப் பிள்ளையில்லாத பாப்பையன் என்னும் ஓர் அந்தணன் எடுத்து வளர்த்து, ஏழு வயதில் உபநயனம் செய்யத் தொட

ங்குகையில், பிராமணர்கள் ' ஒத்துக்கொள்ளமாட்டோம் ' என்று சொல்ல, அதைக்கேட்ட கபிலர் அவர்களைப் பார்த்து, ' நான்முகத் தோன் ' என்று தொடங்கி ஒரு பாடலைச் சொல்லித் ' தொழிலால் ஜாதியன்றிப் பிறவியினு லில்லை, ' என்று சாதிக்க, அதனை மறுக்க மாட்டாத பார்ப்பனர் யாவரும் ஒத்துக்கொண்டு உபநயனச் சடங்கு செய்து முடித்தார்கள். அக் கபிலர் இன்னும் பாதாள லோகத்தில் தவம்பண்ணிக் கொண்டிருக்கின்றார்.

பின்பு, திருவாரூரிலிருந்து போனவர்கள் வேளின் மலைச்சாரலிற் சென்றுகூட அங்கே 'வள்ளியம்மை' பிறந்தாள். அக்குழந்தையை யாவர் காப்பாற்றுவார் ? என்றெண்ணி,

அதைவிட்டு நீங்கத் தாய் வருந்தியபோது, அது,

" அன்னை வயிற்று ளுருத்தி வளர்த்தவன்று
னின்னும் வளர்க்கானோ வென்றுயே—மின்னாவஞ்
சூடும் பெருமான் சடுகோட்டி னின்றுவிளை
யாடும் பெருமா னவன் "

என்ன, அதுகேட்டுத் தாய் மனந்தேறிப் போயினள். அக்குழந் தையை மலைக்குறவர் வளர்த்தார்கள். அவள் முற்பிறப்பில் மஹாவிஷ்ணுவினுல் மோகிக்கப்பட்ட விபுதை என்பவளிடத்துப் பிறந்த குமரி. அவள் குமாரக் கடவுளைக் குறித்துத் தவஞ் செய்தபோது, அவர் வரப்படி தொண்டை மண்டலத்தில் வள்ளிமலை யில் இருந்த

முருகக்கடவுளிடத்து
அன்புடையவளாயினள். நிற்க.

பிறகு, அவ்விருவரும்
திருமயிலாப்பூரில் இலுப்பைத் தோப்பில்
கூடினார்கள். அப்போது, 'திருவள்ளுவர்'
பிறந்தனர்.
அக்குழந்தையை யாவர் காப்பாற்றுவார்?
என்று நினைத்து, அதை
விட்டு நீங்கத் தாய் வருந்தியபோது, அது,

"எவ்வுயிருங் காக்கவொரு
ஈசனுண்டோ வில்லையோ
அவ்வுயிரில் யானொருவ
னல்லேனோ—வவ்வி

வருகுவது கொண்டிங் கலைகுவதேன் அன்னே
வருகுவது தானே வரும்"

என்றன். அதுகேட்டுத் தாய் மனக்துணிக்கு நீங்கினள். அவ்விரு வரும் தீர்த்த யாத்திரைக்குச் சென்றனர்.

பின்பு, சிவாலயத்தின் அருகேயுள்ள இலுப்பை மரத்தின் கீழிருந்த குழந்தை அங்குள்ள ஆலயத்தில் நம்மை ஆத்மார்த்த மாகப் பூசித்துக்கொண்டு, அவ்விலுப்பை மலரினின்று சொட்டும் தேனையுண்டு, பூர்வம் பிரமா வாதலால் சிகை எக்யோப வீதம் சதுர்வேத புஸ்தகம் முதலியவைகொண்டு வளர்ந்து வந்தது. அப்போது, ஒரு வேளாளன் மனைவி புத்திர பாக்கியத்தைக் குறித்து நெடுநாள் அச்சிவாலயத்தின் ஒருபுறம் தவஞ் செய்திருந் தனள். நாம் அவளுடைய தவத்திற்கிரங்கி, "நீ இக்குழந்தையை யெடுத்துக் கொண்டுபோய்த் திருவள்ளுவரென்று

நாம கரணஞ் செய் ” என்று அசரீரி வாக்காக ஆஞ்ஞாபித்தோம். அதுகேட்ட அவள் மனமகிழ்ச்சியுடன் அக்குழந்தையை எடுத்துக்கொண்டு போய்த் தன் மணாளன் கையிற்கொடுக்க, அவனும் அக் குழந் தையை இருகையேந்தி வாங்கித் தன்மடியிலிருத்தி உச்சி மோந்து கொஞ்சி விளையாடிப் பேரானந்தம் பெற்றிருந்தான். இவ்வாறு இருவரும் அந்தப் பிள்ளையை நாளொருமேனி பொழுதொரு வண்ணமாய் அருமையாக வளர்த்து வருங்காலத்தில், அவர்கள் சுற்றத்தார் , ‘ஏதோ ஒரு பிள்ளையை வளர்க்கிறார்கள் ’ என்று அவர் களை இகழ்ச்சி செய்ய, அதற்கவர்கள் அஞ்சிப் புறத்திலுள்ள ஒரு தொழுவத்திலே தொட்டிலிட்டு அதில் அக்குழந்தையைக் கிடத் திப் பண்ணைக்காரரைக் காவல்வைத்து வளர்த்து வந்தார்கள். ஐந்து வயது

வரப்பெற்ற திருவள்ளுவர், தம் பொருட்டுத் தம்மை வளர்ப்பவர்கள் சுற்றத்தார்களால் நிந்தை செய்யப்படுகிறார்கள் என்று அவர்களைப் பார்த்து, 'என்னால் உங்களுக்கு வருத்தம் வேண்டாம் இல்லை. இனி நான் வேறிடத்திற்குச் செல்லுகின்றேன். எனினும், நீங்கள் நினைக்கும்போது வந்து வேண்டியதைச் செய்யத் தவறேன்' என்று சொல்லிப் புறப்பட்டு அவ்வூருக்கருகே ஒரு பனைமரத்தின் நிழலிலே இருந்தார். அப் பனைமரத்தடி நிழல் அவரை விட்டு நீங்கா திருக்க அதனைக் கண்டவர்கள் எல்லாம் அதிசயித்து, இப் பிள்ளை 'தேவனோ? முனிவனோ?' என்று துதிக்க, அவர்களைப் பார்த்து நாயனார், 'இங்கே தெய்வீகமேது? மகிமை யேது?



யாதொன்றும் என்னிடத்தில் இல்லை போம்!' எனக்கூறி, அவ் விடத்தை விட்டு

நீங்கித் திருமூலர், போகர் முதலாகிய சித்தர்களும் மாதவர்களும் வாசம் செய்யாநின்ற மலைக்கு எழுந்தருள, அங்கிருந்த திருமூலர் இவரைக்கண்டு 'வள்ளுவரே ! பூர்வத்தில் நந்தி எனக்கு அநுக்கிரகம் பண்ணினபோது அங்கே யிருந்தீரே ; உலகத்தார்க்கு அறம் பொருளின்பம் என்னும் முப்பாலையுந் தமிழில் அருளிச்செய்ய இங்குவந்து அவதரித்தீரோ !' என்று வினவி னார். நாயனாரும் மகிழ்ந்து, ஆங்கு தவஞ் செய்வோரில் ஒருவ ராகத் தாமும் இருந்தனர். அக்காலத்தில் தொண்டை மண்டலத் தில் ஒரு வேதாளமானது பயிர்களை அழித்தும் உயிர்களை வதைத் தும் பிராணிகளுக்கு அநேக துன்பங்களைச் செய்தும் வந்தது. அப்போது, காவேரிப்பாக்கம் என்னும் ஓர் ஊரிலே

ஆயிரம் ஏர் வைத்துப் பயிர்த்தொழில் நடாத்தும் மார்க்கசகாயன் என்னும் ஒரு வேளாளன் " இந்த வேதாளத்தை அடக்கினவருக்கு அளவற்ற திரவியமும், ஓர் ஊரும், வேண்டிய பிறவும் தருகிறேன் " என்று அறிவித்திருந்தான். அதனை அடக்க ஒருவராலும் ஆகாம லிருந்தமையால், பின்பு அவ்வேளாளன் பெரியோர்கள் வாசஞ் செய்யா நின்ற மலையில் வந்து திருமூலர் முதலானவர்களுடன் சொல்ல, அவர்கள் திருவள்ளுவரைக் காட்டினார்கள். அவனும் அவரை வணங்கிச் சொன்னான். அப்போது சிவகாருண்ய மூர்த்தி யாகிய திருவள்ளுவர் அவ்வேதாளத்தை விபூதி பஞ்சாக்ஷரத்தால் வென்று, அவ்வேளாளனுடைய வேண்டுகோளை நிறைவேற்றி, யாவரையும் ரக்ஷித்தார். அது

கண்டு அவ்வேளாளன் நாயனாரைத் துதித்து, முன்னர் அறிவித்தபடி ஓர் ஊரும் அளவற்ற திரவியமும் கொடுத்ததுமன்றி, நாயனார் யோக்கியதையும் மகத்துவத்தை யும் பார்த்து, வாசுகி யென்னும் தன் பெண்ணையும் கொடுக்கும்படி நிச்சயித்து, 'சுவாமி! வாசுகி யென்னும் எனது பெண்ணையும் தேவரீர் அங்கீகரிக்க வேண்டு' மென்று பிரார்த்தித்தான். நாயனார் உலகத்தார்க்கு இல்லறம்நடாத்திக்காட்டவேண்டிய காரணத்தையோசித்து, 'அந்தப் பெண் நான் கொடுக்கும் மணலை அன்னமாக்கி எனக்கிடு மானால் விவாகஞ் செய்துகொள்வேன்?' என்றார். அந்தப் பெண் அப்படியே சம்மதித்துச் சமைத்துப் படைத்தனள். நாயனாரும்

அங்கீகரித்து, விதிப்படி வாசுகியை விவாகஞ்செய்து சிலநாளங்கிரு ந்த பின்பு, மனைவியுடன் மயிலைக்கு வந்து இல்லறத்தை நடத்தினர். அவர், செய்தொழிலிலே நெய்தற்றொழிலே பாவமில்லாததென்று தீர்மானித்து, அவ்வூரிலிருக்கும் ஏலேலசிங்கனென்னும் வர்த்தக னிடத்தில் நூல் வாங்கி, ஆடை நெய்து, அக்கூலியால் சீவனஞ் செய்து காலங்கழித் திருந்தார். அக்காலத்தில் திருவாலங்காட்டில் சபாநாயகராய் எழுந்தருளியிருக்கும் நாம் மகிடாசூர சங்காரஞ் செய்து கர்வித்திருந்த பத்திரகாளியின் செருக்கை யடக்கும்பொருட் டுப் பலவித நடனஞ்செய்ய, அவளுந் தோல்வியடையாமல் நம்மோடு நடனஞ் செய்தாள். அப்போது, நமது குண்டலங் கழன்றது. அக் குண்டலத்தைக் காதிலே சேர்ப்பதற்காக ஊர்த்துவபாதமாக

நட னஞ் செய்தோம். அவளும் அவ்வாறு நடிக்க நாணித் தோற்ருள். இங்ஙனம் நாம் இடையில் ஊர்த்துவ தாண்டவமாடிய இரகசியமான காரணத்தைக் குறிப்பாக அறியாத தேவர்கள் சந்தேகமுற்று, ' சுவாமி ! தேவரீர் ஊர்த்துவதாண்டம் புரிந்தது யாது காரணமோ? தெரியவில்லை ?' என்று கேட்க, ' நீங்கள் திருமயிலையில் இருக்கும் திருவள்ளுவரைக் கேட்பீர்களாயின், அது சங்கதி தெரியும் ' என்று கூறினேம். தேவர்களும் நமது ஆஞ்ஞையின்படி அங்கே சென்று அவர் முன்னிலையில் நிற்கையில், அவர்களுடைய குறிப்பை யறிந்த நாயனுர்,

" பூவி லயனும் புரந்தரனும் பூவுலகைத்
தாவி யளந்தோனும் தாமிருக்க—நாவி
லிழைநக்கி நூனெருடு மேழையறி
வேனே
குழைநக்கும் பிஞ்ஞகன்றன் கூத்து. "

என்று அறிந்தனர். அவர்களனைவரும் தங்கள் சந்தேகந் தெளியப் பெற்று அவரைக் கொண்டாடிப் போனார்கள். ஒரு நாள் நாயனார் நூல் வாங்கும்பொருட்டு ஏலேலசிங்கர் வீட்டுக்குப் போய்ச் " செட்டியார் எங்கே " என்று கேட்க, அங்குள்ளார் சிவபூசை செய்கிறார் ' என்றனர். அவர் " சிவ பூசை இங்கு செய்கிறாரோ, அல்லது குப்பத்திற் செய்கிறாரோ ?" என்றனர். அதனை அவர் பத்தினியார் கேட்டு உள்ளே போய்க் கணவருக்குச் சொல்ல, அவர் திடுக்கிட்டுச் சிவபூசையை விட்டு ஓடி வந்து,



நாயனாருடைய உபயபாதங்களை வணங்கி, ' சுவாமி ! அடியேனைப் பந்த சாகரத்தினின்றும் எடுத்துக் கரையேற்றி

அருளல் வேண்டும்' என்று விண்ணப்பஞ் செய்தனர். நாயனார் அவரது பக்குவத்தையும் மற்றுஞ் சில மாணக்கர் பக்குவத்தையும் சோதிக்க வெண்ணி, அவர்களை அழைத்துக்கொண்டு ஒரு வனத்திற்குச் சென்று, அங்கு வெள்ளம் பெருகிவரச் செய்தனர். அவர்கள் பயந்து மனேதிடமின்றி உடன்போக மாட்டாமல் விழிக்க, ஏலேலசிங்கர் மாத்திரம் தம்மைத் தொடர்ந்துவர அவ்வெள் ளம் வழிவிட்டது. பின்பு, நாயனார் ஏலேலசிங்கரைப் பார்த்து " ஓர் உயர்ந்த மரத்தினுனியில் ஏறு " என்று சொல்ல, அங்ஙனமே அவர் ஏறினார் ; பின்பு " பிடித்த கொம்பையும் நின்ற கொம்பையும் விட்டுவிடு " என்று சொல்ல, அவ்வாறே யோசியாமல் விட்டார் ; விட்டும் அவருக்கு ஓர் அபாயமும் நேரவில்லை. உடனே ஏலேலசிங் கரை நாயனார் மடிமீது வைத்து

ஞானோபதேசஞ் செய்து, எப்படிப் பட்ட சௌந்தரியமுள்ள மாதர்கள் மயக்கினும் மயங்காத மன வலிமையையு மனுக்கிரகித்தார்.

அப்படியிருக்கும் நாளையில், அந்நாட்டுக் கரசனாகிய அச்சுத ராஜன் ஒருநாள் ஏலேலசிங்கரோடு பேசிக்கொண் டிருக்கும்போது, ' உமக்குப் புத்திரப்பேறில்லையே ; உமது ஞானாசிரியரைக் கேட்க லாகாதா ?' என, அவர் நல்லதென்று போய் மற்றொருநாள் நாயனா ரைக் கண்டு விண்ணப்பஞ் செய்தார். நாயனாரும் "சுவாமி கடாக்ஷிப் பார்" என்று அனுக்கிரகம் பண்ணினார். பின்பு, ஒருநாள் ஏலேல சிங்கரும் அவர் மனைவியும் வழக்கப்படிக் காலையில் தரிசிக்கும் பசுவின் வாற் புறத்தில் நாம் சிறு குழந்தையாக விருந்து அழுவதைக்கண்டு, அக்குழந்தையை எடுத்து உச்சி மோந்து முத்தமிட்டு

ஆனந்தவாரியி லழுந்தினார்கள். உடனே, அந்த அம்மாள் ஸ்தனங்களிலே பால் சுரந்து பெருக, அக்குழந்தைக்குப் பால் கொடுத்து, ஞான குரு வாகிய நாயனார் சந்நிதானத்திற் கொண்டுபோய் வைத்து வணங் கினார்கள். அவர் அக்குழந்தைக்கு 'அழகானந்தர்' என்று நாம கரணஞ் செய்தனுப்பினார். இச்செய்தியை ஏலேலசிங்கர் அச் சுதராஜனுக் கறிவிக்க, அவன் 'அப்படித் தெய்வீகமாகக் கிடைத் திருக்குமாயின் அக்குழந்தை என்னிடத்திலும் வரலாமே' என்றான்.

கச

அவ்விருவரும் இப்படிப் பேசிக்கொண் டிருக்கும்போது, அக்குழந்தை அரசனுடைய மடியிலும் வந்திருந்தது. அதுகண்ட அவ்வரசனும் ஆச்சரிய மடைந்து, 'இஃது அழகானந்தமோ?' வென்று ஆனந்த

மடைந்து அதனைத்துக்கொண்டு, தன் மனைவி கையிற் கொடுத்தான் . அவள் அக்குழந்தையை வாங்கின வுடனே ஸ்தனங்களினின்றும் பால் பெருக, அதனை அக்குழந்தைக்கு ஊட்டினாள் . இப்படி அற்புதமாக அக்குழந்தை வளர்ந்து வந்தது. பின்பு, நாயனார் அநேகருக்கு ஞானோபதேசஞ் செய்துகொண்டு அதிக மகிமையோடு வாழ்ந்திருந் தனர்.

ஒருநாள் ஏலேலசிங்கரது கப்பல் கரை தட்டிப் போயிற்று. அதை அவர் தம் அரசனோடு சொன்னார். அரசர், 'நம்மாலாவதென்ன இருக்கிறது. உம்முடைய ஆசிரியருடனே சொல்லும்' என்றார். நாயனார் அதனை முன்னமே யறிந்து தமது திருமுன் விண்ணப் பஞ்செய்ய வருகின்ற ஏலேலசிங்கரை யழைத்துக் கொண்டு கப்ப லருகிற் சென்று, தமது திருக்கையாற் றொட்டு, ' ஏலையாவென்று

இழுங்கள் ' என்று கட்டளையிட, அப்படியே இழுத்தார்கள். உடனே, நிற்க வேண்டியபடி கப்பல் சரியாக நின்றது. பின்பு, மழை யில்லாமையால் உலகத்திற் றுனியங் கொள்ளக் கிடை யாமல் அநேக ரிறந்து போவதைக்கண்ட நாயனூர் தமது அன்புள்ள மாணுக்கனுகிய ஏலேலசிங்கரைப்பார்த்து,'நீர் இந்தப் பஞ்சகால மாறு கிற வரையில் வாங்கிக் கட்டி வைத்திருக்கும் நெல்லை யெல்லாய் கொள்கிரயத்திற்குக் குறுணி யேற்றமாக விற்கக் கடவை' என்றருளி னுர். சிங்கரும் ஆசிரியர் சொல்லை ஆகமமாகக் கொண்டு, அங்ஙனமே விற்றூர் ; பொருள் அபிவிர்த்தியாய் மலைபோலக் குவிந்தது. அவர் கட்டிவைத்திருந்த நெற்கூடோ ஏழு வருஷங் குறையாமலே யிருந் தது. பின்பு, மழை பெய்து உலகம் க்ஷேமமடைந்தது. மறுபடியும் நாயனூர் அவரை அழைத்துக்

'குறுணி குறைய வில்' என்றார். அவ் வாறே விற்க அவரிடமிருந்த நெல்லெல்லாம் மறுநாள் மாலைக்குள் செலவாய்ப் போய்விட்டன. அப்போது, நாயனார் 'நீர் நெல்விற்று விருத்தி செய்த பொருள்களை யெல்லாம் உருக்கித் திரட்டிக் கடலிற் போட்டு விடு 'மென, அவர் அப்படியே செய்தார். அதை ஒரு பெரு மீன் விழுங்கிற்று. சில நாட்களுக்குப் பின், அந்த மீன் வலைக்காரர்

கையிலகப்பட்டது. அதனை அவர்கள் சோதிக்கும்போது, அதன் வயிற்றில் மலினமும் பாசியும் படிந்த ஒரு ஸ்தம்பமிருக்கக் கண்டு, அதனை ஏலேல சிங்கருக்குக் கொடுத்தார்கள். அவர் கருங்கல்லென் றெண்ணி ஸ்நானம் பண்ணுமிடத்திற் போட்டுவைத்தார். அது

நடத் தல் முதலிய பயிற்சியினுல் மலினம் நீங்கிப் பிரகாசித்தது. அவர், அதில் தமது பெயரை வெட்டியிருத்தலால் தம் பொருளென் றறிந் ததுமன்றி, குருவின் திருவருளென்றெண்ணி மகிழ்ச்சி யடைந்தார்.

நாயனுர் இப்படி அநேக அற்புதங்களைச் செய்துகொண்டிருக்கும் நாளில், பாண்டிய நாட்டிலே மதுரைமாநகரிலே நக்கீரர் முதலிய சங் கப் புலவர்கள் தாம் அடைந்திருந்த கல்விப் பெருக்கால் அங்குச் செல் லும் வித்வ சிரோமணிகளை யெல்லாம் அவமதித்து நடப்பதைக் கேள்வியுற்றிருந்த அழகாநந்தர் முதலிய சில பெரியோர்கள் திருவள் ளுவரைப் பார்த்து, ' கற்றற்கு எளிதாய் இம்மையாதி மும்மைக்கு முதவியாய் உலகோபகாரமாக உமது பெயரால் ஒரு நூல் செய்ய வேண்டும் '

என்று வேண்டினார்கள். அவ்வாறே நாயனார் வேதாகம சாஸ்திரங்களைத்திரட்டி, அறம், பொருள், இன்பம் என முப்பாலாக்கி 1330 குறள் வெண்பாக்களைப் பாடியருளினார். பின்பு, அழகானந்தர் முதலானோர் திருக்குறளைக் கண்டு மகிழ்ந்து, அதனால் சங்கத்தாரை வெல்லலாம் என்று துணிந்து, நாயனாருக்குத் தங்கள் எண்ணத்தை அறிவித்தனர். நாயனார், அடியார் வேண்டுகோளுக் கியைந்து, தமது இல்லாளை இல்லின்க ணிறுத்தித் தாம் வழிக்கொண்டு நடந்து, இடைக்காடர் வசிக்கின்ற இடைக்கழி நாட்டை அணுகிச் சேர்கையில், ஔவை நேர்பட, அவரோடும் இடைக்காடரோடும் தாம் செல் லும் காரணத்தைத் தெரிவித்தார். இடைக்காடரும் நாயனாரை நோக்கி, 'இடையாலுங் கடையாலு மழியக் கடவதென்று சுவாமி தம்மை நிராகரித்த

நக்கீராதி சங்கத்தாரைச் சபித்திருக்கின்றார். ஆதலால், என்னாலும் உம்மாலும் அச்சங்கம் அழிவுபடப்போகின் றது. ஆகையால் நாமும் உம்மோடு வருகிறோம், வாரும்' என்றார். பிறகு, நாயனார் இடைக்காடரோடும், ஔவையோடும் மதுரையையடைந்து, நமது ஆலயத்தை வலம் வந்து தரிசனஞ் செய்து நமது சந்நிதானத்தில் பாண்டியராஜா, மந்திரி, பிரதானிகள், மற்றையோர், ஔவை, இடைக்காடர் முதலான பெரியோர்களி

ருந்து கேட்கும்படி தாம் அருளிச்செய்த திருக்குறள் முப்பாலையும் சங்கத்தார் நெஞ்சில் திகிலேறவும் ஏனையோர் நெஞ்சிற் களிப்பேற வும் அரங்கேற்றி முடித்தனர். அதனைக்கேட்ட இராஜன் முதலிய யாவரும்

ஆனந்தித்து நாயனாரைப் புகழ்ந்து துதித்தனர். பின்பு நாயனார், இடைக்காடரும், ஔவையும் மற்றவர்களும் சூழ்ந்துவரப் பொற்றாமரைத் தீர்த்தத்தின்கண் உள்ள சங்கப்பலகையிலே தமிழ்க்கரசராக வீற்றிருக்கின்றவர்களும், தவத்திலும் ஞானத்தி லும் செந்தமிழ் வாக்கிலும் மிக்க பெரியோராகிய திருவாதவூரரென் னும் மாணிக்கவாசக சுவாமிகளருளிச் செய்த திருக்கோவையார் நானூற்றுக்கும் நூறு குற்றங் கூறினவர்களும், நம் அன்பனாகிய தருமியென்னும் ஏழைப் பிராமணனுக்குப் பொற்கிழி கொடுத்தற் பொருட்டு அருளிச் செய்த,

" கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி

காமம் செப்பாது கண்டது மொழிமோ

பயிலியது கெழீஇய நட்பின்
மயிலியற் செறியெயிற் றரிவை கூந்தலி
னறியவு முளவோ நீயறியும் பூவே"

என்னும் பாடலுக்குக் குற்றங் கூறினவர்களும், நாம் ஒரு வித்வானாய் அச்சங்கத்திற்கேகி, நக்கீரரைப் பார்த்து,

"அங்கங் குலைய வரிவாளி னெய்பூசிப்
பங்கம் படவிரண்டு
கால்பரப்பிச்—சங்கதனைக்
கீர்கீ ரெனவறுக்குங் கீரனோ
வென்கவியை
யாராயு முள்ளத் தவன்"

என்று கேட்டபோது, நக்கீரன் நம்மை யறிந்துகொண்டு,

"சங்கறுப்ப தெங்கள்குலஞ் சங்கரனார்க்
கேதுகுலம்
பங்கமறச் சொன்னால்
பழுதாமே—சங்கை
யறிந்துண்டு வாழ்வோ மரனே
நின்போல

விரக்துண்டு வாழ்வ திலை ”

என்று சொல்லியபோது, நாம் நமது நெற்றிக் கண்ணைக்காட்ட, அப் போதும் அஞ்சாமல் உம்மைப்போல எத்தனை மந்திர வித்தைக் காரர்களை நாங்கள் அறிவோம், நீர் இப்போது காட்டிய நெற்றிக் கண்ணையன்றி உடம்பெல்லாம் கண்ணாகக் காட்டினும் குற்றங்



குற்றமே' யென்று கூறினவர்களும், மற்றப் புலவர்கள் பாடின பாடல் களையெல்லாம் கொள்ளைகொண்டு அகஸ்தியரையும் வெற்றி கொள் ளத்தக்க இலக்கியஇலக்கண ஆராய்ச்சியுள்ளவர்களுமான நக்கீராதி புலவர்களுடைய தைரியமும் தருக்கமும் புத்தியும் கலங்கிச் சோர் வடையும்படி, ஆட்டுக் கூட்டத்திற் புலி

புகுந்தாற்போலும், அராக்கூட்டத்திற்
கருடன் அடைந்தாற் போலும்,
மூங்கில்வனத்தில் தீப்பற்றியது போலும்
அவர்களிடத்திற் சென்று, அவர்கள் தம்மை
வினவின அசதி வினவிற்கெல்லாஞ்
செந்தமிழ்ப்பாவா லுத்தரஞ் சொன்னார்.
பின்பு, சங்கத்தார் நாயனாரை நோக்கி, 'நீர்
எந்த வூர்?' என்றனர். அதற்கவர்,

"எந்தவூ.ரென்றீ ரிருந்தவூர் நீர்கேளீர்
அந்தவூர் செய்தி யறியீரோ—வந்தவூர்
முப்பாழும் பாழாய் முடிவிலொரு
சூனியமாய்
அப்பாலும் பாழா யதும்"

என்பது முதலிய செய்யுட்களால் விடை
கூறினார். நிற்க.

பிறகு, நமது மூதாட்டியாகிய
ஔவை சங்கத்தாரை நோக்கி, கையினாலே
சைகைகள் செய்து, அவற்றின்
பொருளைக் கேட்க,
அவர்கள்,

" இவ்வளவு கண்ணினு ளிவ்வளவு
சிற்றிடையாள்
இவ்வளவு போன்ற
வினமுலையா—ளிவ்வளவாய்க்
காமத் தலைவனையுங் காணுது கன்றினு
ளூமத்தை காட்டுகுறி கண்கு"

என்று விடைகூற, ஒளவையார், ' அஃது தகுதியான பொருளன்று ' என்று கூறி,

" ஐய மிடுமி னறநெறியைக் கைப்பிடிமின்
இவ்வளவே னும்மனத்தை
யிட்டுண்மின்—தெய்வ
மொருவனே யென்ன வுணரவல் லீரேல்
அறுவினைக ளோத்து மறும் "

என்று மொழிந்தாள். அதுகேட்ட சங்கத்தார் திகிலடைந்து, 'இவளை வெல்லவியலா' தென்று துணிந்து இடைக்காடருடனே பேசினார்கள்.

8

இடைக்காடர்,

" ஆற்றங் கரையி னருகிருந்த மாமரத்திற்
காக்கை யிருந்து
கஃகஃகெனக்—காக்கைதனை
யெய்யக்கோ லில்லாம லிச்சிச்சென வெய்தான்
வையக்கோ னுர்தன் மகன் "

என்பது போன்ற பல செய்யுட்களைச் சொன்னர். அவற்றிற்கும் விடையிறுக்க வியலாத அப்புலவர்கள் வள்ளுவர் முதலிய மூவரையும் வெல்வதரிது என்றறிந்து நாணமுற்றனர். பின்பு, அவர்கள் நாயனாரை நோக்கி, ' வள்ளுவரே நீர் பாடிய குறளை நாங்களொப்புக் கொள்வதற்கு ஐயமொன்றுளது; அஃதியாதெனின் நாங்களிருக்கு மிந்தப்பலகை தெள்ளிய செந்தமிழ் நூலைக்கண்டா லிடங் கொடுக்கு

மாதலால், அது ஒப்புக்கொள்ளுமாகில் எங்களுக்கெல்லாஞ் சம்மதம்' என்று சொன்னார்கள். உடனே, நாயனார் தம்மால் அருளிச் செய்யப் பட்ட திருக்குறளை அச்சங்கப் பலகைமீது வைத்தார். அப்போது, அப்பலகை தன்னிடத்திருந்த சங்கத்தார் யாவரும் பொற்றாமரை யில் விழும்படி தெய்வத்தன்மை பொருந்திய திருக்குறட் புத்தகத் தினளவாய்ச் சுருங்கி, அதற்கு மாத்திரம் இடங்கொடுக்க, அது கண்ட யாவரும் களிகூர்ந்தனர். அவருட்சிலர் ' இது தெய்வீகமாகிய வேதம் ' என்றும், சிலர் ' வேதாங்கங்கள் ' என்றும், சிலர் ' ஞான நூல் ' என்றும், சிலர், ' ஆகமம் ' என்றும், சிலர், ' புராணங்கள் ' என் றும், சிலர் ' வாலிபர் மதனாகமம் ' என்றும் தத்தமக்குத் தோன்றிய வாறு பலவாறாகச்சொல்லித் துதித்தனர். இன்னும்

' பல நூல்களும் சாஸ்திரங்களும் இத்திருக்குறளினது பாயிரத்தின் ஒரு பாடலின் பொருளுக்கு மொவ்வாது ' என்றும், ' இதுவே வித்வான்களுடைய பாக்கியம் ' என்றும், ' இஃது அநேக மாயிரம் அகஸ்தியர்கள் ஒருரு வாகிவந்து பாடியதோ ?' என்றும், ' பல இலக்கண இலக்கியங்கட்கும் இஃது அங்கத்தை யொக்கும்' என்றும், 'விஷ்ணுவானவர் இவ்வுலகை இரண்டடியாலளந்தார் ; இஃது எல்லாருள்ளத்தையும் ஈரடியாலளந் தது' என்றும், ' இது சட்சமயத்திற்கும் பொதுநூல் ' என்றும் கல்வி மான்களும் அரசர்களும் மற்றவர்களும் கொண்டாடித் துதிக்கும் போது, பொற்றாமரைத் தீர்த்தத்தில் விழுந்து தடுமாறி வருந்திய சங்கப்புலவர் நாற்பத்தொன்பதின்மரும் கரையேறி நாயனாரையும் யும் திருக்குறளையும் புகழ்ந்து

அருளிச் செய்தனர். அஃது
திருவள்ளுவ மாலை யெனப்
பெயர் பெறும். மேற்படி சங்கத்தாரும்,
உக்கிரப் பெருவழுதி என்
னும் பாண்டியன் முதலானவர்களும்
நாயனாரைத் துதித்து, மிகுந்த
ஆனந்தமடைந்து பூசித்து, ' இந்நூலை
அகஸ்தியரும் ஒப்புக்கொள்
ளின் மிக நல்லது ' என்றார்கள். நாயனார்
அதற்கும் சம்மதித்து விடை
பெற்றுப் பொதிய மலைக்குச் சென்று,
அகஸ்தியர் முதலிய முனிவர்
களைக் கண்டு, தாம் செய்த நூலைக்
காண்பிக்க, அவர்கள் அதை நன்
குணர்ந்து அடைந்த சந்தோஷத்தையும்
புகழ்ந்த பாடலையும் அனந்த

ஞூனும் சொல்ல முடியாது. அவ்விடத்தில் கொங்கண சித்தர் தம்மை வழிபட அவருக் கனுக்கிரகித்த நாயனூர் அங்கிருந்து புறப்பட்டுத் தாம் முன்பு போகும் போது வழியில் எதிர்ப்பட்ட ஸ்தலங்களை யெல்லாம் தரிசனம் பண்ணிக்கொண்டு திருமயிலையை நோக்கிச் சென்ருர். அஃதறிந்த அப்பதியாரும் ஏலேலசிங்கரும் எதிர்கொண்டு போய் அவரை அழைத்துச் சென்ருர்கள். அவரும் சென்று தம தில்லத்தில் வாசுகி யென்னும் மனைவியோடிருந்து இல்லறம் நடாத்தி வந்தனர். இங்ஙனமிருக்கையில் ஒரு பெரியவர் அவரில்லின்கட் சென்று, 'சுவாமி ! இல்லறம் பெரிதோ ? துறவறம் பெரிதோ ? அடியேனுக்கு அனுக்கிரகிக்க வேண்டும்' என்று பல நாள் பணி செய்து கேட்க, நாயனூர் அவருக்கு உத்தரமொன்றுஞ் சொல்லாமல் அவரே

அறிந்து போகும்படி, ஒருநாள் தமது வாசுகி யென்னும் மனைவி கிணற்றில் ஜலம் தூக்கிக் கொண்டிருக்கையில் அவ்வம்மை யாரை அழைத்தார் ; அவ்வம்மையார் பாதிக்கிணற்றளவில் தூக்கின குடத்தை அப்படியே நிற்கவிட்டு வந்தார். மற்றொரு நாள் அந்த அம்மையார் நாயனுருக்குப் பழையது பரிமாறி நிற்கையில் நாயனுர் 'எனக்குச் சாதம் சுடுகின்றது ' என்றார் ; அப்போது அவ்வம்மை யார் சீக்கிரத்தில் விசிறிகொண்டு விசிறினுர். நாயனுர் மற்றொரு நாட் பகலில் சிறிதும் இருளனுகாதவிடத்தில் தாம் செய்யும்போது கையி லிருந்த குழல் தவறி விழுந்ததை யெடுக்க மனையாளை நோக்கித்

தீபம் கொண்டு வா ' என்றார் ; அவ்வம்மையார் அவ்வாறே தீபத்தைக் கொண்டு வந்தார். இந்நிகழ்ச்சிகளை வந்திருந்தவர் கண்டு இப்படிப்பட்ட

மனையாள் வாய்க்கின் இல்லறமே பெரிது என்றும், இல்லையேல் துறவறமே பெரிது என்று மெண்ணிக்கொண்டு ஒன்றும் கேளாமல் வணங்கிச் சென்றார்.

௨௦

இப்படி நாயனாருந் தம் மனைவியும் அருமையாக இல்லற நடத்தி வருங்காலத்தில், வாசுகியம்மையார் காலமாகும்போது நாயனார் திரு முகத்தைப் பார்க்க, நாயனாரும், 'என் ?' என்றார். அவ்வம்மையார், "என்னை மணஞ் செய்த அன்று தொடங்கித் தேவரீருக்கு அன்னம் பரிமாறும்போது, 'ஒரு சிறு பாத்திரத்திற் சலமும் ஊசியும் வை' எனக் கட்டளையிட்டது இன்ன காரணமென இன்றுவரை அடியேனுக்குத் தெரியவில்லை" என்று விண்ணப்பஞ்செய்ய, நாயனார், "அன்னம் புறத்திற் சிதறில் எடுத்துப் பரிசுத்தஞ்

செய்வதற்கு " என்று சொல்ல, அதைக் கேட்டவுடனே அவ்வம்மையார் உடலை விட்டனர். அப்போது நாயனார்,

"அடிசிற் கினியாளே யன்புடை யாளே
படிசொற் றவறாத பாவாய் - அடிவருடிப்
பின்றூங்கி முன்னெழுந்த பேதையே போதியோ
என்றூங்கு மென்க ணிரா"

என்றுரைத்து, அம்மாதின் திருமேனியைச் சமாதி பண்ணினர்.

பின்பு, திருவள்ளுவர் பல அற்புதங்களைச் செய்துகொண் டிருந்து, ஏலேலசிங்கரைப் பார்த்து, "நமக்குப் பரிபூரண தசை நேரிட்டிருப்பதால் நமது சரீரத்தை வீண் டம்பமின்றிப் புரிக்கட்டித் தெருத்தெருவாய் இழுத்துக் கடைசியில் ஈசான்ய திசையில் போட்டு விடு " என்று கட்டளையிட்டு, நிஷ்டை கூடிப் பரிபூரணமானவர்போல் இருக்க, அது கண்ட

ஏலேலசிங்கர் அவருடலைப் பொற்பெட்டியில் வைத்து அடக்கஞ் செய்ய முயற்சித்தார். உடனே நாயனார் கண் விழித்துப் பார்த்து, அப்பா, "நான் சொன்ன சொல்லைக் கடவாதே" என்று சொல்லிவிட்டு விதேகமுக்தி யடைந்தார். அப்போது, ஏலேல சிங்கர் நாயனார் கட்டளையைச் சிரமேற்றாங்கி, அவர் சொல்லிய வண்ணம் நாயனாரைப் புரிக்கட்டி யிழுத்துத் தெருத்தெருவாய்ச் சுற்றிப் பின்னர் ஈசானிய மூலையில் எறிந்துவிட்டார். அவரது சரீர பரிசம் பட்ட பிராணிகளெல்லாம் பொன்னிறமடைந்து சுவர்க்கம் பெற்றன என்று பரம கருணாநிதியாகிய பரமேஸ்வரன் பார்வதியாருக்குத் திருவாய் மலர்ந்தருளினார்.

திருவள்ளுவநாயனார் சரிதம் முற்றிற்று.

## நாயனார் சொரூப ஸ்துதி

" திருமுடி மிசையார் மயிர்முடி யழகுந்
தீர்க்கபுண் டரநுத லழகும்
திரண்மணி புயந்தை வருஞ்செவி யழகுந்
திகழ்நெடுந் தாடியி னழகும்
அருமுடி செபமா லிகைமுத் திரைசே
ரபயகேர் வலக்கையி னழகும்
அமிழ்துறழ் தமிழ்மா மறைமுறை வாத
மமைதரு மிடக்கையி னழகும்
கருமுடி யோகப் பட்டையி னழகுங்
கடிகொள்கீட் கோவண வழகும்
கழல்களிற் றிகிரி வளைவரை யழகுங்
கமலநல் வாதனத் தழகும்
தருமுடி முகிரேய் மயிலை வினிடைமா
தவர்கண்கண் டிறைஞ்சவீற் றிருக்குந்
தரைபுகழ்த் திருவள் ளுவரெனு நாமஞ்
சற்குரு சரணமே சரணம் "
காலம்

திருவள்ளுவ நாயனாரது காலம், மதுரையில் கடைச்சங்க மிருந்த காலமென்று அவரது சரித்திர வாயிலாகத் தெரிய வருத லால், இற்றைக்குச் சற்றேறக்குறைய இரண்டாயிர வருடத்திற்கு முன்னும். சரித்திர ஆராய்ச்சியுடையார், சிலப்பதிகாரம், மணி மேகலை முதலிய நூல்களினாதாரவினாலும் பிறவாற்றாலும் திருவள்ளு வர் கி. பி. முதனூற்றாண்டில் இருத்தல் வேண்டும் என்பர்.

## மதம்

இவரது மதம் இன்னதென்று எவ்விதத்திலும் நன்கு விளங்க வில்லை. இவர் இந்நூலிற் கூறிய கடவுள் வாழ்த்தும் பல சமயங்கட் கும் பொதுவாகவே யுளது. ஆதலால், இவரை இன்ன மதத்தினரென்று குறிப்பிட்டுரைத்த லியலாது.

ஔவையார்

" தேவர் குறளுந் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழு முனிமொழியுங்—கோவை
திருவா சகமுந் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்"

உஉ

எனக் கூறு நிற்றலின், திருக்குறள் வேத வழித்தாய நூல் என்பது வெள்ளிடை மலைபோல் விளங்கும்.

## திருவள்ளுவரின் திருநாமங்கள்

திருவள்ளுவர் தெய்வப்புலவர்
பொய்யில்புலவர் தேவர்
செந்நாப்போதார் நாயனர்
முதற்பாவலர் பெருநாவலர்

புலவர் மாதாநுபங்கி நான்முகனார்

## திருக்குறளின் திருநாமங்கள்

திருக்குறள்
திருவள்ளுவப்பயன் பொதுமறை
முப்பால் வாயுறை வாழ்த்து
பொருளுரை பொய்யா மொழி
தமிழ் மறை திருவள்ளுவர்
உத்தர வேதம் முதுமொழி
பான்முறை தெய்வ நூல்
வள்ளுவனார் வைப்பு

## திருக்குறள் உரையாசிரியர்கள்

### தருமர்

• •

மணககுடையார

தாமத்தர்

நச்சர் அல்லது நத்தர்

பரிமேலழகர்

பருதி

திருவணையர் அல்லது திருமலையர்

மல்லர்

கவிப்பெருமாள்

காளிங்கர்



உ

சண்முகநாதன் துணை

# திருக்குறள் தீபாலங்காரம்



## முதலாவது - அறத்துப்பால்



### பாயிரம்
### முதல் அதிகாரம்
### கடவுள் வாழ்த்து

---

## தேவாரம்

ஆதி யானை யமரர் தொழப்படு
நீதி யானை நியம நெறிகளை
யோதி யானை யுணர்தற் கரியதோர்
சோதி யானைக் கண்டீர்
தொழற்பாலதே.

பரிதி யானைப் பல்வேறு சமயங்கள்
கருதி யானைக் கண்டார் மனமேவிய
பிரிதி யானைப் பிறரறி யாததோர்
சுருதி யானைக் கண்டீர்
தொழற்பாலதே.

## திருவாசகம்

வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி
ஊனாகி யுயிராகி யுண்மையுமா
யின்மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரவரைக்
கூத்தாட்டு

வாஞ்கி னின்றூயை யென்சொல்லி
வாழ்த்துவனே. ௨ திருக்குறள்
தீபாலங்காரம் [அறத்துப்பால்

கலி

ஸர்வபதினென்றூமொன்பதுமானிடம்
நீர்ப்பறவைகாற்காலோர்ப்பப்பத்தாம்—சீரிய
பந்தமாங்தேவர்பதினலயன்வகுத்த
அந்தமில்சீர்த்தாவரநாலேந்து.

மேற்கூறிய எண்பத்து நான்கு லட்சம் யோனி பேதங்களில் அரிதாகிய மானிடப் பிறவியை அடைவது முன்செய்த தவப் பயனே. இதுகண்டே தாயுமானவர், 'எண்ணரிய பிறவிதனின் மானிடப் பிறவிதா னியாதினு மரிதரிது காண்' என்றூர். ஆகவே, இவ்வரிய பிறவியை அவலமாக்காதிருப்பதன்றே அழகு ? இவ் வரிய பிறவியானது தொண்ணூற்ரூறு தத்துவங்களென்று

சொல் லப்பட்ட, ஆன்ம தத்துவம் இருபத்து நான்கு, நாடி பத்து, அவத்தை ஐந்து, மலம் மூன்று, குணம் மூன்று, மண்டலம் மூன்று, பிணி மூன்று, விகாரம் எட்டு, ஆதாரம் ஆறு, தாது ஏழு, வாயு பத்து, கோசம் ஐந்து, வாயில் ஒன்பது இவைகளால் அமைந்த வீடானாலும், இது சாக்ஷாத்காரத்தை அடையத்தக்க அறிவும், மனமும் வாய்க்கப் பெற்றுள்ளமையான், இச்சடலம் நழுவுமுன் ஜீவன் முக்திக்கான வழியைத் தேடவேண்டுவது மக்கள் கடமை. ஆதலால் அவர்கள் நிலையில்லாத இச்சடலத்தையும், இதன் சம்பந்தமாக விளையும் பெண்டு, பிள்ளை, பண்டு, பதார்த்தமாதியாயுள்ள போகத்தையும், நேற்றைக்கிருந்தார் இன்றைக்குக் காணோம் என்றபடி, நீரிற்குமிழி போன்ற நிலையில்லாத வாழ்வையுங் கவனித்து , வாணாளை

வீணாகாமல் இரண்டறக் கலக்கும் அத்துவிதத்திற்கு வாக்கும் செயலும் ஒத்து உழைக்கவேண்டும். ஆனால் முன்னைத் தவப்பயன் இல்லாதார்க்கு அது எளிதிற் கைகூடாது. அதைப் பெறச்செய்யு முயற்சியில் ஆரம்பத்தில் கஷ்டந் தோன்றுவதுமன்றி, வேறுபல இடர்களு முண்டாகலாம். ஆகையாலன்றோ ஆன்றோரும்,

" துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி
யின்பம் பயக்கும் வினை "

என்று வலியுறுத்திக் கூறுவாராயினர். அவ்வாறே நாம் சரீரப் பிரயாசையைப் பாராமல் ஆன்றோர்கள் கைக்கொண்ட முறைகளைக் கைக்கொள்ள வேண்டுவது அவசியம். இஃதுணராவிடில் எத்தகையரேனும் தம்

அதிகாரம் ‧ க.] பாயிரம் ௩

பூர்வ சஞ்சித கர்ம பந்தத்தால் உண்டான துன்பங்கட் குட்பட்டு, காமக் குரோத லோப மோக மத மாச்சர்யாதிகளையும் அநேக விதங்களாக விஸ்தரித்துக்கொண்டு, எந்த விதத்தாலேனும் பசியின் பாதை தீர்ந்தால் போதுமென்றெண்ணி, துச்சமான விவ கார ங்களைச் செய்து திரவியம் சம்பாதித்துக்கொண்டு, அதுவே சுக மெனத் திரிவோர்க ளாவார்களென்பது திண்ணம். ஆகவே, எவரும் அத்தகைய அவலமான வழிகளுக் காள ாகாது , மேற்கூறிய அரிய வழிகளிற் பாடுபட அவசியம் விரும்பவேண்டும். இன்றேல் நம் பிறவிப்பயனும், கற்றதின் குணமும், அறிவின் விசேடமும் என்னும்?

“ ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந்
தானடங்காப்
பேதையிற் பேதையா ரில் ”

என்ற நாயனர் வாக்கியப்படி., உண்மைப்

பொருளை யுணர்ந்தும் அதையடைய ஈடுபடாதவர்கள் ' பூர்வ ஜன்ம வாசனையும் கடவுள் கிருபையும் இருந்தால் தானே கிட்டும் ' என்று சொல்லிக்கொள் கிறார்கள். அந்தோ ! இஃதென்ன பரிதாபகரமான நிலையாக இருக் கின்றது ! ஆராயுமிடத்தும், அத்தகையோர்களல்லவோ, அல்லும் பகலும் பலவித எண்ணங்களை யுடையவர்களாய், சாகுமளவும் அள வுகடந்த துக்கத்தை அனுபவிப்பவர்களாய், அவமான சுகத் தையே அடைதற்குரிய புருஷார்த்தமாக நினைத்து அதுதான் மோக்ஷமென நிச்சயிப்பவர்களாய், ஆசையென்னும் பல கயிறு கள ால் கட்டப்பட்டு, காமக்குரோதாதிகளையே பிரதானமாகக் கொண்டு, காமானுபவத்தின் பொருட்டாகவே கெட்ட வகையில் திரவியக் குவியல்களைச் சப் பா திப்பவர்க ளாகின்றார்கள். அந்தோ பாவம் !

இம்மாதிரி யெண்ணிக்கொண்டும் சொல்லிக்கொண்டு மிருந்தால் எப்படி சாக்ஷாத்காரத்தை யடைவது ? இந்த ஜன்மத்தில் இயன்றமட்டிலாவது பாடுபடுவோமானல், மறு ஜன்மத்திலாவது வீடு பெறலாம்.

மேலும் வாசாஞானிகள் மற்ற லௌகிக விஷயங்களிலும், பிரா ரத்வத்தின்படி நடக்கட்டுமென்று, விருப்பும் வெறுப்பும் முயற்சியு மற்று இருக்கிறார்களா ? இல்லையே ! தவிர, மனிதன் சமயம் வரும் ச

## திருக்குறள் தீபாலங்காரம்

[அறத்துப்பால் போது, மேலுக்கு 'எல்லாம் அவன் செயல்' என்று கூறிவிட்டுப் பிறகு, தன்னல் ஒரு காரியம் நிறைவேறியபோது, ' நானில்லாவிட் டால் இக்காரியம் முடியுமா? நான் எவ்வளவு சாமர்த்தியமாகச் செய்து; முடித்தேன் ' என்று பெருமை

பாராட்டிக்கொள்வதனால் யாது பயன்? "இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ ஏது வருமோ அறிகிலேன்" என்று நம் தாயுமானவர் திருவாய்மலர்ந் தருளியவாறு, எண்ணுதற்கரிய பிறவிகளை யெடுத்துக் கடைசியில் இம்மானிட தேகத்தை அடைந்த நாம், உலகத்திலுள்ள சராசர வஸ்துக்களில் இது சத்து இது அசத்து, இது நன்மை இது தீமை, இது பாவம் இது புண்ணியம், இது தர்மம் இது அதர்மம் என்று பகுத்தறிந்துகொண்டே போய், இவ்வுலகத்திற்கு மூல காரணமாயும், சாசுவதமாயும், ரூபா ரூபமற்றதாயும், இரண்டற்ற ஒன்றாயும், காண்டற்கரிய வஸ்துவாயும், அங்கு இங்கு எனாதபடி எங்கும் பிரகாசமாயும், ஆநந்தமாயுமிருக்கின்ற அப்பராபர சச்சிதானந்த சொரூபமாகிய நம்பெருமானை, ஒப்பற்ற கடவுளை, அன்போடு போற்றி,

மனதாரத் துதித்து, வாயார அவரது திருநாமங்களைச் சொல்லி, காதால் அவரது திருவிளையாடலாகிய லீலைகளைக் கேட்டு, அவரது ஸ்ரீ பாதகமலங்களைக் கையாற்றொழுது, அவருடைய திருவடி நிழலிற்கலந்து பரம சாயுச்சியத்தை அடைவதே கடமை. இதை மறுத்து, சம்சாரமென்னும் சாகரத்திற் கலந்து, மனமென்னும் சுழல் காற்றினால் அலைப்புண்டு, ஆசையென்னும் பல அலைகளினால் மொத்துண்டு தத்தளிக்கும் இத்தகைய சங்கடத்திலிருந்தால் எப்படி மோக்ஷமென்னும் கரையேறுவது? இப்பதவியிலிருக்கும் நம்மைக் கடவுள் எப்படி அக்கரையேற்றுவார்? ஆகையால், நாம் எப்படி நடந்து கொண்டால் அவரருளைப்பெறலாம் என்று யோசிப்போமானால் அதற்குரிய வழி தோன்றும். அவ்வழியே நம்மனதிற்

குடிகொண்டுள்ள
காமக் குரோதாதி தீக்குணங்களையும் அகங்கார மமகாராதி சகல துஷ்டமிருகங்களையும் அறவே வோட்டி, நம் ஐம்புலன்களையும் அடக்கி, மனதை ஒடுக்கி, சித்தத்தை முடுக்கி, உண்மையான மன நேரோடு கடவுளைத் தியானிப்பதாகும்.
ஈண்டுக் கூறுவது யாதெனில் :—மண்ணால் வனையப்பட்ட பாண்டங்கள் எல்லாம் உண்மையில் மண்ணே யாகும்.
மண்ணை அதிகாரம் - க.]
பாயிரம் ரு
யன்றி அப்பாண்டங்களைச் செய்ய முடியாது. முன்னும், பின்னும், இடையிலும் இருப்பது மண்ணே. இடையில் உருவமைந்து பல வகைப் பாண்டங்களாகப் பல தொழிற்கும் பயன்படுவதாயுள்ளதும் அம்மண்ணே. அதுபோல, முன்னும்

பின்னும், இடையிலும் உள்ளவன் அம்முதல்வனே. ஆனால், மண்ணானது பாண்டங்களாக வனையப்பட்டதுபோல, அவரது அம்சமே எண்ணிறந்த ஜீவ ராசிகளாக அமைந்திருக்கிறது. இஃதுணர்ந்தவே நாயனாரும்,

" அகர முதல வெழுத்தெல்லா மாதி

பகவன் முதற்றே யுலகு"

என்றருளினர்.

ஆதிமத்ய அந்தமில்லாதவனும், அவயவங்களில்லாதவனும், பெயர் கோத்திரம் சூத்திரம் ஜாதி வருணமில்லாதவனும், ஆண் பெண் அலி என்னும் நாமரூபமில்லாதவனும், மற்றெவ்வித விகாரங்களும் இல்லாதவனும், ஜனன மரணங்களும் புண்ணிய பாவங்களுமில்லாதவனும், தத்துவங்களை யெல்லாம் கடந்தும் எல்லா வற்றிலும் சமரசமாயும்

உள்ள பரப்பிரமமாகிய அம்முதல்வனை யடைய நம்முன்னோர்கள் பல வழிகளைக் காட்டியிருக்கிறார்கள். அவர்கள் எழுதிய நூல்களை வாசித்தும் அவனடியை வணங்கா விடில் யாது பயன்? ஒருகால் மக்கள் இவ்வளவு கஷ்டப்பட்டு அடையவேண்டி யிருக்கிறது என்று பெரியோர்கள் பயமுறுத்தி யிருப்பதாகக் கருதுவார்களோ? அல்லது, அக்காலத்து ஆன்றோர் தம் பிரதாபங்களை அறியக் காட்டியிருக்கின்றார் என்று நினைப்பார்களோ?

லௌகிக விஷயங்களும் ஒவ்வொன்றும் கஷ்டமாகத்தானே இருக்கின்றன. மக்கள் இவைகளை மட்டும் தமக்கின்றியமையாதன என்று கருதிக் களைப்புறாதுழைக்கிறார்கள். இஃது எத்தகைய ஆராய்ச்சியற்ற செய்கையாக வமைகிறது? அந்தோ பாவம்! மக்கள்

தங்களுக்கன்னியமான காரியங்களில் அவாவுற்று அரிதிற்கிடைத்த இப்பிறவியை அவலமாக்கலாமா?

பிறருடைய பொருளைக் கவர்ந்த ஒருவன் கஷ்டத்தையும் தன் னுடைய சாமர்த்தியத்தையும் அறியச் செய்தானென்று எண்ணை



லாமா? அதற்குத் தகுந்த தண்டனையை விதித்தால் தானே நீதி யென்போம்? அதுபோல, நூல்களை வாசித்த பின்னுவது அவைகளில் சொல்லியுள்ளபடி நடவாவிட்டால், கற்றதனுலும், கேட்டதனுலும், பிறர்க்கு எடுத்துச்சொன்னதனுலும் என்ன பயன்? இது கருதியே, பொய்யில் புலவரும்,

"கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன்

நற்றாள் தொழாஅ ரெனின்"

எனப் புகல்வாராயினர். ஆகவே,
எத்தகையரேனும் எல்லாம் வல்ல இறைவனடி
யை யெக்காலத்தும் மறத்தலாகாது.

ஆதிகாலத்தில் அல்லிலும் பகலிலும்,
தேவராலும் நரராலும் அழிவிலாத வரத்தை
அரிதிற் பெற்ற அசுரனாகிய இரணியன் எ
ல்லா வுயிர்களையும் இம்சித்துத்
தன்னிஷ்டம்போல் நடந்ததுமன்றி, எல்
லாம்வல்ல கருணாநிதியாகிய
அவ்விறைவனையும் மறந்திருமாந்திருந்
ததனால், எத்தகைய இடருற்றழிந்தா
னென்பது எவருமறிந்ததொன்றே.
ஆகலின், யாவும் வல்லவனாகிய இறைவனை
அனுதினமும் நம் மனதைவிட்டகல
விடாதிருக்க வேண்டும்.

பக்தர்களுடைய இருதயமே
கடவுளுக்கு வாசஸ்தானமாகச்
சொல்லப்பட்டிருக்கிறது. அத்தகைய
உண்மைகளை யெல்லாம் ஐயந் திரிபறவுணர

வல்ல நாமெவரும் அவ்விறைவனை நம்மிருதயத்தி லிருத்துவோமாயின், எத்தகைய கொடிய எண்ணங்களையும் செய்கைகளையும் அனுஷ்டித்தவர்களாயிருந்த போதிலும், ரூபாரூபமற்றதாய், காண்பதற்கரிதாய், எங்கும் பிரகாசமாய், உலகத்திற்கு மூலகாரணமாய் விளங்கா நின்ற அப்பரப்பிரமத்தின் அருளால் நம் பாவங்களைப் போக்கிக் கொள்வதுமன்றி இடையறாத பேரின்பத்திலாழ்ந்து, இறுதியில் என்று மாறாத அத்துவித பதவியையும் அவசியம் அடைவோம். இதற்குத் திருஷ்டாந்தம், சிவனடியார்கள் விஷ்ணு பக்தர்கள் முதலிய யாவருக்கும், அவரவர் கொள்கைப்படி கடவுள் காட்சி கொடுத்து மோட்ச மளித்திருக்கிறார் என்பது. இவ்விஷயம் முதுமொழியிலும் உள்ளது. அஃதாவது,

" மலர்மிசை யேகினன் மாணடி

சேர்ந்தார்

விலமிசை மேவொழ் வார்"

என்பதே.

அதிகாரம் - க.] பாயிரம்

எ

அண்ட சராசரங்களிலும் வியாபித்து, அவைகளில் ஆசையும் அருவருப்பும் அற்ற கடவுள் அனுகியாயுள்ள பக்தியை யுடைய மனமாகிய வலைக்கே கட்டுப்படுவர். இதற்குச் சான்றாக எண்ணிறந்த கதைகளுளவேனும், முன்னே, இளம்பிராயத்தை யுடையவனும், இரணியனாகிய தன் பிதாவால் எல்லையற்ற இடர் கட்கு இலக்கானவனுமாகிய பிரகலாதனுடைய பக்திக்குப் பரம்பொருளாகிய பகவான் பக்குவப்பட்டதே இங்குப் பகரத்தக்க சான்றாக விருக்கிறது.

ஆகவே, இவைகளையெல்லா மெளிதி லுணர வல்லோராகிய நாம் யாவரும் பிறவிப் பிணியை நீக்க, இவ்வரிய பிறவியிலேயே அம்முதல்வனைத்தேடி அடையவேண்டும்.

" வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில "

என்ற தேவர் வாக்கியப்படி, அவனடியைச் சேர்ந்தால் பிறவித்துன்பம் உண்டாகாது.

கற்கண்டு இனிமையான சுவையுடையது என்று சொல்லக் கேட்ட ஒருவன் அதை யெண்ணிக் கொண்டே யிருந்தால், அவ னுக்கு அதன் சுவை என்ன தெரியும்? அஃது இருக்கும் இடத் தைத் தேடிச்சென்று அதை எடுத்து வாயில் போட்டால் அல்லவோ அதன் சுவைதெரியும்? அதுபோல ஆன்மாவையும் பரமான்மாவையும் உள்ளபடி அறிந்து, தத்துவங்களை அடக்கி,

அதற்குரிய முறையை அப்பியசித்தால் அழிவற்ற ஆன்மா நல்வினை தீவினைகளுக்கு ஆளாகாமல் இரண்டறக் கலக்கும். இதனைப் பொய்யா மொழியாரும்,

“ இருள்சே ரிருவினையுஞ் சோரா
விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு ”

என்னுங் குறட்பாவிற் கூறியுள்ளார்.

ஞானேந்திரிய வாயிலாகச் சென்ற இச்சைகளையும் அறுத்
து கடவுளால் சொல்லப்பட்ட
வேதத்தின் வழி நடந்து அவ
ரிடம் வைத்த ஓரவாவாலேயே மார்க்கண்டேயர் என்றும் சிரஞ்சீவியாக வரம்பெற்றார். ஆனால், சிலர், இல்லறத்திலிருந்து கொண்டு, இதற்குரிய முறைகளை அப்பியசிப்பது அரிதென்று அ திருக்குறள் தீபாலங்காரம் [அறத்துப்பால்

நினைக்கலாம். ஆழ்ந்துணரின், அங்ஙிலையிலும் அஃது அரிதான காரிய மன்று. ஒரு கன்னிகை, பருவமடைந்து விவாகஞ் செய்துகொண்ட பின்பு, தனது குடும்பத்திலுள்ள சகலகாரியங்களையும் கவனித்து வருவதுடன், மாமன் மாமி மூத்தார் மைத்துனர் முதலானவர் களிடத்திலும் அன்பு காட்டி அவர்களை உபசரிக்க போதிலும் தனது பிராணநாதனிடத்தில் மாத்திரம் அதிக விசுவாசம் பாராட்டி மிகவும் அன்பாயிருப்பாள். அன்றியும், அன்னவளுக்குப் புத்திர பாக்கியம் கிடைத்தவுடன், முன்போல அவகாச மின்மையாலும் தனக்கரிதிற்கிடைத்த அருமைக் குழந்தையின்மேல் இருக்கும் அன் பாலும் குடும்பத்தில் அதிக கவலையின்றி அக்குழந்தையைச் சீராட் டிப் பாராட்டித் தாலாட்டி வளர்த்து அவள்

ஆனந்த மடைவாள். அதுபோலவே, ஆரம்பத்தில் அதிக விவகாரத்திலிருந்தாலும் அரிய நூல்களினது துணிபுகளைப்பற்றி அதனதன் உண்மைகளை உள் ளத்தே உறுதியாக இருத்துவோமாயின், அவைகளின் பயனனது, பின்னர் அநாவசியமான விவகாரங்களை யெல்லாம் ஆலோசிக்க அவ காசம் கொடாது அல்லும் பகலும் ஆத்மார்த்த காரியங்களிலேயே நம்மை ஐக்கியப்படுத்தி ஆனந்திக்கச் செய்யும். உற்று நோக்கு மிடத்து இங்ஙனம் உறுதிப் பொருள்களை யுணர்ந்தோர் உலகில் பலராவர். ஆகவே, அரிதாகிய பிறவியைப்பெற்ற நாமெவரும் ஐம்புலன்களையுமடக்கி ஆண்டவன் வழிகளி லீடுபடுவோமாயின் அவ னருள் பெறுவோமென்பதற் கையமில்லை. இதனை,

" பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ

ெராழுக்க

நெறிநின்றார் நீடுவாழ் வார் "

என்ற குறளாலுமுணர்க.

அன்றியும், உத்தானபாதனுடைய குமாரனான துருவன் என்பவன், தன் சிற்றன்னை மொழிக்காற்றாது, தவத்திற்குத் தன் தாயிடம் விடைபெற்றுச் சென்று, தவமியற்றிப் பரமனுடைய அருளைப் பெற்று, மேருமலையில் சோதிச்சக்கரமாயிருந்து விளங்குவது, அவ் விறைவன் கடாட்சம் அல்லவா ? இதனைக்குறித்தே நாயனாரும்,

" தனக்குவமை யில்லாதான்
றாள்சேர்ந்தார்க் கல்லான்
மனக்கவலை மாற்ற லரிது "

என்றார்.

சிவபெருமான் தமது திருவிளையாடலொன்றிலே மகா பாதகனுக்கு ஏன் முக்தி அளித்தார்? தாயைப் புணர்ந்து தந்தையைக் கொன்ற பாதகன் மீளா நரகமடைவதை மறுத்து, முக்தி கொடுத்தது, அவ்விறைவன் அன்பு வடிவாயிலங்குவதை உணர்த்துகிறதன்றோ? 'உண்மையை உணர்த்தினவனது குற்றத்தை மன்னிப்பதே மேலான அறம்' என்றுஞ் சொல்லப்பட்டிருக்கிறது.

"அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற்
பிறவாழி நீந்த லரிது"

என்ற வேதவாக்கியப்படி, அன்புவடிவா

யிலங்கும் அப்பரப் பிர மத்தை அடைந்தால் பிறவிப் பிணியை ஒழிக்கலாம். எண் குணமுடைய அவ்விறைவனடியை அடையவும், அட்டாங்க யோகத் திற் கூறியவாறு சித்திபெறவும் இம்மானிட ஜன்மமே யேற் றது. " இப்பிறவி தப்பினல் எப்பிறவி வாய்க்குமோ ' ' என்த் தாயுமானவர் கூறியதை யுன்னி, மெய்ப்பொருளாகியும் வெறுப்பும் விருப்பும் அற்றதாகியும் உள்ள பரம்பொருளை அடையப் பாடு படுவோமாக.

" பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா

ரிறைவ னடிசேரா தார் "

என்ற பொய்யாமொழிப்படி, நாம் உடலாகிய ஓடத்தைக்கொண்டே சமுத்திரமாகிய

உலகைக் கடந்து, சச்சிதானந்தமாகிய கரையை அடைவோமாக.

---

## 2 - ஆம் அதிகாரம்
## வான்சிறப்பு

---

கடவுளானவர் சகல ஜீவராசிகளுக்கும் ஆதாரமாகவும், உலகில் தருமமும், பொருளும், இன்பமும் நிலை பெறுவதற்காகவும் அமைத்துள்ள 'மழையினது பெருமையைக் கூறுதலே 'வான்சிறப்பு' எனப்படும்.

"வானின் றுலகம் வழங்கி வருதலாற்
றானமிழ்த மென்றுணரற் பாற்று"

என்ற வள்ளுவர் வாக்கின்படி, எல்லாம் வல்ல பரம்பொருளின் திருவருளால்,

இந்நிலவுலகின்கண் சிருஷ்டிக்கப்பட்ட
சராசரப் பொருள்களுக்கெல்லாம் முக்கிய
ஆதாரமாயுள்ளது மழை. மழை
யில்லாதிருந்தால், இவ்வவனி முழுவதும்
அக்னி மயமாகவே யிருந்து, எல்லா
ஜீவராசிகளும் இடருற்று, இறுதியில்
இறந்தொழியவும் நேருமென்பதை
எடுத்துக் காட்டவும் வேண்டுமோ?
இது கருதியே ஆன்றோரும்,
இவ்வவனிக்கு மழையே அமிழ்தமென்
றுரைவாராயினர். ஆகவே இதன் சிறப்பிற்
கெல்லை யுண்டோ? நமக்கு அறிவைக்
கொடுப்பதற்கும், அவ்வறிவால் தெளியப்
பார்ப்பதற்கும், அவ்விதம்
பார்த்தவர்கட்கு மெய்ப் பொருளை
யுணர்த்துவதற்கும், உணர்ந்த
பொருளைப்பற்றி ஆனந்திக்கச்
செய்வதற்கும் எவ்வனம் கல்வி

முதன்மையாக விருக்கிறதோ, அங்ஙனமே, ஜீவராசிகள் உண்ணும் பொருள்களைப் பக்குவப் படுத்தியும், பக்குவப்படுத்திய பொருள்களை அவைகளுக்கு ஆகார மாக்கியும் அவைகளை நிலைபெறச் செய்வதற்கும் மழையே காரண மாக இருக்கிறது. இஃதுணர்த்துவான் கருதியே முப்பாலும்,

"துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித்
துப்பார்க்குத்
துப்பாய தூஉ மழை"

என மொழியா நின்றது.

இவ்வாறு எவ்வகையாலும் உலகிற்கு இன்றியமையாத மழை யானது, உரிய காலத்திலே பெய்யாது சுருங்கி விடுமாயின் அதனை அதிகாரம் - உ.]

லேற்படும் துன்பத்திற்கு அளவில்லை. அனுபவமாகப் பார்க்குமிடத்தும், அத்தகைய துன்பம் காரணமாக, ஒவ்வொரு காலத்து உயிர் துறந்தோர்களும் உலகில் பலரல்லரோ? இதற்குச் சான்ருக எண்ணிறந்த கதைகளுளவேனும் அவைகளையெல்லாம் இங்கு எடுத்துக் காட்டுவதென்ருல் மிகையாம். ஆகையால்,

“ விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
துண்ணின் றுடற்றும் பசி ”

என்ற ஆன்ருேர் வாக்கையே இங்கு முக்கிய உதாரணமாகக் கொள்ளலாம். ஆழ்ந்துணர வல்லோர்கட்கு, இஃது, அதன் காரணமாக வுண்டாகும் துன்பங்களை யெல்லாம் ஐயந்திரிபற அறிவிக்கும். ஆகவே, உலகத்திலுள்ள சராசரங்கட் கெல்லாம் மகிழ்ச்சியைக் கொடுப்பது மழையே யென்பது

மறக்கத்தக்கதன்று.

ஆனால் இங்கு அறியத்தக்க விஷயமொன்றுண்டு. அஃதாவது, அங்ஙனம் மகிழ்ச்சியை யளிப்பது மழையேயாயினும், அது கால மல்லாத காலத்தில் பெய்யுமாயின், கஷ்டத்திற் கேதுவாவதுமன்றிப் பயிர்த்தொழிற்கும் முற்றும் முரணுகின்றது. இது கருதியே, முதுமொழியும்,

“ஏரி னுழாஅ ருழவர் புயலென்னும்
வாரி வளங்குன்றக் கால்”

என மொழிந்த துணர்க. ஆராயுமிடத்து, இவ்வவனியில் வேளாண்மை நடவாமையாலன்றோ வறுமை யுண்டாகிறது? அந்தோ! அக்கொடுமையானது மக்களை சூஸ்திரப் பாவைபோல் ஆட்டுவிக்கிறது. இன்னும் அவர்கள், பொய், பொறாமை, கொலை, களவு முதலிய துர்க் கிருத்தியங்களுக்கும்

ஆளாகிருர்கள். அத்தகையோர்களால் இவ்வவனி யடையும் துன்பத்திற்களவில்லை. நாமும் இதனைப் பல சாஸ்திர வாயிலாகவும் அபரோக்ஷமாகவும் அறிகின்ருேமல்லவா? இதுபற்றியே தெய்வப் புலமைவாய்ந்த நம் மூதாட்டியாரும் "நாடெங்கும் வாழக் கேடொன்றும் இல்லை" என்ருர்.

"உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டு; பேதை மாந்தர் பெருகிய துலகம்" என்ற ஆன்ருேர் வாக்கியப்படி, உயர்ந்தோர்க் காகப் பெய்யும் மழையானது மற்றவர்கட்கும் சார்வாகின்றது. இது, ௬௨



"நெல்லுக் கிறைத்தநீர் வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கு மாங்கே பொசியுமாம்—தொல்லுலகில்
நல்லா ரொருவ ருளரே லவர்பொருட்

டெல்லார்க்கும் பெய்யு மழை"
என்ற மூதுரையாலு முணரக் கிடக்கிறது.

முன்னொரு காலத்தில் யாவும் துறந்த தவசிரேஷ்டர்களில் ஒரு வரான கௌசிக முனிவரானவர், மழையின்மையால், பசியால் வருந்தி அதனைத் தீர்த்துக்கொள்வதற்கு எங்கும் திரிந்து, சிறிதும் உணவு கிடையாததுபற்றி மெலிந்து , பின் , நாயிறைச்சியைப் பெற்றுத்
தின்னப்புகுந்து, முதலில் அவ்விறைச்சியின்
ஒரு பகுதியைத் தெய் வங்கட்குப் பலியிட்டதாகவும், அதன் காரணமாக
இந்திரன் எங்
கும் மழை பெய்யச்செய்து எவ்வுயிர்களையும் இன்புறச் செய்ததாக வும் அரிய நூல்களின் வாயிலாக அறிந்திருக்கிறோம். அத்தகை யோரே மழையின்மையால் நிலை குலைந்து இடருற்றாரெனில் மற்றை
யோர் கதி யென்னவாகும் ? ஆகவே, உலகைக் கெடுப்பதும் காப் பதும்

அம்மழையே யென்பது மறுக்கொணாத தொன்று. இதனை,

“ கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
யெடுப்பதூஉ மெல்லா மழை”

என்ற தேவர் கூற்றாலுந் தெளிக.

இம்மட்டோ ! மழையில்லாவிடின், பூமியிலே புல் பூண்டு மர முதலியவைகளையும் காண்பதரிதாகும். மழைக்குக் காரணமாகிய கடலும் வற்றும் ; உலகத்தாரும் வறுமையால் பீடிக்கப்படுவதால் தான தருமங்களும் நடவா. தங்களுக்கே உணவில்லாதபோது மக்கள் எங்ஙனம் தான தருமங்களைச் செய்து நல்வழிப்படுவார்கள் ? தேவ பூசை களும் எங்ஙனம் நடைபெறும்? இஃதுணர்த்தவே தெய்வப்புலவரும்,

“ சிறப்பொடு பூசனை செல்லாது வானம்

வறக்குமேல் வானோர்க்கு மீண்டு"
" தானந் தவமிரண்டுந் தங்கா
வியனுலகம்
வானம் வழங்கா தெனின்"
எனப் பலவாறு தெரிவிப்பாராயினர். ஆகவே, அறநெறிகள் வழுவாதிருப்பதற்கு அவசியமான மழையானது எவ்வகையாலும் அதிகாரம்-

ட.] பாயிரம் ௧௩

குறையாதிருக்குமாயின், இவ்வவனியிலுள்ள ஆறு, குளம் முதலிய யாவும் வற்று. அது தன்னலாய பயனையும் தடையின்றி அளித்து, தரித்திரத்தையும் விலக்கி, தரும நெறியிலே எவரையும் புகச்செய்யு மென்பதற்குத் தடையில்லை. இத்தகைய பொருண்மைகளை யெல்லாம் எளிதிலுணர்த்துவான் கருதியே செந்நாப்

போதாரும்,

"நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு"

எனச் செப்பியுள்ளார்.

இங்கு அறியத்தக்க முக்கிய விஷயமாவது, உலகிற்கு அவசிய மான அம்மழை சுருங்குவதற்கும் மக்களாலேற்படும் அக்கிரமங்களே காரணமாக விருக்கின்றன என்பதாம். ஆகவே, இவைகளையெல்லாம் எளிதிலுணரவல்ல நாமெவரும், அத்தகைய அக்கிரமங்கட் காளாகாது, நற் காரியங்களிலீடுபட்டு, அங்கிங் கெனாதபடி எங்கும் பிரகாச மாய் நிறைந்த அருட் சோதியை என்றும் பிரார்த்தித்து, இவ்வுலகிலும் சிறப்புற்று, மறு உலகிலும் அடைதற்கரிய அத்துவித நிலையை அடைய அல்லும் பகலும் உழைப்போமாக.

---

# 3 - ஆம் அதிகாரம்
# நீத்தார் பெருமை

---

அகங்காரம், மமகாரம் என்ற அகப்பற்றையும் புறப்பற்றை யும் விட்ட முனிவரது மகிமையைக் கூறுதலே 'நீத்தார் பெருமை' என்பது. சச்சிதானந்த பரம்பொருளால் படைக்கப்பட்ட இவ் வவனியின் கண், யாரொருவர் 'நான் மனது' என்னும் பற்றுக் களைவிட்டுக் கடவுள் அடியையே உயர் பொருளாக எண்ணி யிருக்கிறாரோ அவரே உயர்ந்தவராவா ரென்பது ஒவ்வொருவரு முணர்ந்தே யிருக்கலாம். கூர்ந்து சிந்திக்குமிடத்து அத்தகையோ ருடைய மகிமையும், அறக்கடவுளாகிய நம் ஆண்டவன் மகிமையும் ஒன்றேயாகும். இதனை, " 'நான் எனது' என்னும் இரு

பற்றையும் ஒழித்தவன் எவனோ, அவனே நான் நானே அவன் " எனப் பகவத் கீசு



[அறத்துப்பால் கீதையில் ஸ்ரீகிருஷ்ண பகவான் திருவுளங்கனிந்ததே தெரிவிக்கிற தல்லவா? அப்பொருளே அறிவிப்பான் கருதியே உத்தர வேதமும்,

" ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து

வேண்டும் பனுவற் றுணிவு"

என்றுரையா நின்றது. ஆகவே, இவைகளை யெல்லாம் ஆழ்ந்துணருங்கால் அப்பெரியாருடைய ஆற்றலேயும், அவர் அடையும் பயனையும் அளவிடுதல் யார்க்கும் அரிது.

நான் பிறர்க்குச் செய்தேன், பிறர் எனக் கொன்றைச் செய் தார் என்றும், நான் என்றும், என்னுடைய பதார்த்த

மென்றும் சொல்கிற அஞ்ஞானத்தை ஞானக்கினியால் வெதுப்பி, நீருடன் நீர் கூடியவாறுபோல, ஜீவான்மாவையும் பரமான்மாவையும் ஒன்று படுத்தும் நிலையே அவர்கள் நிலையாம். இதுவே சின்முத்திரையாகும். இங்ஙனம் பக்குவப்பட்டவர் பெருமையைக் கூறுவது சமுத்திர ஜலத்தைக் கிளிஞ்சிலால் அளக்கவெண்ணியவாறாகும். இதனைக் குறித்தே,

" துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
இறந்தாரை யெண்ணிக்கொண் டற்று "

என்றார் தேவரும்.

அவர்கட்கு ' உலகம் மித்தை ' என்னும் பாவனை குறையாமல், ' பிரமம் சத்திய ' மென் னும் பாவனையே அதிகரித்து நிற்கும். இன்னும் அவர்கள்,

பிறவிக்குக் காரணமாகிய மும்மலத்தையும் நீக்கி, ஆத்மாவைச் சுத்தப்படுத்தி உலகத்தாரிடமும் அன்பு மயமாயிருந்து, மாயா காரியங்கள் அணுகாதபடி தம் மனதைக் காத்து, இப்பிறவி யிலேயே அவனருளைப் பெறுகிறவரென்பது எளிதில் விளங்கும். ஆகையாலன்றோ முப்பாலும்,

" இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு "

எனமொழியா நிற்கிறது?

ஆகவே, அடைதற்கரிய மக்கள் யாக்கையைப் பெற்றோராகிய யாவரும் அவ்வியல்புகளையெல்லாம்

அறிந்தொழுகுதல் அத்தியாவசிய அதிகாரம் - ௩.] பாயிரம்

கரு மாக வேண்டற்பாலது; அவ்வொழுக்கமே அழியாப்பதவியை அளிக்க வல்லது.

அஃதாவது, உச்சுவாசம் நிச்சுவாசம் இரண்டையும் அடக்கி, சுழுமுனைமார்க்கத்தில் பிராணவாயுவை நிறுத்தி, விஷயங் களில் மனதைச் செல்ல வொட்டாது திருப்பி, மூலாதாரம், சுவா திட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை என் னும் ஆதாரங்களில் அப்பிராணவாயுவை அசபையுடன் செலுத்தி, விநாயகர் முதலிய தேவதைகளை முறையே அபிமுகம் பண்ணிக் கொண்டு செல்லுங்கால், வன்னிபீஜத்தினின்று எழாநின்ற அக்கினி யால் வெதுப்பப்பட்டு, சந்திரமண்டலத்தினின்றும் சொட்டா நின்ற அமிர்தத்தைச் சர்வநாடி வாயிலாக நிரப்பி, அனந்தியா நின்ற மனதைத் தத்துவ வாயிலாகச் செல்லவிடாமல், தவம் பக்தி யென்னும் கயிற்றால் கட்டி, நம் இறைவனுகிய

பரப்பிரமத்தினிடத் தில் கொடுக்க, அவர் எல்லா லோகங்கட்கும் மேலாகிய மோட்ச லோகத்தில் ஆன்மாவைச் சேர்க்கிறார் என்பதேயாம். இதனை,

" உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து "

என்று பொதுமறையே புகலுதல் காண்க.

நான் என்பதையும், மனமென்பதையும் ஏககாலத்தில் பார்க்க முடியாது. கண்ணாடியும், பிம்பமும் நேர்பட்டபோது ஒரு வஸ்து தோன்றுகிறது. அம்மாதிரி, ஆத்மஞானியின் ஜீவாத்மாவும், பரமாத்மாவும் ஒன்றுபட்ட காலத்துச் சடமானது கண்ணாடியைப் போல நிற்க, ஒரு வஸ்து தோன்றுகிறது. அந்த வஸ்துவின் செயலோ அளவு கடந்து நிற்கிறது. அதனை அநுபவமாக

அறிகின்றது மன்றி, ' அநேக சாஸ்திர வாயிலாகவும் வாசித்தும் கேட்டுமிருக்கிறோம். அவைகளைப்பற்றி இங்கு விவகரிக்கின் மிகப்பெருகும். ஆகையால்,

" ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பு ளார்கோமா
னிந்திரனே சாலுங் கரி "

என்ற ஆன்றோர் வாக்கையே இங்கு ஆதாரமாகக் கொள்ளலாம்.

அறிவானூன்றிப் பார்க்கவல்லோர்கட்கும், அஃது அபாரமான உண்மைகளை யெல்லாம் உள்ளங்கை நெல்லிக்கனிபோ லுணர்த் தக்க

திருக்குறள் தீபாலங்காரம்
[அறத்துப்பால்

தும். ஆகவே, அத்தகைய வுண்மைகளை யெல்லா முணர்ந்த பின்னராவது எவரும் தத்துவங்களை யொடுக்கித் தக்கார்க்குரிய வழிகளைத்

தடையின்றிப் பெறவேண்டும். சூரியனென்று கூறுவதாலும் நினைப்பதாலுமே இருள் நீங்கி விடுமா? நீங்காது. அது போல அறிந்த வளவினாலும் ஆலோசித்த வளவினாலும் அத்தகைய பெருமையை அடைய முடியுமா? முடியாது. ஆகையால், தானியத்தை விரும்பியவன் வைக்கோலை நீக்குவது போல, அப்பெருமையை விரும்பியவர், அகங்காரம், மமகாரம் முதலியவைகளை அறவொழித்து அதற்குரிய முறைகளைக் கைக்கொள்ள வேண்டும். ஆனால் உலக அநுபவத்தை உற்று நோக்கின், பெரும்பான்மையோர் அவ்வாறொழுகி அநுசரித்ததாகக் காணோம். பதரானது நெல்லுடனே பிறந்து நெல்லைப்போலவே காணப்பட்டாலும் அதற்குள் அரிசியென்ற வஸ்து இல்லாததால் அதைத்தள்ளி நெல்லைக் கைக்கொள்ளுவதுபோல, இயமம்

நியமம் என்ற யோகத்தால் உன் டான சத்தையுடையவரே பெரியோரென்று பெருமை பிறங்க அவர்களைப் பிரித்துக் கூறவேண்டியதாக விருக்கிறது. இதனை,

" செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்"

என்ற செந்நாப்போதார் வாக்கே தெரிவிக்கும். அம்மட்டோ!

அவர்களல்லவோ உலக வியாபார மனைத்தும் துன்பமென நன்குணர்ந்து வெறுத்துச் சரியை கிரியையாதிகளை முறையே அனுசரித்து, அத்துவித சாயுச்சியத்தை விரும்பி, அதற்குக் காரண மாகிய சிவஞான மடைவதற் கேதுவான நிலையிலீடுபட்டுச் சிறப்புறுபவர்களாக விருக்கிறார்கள்? அன்னார் பெருமை இவ் வவனியில் அளவளாவிப் பிரகாசிக்கிறது. இது

கருதியே திருவள்ளுவப் பயனும்,

" சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு"

எனத் தெரிவியா நிற்கிறது. ஆகவே, அவர்களுடைய ஆற்றலை அளவிடுதல் அரிதாகும்.

ஆதிகாலத்தில், கடவுளருளைப் பெற்ற கௌதம முனிவருடைய சாபத்தைத் தேவலோகத்தை யாளாநின்ற தேவேந்திரனே தடுக்க அதிகாரம் - டு.]



முடியாமல் அனுபவிக்கப் பெற்றதே தக்க சான்றாக விருக்கிறது. இவைகளை யெல்லாம் எளிதி லுணர்த்தவே பொய்யில் புலவரும்,

" நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்"

எனப் புகன்றுளார்.

மகான்களுடைய சித்தத்தின்படியே இன்னும் பல காரியங்கள் நடைபெறுகின்றன. பூர்வம், மந்தார நிழலிலே, சுதர்மையென்னும் தேவசபையில், முப்பத்து முக்கோடி தேவர்களும் சேவிக்க, தேவப் பெண்களுடைய நிருத்தத்தையும் கீதத்தையும் கண்டும் கேட்டும் களிக்கடலில் ஆழ்ந்திருந்த அவ்விந்திரனே, பெரியோர்களில் ஒருவ ராகிய பிருகஸ்பதி பகவான் வரக்கண்டும், அவரை வரவேற்காத காரணத்தால், பெருந் துன்பத்திற்கிலக்காகவேண்டி யிருந்தது. ஆகையாலன்றோ வள்ளுவரும்,

" குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது "

என நவின்றுளார்.

பெரியோர்கள் அந்நிலையுடையவர்களாயினும்,

எல்லாவுயிர்க ளிடத்தும் இடையறு அன்புடையவர்கள் என்பதை நாம் மறத்த லாகாது. இதனை,

“ அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான் ”

என்ற திருக்குறளால் நன்கு தெளிக.

இவைகளை யெல்லாம் நன்குணர வல்லவர்களாகிய நாமெவரும், எல்லா ஜீவர்களிடத்தும் அன்பும் அருளும் உடையவர்களாகிய அப் பெரியோர்களிடதது , அந்தக்கரண சுத்தியுடன் அன்பு செலுத்தி அடங்கி நடப்போமாக. அன்றியும், உலக ரக்ஷகனாகிய நம் இறைவன், துறந்தார் மூலமாகவே உயிர்களிடத்துள்ள கருணையைக் காட்டி எங்கும் விளக்குகின்றானென்பது எவருமறிந்ததே. ஆகவே, நாம் அவ்வழிபற்றி நடப்பதுடன், எங்கும் நீக்கமற நிறைந்து விளங்கா நின்ற

அவ்விறைவனையும் அல்லும் பகலும் தியானிப்போமாக.

## 4-ஆம் அதிகாரம்
## அறன் வலியுறுத்தல்

மனிதருக்கு இம்மையில் புகழையும் மறுமையில் மோட்சத்தையும் அளிக்கும் பொருளாகிய அறமே உறுதியுடையதென்று சொல்லுதலே 'அறன் வலியுறுத்தல்' எனப்படும்.

"சிறப்பீனுஞ் செல்வமு மீனு மறத்தினூஉங்
காக்க மெவனோ வுயிர்க்கு"

என்றார் வள்ளுவனார்.

சச்சிதானந்த பரம்பொருளின் திருவருளால் படைக்கப்பட்ட இங்கில வுலகின்கண் வாழும் மக்களாகிய எவர்க்கும் தருமமே முதன்மையாக

வைக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, எவரும், சற்பாத்திரமாயுள்ளோர்கட்குத் தம்மாலியல்வதை எவ்வகையானுஞ் செய்ய வேண்டும். தருமமே தலைகாக்கும். "பொன்றுங்கால் பொன்றாத் துணை" யாவது மஃதே. தம்மோடு செல்வதுவேண்டி னறஞ் செய்யவேண்டும். இவ்வவனியில் அவ்வாறறிந்தொழுக வல்லார் கட்கு யாதொருவகையானுங் குறைவில்லை என்றே கூறலாம். அவர் கள் இவ்வுலகத்தும் புகழைப்பெற்று அவ்வுலகத்தும் அழியாப் பதவியாகிய மோட்சத்தைப் பெறுவார்கள். இவைகளை யெல்லாம் உணரும் நாம் அறத்தை அசட்டை செய்யாது அவசியம் விரும்ப வேண்டும். இன்றேல், நாமடையுங்கேட்டிற் கெல்லையில்லை. இதனை,

"அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை
மறத்தலி னூங்கில்லை கேடு"

என்ற ஆன்றோர் வாக்கும் அறிவிக்கின்றது.

அன்றியும், அறிவிற் சிறந்த மகான்கள் தமக்களவிறந்த குறைகள் சம்பவிக்கினும் அறத்தை அசட்டை செய்கிறார்களா? இல்லை. ஆகவே, நாமும் நம்மால் இயன்றவரை தரும காரியங்களைப் பாடுபட்டுச் செய்யவேண்டும். ஆதிகாலத்தில் அஸ்தினபுரியை அரசாண்ட அரசர்களுள் ஒருவனான அரவக்கொடியோனுக்கு ஆப்தநேசனும் அங்கதேசத்தை ஆண்டவனுமாகிய கர்ணனென் அதிகாரம் - ச.]



பான், இறுதிவரையில் எவ்வகையாலும் தருமத்தைத் தவறவிட்டதுண்டோ? இல்லையல்லவா? ஆகையால், அன்னார் இறந்தவரேயாயினும் உண்மையில்

உயிரோ டிருப்பவரேயாயினர். அந்நுட்பத்தை அறிவிப்பான் கருதி நாயனுரும்,

"ஒல்லும் வகையா னறவினை யோவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல்"

என்ருர்.

ஆகவே, எவரும் மனம் வாக்குக் காயம் என்ற மூன்று கரணங்களும் ஒத்துத் தருமம் செய்யவேண்டும். மனம் சுத்தமானுல், சொல்லும், செயலும் தருமமாகவே விளங்கும். தருமத்தை மனக்குற்றம் நீங்காமல் பிறர் புகழ்வாரெனச் செய்தாலும், மறுமையில் இன்ன பலனை அடையலாமென்று எண்ணிக்கொண்டு செய்தாலும் இறுதியில் எண்ணியதும் அடையப்பெருமல் இவ்வுலகிலும் இழிவடைந்து அவ்வுலகிலும் அழியா நரகத்திற்காளாக வேண்டி வரும். ஆதலால், காமியார்த்தமாகத் தருமம்

செய்யலாகாது. வாயுறைவாழ்த்தும்,

“ மனத்துக்கண் மாசில னாத லனைத்தற

னாகுல நீர பிற”

என வழுத்தியதுணர்க.

நாம் அதனை உணர்ந்து, அவ்வழிநின்று ஒழுகுவோமாயின், காமம் வெகுளி மயக்கமென்னும் முக்குற்றங்களுமொழிந்து, இரு வினைக்குங் காரணமாகிய மனமும் பரிசுத்தமடைந்து, பகவா னனுக் கிரகத்திற்கும் பாத்திரமாவோம். ஆகையால் அவ்விஷயங்களை யெல்லாம் எளிதி லுணர்ந்தொழுக வேண்டுவ தவசியம். இன்றேல் எத்தகைய தருமம் செய்தாலுமென்னை ? தவமே புரிந்தாலுமென்னை ? ‘ ‘ கையிலே பிடிப்பது ஜெபமாலை, கக்கத்திலே வைப்பது கன்னக் கோல் ’ ’ என்னும் பழமொழிக்

நிலைக்காவோமன்றிப் பயன் பெறேம். தேவரும்,

“ அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொ னான்கு
மிழுக்கா வியன்ற தறம்”

என அறத்தின் இயல்பை வலியுறுத்திக் கூறுவாராயினர்.



அன்றியும், ‘ அரிதரிது மானிடராதலரிது ’ என ஔவையார் கூறியவாறு, கிடைத்தற்கரியதாகிய நற்கதிகளை நேரிற் பெறுதற் குரிய இம்மக்கட்பிறவியை நாம் முன்னை வினையால் பெற்றிருந்தும், தருமஞ் செய்யாமல் வீணே காலங் கழிப்பதென்றால் அஃது எத் தகை

மதியீனம்! அந்தோ! இந்த யாக்கையும் இவ்வளவுகால மிருக்குமென் றெண்ணுதற்கிட முண்டோ? மாலைச் செய்வோம் நாளைச் செய்வோம் எனில், மாலை கிடந்தானெழுதலரிது; நாளை நம் முடைய நாளோ, நமனுடைய நாளோ? ஆகையால், நிலையில்லாத வாழ்வையும் நிச்சயமில்லாத சடலத்தையும் நித்தியமாக எண்ணாது, 'காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்' என்றபடி ஜீவன் முக்திக்கான வழிகளைத் தேடவேண்டுவது அவசியம். ஆழ்ந்துணரு மிடத்தும், இவ்வரிய பிறவிக்கு, அஃதன்றோ அழியாத் துணையாக வமைகிறது? இதனை அநேக சாஸ்திர வாயிலாக அறிந்ததுமன்றி அனுபவமாக வும் பார்க்கின்றோம். சிலர் தவசி, சிலர் ராஜா, சிலர் ஏவலாளர் என்று படிப்படியாக இருக்கிறார்; அவரவர் உயர்விற்குக் காரணம் அவரவர் தவத்தின் விசேடமேயாகும்.

" சொற்பனம் போன்ற அற்பமாம் வாழ்வில்
ஒருவர் பெரியராம் ஒருவர் சிறியராம்
ஒருவ ராசராம் ஒருவ ரூழியராம்
என்னே உலகம் என்ன சம்சாரம்
சலனமே நிறைந்த உலகம் யாவும்
தோற்றமே யன் றி வேற்றுமை யாது"
என்றார் ஒருவர்.

" அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானே ரேர்ந்தா னிடை"
என்றது உத்தர வேதமும்.

ஆனல், சிலர் அங்ஙனஞ் செய்வதற்கு நாம் பொருட்செல்வ முடையரல்லவே யென்று ஆலோசனையின்றி அறிவிக்கலாம். அறஞ் செய்வதற்குப் பொருட்செல்வம் அவசியமேயாயினும்,

அறத்தி னியல்பை அறியவல்லோர்கட்கு அத்தகைய பொருள்கொண்டே அதைச் செய்யவேண்டுமென்பது அவசியமன்று. பின் னெவ்வா றெனில், ஆத்ம ஞானியானவன் பிராண வாயுவை குண்டலி



யின் உதவியால் ஆறு ஆதாரங்களிலும் செலுத்திச் சந்திர மண்டலத்திலுள்ள அமிர்தத்தை அருந்துவதுபோல, தருமத்தை, மனம் வாக்கு காயம் என்ற மூன்றின் வழிகளிலும் புகுத்தினால் மேலாகிய மோட்சத்தை அடையலாம். இது கொண்டே தெய்வப் புலவரும்,

" வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்"

என்றார்.

இவ்வாறிருக்க, அநேகர் புலியைப் பார்த்துப் பூனை சூடுபோட்டுக்கொள்வதுபோலத் தம்மிடம் பொருளில்லாவிடின், இரந்தேனும் அறம் செய்யவேண்டுமென்று 'ஏற்பதிகழ்ச்சி' என்றதையும் எண்ணாது, எற்குந்தொழிலையியல்பெனக் கொண்டு, அறத்தின் பயனை அடையப் பார்க்கின்றனர். அச்செயல் அத்துணை அவசியமானதும், அரிய பயனை அளிப்பதுமன்றாம். இது கருதியே முதுமொழியும்,

"அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்
புறத்த புகழு மில"

என மொழியா நின்றது போலும்! ஆகவே, எவரும், பழிபாவங் களுக்கஞ்சியீட்டிய பொருள்களைத் தருமஞ்செய்தால், அது, இம் மையில் புகழ், பொருள், ஆயுள் முதலியவைகளை விருத்தி செய்து மறுமையிலும் மோட்சத்தை அளிக்கும்.

இது குறித்துத் திருக்குறளடிகளும்,

" செயற்பால தோரு மறனே யொருவற்
குயற்பால தோரும் பழி "

எனத் தெரிவித்ததுணர்க.

இனி, நாம் ஒவ்வொருவரும் செய்தற்குரித்தாகிய அறத்தையே செய்து முன்னேற்றமடைய முயலவேண்டும். நல்லிசைப் புலவராகிய நம்மூதாட்டியாரும் ' அறஞ்செய விரும்பு ' என்றுணர்த் தினார். தருமசிந்தனை யில்லாத ஜன்மம் மானிடஜன்மமாகாது. நம்மாலியன்ற மட்டில், மனத்தூய்மையுடன் தருமஞ்செய்தால்,

" காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது "

என்ற வேதத்தின்படி அத்தருமத்தின் பயனை அடையலாம். ஆக

வின் நாம் ஒவ்வொருவரும் அன்பும், ஜீவகாருண்யமும் உடையவர் களா யிருந்து, அறத்தையும் பகவதார்ப்பணமாகச் செய்து, பக்த வத்ஸலனாகிய அப்பரம்பொருளின் திருவடி நிழலைச்சேர என்றும் பிரார்த்திப்போமாக.

பாயிரம் முற்றிற்று.

---

## 5-ஆம் அதிகாரம்
## முதலாவது இல்லற இயல்

---

### இல்வாழ்க்கை

சதிபதிகளிருவரும் ஒன்றுபட்ட மனதுடன், ஜீவர்கள், பசி தாகம் கொலை பிணி வறுமை இவைகளால் துன்பமும் துக்கமும் அடையாதபடி உதவி புரிவதே 'இல்வாழ்க்கை' யெனப்படும்.

" இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கு
நல்லாற்றி னின்ற துணை "
என்றார் நாயனார்.

மானிடராய்ப் பிறந்த ஒவ்வொருவரும் ஜீவர்களிடத்தில் தயை செலுத்த வேண்டுவது அவசியம். இதுவே புண்ணிய மென்பது. இப்பொருளே பரலோகமாகிய அவ்வீட்டிற்கும் வேண்டிய முதல் பொருள். நாம் ஒரே வீட்டில் குடிக்கூலிக்கு இருந்தபோது வைத் திருந்த பொருள்களை வேறு வீட்டிற்குப் போகும்போது எடுத் துப் போவதுபோல, நாம் இப்பிறப்பில் செய்த புண்ணிய பாவங் களை மறுமைக்குக் கொண்டு போகிறோம். நாம் புண்ணியம் செய் திருந்தால் நமன் மலர்ந்த சௌந்தரியமான முகத்துடனிருந்து உபசாரஞ்செய்து சொர்க்கத்திற்கு

அனுப்புவதாகவும், பாவஞ்செய் திருந்தால் கோரமான பயங்கர ரூபத்துடனிருந்து தண்டனை செய்து நரகலோகத்தில் தள்ளுவதாகவும் சாஸ்திரங்கள் சொல்லு கின்றன. சொர்க்கலோகத்திற்குப் போனாலும், மறுபடியும் பிறவி யெடுத்தே தீரவேண்டும். நிற்க, மக்களுள் இல்லறத்தார், எக்கா லத்தும் எவ்வகையாலும் ஜீவர்களிடத்தில் கருணையுடையவர்களாக இருக்கவேண்டியது அவர்தங் கடமை. இதனை,

அதிகாரம் - ௫.] இல்லற இயல்

௨௫

" துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கு
மிறந்தார்க்கு
மில்வாழ்வா னென்பான் றுணை"

என்ற திருக்குறளால் தெளிக.

ஆகவே, இல்லறத்தாருக்குக் கருணை எவ்வகையானும் இன்றி யமையாததென்பதை விளக்க வேண்டுவதில்லை. இதனாலன்றோ அரசர்களும் அன்னாரிடத்து ஆறிலொரு கடைமையை வாங்கும் முறையைக் கைக்கொண்டுள்ளார்கள்? இல்லறத்தார் தமக்குரிய கடமைகளையெல்லாம் ஐயந்திரிபற அறிந்து அவைகட்குரிய முறை களினின்றும் அணுவளவும் வழுவுதலாகாது. இவைகளை யெல் லாம் எளிதிலுணர்த்துவான் கருதியே உத்தரவேதமும்,

"தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க லொனென்றாங்
ஐம்புலத்தா றோம்ப றலை"

என்றுரையா நிற்கின்றது.

பழிபாவங்களுக்குப் பயந்து

நீதிவழியில் சேர்த்த பொருளை, பிரமசாரி, வானப்பிரஸ்தன், சந்நியாசி, துறந்தார், தரித்திரர், ஆதரவின்றி வந்து செத்தவர், தென்புலத்தார், தெய்வம், புதிதாய் வந்தவர், சுற்றத்தார் என்ற பத்துப்பேர்களுக்கும் பயன் படுத்துவது இல்லறத்தார்க்குரிய தருமமாகும். நூல்களிலும் மிக்க எளிதில் சிரமமின்றிச் செய்யக்கூடியதும், தக்க பலனைத் தரக் கூடியதும் இல்லறமென்று சொல்லப்பட்டிருக்கிறது. நம்மூதாட்டி யாரும், 'இல்லறமல்லது நல்லறமன்று' என்று கூறிப்போந்தார். ஆயினும், அதை அறவழியாலன்றிப் பிறவழியால் பெறவியலாது.

"பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்சல் எஞ்ஞான்று மில்"

என்றார் ஆசிரியரும்.

நீதிநூல்கள், அறவழியினாலேயே
பொருளைத்தேடி அறத்தை
இயற்றவேண்டுமென அறிவுறுத்துகின்றன.
ஆடவர்கள் அவ்வுண்மையை
அறிந்தொழுகினும், அறத்தைச்
சிறப்பிக்கச் செய்பவள் மனைவியே.
எட்டுவித மணமென்று
சொல்லப்பட்டவைகளில் எதுவாக
யிருந்தாலும், விதிப்படி
அக்கினிசாட்சியாகக் கொண்ட பெண்ணே
மனைவியாம். அம்மனைவியைக்
காமக்கிழத்தியராகக் உசா
திருக்குறள் தீபாலங்காரம்
[அறத்துப்பால்
கொள்ளாமல் தருமக்களஞ்சியமாகக்
கொண்டு அறத்தை நடத்த
வேண்டும். அங்ஙனம் யாரொருவர்
அறிந்தொழுக வல்லவர்களோ,
அவர்கள் அவமான

காரியங்களுக்கிலக்காகாது,

"அன்பு மறனு முடைத்தாயி
னில்வாழ்க்கை

பண்பும் பயனு மது"

என்ற ஆன்றோர் வாக்கியத்தின்படி, அடைதற்கரிய பயனை அவசியம் அடைவார்களென்பது ஒருதலை.

இவ்வவனியில், பெரும்பாலும் இல்லறத்தாரே எண்ணிறந்தவராக இருந்தும் அவ்வில்லறத்தின்படி நடப்பவர் மிகச்சிலர். அவர் களுள்ளும் மனையாளும், வீட்டிலுள்ள ஏனையோரும் அறத்திற்கு உதவியாய் நிற்பது அரிதினும் அரிதாயிருக்கிறது. மனைவி வாய்த் தது வள்ளுவருக்கு என்று சொல்லுகிறார்கள்.

"காதன் மனையாளுங் காதலனு மாறின்றித்
தீதி லொருகருமஞ் செய்பவே—ஓதுகலை
யெண்ணிரண்டு மொன்றுமதி
யென்முகத்தாய்! நோக்கரு ன்

கண்ணிரண்டு மொன்றையே காண்"

என்றார் சிவப்பிரகாச சுவாமிகள். இவ்வாறு இருவரும் மனமொத்து நடத்தும் அறமே எவ்விடத்தும் சிறப்புற்றுளது.

அறத்தின் வழி நின்று அதன்படி நடப்போமாயின், யாவையும் துறந்து அடவியிற்சென்று, அரிய தவமியற்றி அடையும் பயனை இவ்விடத்திலேயே எளிதிற்பெறலா ம். அனுபவமாகவும் சிவ னடியார் பலர் இல்லறத்திலிருந்தே மோட்சமடைந் திருக்கிறார்.

அன்றியும், கற்பிலும் கணவனிடம்

வைத்த பத்தியிலும் சிறந்த பெண்கள் அளவிறந்த அரிய காரியங்களை நடத்தி யிருக்கிறார்கள்.

அவர்களுள் சாவித்திரியே போதிய சான்றாவள். அவ்வம்மையார் விருத்தாப்பிய தசையுற்ற தன் தாய் தந்தையர்களுக்குப் புதல்வனை

யும், தன் மாமன் மாமிகளுக்குக் கண்ணொளியையும், தன் கணவனுக்கு ஆயுளையும் பெறுவித்தது தனது கற்பின் வலிமையாலன்றோ?

பெண்மக்கட்கு முக்தி வழியைக் கற்பின் மூலமாக நம் இறைவன் அமைத்துள்ளான். தெய்வப் புலவரும்,



“அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன்”

எனத் தெரிவித்துள்ளார்.

இல்லறத்தாராகிய எவரும், முற்றுந் துறந்த முனிவரர்க்கும் ஏழைகட்கும் அன்னமிடுதல், வியாதியால் துன்புறுவோர்கட்கு மருந்து உபசாரம் முதலியன உதவுதல், பிறர் விரும்பிய

பொருளைத் தருதல் முதலியவைகளைப் பகவதார்ப்பணமாகச் செய்தால், அவையே எல்லாவற்றையும் விடுத்து அரிய தவமியற்றினோர் அடையும் பயனை அளிக்கும். சித்தமும் சுத்தப்பட்டு நித்தியானந்தப் பேறென்னும் புருஷார்த்தத்தைக் கஷ்டமில்லாமல் பெறுவிக்கும். வாயுறைவாழ்த்தும்,

"இயல்பினா னில்வாழ்க்கை வாழ்பவ
னென்பான்
முயல்வாரு ளெல்லாந் தலை"

என வலுத்தியது. அன்றியும் சிவஞானச் செல்வராகிய தாயுமானவரும்,

"அன்பர்பணி செய்யவெனை
யாளாக்கி விட்டுவிட்டா
லின்பநிலை தானேவந் தெய்தும்
பராபரமே." எனத் தெரிவித்திருக்கிறார். இந்நெறி நிற்றலே எவர்க்குஞ் சிறப்பு.

அறம், பொருள், இன்பம் என்ற

மூன்றுக்கும் ஏதுவாக, அறக் கற்பு, மறக்கற்பு என்று சொல்லா நின்ற இருவகைக் கற்புமுடைய மனையாள் அமையப் பெறுவோர், இம்மையில் புகழையும் புண்ணியத்தையும் பெற்று, மறுமையில் தேவராக விளங்குவாரென்பது வெள்ளிடைமலை. இதனை,

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்

தெய்வத்துள் வைக்கப் படும்"

என்ற செந்நாப்போதார் கூற்றானுந் தெளிக.

ஆகவே, அத்தகைய மனையாள் அமையின் இல்லறமே சிறந்தது. இன்றேல் துறவறமே சிறந்ததாகும். இது,

"பத்தாவுக் கேற்ற பதிவிரதை யுண்டானால்,

எத்தாலுங் கூடி யிருக்கலாம்—சற்றேனும்

ஏறுமா றேறி யிருப்பனே யாமாகிற்
கூறுமற் சந்நியாசங் கொள்"
என்ற பாட்டாலும்,
"அறனெனப் பட்டதே
இல்வாழ்க்கை யஃதும்
பிறன்பழிப்ப தில்லாயி னன்று"
என்ற குறட்பாவாலும் நன்குணரக் கிடக்கின்றது. இவைகளை யெல்லாம் எளிதிலுணர வல்ல நாமெவரும், அடைவதற்கரிய புருஷார்த்தங்களை யடைவதற்குரிய இவ்வரிய பிறவியை அவலமாக்காமல், நம்ஆன்றோர் விதித்தவைகளை அநுசரித்து, அண்டசராசரங்களிலும் நிறைந்து ஒப்பற்று விளங்கும் பரம்பொருளை அடைய முயல்வோமாக.
அண்டினோர் குறையகற்றும்

அருட்பெருஞ் சோதியாகிய
அவ்விறைவனும் அருள் புரிவானாக !

---

## 6 - ஆம் அதிகாரம்
## வாழ்க்கைத் துணைநலம்

---

இல்லறத்தைச் சிறப்பிக்குந் தலைவியே 'வாழ்க்கைத் துணை நலம்' எனப்படுவாள்.

"மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினு மில்"

என்பது குறள்.

அரிதாகிய மக்கட் பிறவியைப் பெற்ற எவரும் கடைப்பிடித் தொழுகவேண்டிய நிலைகள் நான்கு. அவை பிரமசரியம், கிருகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்யாசம் என்பன. அவற்றுள் கிருகஸ்தாச்சிரமிகளே ஏனைய மூவரையும்

அவரவர் நிலையினின்றுந் தவறாதிருக்க உதவுகின்றாராகலின், கிருகஸ்தாச்சிரமமே சாலச் சிறப்புடையதென்பது ஆன்றோர் கொள்கை. அவ்வாச்சிரமமாவது, அன்புள்ள ஆடவனும் பெண்ணும் விவாக மூலம் கணவனும் மனைவியு மாக இருந்து அறநெறி வழாது ஒழுகலேயாம். இரண்டு விழி களுங்கூடி ஒருபொருளை நோக்குதல்போல, அவ்விருவரும் அன்



பும், ஒற்றுமையுமுடையவர்களாய் இல்லறத்திற்குரிய காரியங் களை நடத்தவேண்டும். அங்ஙனம் அவர்கள், தங்கள் கடமை யறிந்து அந்நிலையில் நில்லாது, மாறுபட்ட மனமுடையவர்க ளாயின் , அவ்வில்லறம்

மிக்க துன்பத்தையே விளைக்கும். நிலை தவறின் எப்பொருளும் இழிவடையுமன்றோ ? ஆடவர் வெளி விவகாரஸ்தராகவும் யாதர் வீட்டுக் காரியஸ்தராகவு மிருப்பதால், அம்மாதரே, இல்லற நெறிக்குப் பெரும் பொறுப்பாளரா யிருக் கின்றனர். இல், இல்லாள் , மனை, மனைவி, மனையாட்டி, கிருஹிணி முதலிய பெயர்கள் அவர்கட்கே சிறப்பாக அமைந்திருத்தலை ஆரா யின் , அவர்கள் குடும்ப நிர்வா கத்தில் எவ்வளவு பொறுப்புள்ள வர்களா யிருக்கின்றார்கள் என்பது இனிது விளங்கும். ஆகையால், அன்னார் பொறுமை அடக்கம் வெகுளாமை அன்பு முதலிய பொதுக் குணங்களையும், நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்னும் நால்வகைச் சிறப்புக் குணங்களையும், கணவன் மாமன் மாமி முத லிய உறவினரிடத்தும், விருந்தினர்

வறியவர் துறவி குலதெய்வம் முதலியோரிடத்தும் முறையே நன்கு நடந்துகொள்ளுந் தன்மையையும், தலைவன் வரவுக்குத் தக்கபடி செலவு செய்யும் பண்பையும் பெற்றிருத்தல் அவசியம். இன்னோரன்ன அரிய இயல்புகளெல்லா மமையப்பெற்றவளே அவ்வாச்சிரமத்திற் குரியவளென்க. இதனை,

"மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை"

என்ற தேவர் வாக்கே தெரிவிக்கின்றது.

ஆகவே, அத்தகைய விஷயங்களில் அணுவளவும் . அசட்டை செய்யாது அறிந்தொழுக வேண்டுவது யாவர்க்கும் அத்தியாவசிய மாகும். இன்றேல் எவ்வகையால் இல்லறஞ் சிறப்புறும் ? இவ்வா றிருக்கச் சிலர், பரபுருஷ சம்சர்க்கம் செய்வது தானே நம் பர்த்தா வுக்குத்

துரோகம் செய்ததாகும் என்றெண்ணி, அந்த விஷயத்தில் மட்டும் வைராக்கியமுடன் நடந்துகொண்டு மற்றக் காரியங்களில் முற்றும் முரணாகவும், எக்காரியங்களிலும் பிடிவாதத்தோடும், லௌகிக காரியங்களில் அதிகப்பற்றோடு, நாயகன் அன்பு காட்டித் தன் எண்ணப்படி நடந்தபோது முகமலர்ந்தும், சற்றுக் கோபமுற்றால் தானும் முகத்தை மாறவைத்துக் கடுகடுப்பாய்ப் பேசியும், இன்



மாறான பல வகையாகவும் நடந்துகொள்ளுகின்றார். இஃது அறிவீனம்.

“ நன்மனை தோறும் பெண்களைப்
படைத்து
நமனை யென்செயப் படைத்தாய் ”

என்றார் ஒருவர். அதை அனுபவமாக

நாமும் பார்க்கின்றோ மல்லவா? அந்தோ பாவம்! இடம் பொரு ளேவலறிந்து நடப்பின் அத்தகைத் தாழ்விற்கிடமாகுமோ? இவற்றை யெல்லாம் எளிதி லுணர்த்துவான் கருதியே ஔவையாரும்,

"இல்லா ளகத்திருக்க வில்லாத தொன்றில்லை
இல்லாளு மில்லாளே யாமாயி னில்லாள்
வலிகிடந்த மாற்ற முரைக்குமே லவ்வில்
புலிகிடந்த தூறாய் விடும்"

என்றறிவித்தார்.

ஆகவே, மாதர்களாகிய எவரும், 'கொண்டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி' என்றபடி கணவனது கருத்தையறிந்தும், 'கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை' என்ற வாக்கியத்தின் கருத்தைக் கைக்கொண்டும் நடப்பது நல்ல தருமமும், தவமும், கடவுள் பூசையுமாகுமென்பதைக் கடைப்பிடித் தொழுகுவார்களாக. இன்றேல், இல்லறம்

சிறப்பையடையாது. இஃதுணர்த்தவே வள்ளுவரும்,

“இல்லதெ னில்லவள் மாண்பானு லுள்ளதெ

னில்லவள் மாணக் கடை”

என நவின்றதாலுணர்க.

அன்றியும், சிவனடியார்கள் விஷ்ணுபக்தர்கள் முதலியோர் இக் கற்பு என்னும் பொருளையுடைய மனைவியையே மோட்சத்திற்கு முதற்பொருளாகக் கொண்டுள்ளார். இது கருதியே,

“பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்

திண்மையுண் டாகப் பெறின்”

என வள்ளுவனார் வைப்பும் கூறுகின்றது.

கற்பின் சிறப்போ அளவு கடந்தது. ‘பெண்ணீர்மை, கற்பழியா வாற்றால் கடல்சூழ்ந்த வையகத்துள், அற்புதமா மென்றே அதிகாரம்; ௫ கூ]

யறி ' என்ற அமுதவாக்கியப்படி, கற்பென்ற வலிமையால் பெண்கள் தேவர்கட்கும் அரிய காரியங்களைச் செய்திருக்கின்றார்கள். ஆகையால், அத்தகைய மாதர் சிறப்பை யாருரைக்கவல்லவர் ? அன்னார் மழை பெய்யெனப் பெய்யும். அவர்கள் உலகத்தை யழிக்கக் கருதினும் அது அக்கணமே அழியும். அநசூயை துவாதச வருஷ பஞ்சத்தில், தங்கள் ஆச்சிரமம் வளங்குறையாமலிருக்க, மேகங்களை யுண்டாக்கி மாதமும்மாரி பெய்யும்படியாகச் செய்ததும், தமயந்தி வேடனை யெரித்ததும், சாவித்திரி நமனை வென்றதும், சந்திரவதி காட்டுத் தீயை அணைத்ததும் கற்பின் வலிமையாலல்லவா ? நாயனாரும்,

" தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை"

என்றார்.

இன்னும் அருமபெரும் நூல்களும் அன்னார் பெருமையைப் போற்றிப் போற்றிப் புகழ்கின்றன. ஆதலால், தன் கணவனுக்கியற் றுங் காரியங்களிலும், தன் கற்பைக் காக்கும் காரியங்களிலும் மறதி யில்லாதவளா யிருக்கும் மனைவியே மகிமையுடையவளாவா ளென் பது மறக்கொணாத விஷயம். நளாயினி கணவனுற்ற ஆசையை அடைவித்துத் திரும்புங்கால் தனக்குற்ற சாபத்தைத் தடுத்த காரணமாகத் தேவர்களும் வணங்கப்பெற்ற வன்மையே அம்மகி மையை வலியுறுத்துகின்ற தல்லவா? இஃதறிவுறுத்தவே உத்தர வேதமும்,

" தற்காத்துத் தற்கொண்டாற் பேணித்

தகைசான்ற

சொற்காத்துச் சோர்விலாள் பெண்"

என்றது.

ஆகவே, மாதர்களாகிய எவரும் தமது நிறையினின்றும் வழுவாதிருக்கும் பொறுப்பைத் தாமே ஏற்றுக்கொள்ளல் வேண்டும். நல்லொழுக்கமே அரும் பெரும் பயனை அளிக்கும் ஆற்றலுடையதாகிறது. இவ்வாறிருக்கச் சிலர் தம்மனையாளுக்கு மதிற் காவலும், வாயிற்காவலும் வைத்து வாழக் கருதுகின்றனர். அந்தோ பாவம்! அவர்கள்,



" சிறைகாக்குங் காப்பெவன் செய்யு

மகளிர்

நிறைகாக்குங் காப்பே தலை"

என்ற வள்ளுவர் வாக்கையேனும் ஆழ்ந்துணர்வார்களாயின, அத் தகைய அறியாமையை மேற்கொள்ளுவார்களா? காவல் வேண்டற்பாலதே. எக்காவல்? பெண்ணின் கற்பே அவளைக் காக்குங் காவலென்க. கணவன் வலிந்து கோலுங் காவல் கண்ணியமானதாகாது.

இவைகளையெல்லா முணரவல்ல பெண்மக்கள் தங்களைக் காப்பதில் கவலை செலுத்தக் கடமைப்படுவார்களாக. அவ்வாறொழுகும் மாதர்களே, தாங்கள் அவதரித்த குலத்தையும், ஆளவந்த குலத்தையும் அரிய பயனடையச் செய்பவர்களாவார்கள். அம்மட்டோ! அன்னார் பாதம் பட்ட விடங்களையுமன்றோ, பக்தர்கள் இச்சிக்கும் புண்ணிய ஸ்தலங்களினும் புகழுடையதாகச் செய்கின்றனர். தம்மிடத்தில்

முழுகுவோருடைய பாவங்களை யெல்லாம் பரி கரித்துப் பரிசுத்தமாக்கும் பண்புடைய கங்கை, யமுனை, காவேரி முதலிய புண்ணிய நதிகளுங்கூடத் தங்கள் பாவங்களைத் தீர்த்துக் கொள்ளும்பொருட்டு, எப்போது பதிவிரதைகள் வந்து முழுகுவார்களோவென்று எதிர்பார்த்துக்கொண் டிருக்கும் என்று நூல்கள் கூறுவதனாலுணர்க.
இவ்விஷயங்களை யெல்லாமுணர்ந்தே முப்பாலும்,

" பெற்ஞர் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழு முலகு "

என மொழியா நிற்கின்றது.

எனவே, இல்லறத்தை விரும்பி நிற்போராகிய எவரும், அருமை பெருமை வாய்ந்த மனைவியையே

ஆராய்ந்தடைவது அவசியம். இன்றேல், குளிக்கப்போய்ச் சேறு பூசிக்கொண்ட கதைபோல் எண்ணிய காரியமும் நிறைவேறாது, தாமும் இழி வடைவரென்பது திண்ணம். இதனை,

" புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை யிகழ்வார்முன்
ஏறுபோற் பீடு நடை"

என்ற மேலோர் வாக்கே மெய்ப்பிக்கும்.

அதிகாரம் - எ.] இல்லற இயல்

ந௲

நல்லறத்தை விரும்புவோர்களாகிய சதிபதிகள் இருவரும்
அவ்வறத்துக்குரிய முறைகளை அவசியம் கைக்கொண்டு நன்னெறி
யில் நின்றொழுகி அடைதற்கரிய
மறுமைப்பயனைத் தாங்களடைந்த
பின்னும், அவ்வறமானது

நடைபெறுமாறு சற்புத்திரரை விரும்பு வார்கள். ஆழ்ந்து கூறின், அப்புத்திரரே அவர்களுக்கு அணிகல மாவர்.

"மங்கல மென்ப மனைமாட்சி மற்றத
னன்கல நன்மக்கட் பேறு"

எனவருந் திருக்குறளை நோக்குக.

அனைத்திற்கும் துணையாக நிற்க, மனைவியுதவியே அவசியம் என்பது யாவரும் அறிந்த விஷயம். அன்றியும், இத்தகைய மர்மத் தாலன்றோ, தர்ம நூலும் மனைவியைச் சாயையென்று கூறு நிற்கின்றது. ஆகலின், நாம் அத்தகைய தன்மைகளை யெல்லாம் அறிந் தொழுகி, அறக்கடவுளாகிய நம் இறைவனை யடைய எவ்வழியிலும் பாடுபடுவோமாக.

---

## 7 - ஆம் அதிகாரம்
## புதல்வரைப் பெறுதல்

தென்புலத்தார்க்குச் செய்யவேண்டிய கடமையைச் செய்தற்கு நன்மக்களைப் பெறுதலே 'புதல்வரைப் பெறுதல்' எனப்படும்.

"கற்புடைத் தன்பு முடித்துநாண் மெய்ப்பூசி
நற்குண நற்செய்கை பூண்டாட்கு - மக்கட்பே
றென்பதோர் செல்வமு முண்டாயி னில்லன்றே
கொண்டாற்குச் செய்தவம் வேறு"

என்றார் ஆன்றோரும்.

அப்புத்திரர் அறியவேண்டியவைகளை யறிந்து அறநெறி வழுவாதொழுகித் தாம் பிறந்த குடிக்கு அரிய பயனையளிக்க வல்லரேல், அவர்தஞ் சிறப்பிற்கும் அவரை அடைந்தோர் பெருமைக்கும் அளவுமுண்டோ? ஆகையாலன்றோ உத்தரவேதமும், ௬௨

திருக்குறள் தீபாலங்காரம்
[அறத்துப்பால்

" பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற"
என்றுரையா நிற்கின்றது?

ஆழ்ந்துணருமிடத்து அதன் மர்மங்கள் அகங்கை மணி போலறியக் கிடக்கின்றன. பூலோகத்தில் செய்த புண்ணிய பாவங் களை அனுபவிக்கும் பிதுர்க்களைக் கரைசேர்ப்பதற்கு ச் சற்புத் திரனே பாத்திரனாகிறான் . பிதுர்க்கருமங்களைச்செய்து, பெற் றோரைப் ' புத் ' என்ற நரகத்திலிருந்து நீக்குவதற்காகவே மக்கள் சற்புத்திரனையடைய வேண்டுமென்று மநு கூறியுள் ளார். இகத்திற் செய்த பாவ புண்ணியங்களை நரக சொர்க்கங்களில்

அநுபவிப்பார் களே தவிர, அங்கே அவ்வநுபவத்தைத் தடுத்துக்கொள்ள இய லாது. அக்காலத்தில், புதல்வர் செய்யும் தான தர்மம், சிரார்த்த பலன் முதலியவைகள் அவர்களைக் கரையேற்றுகின்றன. இக்கரு மங்கள் செய்யப்பெற்றோரை மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம் ஆகிய எழுவகைப்பட்ட பிறவிகளிலுந் துன்பங் கள் அடையாவாம். இஃதுணர்ந்தே,

" எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்

பண்புடை மக்கட் பெறின் "

எனப் பெரியாரும் அருளினர்.

அன்றியும், ஆதிகாலத்தில் அயோத்தியை அரசாட்சி செய்த அரசர்களுள் ஒருவரான சகரன் என்பார்

தமக்குப் புத்திரப் பேறின் றிப் பெருங்கவலையுற்றுக் கடுமையான தவங்கிடந்தார். கருணைகாக் கடவுளின் கிருபையால் தம்மிரு மனைவியர்களுள் ஒருத்திக்கு உத்தம குணங்களெல்லாம் ஒருங்கே வாய்ந்த ஒரு புதல்வனும், மற்ற வளுக்கு மகா கொடிய குணங்களைக் கொண்ட அறுபதினாயிரம் புதல்வர்களும் பிறந்தார்கள். அதுகண்ட அரசர் அக்கவலை நீங்கி, அரசாட்சி செய்யும்போது அவர் அசுவமேதயாகம் செய்தார். அப்போது அவர் அவ்யாகக் குதிரையை அவ்வறுபதினாயிரம் பிள்ளைகளிடம் ஒப்புவித்து, இவ்வவனியை வலம் வருமாறு ஆஞ்ஞாபித்த காலத்து, அவர்களது கொடுமைக்கு ஆற்றாத தேவர் தலைவனாகிய இந்திரன் அவர்களை வஞ்சித்து அக்

ஈ.ஈ

ரையைப் பாதாள லோகத்தில் கபிலமுனிவருடைய தவாச்
சிரமத்தில் கட்டிச் சென்றான். அது காரணமாக, அப்பிள்ளைகள் கபில முனிவருடன் எதிர்த்து, அவமே
மாய்ந்தொழிந்தன
ரென்பது யாவரு மறிந்தே யிருக்கலாம். அப்பாவிகளாகிய சகரர்களைப்
பக்குவப்படுத்திக் கங்கை நீராற்
புனிதமடைவித்துப் புண்
ணிய லோகத்திற் சேர்ப்பித்ததும் அன்னார்
வழியிற்றோன்றிய புத்
திரனாகிய பகீரதனே யாவன். அப்
பிள்ளைகளைப் பெற்றோரே, அடைதற்கரிய பொருளை அடையப் பெற்றவரென்பது அறியக் கிடக்கிறது. இவற்றையெல்லா முணர்ந்தே, பொய்யில் புலவரும்,

" தம்பொரு ளென்பதம் மக்க ளவர்பொரு

ளந்தம் வினையான் வரும் "

எனப் புகன்றதுணர்க.

அவ்வு லகத்திலேயன்றி, இவ்வுலகத்திலும் பிள்ளைகள் எல்லை யில்லா இன்பத்தை ஈய வல்லவரா யிருக்கின்றார்கள். இதனை,

" அமிழ்தினு மாற்ற வினிதேதம் மக்கள்

சிறுகை யளாவிய கூழ் "

" மக்கண்மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர்

சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு "

" குழலினி தியாழினி தென்பதம் மக்கண்

மழலைச்சொற் கேளா தவர் "

எனப் பலவாறு மொழிந்த முப்பாலுலே முழுதுமுணர்த்தும். ஆகலின், அங்ஙனம் இம்மைக்கும் மறுமைக்கும் பொருளாகப் பெற்ற அப்புதல்வரை, எங்ஙிலக்குரியவராக்க வேண்டுமென்பது எடுத்துக் காட்டவும் வேண்டுமோ ? பொதுவாகக் கூறுமிடத்து, கடவுள் பக்தி, இல்லறம் முதலியவற்றைக் கல்வி கேள்விகளால் விள்ங்கச் செய்தால், அவர்களால் உலகமும் சிறப்படையும் ; அவர் களும் மகிழ்ச்சியையும் சுகத்தையும் அடைவர். ஆசிரியரும்,

" தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி யிருப்பச் செயல் "

" தம்மிற்றம் மக்க ளறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லா மினிது "

எனப் பலவாறு புகன்றதுணர்க.

அநுபவமாகப் பார்க்குமிடத்தும்

௳

௩௨ திருக்குறள்

நியாயலங்காரம் [அறத்துப்பால் அங்ஙனம் பக்குவப்படுத்திய புதல்வர்களுடையும் அருமை பெருமை களுக்கும், அவர்களையீன்ற மாதா அடையும் மகிழ்ச்சிக்கும் அளவில்லையாகும். ஆதலால், இவைகளையெல்லா முணரவல்லவர்களாகிய புதல்வர்கள், கலிகாலக் கொடுமைகளைக் கைக்கொள்ளாமல், தங்களை வளர்க்கவும், நற்குணங்களில் முன்னேற்ற மடையவும் பாடுபட்ட தாய் தந்தையருடைய செய்கையை யறிந்து நன்றி செலுத்த வேண்டும்.

ஆதிகாலத்தில் தேவவிரதன் என்பவன் தந்தையார் விருப்பத்தை நிறைவேற்றி வீடுமன் என்று பெயர் பெறவில்லையா? 'பூரு' என்பவன்,

காமக்கிழத்தியின் புத்திரனுக இருந்தாலும் தன் பிதாவுக்குத் தன் இளமைப் பருவத்தைக் கொடுக்கவில்லையா ? உற்றுநோக்குமிடத்து, உலகில் இத்தகையோர்கள் இன்னும் எண்ணிறந்தோ ரிருக்கிறுர்கள். ஆகவே, அவைகளையெல்லாம் அறிந் தொழுகுவது அருமையுடைத்து.

" மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை
என்னோற்ருன் கொல்லென்னுஞ் சொல் "

என்று நாயனுருங் கூறியுள்ளார். இவைகளை யெல்லாம் துணிந்து நோக்கின் நாம் ஆற்றுங் கடமை சதாம்சத்தில் ஒரு அம்சமாகுமா ? இருந்தபோதிலும், பெற்ருர் மனம் நோகாதபடி நடந்துவரின் பரம பிதாவாகிய சச்சிதானந்தக் கடவுள் நமக்குக் கருணை புரிவது நிச்சயம்.

அன்றியும், எண்டிசையும் கொண்டாடா நின்ற பண்டரிபுரத்தில், பூர்வம் புண்டரீகன் என்பான் தாய் தந்தையரே தெய்வமெனக் கண்டு தன் கடமைகளைக் களிப்புடனியற்றி வந்த காரணமாகக் கருணாநிதியாகிய நங்கடவுள், அவனுக்குக் காட்சிகொடுக்கக் கருதி, அன்னவன் இல்லத்தை நோக்கிச் சென்றதாகவும், அதுகாலை, அவன் தன் பெற்றோர் கைங்கரியத்திற் றலைநின்றுனைகையால், அண்டர் பிரானைக்கண்டு தெண்டனிட்டு இரண்டு செங்கற்களை யவர் முன் இட்டு, "பெருமானே ! மன்னிக்கவேண்டும்; பெற்றோர் கைங்கரியம் செய்துகொண் டிருக்கிறேன்; தாங்கள்

சிறிதுபோழ்து இச் செங்கற்களின்மேல் எழுந்தருளி யிருப்பீராயின், அதை



நடு முடித்து வருகிறேன் ' ' என்றறிவிக்க, அருட்சோதியும் அங் கிருந்து அவனுக்கருள் புரிந்ததுமன்றி, அன்று முதல் இன்றளவும் அவ்விடத்தையே தமக்காலயமாகக் கொண்டு அனைவருக்கும் காட்சி கொடுத்து வருகிறார்.

பெற்றோர்கட்கு நாம் செலுத்தவேண்டிய கடமைகளைச் செவ் வனே செய்யவேண்டுமென்பது தெரிவிக்க வேண்டுவதில்லை. மேற் சொன்ன விடயங்களையெல்லாம் அணுவளவும் அலட்சியம் செய்யா தறிந்தொழுகி, அங்கிங்கெனுதபடி எங்கும் விளங்காநின்ற அவ்வருட் .சோதியினுடைய அருளையும்

அடைய அனவரதமும் உழைப்போமாக.

---

## 8 - ஆம் அதிகாரம்
## அன்புடைமை

---

அன்பு என்பது பதி அல்லது சிவம். அன்பே சிவம். சிவமே அன்பு. சிவமாகிய பதி எல்லாவற்றிற்கும் நிலைக்களன். திருமூல நாயனார் திருவாய்மலர்ந்த திருமந்திரமும்,

" அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருப் பாரே "

என்றறிவுறுத்தியது காண்க.

அவ்வன்பு இல்லறத்தின் உடைமை. அது குறித்தலே 'அன்புடைமை' எனப்படும்.

இவ்வன்புடையவர்கள் பரப்ரமத்தின் பாதாரவிந்தத்தை அடைவார்கள். அண்ட சராசரங்களும் அவைகளிடத்துள்ள யாவும் அன்பு மயமான கடவுள் அம்சங்கள். அன்பிற் கெளியரான நம் பெருமானிடத்து அன்பைச் செலுத்தியே அருளைப் பெறவேண்டும். அஃதும், எப்போதாவது ஒருவேளை மட்டும் சற்று நேரம் செலுத்தினால் போதாது. ஒருவன் ஒரு யௌவன கன்னிகையைக் கண்டு; அவள் வனப்பால்

மயங்கி அவள் வயப்பட்டு விட்டால், ...
திருக்குறள் தீபாலங்காரம்
[அறத்துப்பால் பிறகு எக்காலத்தும் எவ்வேலை செய்துகொண்டிருந்தாலும் அவன் மனம் அக்கன்னிகையையே கருதிக்கொண்டிருப்பது போல, எத் தொழிலைச் செய்தாலும் மனம் அத்தொழிலை விரும்பாது அவ் விறைவனிடத்திலேயே அன்புகொண் டிருக்கவேண்டும்.

கடவுள், உருவம் அருவம் உருவருவம் என்ற நிலைகளையுடைய வர். முதல் உருவத்திலிருந்து அவர் அருவமாய் நல்கும் அருளை அடைதல் வேண்டும். உலகத்திலுள்ள ஜீவர்களெல்லாம் அவர் உரு ஆதலால் மனைவி, மக்கள், சுற்றத்தார், ஏனைய ஜீவராசிகளையும் அவ ராகக் கொண்டு அன்பு செலுத்தல் வேண்டும். இவ்விதமே

சிவனடியார்களுக்கும், விஷ்ணு அடியார்களுக்கும், ஏனைய இல்லற வாசிகளுக்கும் கடவுள் உருக்காட்டி முக்தி அளித்திருக்கிறார். இவ்விடம் ஒன்று உதாரணமாகக் கூறுவோம்.

கடவுள் மாணிக்கவாசகரின் பொருட்டு வைகையைப் பெருகி வரச் செய்தபோது, அரிமர்த்தன பாண்டியன் மதுரைமாநகர் சேத முருவண்ணம் கரையிடுமாறு உத்திரவிட, அன்பே உருவமாக அமைந்த சோமசுந்தரப் பெருமான் வந்தி யென்பவளுக்காக மானிட வடிவெடுத்து வந்தபோது பாண்டியன் கரை போடவில்லையென்று அவரை அடித்த அடி அப்பாண்டியன் முதுகில் மாத்திரமன்றி அண்ட சராசரங்களிலுள்ள எவற்றின் மீதும் பட்டது. அந்நிகழ்ச்சி ஊனக்கண்ணால் பார்க்கக்கூடாத ஒவ்வொரு

வடிவத்துள்ளும் கடவுள் உளார் என்று உணர்த்துகிறது. இவ்வுணர்வுபெற்ற ஒருவனுக்கு ஞானமானது முதிர்ந்து 'தானே அவன்' என்ற உணர்வு உண்டாகிறது. அவன் தன்னைத்தான் அறிகிறான். அப்போது ஆத்மா தத்துவமாகிய உலகத்தை அடக்கி, அன்பு என்ற கண்ணால் கடவுள் என்ற அருவமான ஜோதியைக் காண்கிறது.

பகவத்கீதையிலும் கிருஷ்ணபரமாத்மா "தன்னை அறிந்தவன் யாவனோ அவனே நான்; நானே அவன்" என்று கூறுகின்றார்.

"அருவமோ ரூபாரூப மானதோ வன்றி நின்ற
உருவமோ உரைக்குங்கர்த்தா வடிவெனக் குணர்த்திங் கென்னில்
அருவமும் ரூபாரூப மானதும் அன்றி நின்ற

உருவமும்
மூன்றுஞ்சொன்ன வொருவனுக் குள்ள தாமே"

, என்ற செய்யுளின்படி,
அன்பிற்கினியரான நம்முதல்வன் அன்

பையே வடிவமாகக் கொண்டுள்ளான்;
ஆதலால், அன்பின் பெருமையை
அளவிடுவது அரிது.

" அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா
ழார்வலர்
புன்கணீர் பூச றரும்"

என்ற தேவர் வாக்கியத்தைக்கொண்டு
உற்று நோக்குங்கால், அன்பு மனதிலேயே
உண்டாவதாக இருந்தாலும் அதை
அடக்க ஒரு கருவியுங்கிடையாது என்பது
உள்ளங்கை நெல்லிக்கனிபோல்
விளங்குகின்றது. நிடதநாட்டின் அரசன்
ஊழ்வினைப்பயனால் சூதாடி, நாடிழந்து ,

மனைவியாகிய தமயந்தியைப் பிரிந்து, கார்க்கோடன் என்னும் பாம்பால் கடியுண்டு, உருமாறி, அயோத்தி சென்று அந்நாட்டரசனுக்குச் சாரதியாகி வாழுங்கால், தன் மனைவிக்கு இரண்டாஞ் சுயம்வரமென்று கேள்வியுற்று, அயோத்தி அரசனுடனே வீமன் நகரஞ்சென்றபோது தன்னை அறியாதபடி மாறுவேடங்கொண்டவனாக இருந்தும், தன் மக்களைத் தாதியர்கொண்டுவரப் பார்த்த போது அவனை யறியாது கண்ணீர் சொரியச்செய்தது எது ? அன்பன்றோ ?

முற்றும் துறந்த முனிவராகிய ததீசி முனிவருடைய வரலாறு யாவரும் அறிந்தே இருக்கலாம். முன்னொரு காலத்தில் துவட்டாவால் அனுப்பப்பட்ட விருத்திராசுரன், இந்திரனைத் துன்புறுத்திய போது, பிரமாவின் ஏவுதலால்

இந்திரன் ததிசி முனிவரிடம் சென்று முதுகெலும்பைக் கேட்க அவர் தம் நிலையற்ற உடம்பை உலகிற்குப் பயன்படுத்திப் பேரின்பமடைந்தாரல்லவா ? ஆகையா லன்றோ, உத்தரவேதமும்,

" அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையா

ரென்பு முரியர் பிறர்க்கு "

எனக் கூறுகிறது. இதனால், அன்பின் தன்மைக்களவில்லை யென்பதும், அன்புடையார் தம்முயிரையும் பொருட்படுத்தார்க ளென்பதும், அன்புமயமாகிய கடவுளை அடைதற்கும் அன்பே அவசியமென்பதும் அங்கைக் கனியன்றோ ? ஆதலால், அரிதாகிய இம்மக்கள் யாக்கையைப் பெற்றோராகிய நாமெவரும் அன்பின் இயல்களை

யெல்லாம் அவசியம் கவனிக்க வேண்டும்.
இன்றேல், இப்பிறவி க்கு
திருக்குறள் தீபாலங்காரம்
[அறத்துப்பால் யானது எவ்வகையாலுஞ்
சிறப்பெய்தா தென்பது திண்ணம்.
இதனை,

“ அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு”

என்ற ஆன்றோர் கூற்று மறிவுறுத்துகின்றது.

ஆகவே, அன்பையே எவரும் அணிகலமாகக் கொள்ளவேண்டு மென்பதை அறிவுறுத்தவேண்டுவதில்லை. அன்பு பூண்டு ஒழுகுவோரே, தாமடைந்த பிறவியின் பயனைப் பெறுவதுமன்றி, இவ்வவனியிலும் எவருடைய நட்பையும் எளிதில் பெற்றவராவர்.
இதனை,

" அன்பீனு மார்வ முடைமை யதுவீனு
நண்பென்னு நாடாச் சிறப்பு"

என்ற பெரியார் வாக்கே பெரிதுமுணர்த்துகின்றது.

அன்பாலுண்டாகும் பயன் அம்மட்டோ? முதலில் தாய், தந்தை, மனைவி, மக்கள் முதலியோரிடத்தும் மற்ற எவ்வகை ஜீவராசிகளிடத்தும் செலுத்தப்படும் அன்பு ஆற்று ஜலமானது பல வழிகளாகப் பாய்ந்து முடிவில் சமுத்திரத்தை அடைவது போல, பின்னைச் சகல வுயிர்களிடத்தும் பரவி இறுதியில் இறைவ னடியையும் வழங்குகிறது. இஃதுணர்ந்தே நாயனாரும்,

" அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்
தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு"

என நவின்றனர்.

ஆகவே, இல்லறத்திற்கும் துறவறத்திற்கும் அன்பே அவசியம். அன்றியும், உலகில் பெருமை, சுயநலம் பாராட்டுதல், பிறர் பொருளைக் கவர்தல் முதலிய துர்க்குணங்களுடையவராய் இம்மையில் பழியையும், மறுமையில் நரகத்தையும் தேடிக்கொள்வோருஞ் சிலரிருக்கலாம். அவர்களை நல்லவர்களாகச் செய்வது யார்க்கும் ஆகாத காரியமாகவே யிருக்கும். ஆனால், அவர்களைப்பற்றி இங்கு ஆராய வேண்டிய அவசியமில்லை. அவர்கள் அறிந்தோ அறியாமலோ யார்க்கும் துன்பமியற்றின், அத்துன்பத்திற் குட்பட்டார்க்கு, அதிகாரம் அ.]

அதன் காரணமாக வெழும் அகங்காரத்தையும் அன்பே அடக்க வல்லதாயுளது. இதுகருதியே பொருளுரையும்,

"அறத்திற்கே யன்புசார் பென்ப வறியார்
மறத்திற்கு மஃதே துணை"

எனப் புகன்றுளது.

இத்தகைய அருமை பெருமைகளையெல்லா மீயவல்ல அன்பை எல்லாம்வல்ல நம் இறைவனிடத்திலேயே வைத்து, அதே பிரேமையாகப் பக்தி செலுத்திஞல், அவனருளைப் பெற்று அத்துவிதப் பேற்றை அடையலாமென்பதற் கையமின்று. முன்னே, கண்ணப்ப நாயனர் எப்படி ஆறுநாளில் முக்தி யடைந்தார்? இன்னும், எண்ணிறந்த

அடியார்கள் மனைவி மக்களுடன் இருந்து முக்தியடையவில்லையா ? அவர்கள் எல்லோரும் எவ்வாறு அன்பைச் செலுத்தியிருக்கிறார்கள் ? மனைவி, மக்கள் முதலியோரிடம் அன்பு செலுத்த வேண்டாம் என்று சொல்ல வில்லை. அதை யெல்லாம் அவன் சொரூபமென்றும், அவன் செயலென்றும் பகவதார்ப்பணமாகச் செலுத்த வேண்டும். அதைவிட்டு, " என் மனைவி, என் மக்கள், என் செல்வம், நான் அரிய காரியங்களைச் செய்வேன், இன்னின்ன காரியங்களைச் செய் திருக்கிறேன், என்னுடைய சாமர்த்தியத்தால் இக்காரியம் நடை பெற்றது " என்று சொல்லிக் கொள்வோர்கள், தர்மம், தயை , அன்பு முதலிய குணமற்றவர்களாகவே இருப்பார்களென்பது நிச் சயம். இவர்கள்

இவ்வுலகில் பெருமிதமாகப் பேசிக்கொள்ளலாமே தவிர, இறைவனுடைய அருளைப் பெறமுடியாது. இதனைக் குறித்தே முதற்பாவலரும்,

“ என்பி லதனை வெயிற்போலக் காயுமே

யன்பி லதனை யறம்”

என மொழிகின்றார்.

அன்பில்லாதவர்களுடைய யாக்கையும் பொருளும், சித்திரப் பாவையும் அதனிடத்து குவிக்கப்பெற்ற பொருளும் போலாகும். ஆதலால், அவர்கள் அரிதாகிய பிறவியைப் பெற்றும் அடையும் பயன் யாது ? செங்நாப்போதாரும்,



“புறத்துறுப் பெல்லா

மெவன்செய்யும் யாக்கை

யகத்தறுப் பன்பி லவர்க்கு"

எனத் தெரிவித்துள்ளார்.

அன்பில்லாவிடின் இம்மேலாகிய அரிய பிறவியும் அவலமாகி இம்மை மறுமையிலும் துன்பத்திற்கிலக் காவோமென்பது எவரும் சொல்லாமலே விளங்குகின்றது. ஆதலால், நாமனைவரும் அன்பைச் செலுத்துவதற்குரியவனும் நம் முடன் உறைபவனுமாகிய அவ்விறைவனிடத்து அவ் வன்பைச் செலுத்துவோமாக. அங்ஙனம் செலுத்துவோமாயின், 'அருளென்னும் அன்பின் குழவி' என்றபடி அஃதே அருளாய் நிறைந்து, அருள்மயமாகி அப்பெருமானை அடைவிக்கும் வழியுமாம். எனவே, அன்பின் உண்மையை அறிந்த ஒவ்வொருவரும் இத்தகைய உண்மைகளை ஒரு காலத்தும் மறவாதொழுகி இம்மையில் சுகத்தையும் மறுமையில் இன்பத்தையும்

அடைவோமாக.

---

## 9 - ஆம் அதிகாரம்
## விருந்தோம்பல்

---

சதிபதிகளாகிய இருவரும் ஒன்றுபட்ட மனத்துடன், 'விருந்தினரை உபசரித்தலே 'விருந்தோம்பல்' எனப்படும்.

அரிய பிறவியை அடையப் பெற்ற நாம் நம்முடைய கடமைகளை ஐயந்திரிபற அறிந்திருக்க வேண்டும். இங்கு, இல்லறத்தார் கடமைகளுள் முதன்மையானது விருந்தோம்பல். எளிதில் செய்யத்தக்கதும், ஏனைய அறத்தைப்போலச் சிரமமில்லாததுமாகிய இல்லறத்தை நடத்துவது தம் வயிற்றையும், மனைவி மக்கள் வயிற்றையும்

நிரப்புவதற்காக மாத்திரமன்று; தம்மைத் தேடி வரும் விருந்தினரை யுபசரித்தற் பொருட்டே யாகும். இன்றுட்பம்,

" இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு"

என்ற உத்தரவேதக் கூற்றாலுமுணரக் கிடக்கின்றது.

மக்கள் இக்கடமையை எக்காலத்தும் சோர விடலாகாது. அறிவிற்சிறந்த பெரியோர்கள் சொல்லொணு வழுமையடைந்த அதிகாரம் - கூ.]
இல்லற இயல் சகல காலத்தும் அக்கடமையைக் கடைப்பிடியா திருந்ததில்லை. இதன் அவசியத்தை,

" விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று"

என்ற ஆன்றோர் வாக்கே அறிவுறுத்துகின்றது. ஆழ்ந்துணரவல்லோர்கட்கு இவ்வாக்கே அபாரமான விஷயங்களை யெல்லாம் அறிவிக்கும். சுருங்கச் சொல்லுமிடத்து, இல்லறத்தார் யாவரும் விருந்தோம்பலை அவசியம் கடைப்பிடிக்க வேண்டும்.

இன்னும் சதிபதிகளிருவரும் மனமுவந்து, தம்மிடம் வந்த விருந்தினர்களை முகமலர்ச்சியுடன் உபசரித்தலன்றோ, இம்மையில் புகழையும் செல்வத்தையும் அளிக்கவல்லதாயுளது ? இதனை,

"வருவிருந்து வைகலு மோம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுத லின்று"

என்ற செந்நாப்போதார் வாக்கானுந் தெளிக. எவரும், வறுமைக் குட்பட்ட காலத்தும், தம்பிடத்து வந்த

விருந்தினரைத் தக்கவா றுபசரித்தலே தகுதியுடைத்து. முன்னே, இளையான்குடியென்னும் ஊரிலே, வேளாளர் குலத்திற் பிறந்தோராகிய மாற னார் என்பவர், எத்தொழிலினுஞ் சிறந்த பயிர்த்தொழிலை மேற் கொண்டு தம்மை யடைந்த விருந்தினர்கள் எவ்வருணத்தாராயினும் உண்மையாகிய அன்போடு உபசரித்து அவர்கட்கு அறுவகைச் சுவையோடு அமுதுசெய்வித்து வந்தார். அப்போது அவரது அருமை பெருமைகளை யாவர்க்கும் அறிவிக்கத் திருவுளங் கொண்டோராகிய நம் சிவபெருமான் அவரது செல்வங்களையெல்லாம் சுருங்கச்செய் தது மன்றிக் கடன் வாங்கும் கஷ்டநிலைமையிலும் அவரை வைத்தார். அம்மட்டோ ! எல்லாம் வல்லவராகிய அப்பெருமான் அடியார் வடி வெடுத்து அகால வேளையில் அதிகப்

பசியுடையவர்போல் அவரில்லம் சேர்ந்தார். அதுகாலை, அம்மாறனார் ஆங்கு அதிக மழையால் எவருதவியும் அடையப்பெறாது மிகப்பசியால் வருந்தி யிருந்தா ரெனினும், தம்மகத்தே வந்த விருந்தினரை அன்போடுபசரித்து, அந்தகாரமான இருளையும் பொருட்படுத்தாது, ஆவலுடன் சென்று அன்று விதைத்த நெற்களை அரித்தெடுத்துவந்து, பக்குவப்படுத்தி

சா



அவர்க்கமுது செய்வித்தார். அவ்வாறொழுகுந் தன்மையன்றே அருமையுடைத்து? முப்பாலும்,

“அகனமர்ந்து செய்யா ளுறையு
முகனமர்ந்து
நல்விருந் தோம்புவா னில்”

எனமொழியா நிற்கின்றது.

ஆகவே, இல்லறத்தாராகிய எவரும் அன்பொடு விருந்தோம்புவராயின், அவர்கள் வேறெவ்வகை முயற்சியுமின்றி இம்மையில் எல்லாச் செல்வங்களையும் எளிதிலடைவரென்பது உறுதி. அன்றியும், எவ்வுயிர்களிடத்தும் அன்பும், வந்த விருந்தினர் விரும்பிய அன்ன பானாதிகளைக் கொடுத்து உபசரித்தலும், இன்னும் வருபவர்களையும் பார்த்து உண்போமென்று காத்திருத்தலுமாகிய விரதத்தையும் கைக்கொள்வார்களாயின், அவர்கள் இறுதியில் அடையும் பயனுக்கு எல்லையில்லையாகும். இஃதுணர்த்தவே,

“செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பா
னல்விருந்து வானத் தவர்க்கு”

“இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
றுணைத்துணை வேள்விப் பயன்”

என்ருர் மாதானுபங்கியாரும்.

பொருட் செல்வமோ நிலையற்றது.

“ ஆறிடு மேடு மடுவும்போ
லாஞ்செல்வம்
மாறிடு மேறிடு
மாணிலத்தீர்—சோறிடும்
தண்ணீரும் வாரும் தருமமே
சார்பாக
உண்ணீர்மை வீறும் உயர்ந்து ”

என்ற நம்மூதாட்டியார் வாக்கியப்படி அநித்தியமான பொருளைக் கொண்டே நாம் அரியபயனை அடைய முயலவேண்டும். இன்றேல், மானிடம் மாண்புடைத்தாகாது. ஒருவன் தன்னை உயர்த்தியுங் கொள்ளலாம், தாழ்த்தியுங்கொள்ளலாம். ‘பெருமையும் சிறுமை யும் தான்றர வரும்,’ ‘ தனக்கு மருத்துவன் தானே ’ என்ற ஆன்ருேர் வாக்குக்களே மேற்கூறியவைகளை

அறிவிக்கின்றன. ஆயினும் அறிவாலன்றி நோக்க வல்லோர்களேயன்றி, ஏனையோர்கள் இதனை எவ்வகையாலுமுணர்ந் தொழுகுகின்றார்களில்லை. அங்ஙனம் ஒழுகாதவர்கள்,

அதிகாரம் - ௧௦.] இல்லற இயல்

சாங்

" உடைமையு ளின்மை விருந்தோம்ப லோம்பா
மடமை மடவார்க ளுண்டு "
" பரிந்தோம்பிப் பற்றற்றே மென்பர் விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார் "

என்ற தேவர் வாக்கியங்களுக் கிலக்கணமாக விருப்பதுடன் தீரா நரகத்திற்கும் ஆளாகின்றனர். அவர்களியற்றும் உபாசாரம் பொருளுக்கு அழிவும், சரீரப்

பிரயாசையுமாகுமேயன்றி உண்மையான விருந்தோம்பலாகாதென்பது திண்ணம்.

முற்பிறப்பில் ஜீவர்கள் "பொருள் இல்லையே, இருந்தால் தானம் தர்மம் முதலிய காரியங்களைச் செய்யலாமே" என்ற ஏக்கத் துடன் இருந்தால் 'எண்ணமானது எழுபிறப்பும் தொடரும்' என்றபடி, மறுபடியும் பூலோகத்தில் பிறவி எய்திப் பொருளை யடைகிறார் என்பது எவரும் மறுக்கொணாத மர்மமாகும். அப்பொருளின்பத்தை அடையப்பெறுது உலோபியாயிருந்தால் அவர்கள் கதி அதோகதி யென்பது அறிவிக்கவும் வேண்டுமோ? இவைகளையெல்லா முணரும் நாம் உண்மையான அன்போடு விருந்தினரை உபசரித்து உறுதிப் பொருள்களையடைய இயன்றவரையில் பாடுபட வேண்டும். அன்றியும், அழிவற்ற இவ்வான்மாவானது அழியும் தன்மையுள்ள

உடலையும், பொருளையும் உதவியாகக்கொண்டே உறுதிப பொருளை புணர வேண்டியதா யிருக்கின்றது. ஆகலின் நாம் இப்பிறவியை வீணாக்காமல் நித்தியா நித்தியம், வஸ்து, விவேகம் என்பவற்றை ஐயந்திரிபற ஆராய்ந்துணர்ந்து அழியாத அத்துவித பதவியை அடைய முயல்வோமாக.

---

## 10 - ஆம் அதிகாரம்
## இனியவை கூறல்

---

கேட்பவர்களது மனதிற்கும் செவிக்கும் இன்பமுண்டாகும் படி வஞ்சனையில்லாத மனத்துடன் வார்த்தைகளைப் பேசுதலே, ' இனியவை கூறல் ' எனப்படும்.

அரிதாகிய மக்கட் பிறவியை எடுத்த எவரும் மனைவி மக்கள் விருந்தினர் முதலிய ஏனையோர்களிடத்து எவ்வகையான வஞ்சனையு மில்லாத மனத்துடனேயே வார்த்தையாட வேண்டும். எனினும், உலகில் அத்தகைய உத்தம குணமானது ஒவ்வொருவரிடமும் ஒருங் கமைந்துளதாக அறிய முடியவில்லை. ஞான விருப்பமுள்ளவர்க ளிடம் யோகம் நிலை பெறுவதுபோல அன்புள்ளவர்களிடமே அத் தகைய குணம் அமைந்துளது. இதனை,

" இன்சொலா லீர மளைஇப் படிறிலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல் "

என்ற நாயனார் உரை நன்குணர்த்தும்.

மலருண்டானபோதே அதில் மணமிருக்கும் ; அம்மலர் மலர்ந்த பின்னரே மணம் வெளிப்படும் ; மணம் வெளிப்பட்டபோது வண்டுகள் அதில் பொருந்தும். அதுபோல, அன்பு உண்டானபோதே இன்சொல் உண்டாகும்; இன்சொல் உண்டான பின்னரே அன்பு வெளிப்படும் ; அன்பு வெளிப்பட்டபோதே விருந்தினர் மகிழ்வர். தெய்வப் புலவரும்,

" அகனமர்ந் தீதலி னன்றே முகனமர்ந்
இன்சொல னாகப் பெறின் "

" முகத்தா னமர்ந்தினிது நோக்கி யகத்தானா
மின்சொ லினதே யறம் "

எனப் பலவாறு தெரிவிக்கின்றனர். இவைகளை யெல்லாம் அறிந் தொழுகின், அறம் வளரும் ; நட்பும் பெருகும்.

இந்நுட்பத்தைப் பலர்

கவனிக்கின்றாரில்லை. அவர்கள் எவரிடத்தும் இனிமையில்லாத வார்த்தைகளைக் கூறி இழிவையும், பாவத்தையும் ஈட்டிக் கொள்ளும் இயல்புடையவர்களாகிறார்கள். அம் மட்டோ! அவர்கள் அனைவராலும் அருவருக்கப்பட்டு அவமே வருந்தும் அறிவிலிகளாகவுமாகிறார்கள். இஃதறிவுறுத்தவே ஆன்றோரும்,

" துன்புறூஉந் துவ்வாமை யில்லாகும் யார்மாட்டு
மின்புறூஉ மின்சொ லவர்க்கு"

என்றார்.

அதிகாரம் - ௧௦.] இல்லற இயல்

௨௫

நித்தியா நித்தியம், வஸ்து, விவேகம் என்றபடியில் ஏறி நிற்பவர்களுக்குத் துன்பந்தருவது உலகில் யாதுளது? ஒன்றுமில்லை. அன்பை நித்தியமாகவும்,

பொருளை அநித்தியமாகவும், இன்சொல்லை வஸ்துவாகவும், அந்த வஸ்துவால் நாம் அடையும் பயனை விவேகமா கவும் கொள்ளல் வேண்டும். பின்னே அவ்விவேகம் மக்கட் பிற விக்கு ஆபரணமாகிறது. நந் தமிழ்மறையும்,

" பணிவுடைய னின்சொல ளுத லொருவற்

கணியல்ல மற்றுப் பிற"

என நவிலாநிற்கின்றது . எனவே , இவ்விஷயங்களை யெல்லாம் உணர்ந்தொழுகவல்லார்க்கு எவ்வகையானுந் துன்ப மணுகாதென் பது நிச்சயம். இவைகளை,

" அல்லவை தேய வறம்பெருகு நல்லவை

நாடி யினிய சொலின் "

என்ற நான்முகர் மொழியே நன்குணர்த்தும்.

ஆதலின் , அன்பு கலந்த வார்த்தையை எப்போதும் பேச வேண்டுமென்பது எவருமுணரத்தக்க

இன்றியமையாத விஷய மாகும். அது ஒருவர்க்குக் கோடி திரவியங்கொடுத்தலினுஞ் சிறப்புடைத்து. இஃதன்றி இன்சொல் சொல்வோர் இம்மையிலும் மறுமையிலும் எல்லையில்லா இன்பத்தையும் எளிதிலடைவர். இனியவைகூறலின் அருமை பெருமைக் களவுமுண்டோ? முன்னே பாண்டுவின் குமாரர்களான பஞ்சவர்களுள் மூத்தோராகிய தருமர்,

சகலரையும் நட்புக்கொண்டு தம் பகையையும் வென்று தரணியை ஆண்டது எ தனல்? இன்சொலாலன்றோ? அம்மட்டோ! பின் அவர் மறுவுலகத்தும் அமராய் வீற்றிருக்க அருகருமானார். முப் பாலும்,

“நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று
பண்பிற் றலைப்பிரியாச் சொல்”

“ சிறுமையு ணீங்கிய வின்சொன்

மறுமையு

மிம்மையு மின்பந் தரும்"

எனப்பலவாறு இன்சொல்லைப் போற்றுதல் காண்க.

இவ்வாறிருக்க, ஒருவன் பிறர்மாட்டுக் கடுஞ்சொல்லை வழங் குவதென்றால், அஃது என்ன பயன் கருதியோ? பிறர் நம்மிடத் தீங்



துக் கோபமாகப் பேசும்போது அறிவு அதை அறிகிறது; மனம் துன்புறுகிறது. பிறர் தீயகாரியங்களைச் செய்யும்போதும், வீண் ஆடம்பரமாகப் பேசிக்கொள்ளும்போதும் நம் அறிவு அதன் இழிவையுணர்கின்றது. இப்படி யிருக்க, நாம் பிறர்க்குத் துன்பஞ் செய்யும்போதும் ஒழுங்கீனமான

காரியங்களைச் செய்யும்போதும் வீண் ஆடம்பரவார்த்தைகளைப் பேசும்போதும் நம்மனம் ஏன் அறியாது? அந்தோ! இஃதென்ன பேதமை! மக்கட்பிறப்பை அடைந்த நாம் இவ்விதம் செய்வது அநீதியாகும். நாம் மேலான பிறப்பை அடைந்தும் அரிய காரியங்களைச் செய்து இம்மை மறுமைப் பயன்களைப்பெறாது, நம்முன்னோர்கள் கூறியுள்ளவைகளை அறிந்தும் அவைகளை அசட்டைசெய்வது எவ்வளவு மதியீனம்? அது, ஔவையுண்ட நெல்லிக்கனியையொத்த கனிகளைவிடுத்து எட்டிக்காயைப் பறித்துத் தின்பது போலாகும்.

"இன்சொ லினிதீன்றல் காண்பா
னெவன்கொலோ
வன்சொல் வழங்கு வது"

"இனிய வுளவாக வின்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று"

என்றார் புலவரும்.

'இருப்பது பொய் இறப்பது மெய்' என்பது பாலர் முதல் விருத்தர் ஈறாக உள்ள அனைவரும் அறிந்ததொன்றே; அறிந்தும் அனுஷ்டிப்பார் சிலராகவே யிருக்கின்றனர். அதிலும், முற்பிறப் பின் நல்வினைப் பயனால் சிறிது பொருள் பெற்றோர், பெரும்பாலும் அகங்காரம், மமகாரம் என்ற இரண்டையும் பெற்றவர்களாகவே காணப்படுகின்றனர். பொருள்களோ பாதாளம் போய்விடுகின் றன. இனிய சொற்களோ மந்திரமாய் விடுகின்றன. இவ்வா றிருப்பின் உலகம் கலகமாகக் கேட்பானேன். ஆகையாலன்றோ திருவெண்காட் டடிகளும்,

"முடிசார்ந்த மன்னரு மற்றுமுள் ளோரு முடிவிலொரு

பிடிசாம்ப ராய்வெந்து மண்ணாவதுங் கண்டு பின்னுமிந்தப்

படிசார்ந்த வாழ்வை நினைப்பதல் லாற்பொன்
னம்பலவ
ரடிசார்ந்து நாமுய்ய வேண்டுமென்
றேயறிவா ரில்லையே" எனச் சிந்தைநொந்து
திருவாய் மலர்ந்தருளினர்? அந்தோ! இம்
மக்கட் பிறவியும், பொருளும் அழிதன்
மாலையனவல்லவோ? இன் அதிகாரம் · கக.]



சொற்களும், தர்மமுமல்லவோ என்று
மழியாது இம்மை மறுமைப் பயனை
ஈயவல்லன? அவைகளையா அசட்டை
செய்வது? அன்றியும், 'வெட்டெனப்
பேசேல்', 'ஞயம்பட உரை', '
புண்படவே
வார்த்தைகளைச் சொல்ல வேண்டாம்'
என்ற ஆன்றோர் வாக்கும்
இங்கு அறியத்தக்கன. அரும் பெரும்
நூல்களும் இன்சொற் கூறு வோரே
இம்மையில் எவ்வகைப் பகையையும்

வென்று எவராலும் புகழப்பட்டு, மறுமையிலும் மோட்சத்திற் குரியவர்களாகின்றன ரென் றறையாநிற்கின்றன.

"இன்சொலா லன்றி யிருநீர் வியனுலகம்
வன்சொலா லென்று மகிழாதே"

எனவரும் முதுமொழி நோக்குக.

செல்வர் முதல் வறியவர் ஈறாக எளிதில் செய்யக்கூடிய காரிய மாகவும், அறம் பொருள் இன்பம் வீடு என்ற புருஷார்த்தங்களை அடைவிப்பதாயுமுள்ள ஒழுக்கமாகிய இனியவை கூறுதலை எக்காலத்தும் கைக்கொண்டு, எல்லா நற்கருமங்களையும் எந்நாளு மியற்றி, எல்லாம்வல்ல நம் இறைவனடி சேர என்றும் எண்ணுவோமாக.

# 11 - ஆம் அதிகாரம்
# செய்ந்நன்றி யறிதல்

---

நமக்கு ஒருவர் செய்யும் உபகாரத்தை மறவாமையே ‘ செய்ந் நன்றியறிதல் ’ எனப்படும்.

அரிதாகிய இம்மானிடப் பிறவிக்கு, நன்றி அறிதலே, சிறப் . பைத் தருவது. ஒருவர் ஓர் உபகாரத்தை வேண்டி, அது கிடைக் காது வருந்தும்போது, அவ்வுதவியை அவர்களுக்குச் செய்து, அவர் கள் துன்பத்தை நீக்குதலே சிறந்த தருமம். மேகமானது உல

கத்திற்குச்செய்யும் உபகாரத்தின் நன்மையைவிட ஒருவர் பயன் கருதாது செய்யும் உபகாரமானது சிறந்ததாகும். புலவரும்,

“ காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினு

ஞாலத்தின் மாணப் பெரிது"

என்றார்.



உபகாரத்தின் பயனுக்கு விண்ணுலகையும் மண்ணுலகையும் கொடுத்தாலும் ஈடாகாதென்பதை விளக்கவே,

"செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது"

என்றார் வள்ளுவனார்.

ஆடையின்றிக் கஷ்டப்படும் ஒருவர்க்கு அக்கஷ்டத்தை அறிந்து செய்யும் உபகாரமானது சிறியதாக இருந்தாலும், ஒரு பயனையும் கருதாமல் அக்கஷ்டத்தை விலக்கச் செய்த உதவியின் பயனை அளவிட முடியாது. இதனை,

"பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கி
னன்மை கடலிற் பெரிது"

என்ற ஆன்றோர் வாக்கும் அறிவிக்கின்றது.

சாதாரணமாக உலகத்திற்கு ஒருவர் உதவி வேண்டியே இருக்கும். ஒருவர் தாகவேட்கையால் வருந்தும்போது, அவருக்கு ஜலம் கொடுப்பதும் ஓர் உதவிதான். அது நாம் செய்யவேண்டிய சாதாரண கடமையே. ஆனபோதிலும், சான்றோர்களுக்கு அவ்வுதவி யியற்றி யிருக்கும் பட்சத்தில் அவ்வுதவி அணுவளவேயானாலும் அவர்கள் அதனை அளவிறந்த நன்றியாகக் கொள்வார்கள். ஏனையோர்கள் எண்ணிறந்த உதவியைப் பெற்றாலும் அவ்வுதவியை அணு வளவும் பொருட்படுத்தார்கள். இதை யுணர்த்தவே, நாலடியாரும்,

" தினையனைத்தே யாயினுஞ் செய்த நன்றுண்டாற்

பனையனைத்தா வுள்ளுவர் சான்றோர்—பனையனைத்

தென்றுஞ் செயினு மிலங்கருவி
நன்றுடை
நன்றில நன்றறியார் மாட்டு"
என நவிலா நின்றது. இதனை
அநுபவத்திலேயே எவரும் அறிந்திருக்கலாம்.

செய்ந்நன்றியறியாதாருடைய தன்மைகளை இங்கு எடுத்துக் காட்டுதல் வீணாகும். ஆதலால் ஈண்டு எடுத்துக் காட்டுதல் யாதெனில், தன் விஷநோயை நீக்கிக் காத்த வைத்தியனைக்கொன்று தின்ற புலியைப்போன்ற கொடியவர்கட்கு உதவிசெய்வது அவ்வளவு உசிதமாகாது. ஆகையாலன்றோ, உதவியின் பெருமையைக் கூறவந்த உத்தரவேதமும்,

அதிகாரம் - கக.] இல்லற இயல்

சகக

" தினைத்துணை நன்றி செயினும்

பனைத்துணையாக்

கொள்வர் பயன்றெரி வார்"

என்றுரையா நிற்கின்றது?

அறிவுடையார்கட்குச் செய்யும் உபகாரமே அருமையுடைத்து. அஃது இம்மை மறுமையிலும் பிரகாசிக்கும்; கீர்த்தியையும் மேன்மையையும் கொடுக்கும். இவை கருதியே மூதுரையும்,

"நன்றி யொருவர்க்குச் செய்தக்கா லந்நன்றி

யென்று தருங்கொ லெனவேண்டா—நின்று

தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்

தலையாலே தான்றருத லால்"

என மொழிந்தது.

மக்கட் பிறப்பினராகிய நாம், பொதுவாக ஒவ்வொருவருக்கும் உதவி செய்யவேண்டுமாயினும், தக்கார் மாட்டுச் செய்த நன்றியே பரிமளிக்கும். இதனை,

"உதவி வரைத்தன் றுதவி யுதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து
"

என்ற தேவர் வாக்கே தெரிவிக்கின்றது. உதவி செய்தாரை உள்ளத்தின்கண் என்றும் மறவாதிருத்தலே தகுதியாம். அங்ஙனம் மறவாமலிருப்போ ரடையுஞ்சிறப்பிற் களவில்லை. அவர்களுடைய நட்புப் பிறவிதோறும் பெறுதற்குரியது. இஃதுணர்த்துவான் கருதியே செந்நாப்போதாரும்,

" நன்றி மறப்பது நன்றன்று
நன்றல்ல
தன்றே மறப்பது நன்று"

எனச் செப்பிய துணர்க.

இனி, பொருளால் செய்த நன்றியே நன்றி எனலாகாது. சாதாரணமாக ஒருவர்

எவ்விதத்திலேனும் கஷ்டப்பட நேரும்; அப்போது அதனை விலக்கத்தக்க உதவியைப் பெறுவிடில் மானமிழக்கவோ அல்லது பிராணனிழக்கவோ வேண்டியிருக்கும். அதை ஒருவர் அறிந்து செய்யும் உபகாரமே இம்மைக்கும் மறுமைக்கும் சிறப்பைத் தருவது. அவ்வுபகாரம் செய்தவர்களுக்குப் பதிலாக நாம் பிரதி



யுபகாரம் செய்வதினும் அவர்களைச் சிநேகராகக் கொள்வதே முதல் கடமையாகும். இஃதுணர்த்தவே மாதானுபங்கியாரும்,

“ மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துட் டுப்பாயார் நட்பு ”

என்றனர்.

பகைவர், அயலார், சிநேகிதர் என்ற

வித்தியாசம் பாராட்டாமல், அவரவர் கஷ்டத்தை அறிந்து அதனை விலக்குதல் வேண்டும். உலகில் நமக்கு ஓர் உபகாரம் செய்தோர், பின்னர் எக்காரணத்தாலோ தீங்குசெய்ய நேரிடினும், அதுபோது நம் அறிவின் விசேடத்தால், அவர் முன்செய்த நன்றியை நினைக்க அத் தீமையானது கெடும். இஃதுணர்த்தவே,

" கொன்றன்ன வின்னா செயினு
மவர்செய்த
வொன்றுநன் றுள்ளக் கெடும்"

என்றார் நான்முகரும்.

கடவுளுக்கு அபசாரம் செய்துவிட்டாலும் அவரடியார் களைக் கொண்டு அவரடியைச் சேரலாம்; அதுபோல, நாம் எவருக்குத் தீங்கு செய்தாலும் அதற்குப் பரிகாரம் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆனால் நமக்கு உபகாரம் செய்தார்க்கு நாம் ஒரு தீமை

யைச் செய்தால் நமக்கு உய்வேயில்லை ; ஆதலின், அவர்கட்குத் தீங் கியற்ற நாம் மனத்தாலும் நினைத்தலாகாது. உபகாரம் செய்தார்க்கு அபகாரம் செய்ய எண்ணுவோர் என்றும் மீளா நரக மடைவரென்பது திண்ணம். இதனை,

" எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை

செய்ந்நன்றி கொன்ற மகற்கு"

எனத் திருவள்ளுவரும் தெரிவித்ததா லுணர்க. ஆகவே, செய்ந் நன்றியறிதலை நாம் எவ்வகையாலும் அசட்டை செய்யாதிருக்க வேண்டுவது இன்றியமையாததாம்.

உலகில் எண்ணிறந்த சிறந்த நூல்கள் உள. அவைகள் எவை ? எதற்காக ஏற்பட்டன ? அவை, நம் ஆன்றோர்களால் உலக உபகாரத் திற்காக இயற்றப்பட்டுள்ளவை . அத்தகைய உபகாரத்தைப்பெற்ற நாம்

அவ்வான்றோர்கட்கு நன்றி செலுத்துவது அவசியமன்றோ ? அந்நன்றியை எப்படிச் செலுத்துவது ? அந்நூல்களைக்



அவைகளையே நட்பினராகக் கொள்ளவேண்டும். அந்நட்பாளர்கள் நம் இருதயத்தைச் சுத்தப்படுத்தி , இருமைக்கான வழிகளைக்காட்டி நம்மை இறைவனடியிலுஞ் சேர்ப்பார்கள். ஆதலின் அவர்களிடத் தில் நாம் மெய்யன்புடன் நடந்து எல்லாம்வல்ல இறைவனையடைய என்றும் முயலுவோமாக.

---

## 12 - ஆம் அதிகாரம்
## நடுவு நிலைமை

---

பகைவர், அயலார், நண்பர் என்ற மூவரிடத்தும் நீதி தவ றுமையே 'நடுவுநிலைமை' எனப்படும்.

" தகுதி யெனவொன்று நன்றே பகுதியாற்
பாற்பட் டொழுகப் பெறின்"

என்றார் தெய்வப் புலவர்.

மக்கள் யாவரும் நடுவுநிலைமையோடிருந்து, பொதுவாக எல்லோருக்கும் பயனளித்து, அதனல் பெறுதற்குரிய புகழையும், புண்ணியத்தையும் அடைவதே எல்லாத் தருமங்களிலும் சிறந்த தருமமாகும். இவ்வாறொழுகின், நாம் பொறுமை பகை பொய் முதலிய தீயகுணங்களினின்றும் விடுபட்டு, அழியாச் செல்வத்தையும் பெற்று, சந்ததிதோறும் மாறாப் புகழையும் அடைவோமென்பதற் கையமில்லை. இதனை,

"செப்ப முடையவ னாக்கஞ் சிதைவின்றி
யெச்சத்திற் கேமாப் புடைத்து"

என்ற திருக்குறள் தெரிவிக்கிறது.

ஆதிகாலத்தில், அயோத்தியை அரசாண்ட அரசர்களுள் ஒருவ ரான அரிச்சந்திரனென்பவர், அரசை இழந்ததன்றி தமதருமை மனைவியையும் மைந்தனையும் விற்று, இறுதியில் தாமும் ஈனனுக்கடிமைப்பட்டு, எல்லையில்லாத் துன்பத்திற் கிலக்கான காலத்தும், நேர்மை யில்லாத வழியில் செல்ல நினைத்ததுண்டா? அவ்வா றொழுகலன்றோ சிறப்பு! இஃதுணர்த்தவே தேவரும்,

௫௨ திருக்குறள்
தீபர்லங்காரம் [அறத்துப்பால்

"ஈன்றே தரினு நடுவிகத்தா மாக்கத்தை

யன்றே யொழிய விடல்"
எனத் தெரிவிக்கின்றார்.
யாரொருவர் நடுவுநிலைமையோ
டிருக்கிறார்களோ அவர்களே
உலகத்தாரால் உவக்கத்தக்கவர்க
ளாவதுமன்றி, உத்தமபுத்திரர்
களையும் உடையவர்க ளாவரென்ப தூஉதி.
எவரும் தவறான வழி
யில் நடப்பதால், தற்போது பெரும்
பயனைப் பெறுவதாயிருப்பினும்,
பின்வருங் கேட்டையுணர்ந்து அவ்வாறு
நடவாதிருத்தல் வேண்டும்.
ஆகையாலன்றோ திருவள்ளுவரும்,
"கேடும் பெருக்கமு மில்லல்ல
நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி"
எனத் தெரிவிப்பாராயினர்?
அறிவுடையோர் நடுவுநிலைமை
தவறுதலால் தமக்குத் தீங்கு

வருமென்பதை யறிந்து, எக்கஷ்டம்
வரினும் தருமத்தினின்றும் தவறாமலே
யிருப்பர். அறிவிலார் அஃதுணராது,
பழிபாவங்களுக்கு ஆளாகி,
இருமைப்பயனையும் இழப்பர்.
இஃதுணர்த்தவே குமரகுருபர சுவாமிகளும்,

"கண்கூடாப் பட்டது கேடெனினுங்
கீழ்மக்கட்
குண்டோ வுணர்ச்சிமற்
றில்லாகும்—மண்டெரி
தான்வாய் மடுப்பினு மாசுணங்
கண்டுயில்வ
போரா பெருமூச் செறிந்து"

எனத் திருவாய்மலர்ந்தார்.

நாமும் நமது சிற்றறிவிற்
கெட்டியவரை சீர்தூக்கிப் பார்ப்போமாயின்,
நடுவுநிலைமையின் பெருமை நன்கு
விளங்குகின்றது. இவ் வொப்பற்ற
குணத்தைக் கடைப்பிடித்தவர்கள்
ஊழ்வினையால் துன்பத்திற்குட்பட்டுத்

துயருற்ற காலத்திலும் யாவராலும்
மதிக்கப்படுவதன்றி, இறுதியிலும்
கிறார்கள். இதற்கு,
இன்பத்தை அடைபவர்களாகவே யிருக்
" கெடுவாக வையா துலக
கடுவாக
கன்றிக்கட் டங்கியான் றூழ்வு"
என்ற முதற்பாவலர் கூற்றே சான்றும்.
நிற்க.

அதிகாரம்-கூ.] இல்லற இயல்
ருரு

முன்னொரு காலத்தில், சோழநாட்டின் மத்தியிலுள்ள திருவாரூரென்ற திவ்ய க்ஷேத்திரத்தில் அநபாய சோழ வம்சத்தில் உதித்த மநுச்சக்ரவர்த்தி மனுமுறைப்படி அரசியற்றி வந்தார். அவர் பரமசிவனுடைய

திருவருளால் பெற்ற வீதிவிடங்கன் என்ற புதல்வர் சகல வித்தைகளையுங் கற்று ஒப்பற்று விளங்கினர். அப் புதல்வர் ஒருநாள் பரமசிவத்தைப் பூசைசெய்ய அவாவுற்றுச் சகல வைபவத்துடன் கோயிலுக்குச் சென்றபோது, இளங்கன்றொன்று அவருடைய தேர்க்காலிற்பட்டு இறந்தது. அப்போது அவர் ஆறாத் துயருற்றார். ஆனால், அக்கன்றின் தாய்ப்பசுவானது சக்ரவர்த்தி அறியும்படி அரண்மனைக்குச் சென்று ஆராய்ச்சி மணியைத் தன் கொம்பால் அசைத்து அடித்தது.

அம்மணியோசைகேட்ட அரசர் நடுக்கமுற்று வந்து அங்குள்ளோரால் நிகழ்ந்ததை யுணர்ந்தார். அவர், உடனே ஒரு மந்திரியை யழைத்துத் தன் அருந்தவப்புத்திர னைக் கன்று சிதைந்தவாறே சிதைக்கக்

கட்டளையிட, மந்திரி அவ் வாறு யியற்ற மனமாற்ருது அவ்விடத்தேகிப் பிராணனை விட்டார். அரசர் அது கேள்வியுற்றுப் பின்னும் ஆருத துயருற்றுத் தாமே அவ்வாறு ரதம் ஊர்ந்து தம் புதல்வனைச் சிதைத்தார். இதுவே நடுவு நிலைமையின் சிறப்பு. பிறகு, அரசர் விண்ணுலகும் மண்ணுலகும் வியக்கத்தக்க அழியாப்புகழையும், உயிரிழந்த கன்றையும், மந்திரி யையும், புதல்வனையும் அடைந்தது அந்நீதியின் பயனலன்ரு ? இவ் வுண்மைகளையெல்லா முணர்த்தவே,

" சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி "

என்ருர் மாதானுபங்கியார்.

எங்ஙனம் தராசு இருபுறங்களிலும்

வைக்கப்பட்டிருக்கும் பொருள்களின் குறைவு மிகுதிகளைத் தெரிவிக்கின்றதோ, அங்ஙனமே நாம், எக்காரியங்களிலும் உற்றார் மற்றோர் நண்பர் பகைவர் மேலோர் கீழோர் என்று பாராட்டாது பொதுவாக நடத்தல் வேண்டும். ஆகையாலன்றோ ஆன்றோரும்,

" சொற்கோட்ட மில்லது செப்ப மொருதலையா
வுட்கோட்ட மின்மை பெறின் "

என வலியுறுத்திக் காட்டுவாராயினர்? ஆனால், உலகத்தார் யாவரும் ருசு

## திருக்குறள் தீபாலங்காரம்

[அறத்துப்பால்

அதன் சிறப்பை யுணர்ந்து அதனைக் கடைப்பிடிக்கவில்லை. அவர்கள்

நடுவு நிலைமை தவறுவதால் அடையும் நஷ்டத்திற் களவுண்டோ ? இவைகளையெல்லா முணரவல்ல எவரும் நடுவுநிலைமை தவறி நடத்தலால் வரும் பொருள் அளவிறந்ததேயாயினும், அதனை மறந்தும் விரும்பலாகாது. தேவரும்,

> " வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
> பிறவுந் தமபோற் செயின் "

என அறிவுறுத்திக் காட்டியுள்ளார்.

நாம் செய்யும் ஒவ்வொரு காரியங்களிலும் நீதியாக நடந்து கொள்வோமாயின் , அது நம்மைப் பழிபாவங்களுக் காளாக்காமல், ஆயுளையும் செல்வத்தையும் வளரச்செய்து, மேன்மையை அடையும் வழியில் சேர்த்து, அழிவில்லாத உலகத்தையும் அடையச் செய்யும். ஆதலால், நாம் நடுவுநிலைமையாக நடந்து யாவும் வல்லவரான இறை வன் அருளால் அழியாத அத்துவித பதவியை

அடைய அனு தினமும் முயல்வோமாக.

---

## 13 - ஆம் அதிகாரம்
## அடக்க முடைமை

---

மன மொழி மெய்களைத் தீய வழிகளிற் செல்லவிடாமையே அடக்கமுடைமை' யெனப்படும்.

"அடக்க மமரரு ளுய்க்கு மடங்காமை
யாரிரு ளுய்த்து விடும்"

என்றார் திருவள்ளுவர்.

மக்கட் பிறவியைப் பெற்ற எவரிடத்தும் அடக்கமென்ற அருமைக் குணம் அவசியமிருக்கவேண்டும். இன்றேல், இல்லறம் துறவறம் என்ற இவ்விரண்டில் எந்நிலையை யுடையவரேயாயினும், அவர்கள் இருமைப் பயனையுமிழந்து என்றும் மீளாநரகத்திற்

கிரை யாவரென்பது திண்ணம். ஆதலால், அடக்கமென்ற செல்வமே முதன்மையான செல்வமாம். உத்தர வேதமும்,



" காக்க பொருளா வடக்கத்தை யாக்க
மதனினூங் கில்லை யுயிர்க்கு "

என்றுரையா நிற்கின்றது.

யாவும் வல்லவராகிய நம் ஆண்டவன் ஐம்பொறிகளாகிய மெய், வாய், கண், மூக்கு, செவி யென்பவைகளை எதுபற்றி யீந்துள்ளார்? முறையே நற்கருமங்களை நடத்துதற்கும், சத் விஷயங்களை யுரைத்தற்கும், நற்பொருள்களைக் காணுதற்கும், அவைகளை முகத்தற்கும், சத்விஷயங்களைக் கேட்பதற்குமல்லவோ?

இவ்வாறிருக்க நாம் அவைகளைத் தீயவழிகளிற் செல்ல விடலாமா ? வாதுக்கிழுக்கும் மல்லர்போன்று நம்மை வலியவிழுத் துத் தீயவழிகளிற் புகுத்தவல்ல மனக்குரங்கை முதலிலடக்கி, மற்றவைகளை மேற்கூறியவாறு அதனதன் வேலைகளைச்செய்ய விடுவது அவசியம். இன்றேல் இவ்வரிய பிறவியின் பயன் என்னும் ? இவைகளை யெல்லா முணரவல்ல எவரும், இடம் பொருள் ஏவல் என்ற முப்பொருள்களைப் பெற்றிருந்தாலும், தாமரை யிலை ஜலத்துடனே இருந்தும் அதில் ஜலம் அணுவளவும் ஒட்டாதது போல, அதனதன் உட்பொருள்களை யுணர்ந்து அடக்கமுடன் நடப்பதையே நாளு மனுசரிக்கவேண்டும்.

அவ்வாறொழுகுவோரே மேன்மைப்பட்டு அழிவிலாத உலகத்தையும் அடைபவர்களாக அவனியில் பிரகாசிக்கிறார்.

இதனை,

> “ செறிவறிந்து சீர்மை பயக்கு மறிவறிந்
> தாற்றி னடங்கப் பெறின் ”

என்ற மாதானுபங்கியார் கூற்றே வலியுறுத்துகின்றது.

உலகில், கஷ்டத்தை அனுபவித்து அதன் காரணமாக வெறுப் புற்றுத் துறவடைவோரும், சுகத்தை யனுபவித்து அஃது அநித்திய மென்றுணர்ந்து துறவடைவோரும் உளர். இவ்வாறு, இருவர் அடைவதும் ஒரு நிலையே. ஆயினும், உலகமானது எதைச் சிறப்பிக் கும் ? ஏழையோ இல்லாமையால் துறவடைகிறான் ; அரசனோ அநித்தியத்தைக்கண்டு அடைகிறான் ; அவர்களுள் அரசனே பெருமை பெறுவன். அதுபோல, செல்வர் அடக்க முடையோ ராயின் , அவர் பெருமை பொன்மலர் மணம் பெற்றதுபோலாம்.

இதனை,



" எல்லார்க்கு நன்றாம் பணித லவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து "

என்ற முப்பாலானு முணர்க.

எவரும் அடக்கமுடையரா யிருத்தல் அத்தியாவசியமான கடமை. அடக்கமுடையவரா யுள்ளவர்கள் இனியடையும் பிறவியிலும் எல்லையில்லாத நன்மைகளை யடைவார்களென்ப துறுதி. ஆகையால்,

" ஒருமையு ளாமைபோ லைந்தடக்க
லாற்றி
னெழுமையு மேமாப் புடைத்து "

என்றார் ஆன்றோரும்.

பஞ்சாக்கினி மத்தியிலிருந்து
தவஞ்செய்தும் மனம் அடங்கா

விடின் பயனென்? ஒன்றுமின்று.
அதுபோல, நாவை அடக்கா

விடில் அது பெருங்கேட்டையே
விளைக்கும். ஒருவர் நமக்குச்

செய்த தீங்கு நம்மனதில் பாதித்தாலும்,
நாவை அடக்கியே நாம்

பேசவேண்டும். இன்றேல், பகையானது
அதிகரிக்கும். சில சமயங்

களில் நாம் நினையாத விடயங்களை
நாவுரைத்து விடுகின்றது. அப்

போது, அச்சொற்களாலேயே நாம்
குற்றத்திற்காளாகவும் நேர்

கிறது. ஆகவே, எவரும் எதைக்
காவாவிடினும், நாவை முக்கிய

மாகக் காக்கவேண்டும். இஃதுணர்த்தவே
திருவள்ளுவரும்,

" யாகாவா ராயினு நாகாக்க

காவாக்காற்

சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு
"

எனத் தெரிவித்த தறிக.

திரிதராஷ்டிரன் குமாரர்களாகிய
துரியோதனாதியர்கள் மன

அடக்க மில்லாண்மையினாலேயே, பொருளாசை பொறாமை சூது முதலிய துர்க்குணங்கட்குட்பட்டுத் தொலையா நரகத்திற்காளானார்கள். பாண்டுவின் குமாரர்களான தருமர் முதலானோர் அளவிறந்த துன்பங்களை அனுபவித்த காலத்தும் அடக்கமுடைமையையே ஆதாரமாகக் கொண்டதால், ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் அருளையும் நாடுகளையும் பெற்று, இணையிலாத மோட்சத்தையும் எளிதிலடைந்தார்கள். இதனால் அடக்கமுடைமையின் அருமை பெருமையும், அஃதில்லாமையின் அழிவும் அவமதிப்பும் அக்கணமே

அதிகாரம் - கூ.] .. இல்லற இயல்

இனி கனிபோ
லறியக்கிடக்கின்றது. ஆகையாலன்றோ,
வாக்கின் அடக் கத்தைக் கூறவந்த
ஆன்றோரும்,

" ஒன்றானுந் தீச்சொற் பொருட்பய

னுண்டாயி

னன்ருகா தாகி விடும்"

என் றறிவுறுத்தினர்?

நாவடக்கமின்மையா லுண்டாம் ஒரு வசை மொழி, என்றும் மறையாது துன்பத்தையே கொடுக்கும். செந்நாப்போதாரும்,

"தீயினாற் சுட்டபு ணுள்ளாறு

மாறுதே

நாவினாற் சுட்ட வடு"

எனச் செப்பியுள்ளார்.

மக்கட் பிறப்பினராகிய நாமெவரும் மனதை அடக்கி, அதன் வயப்படவல்ல ஐம்பொறிகளையும் தீயவழிகளிற் செல்லாதபடி செய்வதே சிறப்பு. இன்றேல், ஒன்றொழியவும் ஒன்று தோன்றவுமா யிருக்கும் மனத்தில் மாயைமேலிட்டு நம்மைத் தீய வழிகளிற்

புகுத்தி மேன்மேலும் பிறவிக் காளாக்கும். இதனை,

" இறப்பும் பிறப்பும் பொருந்த—எனக்
கெவ்வணம் வந்ததென்
றெண்ணியான் பார்க்கில்
மறப்பு நினைப்புமாய் நின்ற—வஞ்ச
மாயா மனத்தால் வளர்ந்தது
தோழி
சங்கர சங்கர சம்பு "

எனவரும் சிவஞானச் செல்வராகிய நம் தாயுமானவர் திருவாக்கே தெரிவிக்கின்றது.

ஆகவே, எவரும் தம்மனதை அடக்கினலன்றி மகிமையடையா ரென்பது மறக்கத்தக்கதன்று. தேவேந்திரனும் மன அடக்க மில்லாமையினுலேயே அடாது செய்து , மானமும் பெருமையுமிழந்து மயங்கினன். இவைகளெல்லாம் எக்காலத்தும் கோபத்தை வரவொட்டாமற்

காக்கும் குணமுடையோர்கட்கே யன்றி எனை யோர்கட்கு எவ்வகையானும் பயன்படாது. அடக்கமென்ற குணத்தை அடைய விரும்புவோர் அகங்காரத்தை அறவே ஒழிக்க வேண்டுமென்ப தொருதலை. ஆராயுமிடத்து, உலகில் அடக்க



முடையோர் பெருமையே பெரிதெனக் கொண்டாடப் படுகின்றது . இஃதுணர்ந்தவே நான்முகரும்,

"கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி
யறம்பார்க்கு மாற்றி னுழைந்து"

என நமக் கறிவுறுத்தினர்.

எவரும் மனம் வாக்கு காயம் என்ற மூன்றையும் தம் வச மாக்கி நடப்பார்களாயின், அவர்கள் தங்களுடைய

முன்னோர்க்கும் நற்பெயரைக் கொடுத்துத் தாங்களும் நன்மதிப்பைப் பெறுவார்கள். ஆதலால், நாமெவரும் அத்தகைய அரும் பெருந் தன்மைகளை யெல் லாம் அளிக்கவல்ல அடக்கமென்ற குணத்தையே அணிகலனாகக் கொண்டு, இருமைப் பயன்களையும் எளிதிலடைய எல்லாம் வல்ல இறைவனை என்றும் பிரார்த்திப்போமாக.

---

## 14 - ஆம் அதிகாரம்
## ஒழுக்க முடைமை

மக்கள் தத்தம் மதாசாரப்படி நடப்பதே 'ஒழுக்கமுடைமை' எனப்படும்.

"செல்லு மளவுஞ் செலுத்துமின் சிந்தையை
வல்ல பரிசா லுரைமின்கள் வாய்மையை

யில்லை யெனினும் பெரிதுள

னெம்மிறை

நல்ல வரனெறி நாடுமி னீரே"

என்றார் திருமூல நாயனார்.

மக்கள் இல்லறத்தாரே யாயினும் துறவறத்தாரே யாயினும், அவரவர் மத ஒழுக்கத்தினின்றும் தவறாமல் இருக்கவேண்டும். இவ்வாறிருப்பதால் அவர்கள் எம்மதத்தில் பிறந்தவர்களாயினும், அம்மதத்தில் நம்பிக்கையும் பக்தியும் உடையவர்களாய் எல்லாம் வல்ல இறைவனிடத்து இணையில்லா அன்புகொண்டு என்றும் அழியா நிலைக்குச் செல்லும் பாதையையும் எளிதிலுணர்பவர்களாவார்கள். ஆகலின், ஒழுக்கத்தை எவரும் கைக்கொள்ள வேண்டியது அவசியம். இஃதுணர்த்தவே,

" ஒழுக்கம் விழுப்பந் தாலா னொழுக்க
முயிரினு மோம்பப் படும்"

எனத் தெய்வநூலும் தெரிவிக்கின்றது. ஒழுக்கமுடையோரே எல்லாத் தருமங்களையும் எளிதிலியற் றியவர்களினும் இனியவர்களாய் விளங்குகின்றனர். ஆகலின், ஒழுக்கமே மக்கட் பிறவியின் பயனும் உறுதிப் பொருளுமாகும். அஃதில்லார் எத்தகையரேனும் அவர்கள் பிறவிப் பயனையு மிழந்து, எவ்வுலகத்தும் இழிவடைய நேருமென்ப துறுதி. இதனை மேலையோரும்,

" பரிந்தோம்பிக் காக்க வொழுக்கந் தெரிந்தோம்பித்
தேரினு மஃதே துணை"

என வலியுறுத்துகின்றார்.

வைகையாற்றின் தெற்கே யுள்ள குருவிருந்துறை யென்னும் க்ஷேத்திரத்தில் சுகலன், சுகலை என்ற சதிபதிகள் பன்னிரண்டு புதல்வர்களைப் பெற்று, அவர்களைக் கண்டியாது செல்வச் செருக்காய் அன்புடன் வளர்த்து வந்தார்கள். பின், அப்பிள்ளைகள் தாய் தந்தையரை யிழந்து, நல்லொழுக்கம் நல்லிணக்கம் இல்லாக் குறையால் வேடரை நட்பாகக்கொண்டு காட்டில் திரிந்தார்கள். அப் போது, அங்கே பிருகற்பதி முனிவர் தவமியற்றுவதை அவர் கள் கண்ணுற்றுக் கைகொட்டிச் சிரித்துக் கற்களை அவர்மீது எறிந் தார்கள். முனிவர் தந்தவத்திற் கிடையூறு நேர்ந்ததையுன்னி, அஃதச் சிறுவர்களுடைய செயலென்றெண்ணி, அவர்களை நோக்கி " மண்ணுழுந்தொழிலை யுடைய ராயிருந்தும் வேடர் தொழிலிற் பிரவேசித்ததனுல், பன்றிக்குட்டிகளாகப் பிறந்து

தாய்தந்தையர் களை யிழக்கக் கடவீர்க
''ளென்று சபித்தார். இச்சரித்திரத்தால்,
சுகலன்மக்கள் தம் ஒழுக்கத்தினின்றும்
தவறியதனாலேயே அத்தகைய சாபத்திற்
காளானார்களென்பது அறியக்கிடக்கின்ற
தன்றோ?

ஆதலால், ஒவ்வொருவரும் ஒழுக்கத்தை
உயிரினும் சிறந்ததாகக் கொள்ளவேண்டும்.
இது கருதியே பொய்யில் புலவரும்,

" ஒழுக்க முடைமை குடிமை யிழுக்க
மிழிந்த பிறப்பாய் விடும்"

எனப் புகல்கிறார்.



எவரும் தத்தம் மதாசாரங்களை,
மறந்தும் கைவிடாதொழுகுவதே உயர்வு.
ஊன்றி நோக்குமிடத்தும்

இஃதொன்றினால்தான் மனிதன் மற்றெல்லாப் பிராணிகளினும் சிரேஷ்டமானவனாகிறான். இஃதில்லாதவன் மனிதப் பதவிக்கு அருகனாகான். ஆகையாலன்றோ தமிழ் மறையும்,

"மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்"

எனநவிலா நிற்கின்றது? இவ்வாறிருக்கச் சிலர், இத்தகைய நற்போதனைகளை யெல்லாம் கதைபோல் வாசித்துவிட்டு, 'ஆம் இவை யனைத்தும் உண்மைதான்' என்று அந்தக் கணத்திலே கூறி, மறு கணத்தில் அதை மறந்தோ, மறவாமலோ அனாசாரங்களையெல்லாம் பின்பற்றி யொழுகுகிறார்கள். அந்தோ! இஃது எத்தகைய அறிவீனம்! ஒழுக்கந் தவறுவோர் அளவு கடந்த அந்தஸ்துடையவர்களாயினும்

அவமதிக்கப் படுவார்களென்பதற் கையமில்லை. இஃது உணர்ந்தே பொதுமறையும்,

“அழுக்கா றுடையான்க ணாக்கம்போன் றில்லை
யொழுக்க மிலான்க ணுயர்வு”

எனப் புகன்றது.

இலங்கைக் கதிபதியாகிய இராவணேஸ்வரன் எத்தகைய தவமகிமையையும், புஜபலபராக்கிரமத்தையும் உடையவனாயிருந்தும் ஒழுக்கம் என்ற ஒன்று இல்லாமையாலன்றோ தன் தவம் பலம் வரம் முதலிய யாவையு மிழந்தான்?

“ஒழுக்கத்தி னெல்கா ருரவோ ரிழுக்கத்தி
னேதம் படுபாக் கறிந்து”

என்றபடி, அறிவுடையோர் அவ்வொழுக்கத்தை அணுவளவும் கைவிடமாட்டார்கள். அவர்கள் துன்பத்துள்

ஆழ்ந்து கிடப்பினும்,
இறுதியில் இன்பமடைந்தவராவார்கள்.
ஆகையாலன்றோ நாலடி
யாரும்,

“ அறிவ தறிந்தடங்கி யஞ்சுவ தஞ்சி
யுறுவ துலகுவப்பச் செய்து -
பெறுவதனா

லின்புற்று வாழு மியல்புடையா
ரெஞ்ஞான்றுந்

துன்புற்று வாழ்த லரிது”
என நவின்றது ?

அதிகாரம் - கச.] இல்லற இயல்

கக

நல்லொழுக்க முடையவர்களிடம்
எல்லா நற்குணங்களும் அமையப்
பெற்றிருப்பதால், அவர்கள் எல்லாத்
தருமங்களையும் எளிதில் செய்து
இவ்வுலகத்திலும் மறுவுலகத்திலும்

பிரகாசிப் பவராவார்கள். அவ்வொழுக்க மில்லாதவர்களோ பொய், பொறாமை, கொலை, களவு, காமம், பிறர் பொருளிச்சித்தல் முதலிய தீயகுணங் களையுடையவர்களாய், இம்மையிலும் துன்பங்கட்குட்பட்டு மறுமை யிலும் மீளா நரகத்தை நாடுபவர்களாகின்றூர்கள். இதனை,

"நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கந் தீயொழுக்க
மென்று மிடும்பை தரும்"

என்ற மாதாநுபங்கியார் வாக்கானுணர்க.

ஒழுக்கமுடையவர்கள் மறந்துந் தீய எண்ணங்களுக் கிலக் காகார். அவ்வொழுக்கமில்லாதார் அறிவு நூல்களைக் கற்றிருந் தாலும் பயனற்று, உலகத்தாரால் வெறுக்கத்தக்கவராவார். இது கருதியே,

"உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார்"

என்றது உத்தர வேதம். ஆசாரத்தினின்றும் தவறுதார் ஆன்ருேர் அனுசரித்த முறைகளைக் கைக்கொண்டு, பொய், கடுஞ்சொல், பொருமை, கொலை, களவு, காமம், பிறர் பொருளிச்சித்தல் முதலியவைகளை ஒழித்து, நல்லொழுக்கம், நற்சிந்தை, தருமம், தயை, பொறுமை முதலியவைகளையே பூஷணமாகக்கொண்டு, இம்மை மறுமைப் பயன்களுக்காக உழைப்பவர்களாகிருர்கள். ஆகையாலன்ருே பட்டினத்தடிகளும்,

“ஒன்றென் றிருதெய்வ முண்டென்
றிருவுயர் செல்வமெல்லா
மன்றென் றிருபசித் தோர்முகம் பார்நல்
லறமுநட்பு
நன்றென் றிருநடு நீங்கா மலேநமக்
கிட்டபடி
யென்றென் றிருமன மேயுனக் கேயுப
தேசமிதே”

எனப் பகர்வாராயினர்?
எவ்வருணத்தாராலும் ஒழுக்கம் என்பது ஒன்றே. அவ்வொழுக்கத்தைச் சிதற விடுவோர், மனம் வாக்கு காயங்கள் கெட்டு, தத்துவச் சேஷ்டைகளால் தூண்டப்பட்டு, இழிவான செய்கைகளுக் கிலக்காகி, என்றாளும் உலகத்தில் மாரு வசை மொழிக்காளாவர் என்பதுண்மை. ஆகையாலன்றோ அறிவிற் சிறந்த



பெரியோர்கள், எக்காரணம்பற்றியும் இயல்பலாத சொற்களை யியம் புவதில்லை? இதனைக் குறித்தே முதற்பாவலரும்,

“ ஒழுக்க முலடயவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல் ”

என முறையிடுவாராயினர். ஆகவே, எவரும் ஒழுக்கத்தைக் கடைப் பிடித் தொழுகுவதே அருமையுடைத்து. ஒழுக்கமுடையார்க்கு நான்குவித புருஷார்த்தங்களுந் தாமே கைகூடும். ஆகவே, நாமும் அவ்வொழுக்கத்தையே அணிகலனாகக் கொண்டு இருமைப் பயனை யும் எளிதிலடையவும், எல்லாம்வல்ல ஈசனடி சேரவும் என்றும் பிரார்த்திப்போமாக.

---

## 15 - ஆம் அதிகாரம்
## பி ற னி ல் வி ழை யா மை

---

பிறனுடைய மனைவியை விரும்பாமையே 'பிறனில் விழை யாமை' யெனப்படும்.

ஆத்த மனையா ளகத்தி லிருக்கவே
காத்த மனையாளைக் காமுறுங்

காளையர்

காய்ச்ச பலாவின் கனியுண்ண மாட்டாம

லீச்சம் பழத்துக் கிடருற்ற வாறே.

என்றார் திருமூலர்.

மக்கட் பிறப்பினரே காமமயக்கத்தைக் கடிந்தொழுகவல்லவர். இவ்வாறிருந்தும் சிலர், அன்னியனுக்குச் சொந்தமான மனைவியைத் தாமடைய அபேக்ஷித்து அலைகின்றனர். அந்தோ! அஃது எத்தகைய அறிவீனம்? ஆகையாலன்றோ,

"பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்

தறம்பொருள் கண்டார்க ணில்"

என்றான்றோரும் அறிவுறுத்திக் கூறியுள்ளார்?

பிறனில் விழைதலால் பெரும்பயன் யாதாம்? ஆஹா! அரிதாகிய மானத்தையும் விட்டு, அறம், பொருள்

முதலிய புருஷார்த்தங்களையும் அவமே யிழந்து, அவர்கள் விரும்பிச் செல்



கூங- லும் இன்ப நுகர்ச்சியும்
எய்தப்பெருமல், எக்காலத்தும் குடிப்பழி யைப் பெறுவதன்றி, அனுபவிக்கும் சுகம் ஒன்றுமின்றே. இது கருதியே,

" அறன்கடை நின்ருரு ளெல்லாம் பிறன்கடை
நின்ருரிற் பேதையா ரில்"

என்றது உத்தரவேதம்.

முன்னே, பாண்டவர்கள் விராடநகரத்தில் அஞ்ஞாத வாசங் காரணமாக அமர்ந்திருக்குங்கால், அவர்கள் மனைவியாகிய ' சைரந்திரி ' என்னும் நாமதேயத்துடனிருந்த துரௌபதியை இச்சித்த கீசகன் அடைந்த கதியை

யாவரும் அறிவரே. இவையாவு முணர்ந்தே,

" விளிந்தாரின் வேறல்லார் மன்ற
தெளிந்தாரிற்
தீமை புரிந்தொழுகு வார்"

என்றார் நாயனாரும். ஆகவே, எவ்வகையானும் துன்பத்தை யீயவல்ல இவ்வின்பத்தினும், உண்டவுடனே உயிரைப்போக்கும் விஷமே மேன்மையுடைத் தென்னலாம். இவைகளையெல்லாம் ஆழ்ந்து யோசிக்கும் தன்மையில்லாதவர்கள், அவ்வின்பத்தையே பெரிதெனக்கொண்டு, தம்மாயுள் காலத்தையும் அவமே கழித்து, அறிவு செல்வம் அழகு முதலியவைகளையும் அவலமாக்கி, அழியா நரகத் தையே பிறவிப் பயனாகப் பெறுகிறார்கள்.

ஆதிகாலத்தில், எல்லாம் வல்லவரான சிவபெருமானை நோக்கி அரிய தவமிருந்து,

அடைதற்கரிய பலத்தையும், யாவரும் வியக் கத்தக்க செல்வத்தையும், ஒப்பற்ற குமாரர் பலரையும் பெற்றுத் திக் கெட்டும் வணங்கும்படியான சிறப்புடன் விளங்கிய இலங்கேஸ்வரன் அடியோடழிந்ததும் இவ்வின்பத்தை விரும்பிய காரணத்தாலன்றோ? அன்றியும் தேவலோகத்தில், முப்பத்துமுக்கோடி தேவர்களும் வணங்கப்பெற்ற இந்திரன், பூலோகத்தில் மானமிழந்து உடல் வேறு பட்டு வேண்டி நின்றதும் பிறன் மனையாளை விரும்பியதன் பயனல் லவா ?

இஃதுணர்த்தவே நம் தெய்வப் புலவரும்,

" எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையும்

தோரான் பிறனில் புகல்"

"பகைபாவ மச்சம் பழியென நான்கு
மிகவாவா மில்லிறப்பான் கண்"

எனப் பலவாறு பகர்வாராயினர்.

இன்னும் கேவலமான இச்சரீர இச்சைக் குட்படுவோர் புண்ணியம், கீர்த்தி, மேன்மை முதலிய யாவையு மிழப்பதோடு அன்னியர் மனைக்கேகும்போதே அச்சத்தைப் பெறுகிறார்; பிறகும் அவர்தம் புலன்கள் சிதறுண்டு, நுகர்ச்சியும் பிறழ்ச்சியாய் அச்சத்தோடுதான் திரும்புகிறார். ஆகலின், ஒரு பயனும் அடையப்பெறாத அத்தீய வழியில் செல்லும் பேதையர் அறிவு என்னே! இதனைக்குறித் தன்றோ நாலடியாரும்,

"புக்க விடத்தச்சம் போதரும் போதச்சந்

திய்க்கு மிடத்தச்சந் தோன்றாமற் -
காப்பச்ச
மெக்காலு மச்சந் தருமா
லெவன்கொலோ
வுட்கான் புறனில் புகல்"
என நவின்றது? பிறன்மனையாளை விரும்புவதால் நீங்காப் பகை, பழி, பயம், பாவம் முதலியவைகட்குட்படுவதோடு இம்மையில் இராசதண்டனைக்கும், மறுமையில் தேவதண்டனைக்கும் ஆளாகவிருக்கும் என்பது யாவரும் அறியத்தக்க விஷயமே.

அறிவிற் சிறந்த பெரியோர் இவ்வற்ப சுகத்தை விரும்பார். அவர் இதனால் உண்டாகும் பெருந்துன்பங்களை யெண்ணி மனம் நடுங்குகின்றனர். இதனை,

"அச்சம் பெரிதா லதற்கின்பஞ்
சிற்றளவா
னிச்ச நினையுங்காற் கோக்கொலையா -
னிச்சலுங்

கையுறிற் கால்குறையு
மாணின்மை செய் யுங்கா
லச்சமா—நீணிரயத்
துன்பம் பயக்குமாற் றுச்சாரி நீகண்ட
வின்ப மெனக்கெனைத்தாற் கூறு"

என்றார்.

கடவுள் பிரபஞ்சவிருத்திக்காகத் தாவரம் நீங்கலாக உள்ள மற்ற உயிர்கட்குக் காமநுகர்ச்சியைக் கொடுத்தே யுள்ளார்; எவ் வகைப் பிறவியினும் மேலாகிய இம்மக்கட் பிறவிக்கோ இது பாவம், இது புண்ணியம், இக்காரியம் செய்தால் இவ்வாறு முடியும், பின் இன்னபலன் அடைவோம் என்று ஆழ்ந்து யோசித்தறியும்படியான மேலான அறிவையும் கொடுத்துள்ளார். ஆகவே, பிறன்மனையாளைக் கனவிலுங் கருதலாகாது. அவ்வாறொழுகுவோரே இல்லறத்தா

ராவார். இதனை,

“ அறனியலா னில்வாழ்வா னென்பான்
பிறனியலாள்

பெண்மை நயவா தவன்”

என்ற மாதானுபங்கியார் வாக்கானுமறிக.

சிலர், பிறவிப் பயனை அடைய எண்ணாது சிற்றின்பத்தில் மனதைச் செலுத்தி, அது காரணமாகப் பிறர் மனைவியரை விரும்புகிறார்; தம்மை அவர்கள், அன்புடையவர், பெருந்தன்மையுடையவர், பிரதாபமுடையவர், அழகுடையவர், சம்பத்துடையவர், சாமர்த்தியமுடையவர், கலாசாஸ்திர நிபுணர் என்று எண்ணும்படியாக வீண் ஆடம்பரங்களைச் செய்துகொள்ளுகிறார்கள்; பின்னும் உடல், பொருள், ஆவி மூன்றும் அவர்கட்கே என்றும், தங்கட்கு ‘ உலகமே

அவர்களிடந்தான்' என்றும் பொய்யான வார்த்தைகளை அவர்களிடம் பேசுகிறார்கள். அவர்கள் புண்ணியம், கீர்த்தி, சிநேகம், மேன்மை முதலியவைகளை யிழந்து, என்றும் மாறாத வசைமொழியைத் தங் குடிக்குத் தேடுவதும் தவிர, பகை, பழி, பாவம், பயம் முதலிய வைகளால் பிடிக்கப்பட்டு நரகமடைவார்களென்பது திண்ணம். இதனை,

கஉ திருக்குறள்
தீபாலங்காரம் [அறத்துப்பால்

"அறம்புகழ் கேண்மை பெருமையிந்
நான்கும்
பிறன்றா ரக்சுவார்ச் சேரா—பிறன்றா
ரச்சுவார்ச் சேரும் பகைபழி பாவமென்
றச்சத்தோ டிந்நாற் பொருள்"

என்ற நாலடியாரால் நன்கு தெளிக.

சாதாரணமாக, உலகில்

பேரின்பத்தை விரும்புவாரைவிடச் சிற்றின்பத்தை விரும்புவாரே மிகுதியாயுள்ளார். அது, விரும்பு வார்க்குக் கணப்பொழுது இன்பமாகத் தோன்றினும், அவர்கள் பிறன் மனையாளோடு இன்பநுகருங்கால், பயமும் உடல் நடுக்கமும் ஏற்படுவதால், அவ்வின்பம் இன்பமாமா? இவை கருதியே, குமர குருபர சுவாமிகளும்,

> "பிறன்வரை நின்றாள் கடைத்தலை சேறல்
> அறனன்றே யாயினு மாக—சிறுவரையும்
> நன்னலத்த தாயினுங் கொள்க
> நலமன்றே
> மெய்ந்நடுங்க வுண்ணடுங்கு நோய்"

எனக் கூறினர்.

பெண்மக்களிற் சிலர், கற்பெனும் பொருளைக் கொண்டு மோட்ச மடைவதை மறுத்துத் தங்கட்குரிய நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்ற நற்குணங்களையு மிழந்து, தங்களைப் பரபுருஷர் அவாவுறும்

படி செய்துகொண்டு, தாங்கள் பிறந்த குடிக்கும் குலத்திற்கும், பழி பாவம் பகை முதலியவைகளைத் தேடி, தங்கள் தலைவர்க்குந் துரோகஞ் செய்கிறார். அவர்களைக் குறித்தே பட்டினத்தடிகளும்,

“கைப்பிடி நாயகன் றூங்கையி லேயவன்
கையையெடுத்
தப்புறந் தன்னி லசையாமன் முன்வைத்
தயல்வளவி
லொப்புடன் சென்று துயினீத்துப் பின்வந்
துறங்குபவளை
யெப்படிநா னம்புவே னிறைவா கச்சியே
கம்பனே”

எனப் பகர்ந்தார்.

ஆகவே, அறநூலையும் பொருள் நூலையும் ஆராய்ந்துணர்ந்த அறிவாளிகள் அங்ஙனம் பிறன் மனைவியை விரும்பார். அங்ஙனம் விரும்பாதாரே உலகில் எல்லா நலன்களையும் ஒருங்கு பெற்றவ ராவார். இதை யறிவுறுத்தவே,

" பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்
கறனொன்றோ வான்ற வொழுக்கு "

அதிகாரம் - கூ.] இல்லற இயல்

சீர்

" நலக்குரியார் யாரெனி னாமநீர் வைப்பிற்
பிறற்குரியா டோடோயா தார் "

எனப் பலவாறு தேவரும் பணித்துள்ளார். அரிய மானிடப் பிறவியால் அடையவிருக்கும் பயன்களை அங்கீகரியாது, பெண்ணிற்கென்றமைந்த நற்குணங்களை யெல்லா மிழந்து, ஆடவரை மயக்கித் திரியும் பேதையர்பால் வைத்த அன்பால் அடைவது என் என்று உன்னி, அதை வெறுத்துத் தள்ளிவாழு மியல்பினின்றும் நாம் வழுவா திருக்கவேண்டும். அவ்வாறொழுகலே பெருமையுமுடைத்து. ஆதலால், நாம் பிறன் மனைவியைப் பெற்ற

தாயெனவும் உற்ற தங்கை யெனவும் எண்ணி ஒழுகுவதுடன், அவ்வாறொழுகும் பெரியோர்களைத் துணைக் கொண்டு செய்யத்தக்க காரியங்களைச் செய்து, அடையவேண்டிய புருஷார்த்தங்களையும் அடைந்து, ஜனனமரண துன்பங்களினின்றும் நீங்கி, எப்பொழுதும் ஆனந்த சாகரத்தில் மூழ்கி, என்றும் அழியாத பேரின்பத்தை அடைய எங்கும் நிறைந்த சச்சிதானந்தக் கடவுளைப் பிரார்த்திப்போமாக.

---

## 16 - ஆம் அதிகாரம்
## பொறை யுடைமை

---

நமக்குப் பிறர் செய்யுந் தீமைகளை, நாம் பொறுத்துக் கொள்வதே ' பொறையுடைமை' யெனப்படும்.

" தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப

தன் றிமற்

றெம்மை யிகழ்ந்த

வினைப்பயத்தா—லும்மை

யெரிவாய் நிரயத்து வீழ்வர்கொ லென்று

பரிவதூஉஞ் சான்றோர் கடன்"

என்பது நாலடியார்.

பிறவிகளில் மிக்க சிரேஷ்டமானது மானிடப்பிறவியே. ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் இறுதியாயுள்ள ஜீவராசிகளுள், இது நன்மை இது தீமை எனப் பகுத்துணரும் ஆறும் அறிவு மக்கட் பிறப்பினருக்கே உளது. ஆகவே, இம்மக்கட்பிறவியைப் பெற்றோர்,

தமக்கு ஒருவர் தெரிந்தோ அல்லது

தெரியாமலோ ஒரு தீமை





யைச் செய்துவிட்டால், அதைப்

பொறுத்துக்கொள்ளுதலையே
பூஷணமாகக் கொள்ளவேண்டும்.
இஃதுணர்த்தவே,

"அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத்
தம்மை
இகழ்வார்ப் பொறுத்த றலை"

என்றார் தேவரும்.

நாம் அங்ஙனம் பொறுத்துக்
கொள்வதனால் மட்டும்
பொறுமை யென்னும் குணத்தைப்
பூரணமாகப் பெற்றவர்களா
கோம். மற்றின்னும் வேண்டியது
யாதெனின்,

"பொறுத்த லிறப்பினை யென்று மதனை
மறத்த லதனினு நன்று"

என்ற பெரியார் வாக்கின்படி, பிறரால்
விளைந்த தீமையை நாம் அப்பொழுதே

மறந்துவிட வேண்டும். இன்றேல், வாயுவின் அம்சமான நம் மனமானது தூய்மை யிழந்து சஞ்சல மடைந்து பலவித மான கொடிய எண்ணங்களுக்கும் உட்படநேரும். இவைகளையெல்லா முணர்ந்தே நம் தெய்வத் தமிழரசியும், ' ஆறுவது சினம்' என்று கூறியுள்ளார்.

" உள்ளங் கவர்ந்தெழுந் தோங்கு சினங்காத்துக்
கொள்ளுங் குணமே குணமெ மன்க—வெள்ளந்
தடுத்த லரிதோ தடங்கரைதான் பேர்த்து
விடுத்த லரிதோ விளம்பு"

என்று சிவப்பிரகாசருந் திருவாய்மலர்ந்தார்.

நம்மிடத்து ஒருவர் வஞ்சகம், பொறாமை, இகழ்தல், தூற்றுதல் முதலிய கோபமூட்டுங் காரியங்களைச் செய்தபோதும், நாம் அக்குற்றங்களை மனத்துட்கொள்ளாது அவர்கட்கு நம்மாலான நன்மைகளையே

நாளும் தேடவேண்டும்.

அவ்வாறொழுகலாலுண்டாம் பெருமைக்கு அளவின்று. ஆகையாலன்றோ,

> "இன்மையு ளின்மை விருந்தொரால்
> வன்மையுள்
> வன்மை மடவார்ப் பொறை"

என ஆன்றோரும் அறிவித்தனர்?

பூர்வம், பஞ்சவர்களை வனத்திற்கு அனுப்பிய வஞ்ச நெஞ்சோனாகிய துரியோதனன், அவர்களை அவ்விடத்தும் துன்பஞ்செய்ய வெண்ணி, "நாம் அவர்கள் வாழும் காட்டிற்குச் சென்று, நமது



பரிஜனங்களுடன் அவ்விடத்திற் றங்கி, அவர்கள் கண்ணெதிரில் இன்புற்றுத் திரிவோமாயின் நம் சுகானுபவத்தைக் கண்ட அப் பாண்டவர்கள் மனம் வருந்தி, உயிர்

துறக்கவும் துணிவார்கள் ' ' என்று ஆலோசித்துத் தம்மனைவி முதலான சேனைகளுடன் உல்லாசமாய்ச் சென்றான். அப்போது, ஆங்குள்ள ஒரு தடாகத்தில் நீராடிக் கொண்டிருந்த கந்தர்வராஜனை சித்திரசேனன் துரியோதனனுடைய சேனையைச் சிதைத்து அவனையுந் தேர்க்காலிற் பிணித்தான். அது கேட்ட பாண்டவர் தலைவரான தருமபுத்திரர், தமது தம்பியை அனுப்பித் தமக்கு நாளும் துன்பத்தையே செய்யும் குணமுடையோனாகிய அத்துரியோதனனை விடுவிக்கச் செய்தது பொறுமையின் பெருமையன்றோ ? அவற்றையெல்லாம் அறி விக்கவே,

" நிறையுடைமை நீங்காமை வேண்டிற்
பொறையுடைமை
போற்றி யொழுகப் படும் "

என்றார் பொய்யில் புலவரும்.

இவைகளையெல்லாம் அறியவல்ல நாமெவரும், பொறுமை யையே பூஷணமாகக் கொள்ளவேண்டியிருத்தலால் முதலில் கோபத்தை அறவொழிக்க வேண்டும். அப்போதே நாம் மனத் தூய்மையடைந்து இரக்கம், பொறுமை, ஜீவகாருண்யம் முதலிய நற்குணங்கள் அமையப் பெற்று, நம்மிலும் தாழ்ந்தார் தாழ்வான வார்த்தைகளைச் சொன்னாலும், தீய காரியங்களைச் செய்தாலும் அவைகளையெல்லாம் பொருட்படுத்தாத அரிய குணத்தைப் பெறு வோம். அப்போது நாம் உலகத்தாராலும் புகழப்பட்டு, அறிவாலும் மேம்பட்டு விளங்குவோம். பின்னர், அறக்கடவுளாகிய நம் இறை வனும் எக்காலங்களிலும் முன்னின்று நம் வாழ்நாளைச் சுகப்படுத்தி, இறுதியில் மோட்சத்தையும்

அளிப்பானென்பது திண்ணம். இதனை,

"கண்டதே செய்பவாங் கம்மிய
ருண்டெனக்
கேட்டதே செய்ப
புலனுள்வார்—வேட்ட
இனியவே செய்ப வமைந்தார்
முனியாதார்
முனியவே செய்யுந் திரு"

என்ற நான்மணிக்கடிகையாலும் நன்குணர்க.



ஸ்ரீமத் ராமாயணத்திலும் பலவிடங்களில் பொறுமையின் தன்மைகளைப் பூரணமாகக் காணலாம்; அஃதாவது, பட்டாபிஷேகத்திற்குச் சித்தமாயிருந்த ஸ்ரீராமர் பதினான்கு வருஷம் வனவாசம் செய்ய இசைந்ததும், பரதன் தன் தாயாரே ஸ்ரீராம ரைக்

காட்டிற் கனுப்பியதற்குக் காரணர் என்றறிந்து அவளைத் திட்டுகையில் அவ்விராமர் பாதனைத் தடுத்து அநேக நீதிகளைப் புகன்றதும், இன்னும் அவர் தமக்குத் துன்பஞ் செய்தவர்களிடத் தும் எப்படிப் பொறுமையோடு காரியங்களை யியற்றியுள்ளார் யென்பதுமேயாம். அவ்வாறொழுகினலன்றி, இவ்வவனியில் எவர்க் கும் புகழில்லை என்ப துறுதி. இஃதுணர்த்தவே,

“ ஒறுத்தாரை யொன்ருக வையாரே வைப்பர்

பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து ”

எனத் திருவள்ளுவரும் தெரிவிக்கின்ருர்.

நாம் பொறுமை யென்னும் சிறந்த குணத்தை முற்றிலும் கைப்பற்ற வேண்டுவ தவசியம். அங்ஙனம் கைப்பற்றுவோ மாயின் அஃது என்றும்

அழியாத புகழைக் கொடுக்கும். அதை மறுத்து, நமக்கொருவர் தீங்கு செய்தவிடத்து நாமும் அகங்காரம் கொண்டு அவர்கட்குத் துன்பம் இயற்றுவது, அன்று இன்பமாகத் தோன்றினாலும், அஃது இம்மைக்கும் மறுமைக்கும் நலன் தருவதாகாது. இதனையே,

" ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்"

என்றார் மாதானுபங்கியாரும். நாம் எவ்வளவு தீமைகளை யடைந்து உயிரிழக்கவரினும், பிறர்க்குத் தீமை செய்ய நினையாத குணமே சாலச் சிறந்தது. அதுவே புகழையும் புண்ணியத்தையும் கொடுத்து இம்மையிலும் பயனளிப்பது.

பூர்வம், சேதிநாட்டைச் சேர்ந்த திருக்கோவலூர் என்னும் பதியில் மெய்ப்பொருளுடையனார் என்பவர்

சிவாகமங்களையுணர்ந்து அடியார்களே மெய்ப்பொருளென்று சிந்தித்து அரசியற்றுங்கால், முத்தநாதன் என்ற ஓர் அரசன் அவருடன் எதிர்த்து வெல்ல முடியாமல் அடியார் வேடங்கொண்டு, புத்தகக் கவளியெனத் தோன்றும் அதிகாரம் - கூ]



படி ஆயுதத்தை மறைத்துக்கொண்டு, சாஸ்திர உபதேசம் செய்ய வன்போல வந்து நாயனாரை நோக்கி, “ ஐயா ! பெருமை பொருந் திய இச்சாஸ்திரத்தைத் தனித்திருந்து கேட்கவேண்டும்’ ’ என்றான். அதற்கு நாயனார் இசைந்து, வணங்கினார். அப்போது , முத்தநாதன் வஞ்சகக் கவளியில் மறைத்து வைத்திருந்த வாளால் அவரைக் குத்துங்கால், அவர் பொறுமையுடன் ‘சிவன் செயல்’ என்றே

வணங்கி நின்றூர். இதைத் தத்தன் என்ற காவற் சேவகன் முன்னமே கவனித்துக் கொண்டிருந்ததனால், உடனே சென்று அம்முத்த நாதனை உடைவாளால் சேதிக்கப்போனன். ஆனல், உயிரிழக்கும் தறுவாயிலிருந்த மெய்ப்பொருளுயனார் சேவகனைத் தடுத்து, 'முத்த நாதனுக்கு ஒரு தீங்கும் அணுகாமல் அவன் பதியையடையும்படி வழிவிட்டு வருவாயாக' என்று ஆஞ்ஞாபித்தார். பிறகு முத்தநாதன் செம்மையாகச் சென்ருனென்பதைக் கேட்க வேண்டுமென்ற அவா வால் நாயனர் தம் உயிரையும் தாங்கி இருந்தார். அவர் இவ்வாறு செய்தது பொறுமையின் அருமையன்ரே? நம் மூதாட்டியாரும்,

"சாந்தனையுந் தீயனவே செய்திடினுந் தாமவரை
ஆந்தனையுங் காப்பர் அறிவுடையோர்—மாந்தர்

குறைக்குந் தனையுங் குளிர்நிழலைத் தந்து
மறைக்குமாங் கண்டீர் மரம் "

என மொழிந்தனர்.

தவிரவும், சத்தியந் தவறுதவனாகிய அரிச்சந்திரன் விஸ்வா மித்ரரால் பதி நிதி பாலன் போகம் முதலியவைகளை யிழந்தது மன்றி, தோட்டிக்கடிமையாகிச் சுடலைகாக்கும் காலத்தும், விஸ்வா மித்ரரால் கொல்லப்பட்ட காசிராஜன் பிள்ளையைத் தன்காதலியே கொன்றுளென்று கொலைக்குற்றஞ்சாற்றப்பெற்று, அவ்வம்மையை வெட்டுமாறு கட்டளை பெற்றபோதும் எள்ளளவுங் கவலாது வெட்ட வெழுந்தது எத்தகைய இயல்பைக்கொண்டு?

" திறனல்ல தற்பிறர் செய்யினு நோநொந்து
அறனல்ல செய்யாமை நன்று "

என்ற ஆன்றோர் வாக்கியத்தின்படி பொறுத்தலென்னும் பூஷணத்தைப் பூண்டிருந்ததனாலன்றோ ?



இவைகளை யெல்லா முணரவல்ல நமக்கு ஒருவர் பகைபற்றி யாவது அல்லது பொறாமை அகங்காரம் முதலிய குணங்களால் ஏவப்பட்டாவது தீங்கு செய்த காலத்து, அதைப் பொறுத்துக் கொண்டால், அப்பொறுமையே பகைவரை வெல்லும் கருவி யாகும். துரியோதனாதியர் பாண்டவர்கட்கு ஒவ்வொரு காரியங்களி லும் எவ்வளவு தீங்கியற்றினார்கள் ? அவர்கள் அவைகளை யெல் லாம்

பொறுத்துக் கொண்டிருந்ததனால் அவர்களுக்குப் பொறுமையையே வடிவெடுத்தாற்போல சாக்ஷாத் நம்பெருமான் வந்து அருள் புரிந்தார். ஆதலால், அத்தகைய அரும்பெரும் பயன்களை அளிக்க வல்ல அருமைக்குணத்தை அடையவேண்டியது அவசியத்திலும் அவசியம். இஃதுணர்த்தவே,

" மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தக்

தகுதியான் வென்று விடல்"

என்றார் புலவர்.

பொறுமை என்ற ஆபரணத்தை அணிந்தோர் இல்லறத்தாரே யாயினும், அவர்கள் தொண்ணூற்றாறு தத்துவங்களின் பாகுபாடுகளை யுணர்ந்து, அவற்றை ஒருங்கடக்கி, நான்கு பக்கங்களிலும் அக்கினி

வளர்த்தி, மேலும் சூரியாக்கினி என்ற அக்கினியைக் கொண்டு பஞ்சாக்கினி என்று சொல்லப்பட்ட அவ்வக்கினியின் மத்தியில் நின்று தவம் செய்வாரை விடச் சிறந்தவராவார். இதனை,

"உண்ணாது நோற்பார் பெரியார் பிறர்சொல்லு

மின்னாச்சொ னோற்பாரிற் பின்"

என்ற உத்தரவேதமே நன்குணர்த்துகின்றது.

ஆதலால், இந்த அருமையான குணத்தைக் கொண்டு, அரிதாகிய புருஷார்த்தங்களை அடைவது எளிது. நாம் திடீரென்று அடைய முடியாத இக்குணத்தைத் தினந்தோறும் பழகிக்கொண்டு, அரிதாகப் பெற்ற நம்பிறவியை வீணாக்காமல், அடையவேண்டிய புருஷார்த்தங்களை

அடைய அல்லும் பகலும் ஆண்டவன் திருவடிகளைத் தியானிப்போமாக.

---

## 17 - ஆம் அதிகாரம்
## அழுக்காறுமை

நாம் பிறருடைய செல்வ முதலியவைகளைக் கண்டவிடத்துப் பொறுமைப்படாம லிருத்தலே ' அழுக்காறுமை ' எனப்படும்.

" அழுக்காற்று னெஞ்ச மழுங்கிய புன்மாக்க
விழுக்காற்று லின்பநல மெய்தார் பராபரமே." என் றருளினர் தாயுமானவர்.

மக்கட் பிறப்பினராகிய அனைவரையும் நல்லொழுக்கத்தி னின்றும் இழுத்து, ஆறுத்துயருக்கு ஆளாக்கி,

இறுதியில் நரகமடையச் செய்வது பொறாமை என்னும் குணமேயாம். நாம் பகைவரைப் பார்த்தும் பொறாமைப்படா திருக்குங் குணத்தைப் பெற்றால், இவ்வுலகில் எல்லாவற்றையும் பெற்றவர்களாவோம். ஆதலால், யாவரும் அழுக்காறாமையை முதற்றருமமாகக் கொள்ளவேண்டும். இதுகருதியே,

“விழுப்பேற்றி னஃதொப்ப
தில்லையார் மாட்டு
மழுக்காற்றி னன்மை பெறின்”

என்றது வாயுறைவாழ்த்து.

எவரும் பொறாமையென்னுங் குணத்தை அறவே யொழியா விடின், அஃது எத்தகைய வலியுடையாரையும், எவ்வகையாலும் பயனடையச் செய்யாது பாழாக்குவதுமன்றி, அவர்கள் மனத்தையும் கவலைக் குட்படுத்தும்; அவர்களைப் பல தீயகாரியங்களிலும் புகுத்தும். இதனை,

" அறனாக்கம் வேண்டாதா
னென்பான் பிறனாக்கம்
பேணா தழுக்கறுப் பான்"
என்ற பெரியார் கூற்றே பெரிது
முணர்த்துகிறது.

இவ்வுலகில் வறுமையும் பகைமையும்
பெற்று, தன் சுகத்தையும் மக்கட்
பிறப்பாலடையும் மற்றெல்லாப் பயனையும்
இழப்போரே பொறுமையைக் கைக்கொள்ள
வேண்டும். இதனை யுணர்ந்தே அறி
வுடையோர், அழுக்காற்றினால்
பிறருக்குத் தீங்கு நினைத்தலும்
சொல்லலும் செய்யலும் செய்யார்.
ஆதலால், இதைப்போல ஒரு





இம்மையிலும், மறுமையிலும்

துன்பமளிக்கும் கொடிய குணம் வேறின்று. இஃதுணர்த்தவே,

"அழுக்காற்றி னல்லவை செய்யா ரிழுக்காற்றி

னேதம் படுபாக் கறிந்து"

என்றது உத்தரவேதம். அறிவீனத்தால் மயங்கிப் பொறாமைக் குட்படுவோருக்கு வேறு பகைவர் யாரும் இல்லாவிடி னும், அப் பொறாமையே அவரைக் கெடுக்கும் பெரும் பகையாகும்.

பொறாமையால் நாம் ஒருவர்க்குக் கேடு நினைத்தால், அஃது அறக்கடவுளுக்கு அடுக்காது. ஆலவாய்ப்பதி யென்னும் திவ்ய க்ஷேத்திரமாகிய மதுரையின்கண் இராஜ பாண்டியன் அரசியற்றுங் கால், அவ்வரசனுடைய காமக்கிழத்தியர் களுள் ஒருத்தி பாணபத் திரருடைய மனைவியின் கீதத்தில் பொறாமை யடைந்தாள். அவள் இராஜனையுந் தன் பொறாமைக் குட்படுத்திக்

கொண்டு, பாணபத்திரன் மனைவியை வெல்லக்கருதி, ஈழநாட்டிலிருந்து பாடகப்பெண் ஒருத்தியை வரவழைத்தாள். இராஜனும் அவள் சார்பாக இருந்து ஈழ நாட்டுப் பெண்ணைப் பாடுவிக்குங்கால், பாணபத்திரர் மனைவி பொறுமையைப் பூஷணமாகக்கொண்டு உலக நாயகனாகிய சோமசுந்தரப் பெருமானை வழிபட்டுப் பாடினாள். அப்போது கூடற்கடவுளே வித்வானாக வந்து ஈழநாட்டுப் பெண்ணைத் தோல்வி யடையச் செய்தா ரல்லவா? அரசனும் அவன் காதலியும் பொறுமைகொண்டதனால், கடவுளே நேரில் தோன்றினார். இதற்கே,

> "அழுக்கா றுடையார்க் கதுசாலு மொன்னார்
> வழுக்கியுங் கேடீன் பது"

என்றார் மாதானுபங்கியாரும்.

பொறுமையுடையோர் நல்லொழுக்க முடையவராதல் அரிது.

பொறுமை என்னும் கொடிய விஷம் ஒருவருள்ளத்தே ஒரு துளி தோன்றினும், அது உள்ள முழுவதும் பரவி, பொய் கொலை களவு வஞ்சம் முதலிய பாதங்கங்களுக்கு அவரை ஆளாக்கி, அவர் தம் உடலையும் உயிரையும் புண்ணாக்கி, இருமைத் துன்பங்களுக்கு மூலகாரணமாகவும் நிற்குமாதலால், அதைப்போற் கொடியது வேறியாதாம் ? விஷமோ அருந்தினோரை மாத்திரமே கொல்லும் ;

அதிகாரம் - கஎ.]



இப்பொறுமை என்ற கொடியவிஷமோ உட்கொண்டவர்களையன்றி அவர்களைச் சார்ந்தோர்களனைவரையும்கொல்லும். ஆதலால், பகுத்தறிவுடைய மக்கட்பிறப்பினராகிய நாம் பொறுமையை முற்றும் ஒழிக்கவேண்டும்.

இஃதுணர்த்தவே,

" கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற முடுப்பதூஉ
முண்பதூஉ மின்றிக் கெடும் "

என்றது முதுமொழி.

இத்தகைய பொறாமை யென்ற பேயை ஓட்டினோரே இவ்வுல கிலும் அவ்வுலகிலும் எல்லாப்பயனையும் ஒருங்கு பெற்றவராவார். பொறாமையென்ற ஒரு தீயகுணம் இல்லாதவரே கடவுள் அருளைப் பெற்றவர் என்னலாம். அவர்கள் இம்மையில், செல்வம் கீர்த்தி மேன்மை ஆயுள் முதலியவைகள் வளரப்பெற்று, மறுமையிலும் மோட்சத்தை அடைவார்கள். ஔவைப் பிராட்டியாரும்,

" நீரு நிழலு கிலம்பொதியு நெற்கட்டும்
பேரும் புகழும் பெருவாழ்வும்—ஊரும்
வருந்திருவும் வாழ்நாளும் வஞ்சமிலார்க்

கென்றும்

தருஞ்சிவந்த தாமரையா டான்"

என்றருளிச் செய்தார். ஆதலால், நாம் இவைகளையெல்லா மறிந் தொழுகுவோமாயின், மனவமைதி சந்தோஷம் நல்லொழுக்கம் சுகம் நீண்ட ஆயுள் முதலியவற்றை அடைவதோடு, தெய்வீகமான சூக்குமசக்தியையு மறிந்து கைப்பற்றி, அதனால் என்றும் அழியாத கலப்பில்லாத பூரணசுகத்தையும் அடையலாம். ஆனால், அவ்வாறு ஒழுகுவதுதான் அரிதினும் அரிதாக வுளது.

உலகில் நாம் செய்யும் பாவச்செய்கைகள் யாவும் பொறாமை யால் விளைவனவே. பலர் இதையே தங்களுடைய முதற்குணமாகக் கொண்ட தென்னே ? அவர்கள் செல்வம் கீர்த்தி மேன்மை ஆயுள் முதலிய வெல்லாம் அழியப் பெறுவர் ; வறுமை, பாவம், பழி, கொலை, களவு,

பொய் முதலியவெல்லாம் வளரப்பெறுவர். இஃ துணர்ந்தே,

“ அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவ
டவ்வையைக் காட்டி விடும்”

என்றனர் செந்நாப்போதார்.



அழுக்காறென்ற பாவியை அடைந்தோர் ஒருநாளும் சுக மடையார். கௌரவர்கள் இக்கொடிய பாவியை நட்பாகக்கொண் டதாலன்றோ பெருமை, புகழ், செல்வம் முதலியவைகளை இழந்து, தன்னைச் சேர்ந்தவர்களையும் பதினெட்டக்ரோணி சேனைகளையும் பாழாக்கிவிட்டு நரக மடைந்தார்கள் ?

உலகத்திலுள்ள ஆறுகள் நம் பாவங்களைப் போக்கி, இறுதிப் பயனையும் அளிக்கக் கூடியனவாக இருக்கின்றன. அழுக்காறோ தம்மை யடைந்தவரையன்றி, அவர் சுற்றத்தார், நட்பாளர், சார்ந்தோர் முதலிய அனைவரையுங் கெடுத்து, பின்னும் அழியா நரகத்தில் அழுத்தி விடுகின்றது. ஆகையா லன்றோ,

" அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும் "

என்றார் நாயனாரும் ? பொறாமை என்ற பாவியை நட்பாகக் கொண் டாருட் சிலர், செல்வம், மேன்மை, ஆயுள் முதலியவைகள் வளரப் பெற்று ஒப்பற்று வாழ்வதையும், அணுவளவும் பொறாமை என்ற எண்ணங்களைக் கொள்ளாதார் தரித்திரராக வாழ்வதையுங் காண லாம். அது முற் பிறப்பிற் செய்த தீவினையின்

பயனே. பொறாமை யுடையவர்கள் மேன்மையடைவது எக்காலத்துங் கிடையாது. இதனை,

“ அழுக்கற் றகன்றாரு மில்லைய ஃ
தில்லார்

பெருக்கத்திற் றீர்ந்தாரு மில் ”

என்ற மெய்வேதத்தாலு மறிக.

இவைகளையெல்லா முணரவல்ல நாம் கல்வி, கீர்த்தி முதலிய வைகளைப் பிறரிடத்துக் கண்டபோது, நாமும் அவர்களைப்போ லாதல் வேண்டுமென்ற ஊக்கங்கொண்டு முயன்று பெறவேண் டியதே ஒழுங்கு. அவ்வாறின்றிப் பிறருடைய கல்வி, கீர்த்தி முதலிய வைகளைக் கண்டவிடத்துப் பொறாமைகொண்டு அவர்களைப்பற்றிப் புறங்கூறல் முதலிய செய்தல் அறிவுடைமைக் கழகாகாது. ஆதலால் பொறாமை என்னுங் கொடிய தீயினின்றும் விலகி, பொறுமை என்னும்

பூஷணத்தைப் பூண்டு, புகழுக்குரிய காரியங்களிற் புகுந்து, பூரண ஊக்கத்துடன் உழைத்து, அகண்ட சச்சிதாநந்தக் கடலை அடைய அல்லும்பகலும் பிரார்த்திப்போமாக.

---

# 18-ஆம் அதிகாரம்
# வெஃகாமை

---

பிறர்க்குரிய பொருளைக் கவர விரும்பாமையே 'வெஃகாமை' எனப்படும்.

ஒருவன் உலகில் தன் வாழ்க்கைக்கு இன்றியமையாதனவான பொருள்களை விரும்புவது இயல்பு. ஒன்றும் வேண்டாதவர் யாரெனின், வேண்டுவதும் வேண்டாமையும் இல்லாதவராய் எங்கும் விளங்கும் இறைவனும், மக்களிற்

சிறந்தோராகிய ஞானிகளுமேயாம். இவர்கள் தவிர ஏனையோர் அனைவருக்கும் இந்நாட்டமின்றேல், இல்வாழ்க்கை நடைபெறுது. ஆனால், தீய வழிகளில் பிறருடைய பொருளைப் பெற்று வாழ விரும்பின், மண்குதிரையை நம்பி ஆற்றிலிரங்கிய தன்மைபோல , அப்பொருளும் அழியப்பெற்று, பல துன்பங்கட்கு முட்பட்டு வருந்தி, இருமைப் பயனையும் இழக்க நேரு மென்பதை எவரு முணரல் வேண்டும்.

" நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்

குற்றமு மாங்கே தரும்"

என்றது பொய்யாமொழி.

நம்முடைய பொருளைப் பிறனொருவன் கவருவானாயின் நாம் மன வருத்த மடைவோமன்றோ ? அதுபோலவே, பிறரும் தம்பொருளை யிழந்த காலத்து

வருந்துவாரல்லரோ ? நாம் பழிபாவங்களுக்கு அஞ்சிச் சேர்த்த பொருளும் நல்வழியில் செல்லாவிடின் அதன் பயன் என்னும் ? நீதியில்லாத வழியில் வருவனவாகிய பிறர் பொரு ளால், நமக்குப் பழியும் பாவமும் வருமேயன்றி யாதும் பயனில்லை யென்பது திண்ணம். இவைகளையெல்லா முணர்ந்தே அறிவுடையோர் அப்பொருளுக்கு அஞ்சுகின்றார். இஃதுணர்த்தவே,

" படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்

நடுவன்மை நாணு பவர் "

என்றனர் செந்நாப்போதார்.

மேலாகிய இன்பத்தை அடைய வேண்டுமென்ற எண்ண முடைய மக்கள் பிறர் பொருளால் உண்டாகும் சிற்றின்பத்தை

விரும்புதல் இழிவன்றோ ? யாக்கை நிலையாமையினையும் அதன் அற்ப குணங்களையும் நன்கு விசாரித்து அறிந்துகொண்ட பெரி யோர்கள், அவ்வாக்கையால் எவ்வளவு துன்ப முற்றபோதிலும் அதற்குடன்பட்டு, அநித்தியமான உலக போகங்களில் அவர்கள் மனத்தைச் செல்லவிடாது எவ்வாறு அடக்குகின்றார்களோ அது போலவே , ஐம்புலன்களையும் வென்ற இல்லற வாசிகள் தமக்கு வறுமையால் எவ்வளவு துன்பங்கள் ஏற்பட்டாலும் பிறர் பொரு ளால் தம் வறுமையை நீக்கிக்கொள்ள எண்ணமாட்டார்கள் . இதனை,

" இலமென்று வெஃகுதல் செய்யார்

புலம்வென்ற

புன்மையில் காட்சி யவர்"

என்ற உத்தர வேதத்தாலும் நன்குணர்க.

அரிதாகிய மக்கட் பிறவியையும் மேலான அறிவையும் அடையப்பெற்ற நாம், அநித்தியமான வாழ்க்கைக்காக அநீதியான வழிகளில் பொருளைப் பெற விரும்புவோமானால், இப்பிறவியின் பயன் என்னும்? இஃதறிவுறுத்தவே நான்முகரும்,

" அஃகி யகன்ற வறிவென்னும் யார்மாட்டும்

வெஃகி வெறிய செயின்"

எனக் கூறிப்போந்தனர். பழி பாவங்களுக் கஞ்சி யீட்டிய பொருளின்கண் பற்றற்று, அதனை அறத்தின்வழிச் செலவிட்டு, அருளை விரும்பி இல்லறத்தை நடத்தவேண்டிய நாம், அநீதியான வழிகளில் பிறர் பொருளைக் கவர நினைத்தால், அந்நினைப்பே பழி பாவங்களை யுண்டாக்கி

இறுதியில் நரகமடைவிக்கு மென்பதற்கோர் ஐயமில்லை. இதனைக் குறித்தே,

" அருள்வெஃகி யாற்றின்க ணின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும் "

என்றது முப்பால்.

பிறர் பொருளை விரும்புவோர் பழிபாவங்களுக்காளாகி, மறு மைப் பயனுங்கெட்டு, இம்மையில் அவமானத்தையும் இராசதண் டனையயு மடைவார்கள். பூலோக சிவலோகமென விளங்கா நின்ற திவ்விய க்ஷேத்திரமாகிய மதுரையின்கண் தனபதி, சுசீலை

அதிகாரம் கஅ.] இல்லற

இயல் எகூ

என்ற சதிபதிகள் மக்கட்பேறின்றி வருந்தினார்கள். தனபதி, தன் தங்கையின்

புதல்வனைப் புத்திரனாகக்கொண்டு வாழ்ந்தான். ஒருகால், தனபதி தன் மனைவியின் வார்த்தையை ஏற்றுத் தன் தங்கையைத் துன்புறுத்தினான். அவள் அதற்கு ஆற்றாது 'பிள்ளைப்பேறில்லாப் பாவி' என்று அண்ணனை வைதாள். அப்போது, தனபதி அவ்வசை மொழிக்காற்றாது, மறு பிறவியிலாவது பிள்ளைப் பேற்றை அடைய விரும்பித் தன் செல்வமெல்லாம் மருமகனுக்கே உரிமை யாக்கி, மனையாளுடன் தவத்திற்குச் சென்றான். பின், தனபதியின் தாயத்தார்கள் அப்பொருள் மேல் அவாவுற்று அப்புதல்வனையும் அவன் மாதாவையுந் துன்புறுத்தி எல்லாப் பொருள்களையுங் கைக்கொண்டார்கள்.

பொருளிழந்தோராகிய தனபதியின் தங்கையும் மருமகனும் எங்கும் விளங்கா நின்ற லோகரக்ஷகராகிய நம் சோமசுந் தரப்

பெருமானிடஞ்சென்று முறையிட்டு வணங்கி நிலத்தில் வீழ்ந் தார்கள். அப்போது, நம் இறைவன் தமது திருவிளையாடலால் அவர்கட்கு நித்திரைவரச்செய்து கனவின்கண் இராச சபைக்கு வருமாறு அருளிச்செய்தார். இருவரும் அவ்வாறே இராச சபைக்குச் சென்று தங்கள் குறையை அரசனுக் கறிவித்து, அதனை நீக்க வேண்டினார்கள். அரசன் தனபதியின் தாயத்தாரை வரவழைத்து விசாரிக்கும்போது, லோகநாயகரான அக்கூடற் கடவுளே தனபதி யாகத் தோன்றினர். அப்போது அத்தாயத்தார்கள், மானமிழந்து இராச தண்டனைக்கு ஆளானார்கள். ஆதலால், நாம் பிறர் பொருளால் உண்டாகும் பெருக்கத்தை விரும்பக்கூடாது. இஃதுணர்த்தவே,

" வேண்டற்க வெஃகியா மாக்கம் விளைவயின்

மாண்டற் கரிதாம் பயன் "

என்றார் பெரியார்.

ஐம்புலன்களையும் வென்று தத்துவங்களை யடக்கி அதற்குரிய வழியின்கண் நின்றார் பெருமை மாதர் போகம் வெறுத்தலின் மேல் நின்றதுபோல, பழிபாவங்களுக்கு அஞ்சிப் பகுத்துண்டு வாழ் வார் பெருமை பிறர் பொருள் விரும்பாமை மேல் நிற்கின்றது. இவை கருதியே வள்ளுவரும்,

" அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை

வேண்டும் பிறன்கைப் பொருள் "

என்றனர். இவற்றை உணர்ந்தொழுகும் பெரியோர்களே உலகில்

யாவும் பெற்றவர்களாகப் பிரகாசிக்கின்றனர். நாமும் பிறர் பொருளை விரும்பாது வாழ்வோமாயின் நமக்கு மேன்மேலும் புகழும் செல்வ மும் பொங்கி வளருமென்பது திண்ணம். திருவள்ளுவப் பயனும்,

" அறனறிந்து வெஃகா வறிவுடையார்ச் சேரும்

திறனறிந் தாங்கே திரு"

எனத் தெரிவிக்கின்றது. ஆகவே இத்தகைய அருமை பெருமை யெல்லாம் அடையவேண்டுமாயின் பிறருடைய பொருளை விரும்பாத பெருந்தன்மையையே பூஷணமாகக் கொள்ளவேண்டும். இன்றேல், அதனால் விளையுங்கேட்டிற் கெல்லையில்லையாகும். இதனை,

" இறலீனு மெண்ணாது வெ ஃகின் விறலீனும்

வேண்டாமை யென்னுஞ் செருக்கு"

என்ற ஆன்றோர் வாக்கே வலியுறுத்தும்.

நாம் அநித்தியப் பொருள் களால் நித்தியப் பொருளையிழந்து வாணுளை வீணுளாக்காமல், என்றும் மாருத நித்தியானந்த பதவியை அடைய எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திப்போமாக.

---

## 19 - ஆம் அதிகாரம்
## புறங் கூருமை

---

பிறரை, அவர் காணுதவிடத்து இகழ்ந்து பேசாமையே ' புறங் கூருமை ' எனப்படும்.

மக்கள் 'புறங்கூருமை' என்ற குணத்தை முக்கியமாய்க்கொள்ள வேண்டும். புறங் கூறுதலால் நாம் உலகத்தாரால் இகழப்பட்டும், பெருமையை இழந்தும் தாழ்ந்த நிலையை அடைவோமென்பது நிச்சயம். இஃதுணர்த்தவே,

" அறங்கூரு னல்ல செயினு

மொருவன்

புறங்கூறு னென்ற லினிது"

என்றார் மாதானுபங்கியாரும்.

சிலர் உணர்ந்தோ, உணராமலோ புறங்கூறுதலென்னும் குற்றத்தினைத் தேடிக்கொள்கின்றனர். ஆனால், அவர்கட்கு அதனால் விளையுந்துன்பத்திற் கெல்லையில்லை; அவர்கள் அதனைச் சற்றேனுஞ்





சிந்திக்கின்றார்களா? இல்லையே! 'தனக்கு இரண்டு கண்களும் போனாலுஞ் சரி, அண்டை வீட்டுக்காரனுக்கு ஒரு கண்ணேனுங் கெடட்டும்' என்ற கதைபோல், தாம் இருமைப் பயன்களையும் இழந்தேனும் பிறரை இழிவு படுத்தவேண்டுமென்ற பேதைமையன்றோ அங்ஙனம் அவர்களைப் புறங்கூறச் செய்கின்றது? அறிவுடையோரே

புறங்கூறுதல் என்னும் பேய் வாயில் அகப்படாதவர். ஆகையா லன்றோ,

> “அறனழீஇ யல்லவை செய்தலிற் றீதே
> புறனழீஇப் பொய்த்து நகை”

என்றார் பிறரும்?

இவைகளை யெல்லாம் உணரவல்ல நாம் ஒருவரைக் கண்ட விடத்து அவர்களைப் புகழ்ந்து பேசுவதும், அவரைக் காணாதவிடத்து அவர் மேல் கோட் சொல்லித் திரிவதும், ஒருவரைத் திருப்திப் படுத்துவதற்காக மற்றொருவரைப்பற்றிப் புறங்கூறுதல் முதலிய செய்தலும், பழி பாவங்களைச் செய்தற்கு ஒப்பாகுமென்பதை மறத்த லாகாது. இம்மட்டோ! கடைசியில் நாமும் பாம்புவாயிற் பட்ட தவளைபோல் வருந்துவோம் என்பது நிச்சயம். “அரசன் அன்று கேட்பான் தெய்வம் நின்று கேட்கும்’

' என்ற ஆன்றோர் வாக்கியப் படி, இம்மையில் மாத்திரமன்றி, மறுமையிலும் நம் இறைவனுடைய நீதிக்குட்பட்டுத் தண்டிக்கப்படுவோம். ஆகவே, புறங்கூறி வாழ்வதைவிட இறப்பதே நலம். இதனை,

“ புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாத

லறங்கூறு மாக்கந் தரும்”

என்ற முதுமொழியா லுணர்க.

ஒருவரைப்பற்றி ஏதாவது கூறுங்கால் அவருடைய நற்குணங் களைமட்டும் எடுத்துக் கூறவேண்டுமேயன்றி , அவர்களிடத்துள்ள தீயகுணங்களைப் பலரறியும்படி தூற்றுவது அறிவுடையோர்க்கு அழகாகாது. புறங்கூறு மியல்புடையாரோ பிறரிடத்துப் புகழ்ச் சிக்குரிய குணங்களும் நடக்கைகளு மிருக்கக்கண்டும், அவைகளை யெடுத்துக் கூறாது, அவர்களிடத்து ஏதாவது சிறு குற்றங்கள்

இருப்பினும் அவைகளேயே அதிகமாகக் கூறித் திரிவார்கள். இதனை யுணர்த்தவே சிவப்பிரகாச சுவாமிகளும்,





“உண்டு குணமிக் கொளுவர்க்
கெனினுங்கீழ்க்
கொண்டு புகல்வ
தவர்குற்றமே—வண்டுமலர்ச்
சேக்கை விரும்புஞ் செழும்பொழில்வாய்
வேம்பன்றே
காக்கை விரும்புங் கனி”

எனத் திருவாய் மலர்ந்தருளினர்.

புறங்கூறல் கொடிதினும் கொடிதாகும். ஆதலால் எவரும் தான தருமங்களை யியற்றுவிடினும் புறங்கூறுனென்ற

புகழையேனும் பூஷணமாகக் கொள்ளவேண்டும். அதுவே சிறந்த தருமமாகும். முப்பாலும்,

"கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க

முன்னின்று பின்னோக்காச் சொல்"

என்றது.

பிறருடைய குற்றங் குறைகளை நாம் கூறுவது மிகவும் இழிவே. ஒருவர் முன் செய்த தீவினைப் பயனாலோ, அல்லது அகங்காரம் மமகாரம் என்ற பேய்களால் ஆட்டப்பட்டோ தீவினைகளைச் செய்த போதிலும், நாம் அவைகளை எடுத்துக் கூறுவதால் நம்முடைய மானமும் கெட்டு, புறங்கூறுவார் என்ற மறுபெயரும் பெற்று, பெருமை கீர்த்தி முதலிய புருஷார்த்தங்களையும் இழந்து, எல்லோ

ருக்கும் பகைவராகிறோம். அன்றியும், புறங்கூறுவோர் நீதிநூல்களையும் அவைகளின் பயன்களையும் எடுத்துப் பேசுவதால் என்ன பயன்? இஃதுணர்ந்தே,

“அறஞ்சொல்லு நெஞ்சத்தா னன்மை
புறஞ்சொல்லும்
புன்மையாற் காணப் படும்”

என்றார் புலவர்.

நன்மை தீமைகளை அறிந்தோ அல்லது அறியாமலோ, நாம் பிறருடைய பழிபாவங்களைக் கூறித் திரிவோமானால், இறுதியில் நம் சுகமுங்கெட்டு நம்மாலிகழப்பட்டாரால் நாமும் இகழப்பட்டு, இம்மை மறுமைப் பயன்களையு மிழந்து, ஆறாத்துயரடைவோம் என்பதற்கோர் ஐயமில்லை. இதனை அறிவிக்கவே,

“பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளும்
திறன்றெரிந்து கூறப் படும்”

என்றார் பெரியார்.



ஆகவே, இவைகளை யெல்லா முணரவல்ல எவரும் புறங்கூறல் என்னும் கொடிய சண்டாளனை நட்பாகக் கொள்ளாதொழிக்க வேண்டும். இன்றேல், அக்கொடியோன் இருமைப் பயனையும் கெடுப் பதன்றி இனிய சுற்றத்தாரையும் பிரியச் செய்வானென்பது திண்ணம். இன்னும், புறங்கூறுதலால் அன்பு இரக்கம் தயை ஜீவகாருண்யம் நடுவுநிலைமை பொறுமை முதலிய நற்குணங்களும் நம்மைவிட் டகலும். இக்குணங்கள் யாவும் ஒழிந்தபின், நாம் இவ்வுலகத்தில் அடையும் பயன் யாதாம் ? இதைக்கருதியே வேதமும்,

" அறனோக்கி யாற்றுங்கொல் வையம்

புறனேக்கிப்

புன்சொ லுரைப்பான் பொறை"

என வுரைக்கின்றது.

மக்கள் புறங்கூறுத லென்னும் குற்றத்தை ஒழித்தாலன்றி, ஏனைய நற்குணங்களால் நன்மை யடையாரென்பது நன்கு விளங்குகின்றது. பிறனொருவன் வினை வசத்தாலோ அல்லது வேறு காரணங்களாலோ உலகம் வெறுக்கத்தக்க காரியங்களைச் செய்தாலும், நாம் அவற்றை வெளிப்படக் கூறுதிருப்பதே மேன்மையுடைத்து. அரும் பெரும் நூல்களின் துணிபு மஃதே. ஆகையாலன்றோ மேலையோரும்,

"ஏதிலார் குற்றம்போற் றங்குற்றங் காண்கிற்பிற்

றீதுண்டோ மன்னு முயிர்க்கு"

என மொழிவாராயினர்?

இவைகளையெல்லா

முணர்ந்தபின்னுவது நாம் புறங்கூறுமை

யைக் கைக்கொண்டால் இகபர சுகங்களை

எளிதிலடையலாம். தற் போது

புறங்கூறுவார் சிலர் உலகசுகத்தை

அனுபவிப்பதாகத் தோன்றினும்,

அவர்கள் சுகம், அணையப்போகும்

விளக்குப் பிரகாசமாக எரிந்து அணைவதை

யொக்கும். ஆதலால், நாம் பெற்ற

அற்பாயுளை அவலமாக்காமல் இம்மை

மறுமைக்கான தருமங்களை யியற்றி என்றும்

அழியாத பேரின்ப வெள்ளத்தில் மூழ்க

முயல்வோர்

மாக.

# 20 - ஆம் அதிகாரம்
# பயனில சொல்லாமை

---

அறம் பொருள் இன்பம் என்ற மூன்றனுள் ஒரு பயனும் பயவாத வார்த்தைகளைக் கூறுமையே ‘ பயனில சொல்லாமை ’ எனப்படும்.

மக்கட் பிறப்பினராகிய நாம் , இவ்வுலகின்கண் மேன்மை கீர்த்தி முதலியவற்றைப்பெற்று வாழ்வதே நம் பிறவியின் பயனும்; ஆனால், அவற்றை அடைய நாம் குறளை கடுஞ்சொல் அற்பவார்த்தை முதலியவைகளை முற்றும் ஒழிக்கவேண்டும். இன்றேல், நம்பெருமை புகழ் கீர்த்தி மேன்மை குடிச்சிறப்பு முதலிய யாவற்றையும் இழந்து, நம்மிலும் தாழ்ந்தவராலும் இகழப்படுவோம்.

இஃதுணர்த்தவே,

"பல்லார் முனியப் பயனில சொல்லுவா
னெல்லாரு மெள்ளப் படும்"

என்று பெரியாரும் பணித்தனர்.

உலகத்தில், உற்றூர் பெற்றூர் அயலார் என்ற யாவருள்ளும் சிறந்தவரான நம் நண்பரிடத்து நாம் விருப்பமில்லாத காரியங் களைச் செய்தலால் உண்டாகுங் குற்றத்தைப் பார்க்கினும், அறிவுடையோர் பலர்முன் நாம் பயனில்லாத வார்த்தைகளைப் பேசு வது இருமைக்கும் தீமை பயக்கத்தக்க பெருங்குற்றமாக முடியும். இதனை,

"பயனில பல்லார்முற் சொல்ல னயனில
நட்டார்கட் செய்தலிற் றீது"

என்ற ஆன்றோர் வாக்கானுமறிக. ஆதலால், பயனில்லாத வார்த்தை களை எவரிடத்தும் பகராதிருப்பதே நன்மையாம். பகர்வோர்

எத் தகைய சிறப்புடையரேனும் அறிவினரென்று அனைவராலும் இகழப்படுவர். பூர்வம், தேவேந்திரன் தேவ கருட கந்தர்வ சித்த வித்தியாதரர் முனிவர் முதலானோர் புடைசூழக் கொலுவிருந்தபோது தமது சபையோரை நோக்கி, " சத்தியம் தவறாத ஒருவன் எந்த உலகத்தேனும் இருக்கின்றானா ?" என்று வினவ , அப்போது வசிஷ்ட முனிவர், "அயோத்தியை யாளுகின்ற அரிச்சந்திரனே சத்தியந் தவறாதவன்" என்றறைந்தார்; அனைவரும் அதனை ஆமோதித்து



அவ்வரிச்சந்திரனைப் புகழுங்கால், விஸ்வாமித்திர முனிவரென்பவர் எழுந்து; " வசிஷ்டர் கூறியது நம்பத்தக்க தன்று ;

எவனும் சத்தியம் தவறியே நடப்பான்" என்று பயனில்லாத வார்த்தைகளைப் பகர்ந்து, அங்ஙனம் தாம் உரைத்ததை உறுதிப்படுத்துவதினிமித்தம் தம்மாலான தகாதசெய்கைகளை யெல்லாம் சலியா தியற்றினர். ஆயினும், அவர் தஞ் செய்கைக ளனைத்தும் பயன்படாது மானபங்க மடைந்ததன்றி தாமரிதிற் பெற்ற தவப்பயனையும் அவமே அவ்வரிச் சந்திர னுக்கு அளிக்க விருந்தமை இங்கு அறியத்தக்க தன்றோ? இவற்றையெல்லாம் அறிவிக்கவே முதற்பாவலரும்,

> "நயனில னென்பது சொல்லும் பயனில
> பாரித் துரைக்கு முரை"

என மொழிந்துள்ளார்.

மக்கள், இது நன்மை, இது தீமை என்று உணரும் இயல்புடை யாராயிருந்தும், தமக்கும் பிறருக்கும் பயன்படாத அற்ப வார்த்தைகளைச் சொல்வதால்,

"நயன்சாரா நன்மையி னீக்கும்
பயன்சாராப்
பண்பில்சொற் பல்லா ரகத்து"

என்ற மாதானுபங்கியார் வாக்கின்படி, மக்கட் பிறவிக்குரிய தன்மையை நீக்கிக்கொள்கின்றனர். இதுகருதியன்றோ நம் ஆன்றோரும்,

"சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
நீர்மை யுடையார் சொலின்"

என வலியுறுத்திக் கூறியுள்ளார்.

பயனில்லாத வார்த்தைகளைச் சொல்லுவதால், நாம் நம்பெருமையை இழந்து உயிர்வாழ நேர்வதோடு, நம்பிறவியும் வீணாகுமென்பது எளிதில் விளங்குகின்றது. ஆதலால், பயனில்லாத சொற்களைச் சொல்வோர், நெல்லுடன் பிறந்த பதர் நெல்லைப்போலக் காணப் பட்டாலும், அதனுள் அரிசியில்லாமையால் பதரென்று தள்ளப் படுவதுபோல்,

மக்கட்குள்ளே பதரென்று தள்ளப்படுவார்கள். இதனை,

" பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல் "

என்ற பொய்யா மொழியே புகலுகின்றது.



இவைகளையெல்லாம் எளிதிலுணரவல்ல நாம், " இளமையிற் கல் " என்று நம் தெய்வத் தமிழாசியார் செப்பிய வண்ணம், பய னில சொல்லாமை என்னும் பண்பை இளமையிலேயே கைக்கொள்ள வேண்டும். இங்ஙனம், இளமையிலேயே பயனில்லாத வார்த்தைகளை விட்டுவிட்டால் பின்னர்ச் சுகமுறலாம். புலவரும்,

" நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்

பயனில சொல்லாமை நன்று"

"அரும்பய னாயு மறிவினர் சொல்லார்

பெரும்பய னில்லாத சொல்"

எனப் பலவாறு வலியுறுத்திக் கூறியுள்ளார். உலக இயல்பினையும், தத்துவ இலக்ஷணங்களையும், மாயையின் குணங்களையும் அறிந் துணர்ந்த ஆத்மஞானிகள், மறந்தும் அநித்தியமான உலக ஆசையை விரும்புவது உண்டா? அவ்வாறே பயனில்லாத சொற்களின் பாகு பாடுகளையுணர்ந்த அறிவுடையோர் மறந்தும் பயனற்ற வார்த்தை களைப் பேசார். இதுகுறித்தே,

"பொருடீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருடீர்ந்த

மாசறு காட்சி யவர்"

எனச் செந்நாப்போதாரும் கூறியுள்ளார். இன்னும், கீர்த்தி மேன்மை புகழ் பெருமை

குடிச்சிறப்பு முதலிய புருஷார்த்தங்களை அடையக் கருதும் மக்கள் பயனுடைய வார்த்தைகளையே பேசவேண்டும்.

பயனுள்ள சொற்களைச் சொல்வோர் பிறரால் போற்றப்படுவதன்றிப் புண்ணியமென்னும் பூஷணத்தையும் பூண்டு, அதன் விசேடத்தால் சுவர்க்க முதலிய மறுமை நலன்களையும், பின் மோக்ஷத்தையும் பெறுவர். இவ்விஷயங்களையெல்லாம் நன்குணர்ந்தவே,

"சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்"

என்றது வாயுறைவாழ்த்தும்.

ஆகவே, அரிதாகிய இப்பிறவியைப் பெற்ற நாம் மனம் வாக்கு காயங்களைச் சுத்தப்படுத்தி, எல்லாரும் செய்யக்கூடிய எளிதான காரியமாகவும், அறம் பொருள் இன்பம் என்ற புருஷார்த்தங்களை அடைவிக்கக் கூடியதாகவுமுள்ள பயனிறைந்த சொற்களையுடைய

வர்களாய்ச் சிறப்புற்று, எல்லாம் வல்ல நம் றும் எண்ணுவோமாக.

இறைவனடி சேர என்

## 21 - ஆம் அதிகாரம்
## தீவினை யச்சம்

இருமைப் பயனையுங் கெடுக்கக்கூடிய காரியங்களுக்கு அஞ்சு வதே 'தீவினை யச்சம்' எனப்படும்.

" தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர்
தீவினை யென்னுஞ் செருக்கு "

என்றார் நாயனார்.

பொதுவகையாகத் தீவினைகளென்பன, பொய்யுரைத்தல் புறங் கூறுதல் கொலைபுரிதல் செய்ந்நன்றிகோறல் தீயாரோடிணங்கல் பிறர்மனைநயத்தல் கள்ளுண்ணல் கவருடல் களவுசெய்தல்

புலா லுண்ணல் முதலியனவாம். இவைகளுள் ஒன்ருகிய பொய்யைச் சொன்னதால் உதிஷ்டிரருக்கு நரகம் காண்பிக்கப்பட்டதாகப் பாரதம் கூறுகின்றது. ஆகவே, நாம் நாடோறும் நல்வினையையே செய்ய வேண்டும்.

எவ்வகைப் பிறவியினும், மக்கட் பிறவியைச் சிரேஷ்டமாகச் சொல்வது பகுத்தறி வுண்மையால் அன்ருே ? நாம் ஒரு தீமையைச் செய்ய எண்ணுங்கால் அதனைப் பாவமென்று நமக்கு அறிவுறுத்துவது நம்முடைய மனச்சாட்சியேயாம். இது யாவர்க்கும் உளதேனும், பலர் இதனை இருப்பதாகவே உணராது கண்டதே காட்சி கொண்டதே கோலம் எனத் திரிந்து அநேக தீயகாரியங் களுக் குட்படுகிருர். ஒரு ஜன்மத்தில் பாவம் புரிந்தவர் நரகம்

புகுந்து அதன் பலனை அனுபவித்துத் திரும்பவும் பூமியில் பிறந்த போது தீய எண்ணங்கள் தோன்றினால், அவை முன் செய்த வினையால் தோற்றியதாக உணரவொட்டாது இன்பமாகத் தோற்று வித்துப் பின்னும் நம்மைப் பிறவிகளில் அழுத்துந் தீயசெய்கைகளைச் செய்யுமாறு தூண்டுவது மாயையின் வேலை. ஆகலின், தீய செய்கைகளை நாம் தீயினுங் கொடியனவாக எண்ணவேண்டும். இவ்வுணர்த்தவே,

> " தீயவை தீய பயத்தலாற் றீயவை
> தீயினு மஞ்சப் படும் "

என்றார் ஆசிரியர்.



நாம் தீவினைக்கஞ்சி யொழுகாவிடின்

அதனை ஒழித்துக்கொள்ள முடியாது. மாண்டவியர் கழுவேற்றப்பட்டுக் கடுந்துன்பமடைந்து ஆணிமாண்டவியர் எனப் பெயர்பெற்றதும் தீவினைப் பயனுலன்றோ? 'முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்' என்ற முதியோர் வாக்கே அதனை நன்குணர்த்துகிறது. ஆதலால், பிறர் நம்மிடத்துக் காரணம்பற்றியோ அல்லது காரணமில்லாமலோ துன்பம் செய்த போது, நாம் அதனைப் பொறுத்துக்கொண்டு அவர்களுக்குத் துன்பஞ் செய்ய நினையாமையே சிறந்த தருமமெனக் கொள்ளவேண்டும்; அவ்வாறொழுகுதலே அறிவின் விசேடமுமாகும். இதனை,

" அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்யா விடல் "

என்ற உத்தரவேதத்தாலு முணரக்கிடக்கின்றது. அறிந்தோ

அறியாமலோ உலகத்தில் தீயகாரியங்கள் இயற்றப்பட்டு வருகின்றன. அந்தோ பாவம்! இம்மையி லியற்றுவன யாவும் மறுமையின் மூட்டைகள் என்பதை மறந்தே அங்ஙன மியற்றப்படுகின்றன போலும்!

அறிஞர்கள் புண்ணிய பாவம் உண்டென்பதை யறிந்து, துன்பத்தைத் தரும் காரியங்களை விலக்கி, நன்மை பயக்கும் காரியங்களில் ஈடுபட்டு ஒழுக வேண்டும். அங்ஙனம் ஒழுகாதார் தம்மொழுக்கத்தினின்றும் தவறுத விலங்குகளினுந் தாழ்ந்தவராக உலகத்தாராலும் இகழப்பட்டு உலக ரக்ஷகராகிய இறைவனாலுந் தண்டிக்கப்படுவர். பூர்வம், வித்யுந்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன் என்ற

பெயருடைய மூன்று அசுரர்கள், அடியார்க்கெளியராகிய நம் சிவபெருமானை நோக்கி அரிய தவங்கிடந்து, அளவில்லாத வரங்களைப் பெற்றார்கள்; பின்னும், அப்பெருமான் கிருபையால், பொன், வெள்ளி, இரும்பு முதலியவை களினால் முறையே இயன்ற மதில்கள் சூழ்ந்த மூன்று நகரங் களையும் பெற்றார்கள். அந்நகரங்கள் தாங்கள் விரும்பிய இடங்களுக் குப் பறக்குஞ் சக்தியைப் பெற்றிருந்ததால், அவர்கள் அவற்றின் உதவியால் திரிலோகங்களிலுள்ளவர்களும் நடுங்க, எங்கும் பறந்து சென்று, எவருக்கும் துன்பமியற்றி, அகங்காரங்கொண்டு அலைந்தார் கள். அப்போது யாவும் வல்லவரான அச்சிவபெருமானே அவ்வசுர அதிகாரம் -

அசுரர்களையும், அவர்களுடைய பட்டணங்களையம் அடியோடு எரித் தழித்தனர். இஃதுணர்த்தவே ,

" மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழி

னறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு"

எனப் புலவரும் கூறியுள்ளார்.

வறுமையை அடைந்தோர், அதனை நீக்கிக் கொள்ள எத் தன்மையான தீய காரியங்களையும் அஞ்சாது செய்வார்கள். திருடர் கள் தம் வறுமையைப் பிறருடைய பொருள்களால் நீக்கிக் கொள்ளலாமென் றெண்ணி மானத்தை யிழந்து தீய காரியங் களை யியற்றுகிறார்களல்லவா ? அதுகாலை அவர்கள் அகப்பட்டுக் கொண்டால் அவர்கள் நிலைமை என்னவாகின்றது ? அவர்கள், முன்னிருந்த வறுமையோடு

அளவுகடந்த அவமானத்துக்கும் கஷ்டத்துக்கும் ஆளாகி அல்லற்படுகிறார்கள்? ஆகவே, ஒரு தீங்கு செய்தால், அத்தீங்கானது பதின்மடங் கதிகமாமெனப் பகர வேண் டுவதில்லை.

இஃதுணர்த்துவான்,

"இலனென்று தீயவை செய்யற்க செய்யி
னிலனாகு மற்றும் பெயர்த்து"

என்றார் தேவரும்.

முற் பிறவியில் மஹா பாதகங்களைச் செய்தவர்கள் தரித்திர முடையவர்களாயும், வஞ்ச நெஞ்சமுடையவர்களாயும், ஊமைகளா யும், செவிடர்களாயும், கண்முதலிய அவயவப் பழுதுடையவர்களாயும், கொடிய வியாதியால் பீடிக்கப்பட்டவர்களாயும் பிறப்பார்கள். அவர்கள் தீவினையின் காரணமாகக் கொலை, களவு முதலியவை களால் வறுமையை நீக்க முயன்று,

பின்னும் பழிபாவங்களுக்குட் பட்டு, இம்மையில் பலராலும் இகழப்பட்டு, மறுமையிலும் அதிக
துன்பத்திற்கு ஆளாவதை யுணர்ந்து, அக்காரியங்களுக்கு உடன் படாமலிருப்பதே அறிவுடையோர் கடனும்.

“ தீப்பால தான்பிறர்கட் செய்யற்க
நோய்ப்பால
தன்னை யடல்வேண்டா தான் ”

எனப் பெரியார் பணித்தது காண்க.

எவ்வகைப் பகையிலிருந்தும் மீண்டு இன்புறலாம். ஆனல்
தீவினை என்னும் பகையோ, நம்மை மீளவிடாது பிறவிதோறும்

கஉ

கூo திருக்குறள்
தீபாலங்காரம் [அறத்துப்பால்
தொடரும். பஞ்சபாண்டவர்கள்,

கௌரவர்கள் செய்த கொடிய பகையினின்றும் மீண்டும் இன்புறவில்லையா ? அக்கொடிய பகையைச் செய்த கௌரவர்கள் நரகமடைந்து துன்புறவில்லையா ? ஆகவே, பகையைவிடத் தீவினையே நம்மைக் கெடுக்கவல்லதென்பது எளிதில் விளங்குகிறது. இதனைக் குறித்தே பொய்யா மொழியாரும்,

"எனைப்பகை யுற்றாரு முய்வர் வினைப்பகை
வீயாது பின்சென் றடும்"

எனப் புகன்றுள்ளார். ஆதலால், எக்காரணம் பற்றியும் நாம் பாவச் செய்கைகளைச் செய்யக்கூடாது.

ஒருவர் செய்த பாவமானது நிழலைப்போல அவருடன் கூடவே தொடர்ந்து, அவரை ஆறுத்து

யருக்கும் கஷ்டத்திற்கும் ஆளாக்குமென்பது அறியத்தக்கது. சிவ நகரமென்னும் மறு பெயரையுடைய மதுரையிலே குலோத்துங்க பாண்டியன் அரசியற்றியபோது, அவந்தி நகரமென்னும் பதியில் ஒரு பிராமணன் ஒரு பிள்ளையைப் பெற்றான். அவன் வயது முதிர்ந்து, தீவினையால் தன் தாயைக் கலந்து வாழுநாளில், பிதாவையுங்கொன்று விட்டுத் தாயை அழைத்துக்கொண்டு வேறோர் ஊருக்குச் சென்றான். அப் போது, அவனைப் பிதிர் அத்தியானது பேயுருவெடுத்துத் தொடர்ந்து துன்புறுத்திப் புண்ணிய தீர்த்தத்தினும் புண்ணிய ஸ்தலத்தினும் பெரியோர் பக்கத்தினுஞ் செல்ல விடாது, நித்திரையுமின்றி 'என் செய்வேன் என்செய்வேன்' என்று அலறும்படி செய்தது. இந்நட்பங்களை யெளிதிலுணர்த்தவே திருவள்ளுவரும்,

" தீயவை செய்தார் கெடுத
னிழறன்னை
வீயா தடியுறைந் தற்று"
எனத் திருவாய் மலர்வாராயினர்.
சன்மார்க்கத்தி லொழுகி சகல ஐஸ்வரியங்களேயும் ஈஸ்வர னருளால் பெற்றுச் சிறப்புற்று வாழ்ந்து இன்புற எண்ணினோர்கள்,
பிறவிப் பயனைக் கெடுத்துத் துன்புறுத்திக் கஷ்டத்திற்குட்படுத்தும் இக்கொடிய செய்கைகளுக்கு அணுவளவும் இடங் கொடாமல் இருக்கவேண்டும். இதனை,
" தன்னைத்தான் காதல னாயி
னெனைத்தொன்றுந்
துன்னற்க தீவினைப் பால்"
என்ற சான்முகர் கூற்றே நன்கு விளக்குகிறது.

௩௮௩

நாம் தீய காரியங்களை எக்காரணத்தாலும் எப்போதும் எவரிடத்தும் செய்யாது வாழ்வதையே முதற்கடமையாகக் கொண்டொழுகவேண்டும். அங்ஙனம் ஒழுகுவதால் உண்டாகும் அருமை பெருமைகட்களவில்லை. மேலையோரும்,

" அருங்கேட னென்ப தறிக மருங்கோடித்
தீவினை செய்யா னெனின் "

என மொழிவாராயினர்.

ஆகலின், நாம் அனைவரும் நன்மை தீமைகளை அறிந்து, தீய குணங்களாகிய குரோதம் உலோபம் அகங்காரம் என்ற முக்குணங் களையும் அறவொழித்து, தத்துவங்களை அடக்கிப் பஞ்சேந்திரியங் களையும் அதற்குரி ய ஞான வழிகளிற்

செலுத்தி, இம்மையில் உலகத் தாருக்கு உபகாரியெனப் பலராலும் புகழப்பெற்று, மறுமையிலும் பெறுதற்குரிய புருஷார்த்தங்களைப் பெறுவதற்கு எல்லாம் வல்ல நம் இறைவனை என்றும் தியானிப்போமாக.

---

## 22 - ஆம் அதிகாரம்
## ஒப்புரவு அறிதல்

---

ஜனசமூக வாழ்க்கைக்கு வேண்டிய பொதுநன்மைக்கு 'ஒப் புரவு அறிதல்' எனப்படும்.

நாமெல்லோரும் உலக நடையினை அறிந்தொழுகிப் பொது வாக எல்லோருக்கும் உதவிசெய்து பெறுதற்கரிய புருஷார்த்தங் களைப்பெற இஃது அவசியமாகும். உபகாரம் பல வகைப்படும் ; எவ்வுபகாரம் செய்யினும் நாம்

கைம்மாறு கருதாது அதைச் செய்ய வேண்டும் ; அதனால் விளையும் நன்மைக்கோ அளவில்லை. நல்லி சைப்புலவராகிய ஔவையாரும் ‘ ஒப்புர வொழுகு ’ என்று சுருங் கச் சொல்லி விளங்கக் காட்டியுள்ளார். உலக நடைக்குரிய உதவி யைப் பொருளால் மட்டுமன்றி, மன மொழி மெய்களாலும் செய்ய வேண்டும்.

“ கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ வுலகு ”

என்ற தேவர் வாக்கியப்படி, நம்முடைய நன்மைக்காக வேண்டி ஒரு கூலி



காரியத்தையு மியற்றாமல், உலகத்தார் நன்மையைக் கோரியே எதையுஞ் செய்யவேண்டும். இதுவே ‘ ஒப்புரவு அறிதல் ’ என்ற

சொற்றொடருக்குப் பொருளாகும்.

ஒப்புரவறிந்து ஒழுகுவோர் தமக்கென ஒரு பயனையும் கருதார். தாம் முன்னேற்ற மடைவதற்காக ஒழிவின்றி உழைத்த பெரியோர்கள் நம்மிடத்தில் எவ்வுபகாரத்தைக் கருதி, இவ்வுலகத் தில் உலாவும் அரிய நூல்களை யியற்றியுள்ளார்கள் ? இன்னும் அவர் கள் தம் வாழ்நாட்களில் பயன் தருதற்குரியனவாகாத எண்ணிறந்த விருக்ஷங்களைப் பாடுபட்டுப் பயிர் செய்வதுங் கருதற்பாலது. இதனால், நாம் நம் பிறவியின் கடமையைத் தவறாது இயற்ற வேண்டு மென்பதறியக் கிடக்கிறதன்றோ ?

" மக்களா லாய பெரும்பயனு மாயுங்கா
லெத்துணையு மாற்றப்
பலவானற்—றொக்க
வுடம்பிற்கே யொப்புரவு செய்தொழுகா

தும்பர்க்

இடக்துண்ணப் பண்ணப் படும்"

என்ற நாலடியின் கருத்தின்படி, உடல் நன்மையையும் புகழையுங் கருதாது, இறுதியில் நற்கதி யடையத்தக்க காரியங்களைச் செய்ய வேண்டியது ஆன்றோர் கடமை.

வாழ்க்கையாவது, தோட்டி முதல் சக்கரவர்த்தி யீருகவும், துறவிமுதல் இல்லறத்தா னீருகவும், வீரன் முதல் பேடி யீருகவு முள்ள மக்கள் பரஸ்பர உதவியால் வாழும் நிலை.

" துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கு மிறந்தார்க்கு

மில்வாழ்வா னென்பான் றுணை"

என்ற வேதவாக்கியப்படி, இல்லறத்தார் தீவினைவிட்டு ஈட்டிய பொருளைப் பிரமசாரி, வானப்பிரத்தன், சந்நியாசி, துறந்தார், தரித் திரர், ஆதரவின்றி வந்து செத்தவர்,

தென்புலத்தார், தெய்வம், புதிதாய் வந்தவர், சுற்றத்தார் முதலிய பத்துப் பேருக்கும் செலவிட்டுத் தானும் அனுபவித்துப் பின்னும், குளம் வெட்டுவித்தல்; கல்லூரி யேற்படுத்தல், வைத்தியசாலை அமைத்தல், ஆலயங்கள் பிரதிஷ்டை செய்துவைத்தல் முதலிய நற்காரியங்களிலுஞ் செலவிட வேண்டும். ஆகையாலன்றோ,



௬௩௭.

" தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு "

என்றார் புலவரும்?

உபகாரம் மக்களுக்கே செய்யத்
தக்கதென்ப தன்று. யானை முத
லெறும்பீருயுள்ள எவ்வுயிர்க்கும் செய்யப்படு
முபகாரம், இவ் வுலகும் அவ்வுலகும்
ஒருங்கே போற்றத் தக்கதாகும்.
முன்னொரு கால், ஒரு வேடன்
புறுவொன்றைக் கொல்லக் கருதித் துரத்தி
வந்த போது, அப் புறு சிபிச்
சக்கிரவர்த்தியின்பால் அடைக்கலமென்று
வந்தது ; அவர் அப் புறுவுக்கு
மாத்திரமன்றி வேடனுக்கும் உப
காரத்தைச் செய்யத் தம் தசைமுத
லெலும்பீருகிய வெல்லாங் கொடுக்கக்
கருதினாரல்லவா ? அவ்வுதவி இன்றும்
போற்றப்படுகிறது.

"புத்தே ளுலகத்து மீண்டும்
பெறலரிதே
யொப்புரவி னல்ல பிற"

என்றார் நம் பெரியார். உபகாரம் என்ற
அரிய பொருளை அறிந்து செய்ய வல்லவர்

மக்களே. அவர்கள் இதையறிந்து இயற்றுவிடில்,

“ஒத்த தறிவா னுயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்”

என்ற முதுமொழிப்படி, எத்தகைய செல்வத்தையுடையவராக விருந்தாலும், செத்தவரே யாவர். வறியார்க்குமட்டும் ஈதல் ஈகை; உலகத்திற்கே பயன் தருவது ஒப்புரவு. அறிவாளர் செல்வம், வீணுகாது எல்லோருக்கும் நெடுங்காலம் பயன்படுதலால் நாயனுர்,

“ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் திரு”

“பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றுற் செல்வ
நயனுடை யான்கட் படின்”

எனப் பலவாறு கூறினுர்.

பின்னும் இவ்வருமைக் குணத்தைப் பூஷணமாக அணிந்தோர், மனமொழி மெய்கள் ஒன்றுபட்டுத் தங் குறை நோக்காது பிறர் குறை தீர்ப்பர். இதனுல் அவர்கள்,



" மருந்தாகித் தப்பா மரத்தற்றாற் செல்வம்
பெருந்தகை யான்கட் படின் "

எனவும் சிறப்பிக்கப்பட்டார்கள்.

இன்னும், உபகாரிகள் வறுமை வந்த காலத்தும் தாம்கொண்ட கொள்கையை விடார்கள். ஆகையாலன்றோ அவர்கள்,

" ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமக் நாளுமவ்வா
றூற்றுப் பெருக்கா லுலகூட்டும்—ஏற்றவர்க்கு

நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ராலும்

இல்லை யெனமாட்டா ரிசைந்து"

என்றபடி, தாம் வறுமையால் பீடிக்கப்பட்டாலும் மக்கட்கு வேண்டிய உபகாரத்தைக் கைவிடாத கண்ணியமுடையவர்க ளாகிறார்கள்?

இதற்கு, இளையான்குடிமாற நாயனாருடைய சரிதமே போதிய சான்றாம். அவர், தம் வறுமையை நினைத்துத் தாம்கொண்ட கொள்கையை நிறைவேற்றாது நின்றனரா? இதனை வலியுறுத்தவே,

" இடனில் பருவத்து மொப்புரவிற் கொல்கார்

கடனறி காட்சி யவர்"

என்றது முப்பாலும்.

ஆகவே, நற்குடிப்பிறந்தார்க்குப் பொருள் இல்லாமை வறுமை யாகாது. அவர்கள் பிறர்க்கு உபகரிக்க முடியாது வருந்துவாரானல் அதுவே அவர் தம்

வறுமையாம். மாறனாரும் அவர் மனைவியாரும் தங்கள் நிலைமையை நினையாது விருந்ினரை உபசரித்ததனல், உலக நாயகனாகிய நம் கைலாசபதி அவர்கட்குக் காட்சி கொடுத்துத் தந் திருவடித் தாமரை நிழலையுந் தந்தார் ; அவர்கள் தம் நிலைமையை நோக்கித் தளர்வுற்றிருந்தால், அதுவே வறுமையாக முடியுமன்றோ? இஃதுணர்த்தவே தெய்வப்புலவரும்,

“ நயனுடையா னல்கூர்ந்தா னாதல்
செயுநீர
செய்யா தமைகலா வாறு ”

எனக் கூறியுள்ளார்.

உபகாரத்தைத் தலைமையாகப் பெற்றுள்ள மக்கள், சோதனையின் பொருட்டுப் பல துன்பங்கள் வரினும், தவறாத ஊக்கத்தைக் அதிகாரம்-௨௯.]

கொண்டு, தங்களை விற்றாயினும் அதனால் வரும் புகழை அடைய வேண்டும். முன்னொரு காலத்தில், அரசர் பெருமானான அரிச்சந் திரன் அறமுறைப்படி அரசியற்றிப் பொய் சொல்லாப் புனித னென்று விளங்குங்கால் விஸ்வாமித்திரரால் சோதிக்கப்பட்டார். அவர் தளராத சித்தமுடையவராய்த் தம் மனைவியோடும் புதல்வ னோடும் இராச்சியத்தையும் கொடுத்துப் பின் தம்மையும் விற்றுப் புகழை நிலைநாட்ட வில்லையா ? ஆகவே நாம் எவ்வாறு துன்புற்ற காலத்தும், ' ஊக்கமது கைவிடேல் ' என்ற நம்மூதாட்டியின் வாக்கி யப்படி, உறுதியோடு கடனாற்ற வேண்டும். இது கருதியே,

" ஒப்புரவி னால்வருங் கேடெனி னஃதொருவன்
விற்றுக்கோட் டக்க துடைத்து "

என்றார் பெருநாவலரும்.

பிறர்க்கு உதவி செய்தலையே குறிக்கொண்டு உழைப்போர், இம்மையில் எல்லா நலன்களையும் பெற்று, மறுமையிலும் அகண்ட சச்சிதானந்த பரம்பொருளின் திருவருளைப் பெறுவர். ஆகலின், நாமும் மனம், வாக்கு, காயம் இவைகளுடன் ஒத்துழைத்து, எல் லாம் வல்ல இறைவனடி சேர என்றும் முயல்வோமாக.

## 23 - ஆம் அதிகாரம்
## ஈ கை

---

யாசிப்பவருடைய குறிப்பறிந்து கொடுக்கும் தருமத்திற்கே 'ஈகை' எனப்படும்.

" ஈவது யோக மியம நியமங்கள்
சார்வ தறிந்தன்பு தங்கு

மவர்க்கன்றி

யாவ லறிந்தன்பு தங்கா தவர்களுக்
கீவ பெரும்பிழை யென்றுகொள்
ளீரே"

என்றார் திருமூலர்.

மக்கள் தான தருமங்களைச் செய்யாது, வாணாளை வீணாளாகக் கழித்தலாகாது. இப்பவோ பின்னையோ இரவிலோ பகலிலோ இயமன் வருநாள் என்றிருப்பினும், ஒருநாள் இறப்பது மெய் இருப்



பது பொய் யென்றுள்ள இவ்வுடம்பிலிருந்தே நாம் புகழுடம்பைப் பெறவேண்டுவது அவசியம். இத்தகைய புகழுடம்பைப்பெறும் உபாயம் ஈகையே. இவ்வீகையால் இம்மையில் எல்லாச் செல்வங்களையும் பெறலாம்; மறுமையில் நாம் கோரிய வரத்தை அளிக்கவல்லது மிதுவே; பகைவரையும் உறவாக்கும்

குணம் இதற்கேயுண்டு.

இத்தகைய சிறப்புற்ற கொடையாளி பஞ்சபாண்டவர்களின் தமயனை கர்ணனேயாகும். இவ்வள்ளல் உயிரிழக்குந் தறுவா யிலும் தன் தருமத்தின் பலனைக்கூட மனமுவந்து ஈந்தான். இவ் வீகையைப்போலச் சிறந்தது இவ்வுலகத்தினும் அவ்வுலகத்தினும் இல்லை. இஃதுணர்த்தவே,

“ நல்லா றெனினுங் கொளறீது மேலுலக
மில்லெனினு மீதலே நன்று ”

என உத்தரவேதமு முரையா நிற்கிறது.

மக்கள் முன்செய்த நல்வினை, தீவினையின் அளவாகவே செல் வத்தைப் பெற்றிருக்கிறார்கள். ஆகலின்,

“ செய்தீ வினையிருக்கத் தெய்வத்தை நொந்தக்கா
லெய்த வருமோ விருநிதியம் ”

என்றார் ஔவையாரும்.

இரப்போர்க்கு ஈதலே யாவருக்குஞ் சிறப்பைத் தரும். ஆகலினாற்றான்,

" இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர் "

என்று கூறப்பட்டது. உயர்ந்தோர் யாசிப்பவர்கட்குக் கொடுப் பதையே முதன்மையாக விரும்புவார். மக்கட்கு ஈகையே சிறந்ததெனினும், 'தானமது விரும்பு' என்ற மூதாட்டியார் வார்த்தையை யுணருங்கால், ' தகுதியானவரைத் தேடிக்கொடு ' என்னுங் குறிப்பு உணரக்கிடக்கிறது.

தரித்திரர்களாய் வந்து யாசிப்பவர்கட்கு நம்மால் இயன்றமட்டில் கொடுத்தல்வேண்டும். செல்வர்க்குக் கொடுத்தல் சிறப்பன்று. இதனை,

" எற்றகை மாற்றாமை யென்னுனுர்

தாம்வல்ராயா

ராற்ரு தார்க் லேதா

மாண்கட—றுற்றின்

அதிகாரம் • ௪௩.] இல்லற இயல்

கூஎ

மலிகடற் றண்சேர்ப்ப மாறீவார்க் கீதல்
பொலிகட னென்னும் பெயர்த்து"

என்ற நாலடியாரே நன்குணர்த்தும்.
முற்பிறப்பில் செய்த பாவபுண் ணியங்களின்
பயனை ஒவ்வொருவரும் அனுபவித்தே
யாகவேண் டும்; அப்போது இட்டுண்ணுக்
காரணத்தினுலேயே இப்போது
தரித்திரர்களாய்ப் பிறக்க வேண்டி
யிருக்கிறது. ஆகவே,

"ஆறிடு மேடு மடுவும்போ லாஞ்செல்வ
மாறிடு மேறிடு மாநிலத்தீர்"

என்ற ஔவையார் அமுதவாக்கியப்படி,
இவ்வநித்தியமான பொருளைக்கொண்டு

யாசிப்பவர்களுடைய குறைகளைத்தீர்த்து, இவ்வுலக மும் அவ்வுலகமு முவக்குமாறு நடப்பதே இப்பிறவியில் பொருளைப் பெற்றதன் பயனாகும். ஆகையாலன்றோ,

“பிறக்கும் பொழுது கொடுவந்த் தில்லைப் பிறந்துமண்மே
விறக்கும் பொழுது கொடுபோவ தில்லை யிடைநடுவிற்
குறிக்குமிச் செல்வஞ் சிவன்றந்த தென்று கொடுக்கறியா
திறக்குங் குலாமருக் கென்சொல்லு வேன்கச்சி யேகம்பனே” எனப்

பட்டினத்தடிகளும் பகர்வாராயினர்? இஃதுணர்ந்த நாம் இம்மையிலும் நீடுழி காலம் நின்று, மறுமையிலும் உடன்வந்து நற்கதியளித்து, வானவரையும் வணங்கச் செய்வதாகிய ஈகையைக் கைவிடுதலாகாது.

“மாம்பழுத்தால் வெளவாலை வாவென்று கூவி
யிரந்தழைப்பார் யாவருமங் கில்லை—சு

ரந்தமுதங்

கற்ரூ தால்போற் காவா தளிப்பரே
லூற்ரூ ருலகத் தவர்"

என்ற தெய்வத்தமிழரசியார் திருவாக்கின்படி, வேண்டுவார் குறிப் பறிந்து அவரவர் குறையைத் தீர்ப்பாரிடமே உலகம் உள்ளது. ஈகையைப்போல மக்கட்கு இன்பந்தரும் பொருள் எவ்வுலகத்திலு மில்லை.

"இன்னு திரக்கப் படுத லிரந்தவ
ரின்முகங் காணு மளவு"

எனப் பெரியாரும் பணித்தனர். கர்ணனே மறைந்துவிட்டான். அவனுடைய ஈகையின் சிறப்போ இன்றும் நிலவுகிறது. ஈகையால் சாதிக்க

கா.

க்அ திருக்குறள்
இபால்ங்காரம் [அறத்துப்பால்

முடியாததொன்றில்லை. உலகத்தில் எல்லோரும் கொடுப்போரையே அடுத்துவாழ்வார் ; அவர்கட்குச் சத்துருக்களும் நண்பராவார்கள்.

இரப்போர்க்கு அவர் தம் இனிய முகத்தையே பிரதி பலனுகக் கருதிக் கொடுப்போர் அடையும் பயனே, முற்றுந் துறந்த முனிவர் பெருமையினும் சிறப்புறுகின்றது.

"ஆற்றுவா ராற்றல் பசியாற்ற லப்பசியை
மாற்றுவா ராற்றலிற் பின்"

என்றார் தேவரும்.

ஆகாரமின்றி வருந்துவோர்க்கு அவ்வருத்தத்தைப் போக்கி, ஆத்மாவைக் குளிரச் செய்வதைப் போலச் சிறந்த தருமம் இல்லை. பொருளை அழியாமல் காக்கவல்லதும், இம்மையினும் சிறப்பித்து மறுமையினும் நம்மை இறைவனடி

சேர்ப்பிப்பதும் இத் தருமமே. முன்னே, பரமதத்தன் புநிதவதி என்னுஞ் சதிபதிகள் காரைக்கால் என்ற பதியில் தம்மிடம் வந்த அதிதிகளுக்கு அவரவர் வேண்டிய பொருள்களை யீந்து, அமுது செய்வித்து, இல்லறத்தை வழுவாது நடத்தி வந்தார்கள். ஒருநாள், பரமதத்தன் தனக்குக் கிடைத்த இரண்டு மாங்கனிகளைத் தன்னில்லாளிடம் சேர்ப்பித்து வெளியிற் சென்றான். அத்தருணத்தில் ஒரு சிவனடியார் பசித்துவர, புநிதவதி யார் அவருக்கு அமுது படைத்து, கறியமுது பாகம் பண்ணப்படா மையால் அருமையாகக் கிடைத்த மாங்கனிகளு ளொன்றைக் கறியமு தாகப் படைத்து அமுது செய்வித்தார். பிறகு, பரமதத்தன் வந்த போது அம்மையார் எஞ்சிய மாங்கனியை உண்வோடு அவருக்குக் கலத்திலிட, அது மிகச் சுவையுடையதா யிருந்ததனால், அவர்

மற் றொன்றையும் கொண்டு வரச்சொன்னர். அவ்வம்மையார் ஒன் றுங் கூருது உள்ளேசென்று அடியார்க்கு அடியாராகிய நம் கைலாசபதி யைத் தியானிக்குங்கால், ' வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண் டாய் ' என்றபடி, அப்பெருமானும் ஒரு கனியைத் தந்தருளினர். அம்மையார் அன்புடன் செய்த அறத்தினலல்லவா அவ்வரிய காரியம் நிகழ்ந்தது?

“ அற்ரு ரழிபசி தீர்த்த லஃதொருவன்
பெற்ருன் பொருள்வைப் புழி ”

என்னும் பொய்யா மொழியை நோக்குக.

ஸ்ரீ:

பொருள் மேலைத்தவ முள்ளார்க்கே வாய்க்கும். அது நீர்
மேற் குமிழிபோல நிலையில்லாதது.
ஆனால், அதனாலேயே நாம்
இப்பூத உடம்பை நீக்கிப்
புகழுடம்பைப் பெறவேண்டி யிருக்
கிறது. இத்தகைய பொருளைப்
பெற்றும் அறிவைப் பெறாமல்
நம்பிறவியையும், பொருளையும்
வீணையழிப்பதென்றால் அஃது எவ்
வளவு கொடுமையினும் கொடுமை?
முற்பிறப்பில் பொருளைப் பெற்றிருந்தும்,
இரப்போர்க்கு இல்லையென்றவர்களே
இப்பிறவி
யில் இரப்போராகப் பிறந்திருக்கிறார்கள்.
இரப்போர்க்கு இல்லை
யென்போர் தம்பொருளையும் இழந்து,
உலகத்தாராலும் உலோபி என்றழைக்கப்

பெற்று, இருமையிலுங் கொடிய துன்பத்திற்காளாவ ரென்பது நிச்சயம். இஃதுணர்த்தவே,

“ ஈத்துவக்கு மின்ப மறியார்கொ
ருமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்”
“ இரத்தலி னின்னாது மன்ற
நிரப்பிய
தாமே தமிய ருணல்”

என்றது பொய்யாமொழி.

ஆகையால், நாம் முற்பிறப்பிற் செய்த தவத்தால் பெற்ற பொருளைக்கொண்டு அரிதாகிய புருஷார்த்தங்களை அடைய முயல வேண்டும். இஃதுணர்வார் ஒருசிலரே. பெரும்பான்மையோர் உலோபிகளாகவே யுள்ளார். இதனைக் குறித்தே,

“ முற்றொடர் பிற்செய்த முறைமையால்
வந்தசெல்வ

மிற்றைநாட் பெற்றேமென் றெண்ணுது
பாழ்மனமே
யற்றவர்க்கு மீயாம லரன்பூசை
யோராமற்
கற்றவர்க்கு மீயாமற் கண்மறைந்து
விட்டனையே" என்றார் திருவெண்காட்
டடிகளும். உலோபிகள் கைபபட்ட பொருள்
நாய்வாயில் அகப்பட்ட
முழுத்தேங்காயாகவன்றோ விருக்கின்றது?
அந்தோ பாவம்! பொருளாசை பிடித்துப்
பழிபாவங்களுக்கு அஞ்சாமலும் அவை
கேவலவழியென்றுணராமலும் சேர்த்த
அநித்தியப் பொருளைத் தாமும்
அநுபவியாமல், மனைவி மக்கள் சுற்றத்தார்
நட்பாளர் முதலியோரும் அநுபவிக்கச்
சகியாமல், பின்னும் அப் பொருளை
அடையும் வழிகளையும் அதைக் காக்கும்
உபாயங்களையுமே யோசித்துக்கொண்டு
நாளைக் கழிக்கும் கனவான்கள் யாரிடம்.

போரைக் காணின் யாது கருதுவரோ?
தம்முயிரைக் கவரவந்த
காலனென் றுணர்வார்கள் போலும்!
இவைகளையெல்லா முணர்த்
தவே நாலடியாரும்,
"உண்ணா னொளிநிறா னோங்கு
புகழ்செய்யான்
றுன்னருங் கேளிர்
துயர்களையான்—கொன்னே
வழங்கான் பொருள்காத் திருப்பானேல்
அஆ
விழுந்தானென் றெண்ணப் படும்"
என நவின்ற துணர்க.
உலோபிகள் நற்குணங்களை யிழந்து,
பொய் பொறாமை புறங் கூறல் முதலிய

துர்க்குணங்க ளமைந்த வஞ்சமன
முடையராய்த் தம்மிடம் யாசித்தோர்க்கு
எதாகிலுஞ் சாக்குப் போக்குகளைச்
சொல்லியும், நற்குணங்களமைந்தாரிடம்
வெறுப்புற்றும், அவல மாய்ப்
போவாரென்பது திண்ணம்.
ஆகையாலன்றோ,
"உடாஅது முண்ணாதுந் தம்முடம்பு
செற்றுங்
கெடாஅத நல்லறமுஞ்
செய்யார்—கொடாஅது
வைத்தீட்டி னாரிழப்பர் வான்றோய்
மலைநாட
வுய்த்தீட்டுந் தேனீக் கரி"
என நாலடியாரு முரையா நின்றது?
இல்லற முறைப்படி பிரமச் சாரி
வானப்பிரத்தன் சந்நியாசி துறந்தார்
தரித்திரர் ஆதரவின்றி வந்து செத்தவர்
தென்புலத்தார் தெய்வம் புதிதாய்வந்தவர்

சுற்றத் தார் முதலியோர்களுக்குப் பயன்படாமல் பொருள் சேர்ப்போர், தம் பிறவிப் பயனையும் தாம் செய்துள்ள தவப்பயனையும் இழந்து, உலகத்திலும் வசைமொழிக்காளாகித் தம் வாழ்நாளிலேயே அப் பொருளும் அழியப் பார்ப்பர். இஃதுணர்ந்தே,

" துய்த்துக் கழியான் றுறவோர்க்கொன் றீகலான்
வைத்துக் கழியு மடவேனை—வைத்த
பொருளு மவனை நகுமே யுலகத்
தருளு மவனை நகும் "

எனப் பெரியாரும் பணித்தனர்.

ஆகவே, இவைகளை யெல்லா முணரவல்ல நாமெவரும், எவ் வகைப் பயனையு மளித்து இன்பந்தருவதாகிய ஈகையைக் கைக்கொண்டு, இது புண்ணியம் இது பாவமென்பதை யறிந்து நடந்து, பரம்பொருளை அடையப் பார்ப்போமாக.

# 24 - ஆம் அதிகாரம்

## புகழ்

---

மக்கள் இவ்வுலகிற் பெறும் பெருமைக்கே 'புகழ்' எனப்படும்.

மக்கள் கல்வியாலும், ஆண்மையாலும், ஈகையாலும் புகழைப் பெறுகிறார்கள். கல்வியையும் ஆண்மையையும்விட ஈகையே சிறந்தது. பூர்வம், விதர்ப்பதேசமென்னும் பதியை ஆண்டுகொண்டிருந்த சுவேதன் என்னும் அரசன், தனக்கு அரிதிற் கிடைத்த பதவியிலிருந்து அறமியற்றிப் புகழைப்பெறாது, அடவிக்குப்போய் அருந்தவம் செய்து அதன் பயனை அடைய அவாக்கொண்டான். அவன் அவ்வாறே சென்று அதற்குரிய முறையோடும்

ஆண்மை யோடும் தவஞ்செய்து வருங்கால், அவனுக்கு மாணம் நேர்ந்தது. ஆனல், அவனியற்றிய அரிய தவத்தின் பயனுக இந்திரலோகத்தி னின்றும் விமானம் வந்து அவனை ஏற்றிச்சென்றது. ஆயினும், அவ்வரசன் ஈகை என்னும் குணத்தை அடைந்திராக் குறையால், வானுலகத்திலே அவனுக்குப் பசியும் தாகமும் அதிகரிக்க, அதன் காரணமாகத் திரும்பவும் பூலோகத்தில் தான் தவமியற்றிய பாண சாலைக்கருகில் ஆவிரூபமாக வந்திறங்கித் தன் சரீரத்தைத் தானே உண்ணதாகவுஞ் சொல்லப்படுகிறது. ஆகவே, கல்வி ஆண்மை ஈகை யென்னும் குணங்களில்லாதார் தந்தியில்லா வீணைக்கொப்பாவார். இஃதுணர்ந்த நாம் மனம் வாக்குக் காயங்களாலும், பொருளென்

னும் கருவியாலும் புகழைத் தேடவேண்டும். இன்றேல், அரிதிற் கிடைத்த இப்பிறவியின் பயன் யாதாம்? உத்தரவேதமும்,

" ஈத லிசைபட வாழ்த லதுவல்ல
ஊதிய மில்லை யுயிர்க்கு"

என் றறிவுறுத்துகிறது.

நம் வாழ்க்கையானது உலகத்தார் உவக்கத்தக்கதா யிருக்க வேண்டும். 'பீடு பெறநில்' என்ற நம் மூதாட்டியார் வாக்கும் பெருமையுண்டாகும் வழியில் நடக்கவேண்டுமென் றறிவிக்கிறது. அத்தகைய பெருமை நம்மிடம் வந்து

லன்றே அமைக்கப்பட் டுள்ளது?
உலகத்தில் எத்தகைய நற் குணங்களையும்,
பொருளையும் பெற்றிருந்தாலும்
ஈகையில்லாவிடின் பரிமளியாது. ஆதலால்,
நமக்கு உரிமையில்லாப் பொருளைக்
கொண்டு நமக்குரிமையாகிய
புகழைத்தேடிக் கொள்வதே அறி
வுடைமை. இஃதுணர்த்தவே,

"உரைப்பா ருரைப்பவை யெல்லா
மிரப்பார்க்கொன்
றீவார்மே னிற்கும் புகழ்"

என்றார் பொய்யில் புலவரும். ஆகவே,
எவரும் இதை யறிந் தொழுகினலன்றி
ஏனைய வகைகளால் புகழ்பெறுபவ
ராகாரென்ப துறுதி.

பூர்வம், திருதராஷ்டிரனுடைய குமாரனும் கௌரவர் திலகனுமாகிய துரியோதனன் அளவிறந்த பொருளைப் பெற்றிருந்தும், அதை யெடுத்து ஈந்தோனாகிய கர்ணனே புகழைப் பெற்றான். நாயனாரும்,

"ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற்
பொன்றாது நிற்பதொன் றில்"

எனப் புகழின் பெற்றியை வலியுறுத்திக்காட்டிய தறிக.

ஆகவே, இல்லற வாசிகளாகிய நாம் பழிபாவங்களுக்கு அஞ்சி, நீதியான வழிகளில் பொருளைத் தேடி, இல்வாழ்க்கைக்குரிய நெறியிலே நின்று, பிரமசாரி வானப்பிரஸ்தன் சந்நியாசி முதலிய பத்துப் பேர்களுக்குங் கொடுத்து வாழும் வாழ்க்கையினின்றும் வழுவாதிருக்க வேண்டும். அவ்வாழ்க்கையே இம்மையில் பூதவுடம்பை நீக்கிப் புகழுடம்பை அளிப்பதோடு, மறுமையில் தேவர்களுடைய போற்றுதலுக்கும் பொருளாகின்றது.

இதனைக் குறித்தே,

"நிலவரை நீள்புக ழாற்றிற்

புலவரைப்

போற்றாது புத்தேளுலகு"

என்றார் பெரியார். இதனால்
புகழேயென் றுணர்வோமாக.

இருமையிலும் நம்மைச் சிறப்பிப்பது

நாம் யாசிப்பவர்களுக்குக் கொடுக்கக்கூடிய நிலைமையுடையவர்க ளல்லவே எனக்கருதாது, இயன்றவரை ஈகையுடையவர்களா யிருக்க



கொள்ள வேண்டும். உலகத்தில்
ஒவ்வொருவர்க்குந் தம்மினுமிடத் தனவந்
தர்களும் ஏழைகளுமுண்டு. ஆகவே,
எவரும் தத்தம் சக்திக்கேற்ற வரையில்
யாசிப்போர்க்குக் கொடுக்கும்
குணத்தையே கொள்ள வேண்டும்.
விரும்பியதைச் செய்து முடிக்கும் ஆற்றல்
மனத்திற் குண்டு. ஆகையினாற்றான், நம்

மூதாட்டியாரும் ' அறஞ்செய் விரும்பு ' என்று ஆக்ஞாபித்துள்ளார்.

புலவர்கள் கேட்டதைக் கொடுக்கும் புகழைப் பெற்ற குமண சக்கரவர்த்தி, தம்மிடத்து ஒன்றுமில்லாத காலத்தும் அப்புலவர் கள் வந்து கேட்டபோது, அவர்கட்குப் பணத்திற்குப் பதிலாகத் தமது சிரசைவெட்டிக் கொடுத்துத் தம்மைக் கொன்றவர்களுக்குப் பரிசளிப்பதாகக் கூறியுள்ள தம் தம்பியிடம் அப்பொருளைப் பெற் றுக்கொள்ளும்படி கூறினாரல்லவா ? இன்னும், தவசிரேஷ்டராகிய ததீசிமுனிவர் தம்முடைய நிலையற்ற உடம்பிலுள்ள முதுகெலும்பை யுங் கொடுத்துப் புகழுடம்பைப் பெற்றாரல்லவா ? நம் தெய்வப் புலவர்,

“ நத் தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்

வித்தகர்க் கல்லா லரிது"

என்று கூறியது காண்க.

இல்லறத்தாருடைய சிறப்பு முழுதும் ஈகையிலேயே அடங்கி யுள்ளது. ஈகையில்லாவிடில் இவ்வுலகும் இல்லை ; அவ்வுலகும் இல்லை. இடம் பொருள் ஏவலைப் பெற்றிருந்தும், புகழைப் பெறுதார் இருந்தென்ன ? இறந்தென்ன ? அவர்கள் இரப்போர்க்குங் கொடா மல், தாங்களும் அனுபவியாமல் வாழ்வது, எற்பதினுந் துன்பந் தரும். புகழுடம்பைப் பெறுதார் பிறவி, பூமிக்கு ஒரு பாரமாயிருப்ப தோடு, அவர்கள் வசிக்கும் நகரமும் துன்பமடையுமென்று சொல்லப் படுகிறது. தம்முடைமையை ஈயாது வைத்துப் பின் னிழப்ப தாற் பயனென் ? கனவான்கள், ஏழைகளுக்கு அவர்கள் வேண்டிய வற்றை விருப்பத்துடன்

கொடுத்து, அவ்வேழைகளடையும் மகிழ்ச்சியால் தாங்கள் இம்மைக்கான புகழையும், மறுமைக்கான அருளை யும் அடையலாமென்பதை அறியார்கள் போலும். அவர்கள் இருப் பதிலும் இறப்பதே இன்பந்தரு மென்னலாம். இஃதுணர்த்தவே மாதானுபங்கியாரும்,



" தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று "

எனப் புகன்றுளார். சிலர் மேற்கூறியவைகளை யெல்லாம் அறிந்தோ அல்லது அறியாமலோ தம் வாணாளை வீணாளாக்குகிறார்கள். ஆகையா லன்றோ பெரியாரும்,

" புகழ்பட வாழாதார் தக்கோவார் தம்மை

யிகழ்வாரை கோவ தெவன் "

எனப் பணித்தனர் ?

நீர்மேற் குமிழிபோன்ற இவ்வாக்கையும், இந்திரஜாலம் போன்ற இவ்வாழ்வும் வழுவுமுன், அழியாப் பொருளாகிய புகழை அடையாம விருப்பது மிகவும் நீதியற்ற குறித்தே நந் தமிழ்மறையும், தன்மையாம். இதனைக்

" வசையென்ப வையத்தார்க் கெல்லா மிசையென்னு

மெச்சம் பெறாஅ விடின் "

என நவின்றது.

செல்வர்கள், தாம் பொருளைப்பெற்ற வகையையும், எதற்காகப் பெற்றதென்பதையு மறிவதில்லை. அவர்கள் இரப்போர்க்குக் கொடாது, மாயை யென்னும் இருளால் மறைப்புண்டு,

அகங்கார மமகார மென்னும் பணிகளைப் பூண்டு விளங்கும் இயல்புடையவ ராகிறார்கள். அந்தோ பாவம்! அத்தகைய பிரபுக்கள், பின்வரும் பயனை அறியாத பேதைகளாவார். ஆகையால், அவர்கள் உயிரோ டிருந்தாலும் செத்தவரோ டொப்பாவ ரென்பது செப்பவேண்டிய தில்லை.

"வசையொழிய வாழ்வாரே வாழ்வா
ரிசையொழிய
வாழ்வாரே வாழா தவர்"

என்றது வேதமும். ஆகலின், இருமைப்பயனும் அடைய இல்லறத்தை விரும்பிய நாம், இம்மையிற் பெறுதற்கரிய புருஷார்த்தங் களைப் பெற்று, மறுமையில் மோட்சத்தை அடையக் கடமைப்பட்டுள் ளோம் என்பதைக் கருத்துள் இருத்தி, அதற்குரிய வழிகளில் நடந்து ஆண்டவனுடைய திருவடிகளை அடைவோமாக.

முதலாவது, இல்லற இயல்
முற்றுப்பெற்றது.



## இரண்டாவது துறவற இயல்



## 25-ஆம் அதிகாரம்
## அருளுடைமை



*தன்னுயிரைப்போல் மன்னுயிரைக் காத்தலே 'அருளுடைமை' எனப்படும்.*

*" அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்*
*பூரியார் கண்ணு முள "*
*என்றார் வள்ளுவர்.*

*எண்ணரிய பிறவிகளுள் மானிடப் பிறவியே மிகவும் மேலான தென்பதும்,*

முத்திநிலை யடைதற்குத் தேவர்களும் மானிடராய்ப் பிறத்தல்வேண்டு மென்பதும் சமயக்கொள்கை யாகும். ஜீவன் முக்தி பெற்றாலன்றி, இவ்வரிய பிறவியின் பயனை உள்ளபடி அடைந்ததாக வாகாது. ஆகவே, நாம் அறம் பொருள் இன்பம் என்ற மூன்று படிகளை விதிப்படி கடந்து, நான்காவதான வீட்டுப்படி யைச்சேர முற்பட வேண்டுவ தவசியமல்லவா ? ஆனால், அவற்றை யடைதற்கு அருளுடைமை இன்றியமையாதது. இதனைக் குறித் தன்றோ சிவஞானச் செல்வராகிய நம் தாயுமான சுவாமிகளும்,

" எவ்வுயிரு மென்னுயிர்போ லெண்ணி யிரங்கவுநின்
றெய்வ வருட்கருணை செய்யாய் பராபரமே"

" தம்முயிர்போ லெவ்வுயிருந் தானென்று தண்ணருள்கூர்
செம்மையருக் கேவலென்று செய்வேன்

பராபரமே"

எனத் திருவாய் மலர்ந்துள்ளார் ? அருளுடைமைதான் அனைவரும் உய்தற்குரிய வழியாகும்.

பெண்டு பிள்ளை பண்டு பதார்த்தங்களோடு வாழ்வை நடாத்தும் நாம், அவற்றின் நிலையாமையை, "மனையாளு மக்களும் வாழ்வுந் தனமுந் தன் வாயின்மட்டே" எனப் பட்டினத்தடிகள் பணித்தவாறு





உணர்ந்து, அருளுடைமையைத் தேடிக்கொள்ள வேண்டும். சிவனடியார்கள் விஷ்ணு பக்தர்கள் முதலியோர் எங்ஙனம் முக்தி பெற்றார்கள் ? அருளுடைமையா லன்றோ ? ஆதலால், நாம் அருட் செல்வத்தையே செல்வத்துட்

செல்வமாகக் கொள்ளவேண்டும். அதுவே இம்மையிலும் மறுமையிலும் நம்மைவிட்டு நீங்காதிருக்குஞ் செல்வமாம். இஃதுணர்த்தவே,

“ நல்லாற்ற னாடி யருளாள்க பல்லாற்றாற்
றேரினு மஃதே துணை ”

என்றது உத்தரவேதம்.

இவற்றை யெல்லாம் உணரவல்ல நாம், மாசற்ற மனத்தையும் தீங்கற்ற எண்ணத்தையும் பழுதற்ற நோக்கத்தையும் குற்றமற்ற செய்கைகளையுங் கைக்கொண்டு, உயிர்களிடத்து அன்புடையராய் அஞ்ஞான இருளைப்போக்கி அருளென்ற பொருளைப் பெற்று வாழ்ந்தால், ஆண்டவன் திருவடிகளை அடையப் பெறுவோம்.

“ அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த

விண்ணு வுலகம் புகல்"

என்ருர் நான்முகரும்.

எல்லா வுயிரையுந் தம்முயிராகப் பார்க்கும் இயல்புடையோர் பிறவுயிர்களின் வருத்தத்தைக் காணச் சகியாதவர்களாய், அவ்வுயிர் களுக்காக எத்தகைய அரிய காரியங்களையு மியற்றுபவர்க ளாவார்க ளென்பதற் கையமில்லை. கைலாச பதியின் ஆலய வாயிலிலுள்ள நந்தி தேவருடைய திருவருளைப்பெற்ற சிவயோகிகளுள் ஒருவர் அகஸ்தியமா முனிவரிடங் கொண்ட அன்பால், அவரைத் தரிசிக்க அவாவுற்றுப் பொதிகை மலையை நோக்கிப் புறப்பட்டு, வழியிலுள்ள தலங்களை வணங்கிக்கொண்டு வந்தார். அவர் திருவாவடுதுறை என்னும் க்ஷேத்திரத்தை யடைந்து, அங்கிருந்து புறப்பட்டுக் காவிரி யாற்றங்கரை வழியே சென்ருர்; அங்கோ ரிடத்தில் பசுக்களை

மேய்த்திருந்த இடையன் இறந்துகிடப்பதையும், அதுபற்றி அப் பசுக்கள் ஆறாத் துயருற்றுக் கதறுவதையுங் கண்டார், அப்போது அவர்,



க்0ள்

" பெரியவர் தந்நோய்போற்
பிறர்நோய்கண் டுள்ள
மெரியி னிழுதாவ
ரென்க—தெரியிழாய்
மண்டு பிணியால் வருந்து
பிறவுறுப்பைக்
கண்டு கலுழுமே கண் "

என்ற ஆன்றோர் வாக்கியப்படி வருந்தியதன்றி, அவ்வுயிர்களைக் காப்பாற்றுவதற்காகத் தம்முயிருக்கு வருந் துன்பத்தையும்

பொருட்படுத்தாது, ஹிருதய கமலவாசனுகிய நம் இறைவனுடைய கிருபா கடாக்ஷத்தால் தஞ் சரீரத்துக்கு அரண்செய்து, அவ்விடைய னுடைய சரீரத்துட் புகுந்து, பசுக்களின் துயரத்தை நீக்கினூர்.

இது கருதியே,

" மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை "

என்றூர் பிறரும்.

ஆகவே, அருளுடையவர்களே அத்தகைய காரியங்களை இயற்ற வல்லவர்களாவதுமன்றி, எக்காலத்திலும் துன்பத்திற்குட்படாத வர்களாகவும் துலங்குவார்கள்.

" அல்ல லருளாள்வார்க் கில்லை வளிவழங்கு
மல்லன்மா ஞாலங் கரி "

என்றார் பொய்யா மொழியாரும்.

உலகில் பெரும்பாலார் இம்மர்மங்களை யெல்லாம் அறிந்தோ அல்லது அறியாமலோ அருளென்பதை அற ஒழித்து, காடுங் கரையும் மனக்குரங்கு கால்விட்டோட, அதன் பிறகே ஓடுவதால் நிகழும் சங்கடங்களுக் கெல்லாம் ஆளாகிக் கஷ்டத்தையே அனுபவிப்ப வர்களாகக் காணப்படுகிறார்கள். இதனைக் கவனித்துப் பார்க்குங் கால் கயமைக் குணத்தால் அங்ஙனம் கஷ்டத்தைத் தேடிக்கொள் கிறார்களேயன்றி, பிறவியா லன்றெனக் கண்டிப்பாய்க் கூறலாம். ஆகையாலன்றோ,

"பொருணீங்கிப் பொச்சாந்தா ரென்ப ருருணீங்கி
யல்லவை செய்தொழுகு வார்"

எனத் தேவரும் திருவாய்மலர்ந்தார்?

'சொக்கர் என்பவர் அத்தம்

பெறுவர்' என்று தெய்வப் புலமை வாய்ந்த ஒளவையார் அருளியபடி, பொருளுள்ளோர் அறத்



தையும் இன்பத்தையும் எளிதில் அடைவார்கள். பொருளில்லாதவர்கள் எவ்வாறு அறத்தையும் இன்பத்தையும் அடையக்கூடும்? முடியாதன்றோ? அவ்வாறே அருளில்லாதார் இவ்வுலகத்திற் சிறப்புறுவ தெங்ஙனம்? ஆதலால், இவைகளையெல்லாம் ஆராய்ந்துணர்ந்தேனும் அவர்கள் பிற வுயிர்களிடத்துக் கருணைகொண்டொழுகுவரேல் எல்லாம் வல்ல நம் இறைவன்

அருள்புரிவது திண்ணம்.

பூர்வம், பாண்டிநாட்டின் தென் திசையிலுள்ள ஓர் ஊரில் மழையில்லாமையால் நீர்வளங் குறைய அவ்விடத்துள்ள தடாகங்களெல்லாம் வற்றின. அப்போது, அங்கிருந்த நாரைகளிலொன்று அடுத்த ஊரிலுள்ள குளத்தில் இரைதேடச் சென்றபோது, அக் குளத்தில் தவசிரேஷ்டர்கள் ஸ்நானஞ் செய்வதையும் எண்ணிறந்த மீன்கள் அவர்களுடைய சடைகளில் தாவி விளையாடுவதையுங் கண்ணுற்று, அம்மீன்களைப் புசிக்க மனமில்லாது ஜீவகாருண்ய மேலீட் டால் வாளாவிருந்தது. பிறகு, அந்நாரை முனிவர்களுடைய நித்திய கர்மானுஷ்டானங்களைக் கண்ணுற்றும், திருவாலவாயாருடைய திருவிளையாடல்களை வாசிக்கக்கேட்டும் அஞ்ஞானம் நீங்கப்பெற்றுச் சிவபெருமான் அன்பர்களுக்காகத் தமது சூலாயுதத்தால்

சிருஷ் டித்த தீர்த்தமாகிய பொற்றுமரை வாவியில் ஸ்நானஞ்செய்ய விருப் புற்றுச் சென்றது. அந்நாரை ஜீவர்களிடத்துக்கொண்ட அருளால் பொற்றுமரை வாவியிலுள்ள மீன்களேயுந் தின்னுது, ஆலால சுந்தர ரைத் தியானித் திருந்தது. அப்போது அடியார்க்கடியரான அக் கருணுகரக் கடவுளே தோன்றி, " வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய் " என்றபடி, அந்நாரைக்கு வேண்டிய வரத்தைக் கொடுத்து முக்தியளித்தார. அருளுடையார் அடைய முடியாதது முண்டோ? இதனே,

" அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
இவ்வுலக மில்லா தியாங்கு "

என்ற முதற்பாவலர் கூற்றுனு முணர்க.

அருளுடையவர் ஊழ்வினையா லாளப்பட்டபோதும், எல்லாம் அருள் வடிவாகப் பார்ப்பதால் அவ்வருளே

அவர்கட்கு உண்ணின்று,
இது நன்மை இது தீமை, இது பாவம்
இது புண்யம் என்று
உணர்த்துகிறது. அவ்வருளில்லாதாரே
மனஞ்சென்ற வழிகளிற்

அதிகாரம்-உரு.] துறவற இயல்
க௦க

சென்று, ஊழ்வினையால் வஞ்சனை பொறாமை மோகம் கொலை களவு முதலிய தீய காரியங்களுக் குட்பட்டு, இம்மைப் பயனையுங் கெடுத்துக் கொண்டு மறுமையிலும் மீளா நரகத்தைத் தேடிக்கொள்பவரா கிறார். இஃதுணர்த்தவே,

"பொருளற்றார் பூப்ப ரொருகா
லருளற்றா
ரற்றார்மற் றாத லரிது"

என்றது போதுமறையும்.

நம் எல்லோருக்கும் தவம், தருமம், கல்வி, பொருள் முதலிய எல்லாவற்றினும் மேலானது ஜீவகாருண்யமே. அஃதொன்றிருப்பின் அறிவுவிளக்கம், அன்பு, பொறுமை, தெய்வபக்தி, பெரியோரிடத்தில் விருப்பு முதலிய வுண்டாம்; இன்னும், அருளென்னும் பொருளைப் பெற்று நம் பிறவிப் பயனையும் எளிதி லடையலாம். உயிர்களிடத்து அருளில்லாவிடின் நாம் செய்யும் தான தருமங்கள் பயன் றரா.

"தெருளாதான் மெய்ப்பொருள்
கண்டற்றாற் றேரி

னருளாதான் செய்யு மறம்"

என்றது உத்தரவேதம்.

ஆதலால், எவரும் எக்காரணங் கொண்டும் உயிர்களை ஹிம்சியாமலும், பிறரை நோகப் பேசாமலும், அவர்கட்குத் தீங்கு நினையாமலு மிருக்க வேண்டியதையே முதற்கடமையாகக் கொண்டொழுக வேண்டும்.

"வலியார்முற் றன்னை நினைக்கதான்
றன்னின்

மெலியார்மேற் செல்லு மிடத்து"

என்ற ஆன்றோர் வாக்கியப்படி, நாம் அறிந்து அடங்குவோமாயின் அருளுடையராதற் கையமுண்டோ?

அறிவைப் பெற்றுள்ள நாம் எவ்வுயிர்களிடத்தும் அன்பு கொண்டு, 'அருளென்னு மன்பீன் குழவி' என்றபடி, அதனல் அருளைப்பெற்று, அடைதற்குரிய புருஷார்த்தங்களை யடைய அருட்கடலாகிய நம் இறைவனை என்றும் பிரார்த்திப்போமாக.

---

# 26-ஆம் அதிகாரம்
## புலான் மறுத்தல்

---

கொலைப் பாவத்தைத் தருவதாகிய ஊனை உண்ணுமையே 'புலான் மறுத்தல்' எனப்படும்.

"பொல்லாப் புலாலை நுகரும் புலையரை
எல்லாருங் காண வியமன்றன் றூதுவர்
செல்லாகப் பற்றிய தீவாய்

நரகத்தின்

மல்லாக்கத் தள்ளி மறித்துவைப்

பாரே!"

என்றார் திருமூலரும்.

கடவுள் நமக்கு மற்ற ஜீவர்களினும் மேலாக அறிவையும் பொருளையுங் கொடுத்து, ஏனைய ஜீவராசிகளையும் நம் அன்பிற்குட் படுத்தி அமைத்துள்ளார். ஆகலின், நாம் இரதம் இரத்தம் சுக்கிலம் மூளை தசை எலும்பு தோல் என்ற தாதுக்களால் அமைக்கப் பட்ட இக்கேவல சரீரத்தை வளர்த்தற் பொருட்டு, நம் அன்பிற் குரித்தாகிய பகுத்தறிவில்லாத பிராணிகளைக் கொன்று தின்ப தென்றால் நம் யாக்கையின் பயன் என்னும்? இது கருதியே,

" தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி

தானுண்பா

னெங்ஙன மாளு மருள்"

என்றது தெய்வநூல்.

இரப்போர்க்கு ஈதற்கும், நாம் இன்புறுதற்கும், பசி தாகத்தால் வருந்தும் ஏனைய பிராணிகளின் வருத்தத்தைப் போக்குதற்கும், பொருட் செல்வமே முதன்மையாக விருந்தாலும், செல்வத்துட் செல்வமாகிய ஜீவகாருண்யத்தை விரும்பி ஜீவஹிம்சையை முற்றும் ஒழிக்கவேண்டுவது நமது முதற்கடமை. இவ்வாறிருக்கப் பெரும்பாலார் பிற பிராணிகளின் ஊனை உண்பதையே பெருமையாகக்கொண் டொழுகுகிறார். அதினுஞ் சிலர் தமக்கென்று உண்பதினும் தெய்வத்தின் பெயரைச் சொல்லித் தின்றால் பாபமில்லை யென்று கூறிக்கொண்டு, சிறு

தேவதைகளாகிய மாடன் காளி மாரி
கறுப்பு
இரூர்.
என்பவைகட்குப் பலி கொடுத்து அம்மாமிசத்தை அருந்து
அந்தோ! இஃதென்ன அறிவீனம்! அண்டசராசரங்களை



அருளால் படைத்த நம் பரமபிதாவாகிய பரம்பொருளுக்கு இது சம்மதமாமா? மக்கட்குத் தம் பிள்ளைகளின் மீது அன்பிருப்பது போலவே பரமபிதாவாகிய நம் அறக்கடவுளுக்கும் தங் குழந்தைகளாகிய ஜீவர்களிடத்துக் கருணை நிரம்ப உண்டு. ஆகலின், வாயில்லாத பிராணிகளைக் கொல்வது அவருக்குச் சம்மதமாகாது. கொலைக் குச் சம்மதப்படுகிற சிறு தேவதைகளுக்குத் தெய்வதத்துவமுண்டா

? அவற்றிற்குரியது ராக்ஷச தத்துவமென் றுணராமல், உயிர்களைக் கொல்லும் பாவத்தைச் செய்பவர்கள் ஏனைய தான தரு மங்களை யியற்றினும் எங்ஙனம் அருளைப் பெறுவர் ? இஃ துணர்ந்தே,

" பொருளாட்சி போற்றா தார்க் கில்லை யருளாட்சி
யாங்கில்லை யூன் றின் பவர்க்கு"

எனப் பொருளுரையும் புகல்கிறது.

மாயாசக்தியினால் கவரப்பட்டு, உலக வியாபாரத்தின் கண்ணே யிருந்து, தனக்கன்னியமாகிய பதார்த்தங்களின்கண் பற்றுற்று, ஒவ்வொன்றையும் ஆசையுடன் அநுபவிப்பவர்கள் எங்ஙனம் மெய்ப் பொருளைபுணர்ந்து முத்தியடையார்களோ, அங்ஙனமே ஜீவகாருண் யத்தைக் கருதாது பிறவுயிர்களைக்கொன்று அதனதன் ஊன்களைச் சுவைப்பட உண்பவர்கள்

அருளிழப்பார்கள் என்பது நிச்சயம். இதனை,

"படைகொண்டார் நெஞ்சம்போ னன்றூக்கா தொன்ற
னுடல்சுவை யுண்டார் மனம்"

என்ற திருவள்ளுவப்பயனே வலியுறுத்துகிறது.

உலகில் மக்கள் யாவரும் தாம் செய்த குற்றத்தைச் சாதாரணமாய் ஒப்புக்கொள்கிறார்களா ? இல்லையன்றோ ? அதுபோலவே ஊனுண்பவர்களும் தாம் செய்வது பாவச் செய்கையென்று ஒருகாலும் ஒப்புக்கொள்ளார்கள். அம்மட்டோ ! அவர்கள், அது பாவமன்றென்று நிரூபிக்கவுமன்றோ பரிந்தெழுகிறார். 'ஆதி காலத்தில் கண்ணப்பநாயனார் பன்றி இறைச்சியைப் பகவானுக்கு நிவேதித்தபோது, அப்பகவானே அதை அருந்த வில்லையா ?'

என்றும், ' பட்டினத்தடிகள் ஒரு காலத்தில் பறைச்சேரி வழியாகச் சென்ற

போது பசியால் வருந்தி ஆங்கு ஒரு புலையர் வீட்டில் மாட்டிறைச்சியைப்பெற்று அருந்தவில்லையா ? ' என்றும் கேட்டுக் களிக்கிறார்கள். இஃது எத்தகைய அறிவீனம் ! அந்தோ ! அம்மகான்களின் மகிமை யென்ன ! அவர்களுடைய மனநிலையென்ன ! அவர்கட்குத் தாம் செய்வது பாவம் என்ற உணர்ச்சியுண்டா ? பட்டினத்தடிகள் பத்திரகிரியாருடைய அருவருப்பை யுணர்ந்து , தாம் அருந்திய அவ்விறைச்சி யைக் கக்கியபோது, அவை அலரிமலர்களாக வெளிவந்தன வென்பதையேனும் எண்ணிப் பாரார்கள் போலும் ! ஆகையாலன்றோ அவர்கள், அங்ஙனமெல்லாம் குதர்க்கிப்பதுமன்றி கொன்றவர்க்கே பாவமன்றித் தின்றவர்க்குப்

பாவமில்லை என்றும் கூறுகிறார்கள் ? அறிவாளிகள் அதனை ஆமோதிப்பரோ ? நாயனாரும்,

" அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் றினல்"

என்றார்.

இவைகளையெல்லாம் ஆராயுங்கால், எல்லா ஜீவர்களிடத் தும் அன்புடையவராகாமல் அவ்வுயிர்களைக் கொலைபுரிந்து தின் போர் எல்லாப் பாவங்களுக்கும் ஆளாகி, அப்பாவங்களை அனு பவிக்க நிச்சயமாய் நரகமடைவர் என்பது நன்கு விளங்கு கிறது. முற்பிறவியில் கொலை களவு வியபசாரம் பொய்கூறல் பிறர்பொருளை அபகரித்தல் பிறர்நிந்தை குருநிந்தை தெய்வ நிந்தை சிநேகத்துரோகம் ஏழைக்கிரங்காமை முதலிய மகா பாதகங்களைச் செய்தவர்கள் நரகமடைந்து, பின்னும் இப்பூவுலகில்

தாழ்ந்த பிராணிகளாகப் பிறந்திருக்கிறார்கள். ஆகலின், அப்பிராணிகளைப் புசிப்போர் அவைகளின் பாவங்களால் கவரப்படுவர் என்பது நிச்சயம். இஃதுணர்த்தவே வாயுறைவாழ்த்தும்,

" உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
அண்ணாத்தல் செய்யா தளறு "

என வழுத்துகிறது. இன்னும், இந்நுட்பங்களை யெல்லா மறிந்த எவ ரும் அப்பாவ வுணவை விரும்பாவிடின், உண்பவர்க்காகக் கொலை புரிவாரும் நலமடைவார்கள். இதனைக் குறித்தே,

" தினற்பொருட்டாற் கொள்ளா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டா லூன்றருவா ரில் "

எனத் தமிழ்மறையிலும் கூறப்பட்டுளது.
காமே ஒன்றைக்கொன்று
தின்பதைவிட விற்பதை வாங்கி
யுண்ணுதல் பெரும்பாவமாம்.
எங்ஙனமெனின், ஒருவன் தானே
உயிரைக் கொன்று தின்ப
தால், கொன்ற பாவத்தையும் தின்ற
பாவத்தையுமே அடையவிருக் கிறான்.
கொன்றதை விலைகொடுத்து வாங்கும்
கொடியனோ, அவ்
விரண்டு பாவங்களை அடைவதுடன்,
விற்பவனுக்குப் பொருளாசை காட்டி
மேலும்மேலும் உயிர்களைக் கொல்லுமாறு
ஏவும் பெரும் பாத கத்திற்கும்
இலக்காகிறானல்லனோ ? நாம்
அருவருக்கத்தக்க புண்ணைப் போன்ற
தசையை அசுத்தமென்று அறிந்து, அதனை
உண்ணு தொழிப்பதே உவக்கத் தக்கதாகும்.
இஃதுணர்த்தவே வள்ளுவனார் வைப்பும்,

" உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ண துணர்வார்ப் பெறின் "

என வழுத்தியதுணர்க. தாமரையிலையில் ஜலமெனப் பற்றற்ற உள் ளத்தையுடைய அறிஞர் மாயைக்குட்பட்டு உலகவாழ்க்கையில் அழுந்தாதவாறுபோல, பிற பிராணிகளினுடைய உடலின் அசுத் தத்தை யுணர்ந்தோர் ஊனை யுண்ணமாட்டார். இதனை,

" செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணா
ருயிரிற் றலைப்பிரிந்த வூன் "

என்ற பெருநாவலர் கூற்றானுந் தெளிக. அந்தணர் யாகத்தின்கட் கொன்ற ஜீவன், வேத மந்திரத்தாற் சுத்தியடைந்து தெய்வ லோகத்தை யெய்திச் சுக மடைதலால், யாகம்புரிந்த பூசுரரும் வானுலகம் புகுவர் என்ற ஒரு நியதியுண்டு ;

எனினும், அவ்வேள்வி யாலுண்டாம் பலன் சிறு பதமுக்தியேயன்றிச் சுத்த முக்தியாகாது. ஆகையாலன்றோ செந்நாப்போதாரும்,

" அவிசொரிந் தாயிரம் வேட்டலி
ளொன்ற
னுயிர்செகுத் துண்ணாமை நன்று"

எனச் செப்புவாராயினர் ? இம்மர்மங்களை அறிந்த மகான்கள் புலா லுண்ணுதலையும், அதுகாரணமாகக் கொல்லுதலையும் ஒருங்கே வெறுத்து ஜீவகாருண்யமே சிறந்ததெனச் சிரமேற்கொள்வார் களென்பது செப்பவேண்டியதில்லை ; அவர்கள் எவ்வுயிர்களிடத் தும் அன்புடையவர்களாய் யாவரிடத்தும் அருள் செலுத்துவாராதலி

யாவராலும் வணங்குதற்குரியவர்களு மாகிறார்கள். இஃது துணர்த்தவே,

"கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி .
யெல்லா வுயிருந் தொழும்"

என்றார் தெய்வப்புலவர்.

நாம், நமது சூக்கும புத்தியைக் கெடுத்துத் தமோ குணத்தை யளித்துத் திராநரகத்தையும் அடைவிக்கவல்ல புலாலை அபேக்ஷியாது, எவ்வுயிர்களையும் நம்முயிர் போலெண்ணி, எக்காலமும் நற் காரியங்களி லீடுபட்டு, அனைவருக்கும் பரோபகார முள்ளவர்களாய், சரியை கிரியை யோகங்களை யியற்றி ஞானமடைந்து முக்தி யடைய எல்லாம் வல்ல கருணாகரக் கடவுளாகிய நம் இறைவனைப் பிரார்த்திப்போமாக.

# 27 - ஆம் அதிகாரம்
# த வ ம்

---

மக்கள், தத்துவங்களை ஒடுக்கி, மனதை ஒருவழிப்படுத்தித் தமக்கு வரும் எவ்வித கஷ்டங்களையும் பொறுத்துப் பிறவுயிர்களிடத் தும் கருணையுடையவரா யிருக்கும் நிலையே 'தவம்' எனப்படும்.

"தன்னை யறியாது தானல்லா ரென்றிங்
கின்மை யறியா திளையரென் றோராது
வன்மையில் வந்திடுங் கூற்றும்
வருமுன்னத்
தன்மையு நல்ல தவஞ்செய்யு நீரே"

என்றார் திருமூல நாயனர். 'பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற' பரமாத்மாவாகிய பகவானை, 'மலர்மிசை யேகினான்' எனச் செந்நாப்போதார் கூறியுள்ளார். மலர் என்பது உயிர்களின்

இருதயத் தானத்தையே குறிக்கிறது. ஆகலின், நாம் நம் இருதயத்தில் வீற்றிருக்குங் கடவுளை நமக்குள்ளே ஆராய்ந்து தரிசித்து, ஜீவாத்மாவைப் பரமாத்மாவோடு ஒன்றுபடுத்த வேண்டின், நமக்கு நேருந் துன்பங்களைப் பொறுத்து ஐம்புலன்களை யொடுக்கிப் பிறவுயிர்களுக்குத் தீங்கு நினையாதிருத்தல் வேண்டும். இஃதுணர்த்தவே,

அதிகாரம் -உஎ.]

துறவற இயல் கசுரு

" உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை
யற்றே தவத்திற் குரு"

எனப்பெரியாரும் பணித்தமை காண்க.

உலகத்தில் யாதொன்றையுங் கண்டிராத குழந்தைப் பருவத்தை யுடைய பிராணிகளும் பசிநோயைத் தவிர்த்துக்கொள்

ளத் தாயை நோக்கிச் செல்லுகின்றன. அவைகள் தாயையாவது உலகத்தையாவது அறிந்ததில்லை எனினும், முற்பிறப்பின் அனுபவத்தால் ஒருவருதவியின்றியே முன் பழக்கத்தை அறிந்தியற்றுகின்றன. அவ்வாறே மக்களாகிய நமக்கு முன்னைத் தவப்பழக்கமிருந்தால், இப்பிறவியில் அப்பழக்கமே நம்மைத் தவத்திற்கிழுத் துச்செல்லும். சாதாரணமாக உலகப் பயிற்சி அதிகமில்லாமலே உண்மைப்பொருளை அறிந்துணர்வாரும் உளர்; அதற்குக் காரணம் 'விட்டகுறை தொட்டது' என்று நமது உண்மை நூல் கூறுகிற தன்றோ? அவ்வாறே முற்பிறப்பிற் செய்த தவப் பயனையுடையவரே இப்பிறப்பில் தவம் செய்பவராவார். அஃதிலாது, இப்பிறப் பில் தவமியற்றுவது விரைவில் கைகூடாது.

" தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை
யஃதிலார் மேற்கொள் வது "

என்றது முப்பாலும்.

பேரறிவையும் பொருளையும் பெற்ற எவரும் ' முயற்சியுடையார்; இகழ்ச்சியடையார் ' என்றபடி, இப்பிறவியிலேயே தவமியற்றின லன்றோ இனிவரும் பிறவியிலேனும் சிறப்புறலாம் ? இல்லற வாசி களாகிய யாவரும் தவஞ்செய்யும் முனிவர்க்கும் மற்றும் ஏனை யோர்க்கும் அவரவர் வேண்டும் உதவிகளைப்புரிந்து தவத்தை விரும்பி ஒழுகி, ஜீவனுனது பிரியுந் தருவாயிலும் அங்கினைப்புடன் உயிர்துறந்தால் தவமியற்ற வேண்டுமென்னும் அவாவோடு மீண் டும் பிறக்கலாம். இதனை,

" துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி
மறந்தார்கொன்
மற்றை யவர்க டவம் "

என்ற திருவள்ளுவர் வாக்கே நன்கு தெரிவிக்கின்றது. ஆனால், மக்கள் பொருளைத் தேடுவதும் உண்பதும் உறங்குவதுமே உரிய கடமையாகக் கொள்ளுகிறார்கள். அதிலும் சிலர், மனைவி மக்கள் வீடு க்கக்



வாசல் யாவற்றையும் துறந்து சென்றால்தான் தவமியற்ற முடியும் என்று எண்ணுகிறார். அவர்கள், எவரேனும் ஒருவர் தவத்தைப்பற்றிச் சொல்லக் கேட்டால், “ இவனென்ன மெத்த ஞானியோ! இவனுக்கு மனைவி யில்லையா ? இவன் மக்களைப் பெறவில்லையா ? பொருள் தேடவில்லையா ? உத்தியோகத்திலில்லையா ?” என்று அலட்சியமாக அவதூறு பேசுகிறார்கள் . இது

மூடத்தனமேயன்றி வேறன்று. எவரும் செய்ய வேண்டியதைச் செய்துகொண்டு வந்தால், அடைய வேண்டியதைக் காலத்தில் அடைவர். ஆகையால், நாம் இல்லறத்தை நன்னெறியில் நடாத்திக்கொண்டே வரவேண்டும், என்ற திடஎண் ணத்தை மனதில் வைத்துக்கொண்டு, அதற்கான முயற்சியைச் செய்துகொண்டு வந்தால், தவமார்க்கம் இப்பிறவியிலேயே கிடையா விட்டாலும், நமது அந்திய காலத்தில் அப்புண்ணிய வசத்தால் தெய்வ ஞாபகமுண்டாகி, மீண்டும் இப்பிறவியை அடைவோம்.

தவிர, நாம் ஆராதித்து வராநின்ற விக்கிரக சொரூபம் ஞாபகத்துக்கு வருமாயின், 'சாரூபம்' என்னும் பதவி யடைந்து வாழ்வோம். இவ்விரண்டும் இல்லாத ஆன்மா தன் பழக்கமொன்றையே நினைத்து

வெளிப்படுவதால், அது மீண்டும் தன் கருமவசத்தை நுகர்வதற் குரிய பிறவியையே எடுக்கும். ஜீவன் மரண தருவாயில் எவ்வுணர்ச்சி யுடன் பிரிந்ததோ, அவ்வுணர்ச்சி சம்பந்தமான பிறவியையே அது பெறுமென்று சொல்லப்படுவதால், மரண துன்பத்தில் தெய்வசிந் தனை யுண்டாவது கஷ்டமாகும். ஆகவே, அறிவு தோன்றிய கால முதல் தெய்வ ஆராதனை தெய்வசிந்தனை முதலியவற்றைச் செய்வோ மானால், நெடுநாட் பழக்கத்தால் அஞ்ஞாபகம் அக்காலத்திலும் உண் டாகி, மறுசரீரத்தைப் பெற்றாலும் அரிய காரியங்களை ாியற்ற வல்லவராய்ப் பிறப்போம். இதனை,

" வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும் "

என்ற ஆன்றோர் வாக்கே

அறிவுறுத்துகிறது.

தவமுடையோர்கள் எத்தகைய சாபானுக்கிரகமும் உடையவ ராகிறார்கள். அவர்கள் பெருமை அளவிடற் கரிதாகலின், அது 'வையத் திறந் தாரை யெண்ணிக் கொண்டற்று' எனப் பெருநாவ லரே தெரிவித்துள்ளார். ஆகவே, நாம் தக்க பெரியோர்களை யடுத் அறிவோம். உ.எ.]

## துறவற இயல்

கள் துக் கற்கவேண்டியவைகளைக் கற்றுணர்ந்து, அவ்வழியில் நிற்கவேண் டும். உலக வியாபாரத்தையும் உறக்கத்தையும் ஒழித்து யோகத்திற் கெனக் கூறப்பட்டுள்ள ஆசனங்களு ளொன்றினைக்கொண்டு பிராண வாயுவை மூலாதாரத்திலடக்கி, ஆறு ஆதாரங்களின் வழியே அப் பிராணவாயுவைச் செலுத்தி, அதனின்றும் எழாநின்ற அக்கினியால் கலைமதியினின்றும்

சொட்டும் அமிர்தத்தை யுணவாகக் கொண்டு, ஜீவான்மாவையும் பரமான்மாவையும் ஒன்றுபடுத்தும் நிலையாகிய தவத்தைச் செய்வாரே பிறவியை அறுக்கவல்லவராவார். அங்ஙனஞ் செய்யாதவர் கேவல வழிகளிற் பாடுபட்டு, இப்பிறவியையும் அவல மாக்குவார்களென்பதற் கையமுண்டோ ? இஃதுணர்த்தவே,

" தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லா

ரவஞ்செய்வா ராசையுட் பட்டு "

என்றது பொருளுரை.

ஆகவே, அறிவாளிகள் எவரும் தம்மனமானது இந்திரிய வாயி லாக விஷயாதிகளிற் செல்லாது நிற்றற்பொருட்டு, விரதங்களால் உணவைச் சுருக்கலும், கோடை காலத்தில் வெயிலில் நிற்றலும், மாரி யிலும் பனியிலும் நீர்

நிலையில் நிற்றலுமாகிய செயல்களை மேற்கொண்டு, அவற்ருல் தம்முயிர்க்கு வரும் துன்பங்களைப் பொறுத்துக் கொள்வார்கள். ஆகையாலன்ரே,

" சுடச்சுடரும் பொன்போ லொளிவிடுந் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு "

என்ற பெரியார் வாக்கின்படி, ஞானப்பிரகாசத்தைப் பெற்று, நாமென்றைப் பிறர்க்குச் செய்தேன் பிறரொன்றை எனக்குச் செய் தார்களென்றும், என்னுடைய பதார்த்தமென்றும் பிறருடைய பதார்த்தமென்றும், நானென்றும் பிறரென்றும் சொல்லாநின்ற அஞ் ஞானப்பொருளை ஞானக்கினியாலே வெதுப்பி, அப்பிரமமே பிரகாசிக்க விளங்குவோர் பிறரால் கண் கண்ட

தெய்வமாகக் கருதப்படு பவ ராகிறூர் ?

" தன்னுயிர் தானறப் பெற்றுனை யேனைய
மன்னுயி ரெல்லாந் தொழும் "

எனறா நாயனுா.

கக்அ

## திருக்குறள் தீபாலங்கார ம்

[அறத்துப்பால்

இம்மட்டோ ! கூற்றுவனையும் வெல்லும் குணமன்றோ அவர்க ளிடம் குடிகொண்டுள்ளது? மார்க்கண்டேயர் தம்முயிரைக் கவரவந்த நமனையும் வெல்லவில்லையா ? சுந்தரமூர்த்தி சுவாமிகள் முதலை வாய்ப்பட்டு இறந்த புதல்வனையும் மீட்டுக் கொடுக்கவில்லையா ? இத்தகைய தன்மைகளுடையார் எண்ணிறந்தவராவர். அவர்கட் குக் கன்ம மேது ? கடுநரக மேது ? மேற்சென்ம மேது ? முதல்வ னுடைய கிருபையைப்

பெற்றவர்களைக் கன்ம முதலியவைகளும் தொடாவென்பது சொல்லவேண்டியதில்லை. தமிழ்மறையும்,

" கூற்றங் குதித்தலுங் கைகூடு
நோற்றலி
ன்ற்ற றலைப்பட் டவர்க்கு "

எனச் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தது. ஆனால், மேற்சொன்னவா றொழுகுவோர் மிகச்சிலரே. மற்றையோர் உலகபோகங்களே தாம் அடையத்தக்க முடிவான ஆனந்தமென்ற அஞ்ஞானத்தாலும், மன திற்கப்பால் ஒன்றுமில்லை யென்ற கொள்கையாலும், மனம்போன போக்கெல்லாம் போவாராய், அதற்கடிமையாகி அதனால் அலைப் புண்டு, 'காமாலை கண்ணனுக்குத் தோன்றுவதெல்லாம் மஞ்சள் நிறம் ' என்றபடி, அற்பமாகிய சிற்றின்பமே தம்பிறவிப் பயனென் றெண்ணித் தங்கள்

ஆயுள்காலத்தையும் அவமே கழிக்கிறார்கள். இதனைக் குறித்தே உத்தரவேதம்,

> " இலர்பல ராகிய காரண நோற்பார்
> சிலர்பலர் நோலா தவர் "

என்றுரைக்கிறது போலும். ஆகலின், இனியேனும் நாம் இப்பிற வியிலேயே மனம் வாக்கு காயங்களைச் சுத்தப்படுத்தி, மறு பிறவியி லாவது அரிய தவத்தை அடைய நம் ஆண்டவனை இடைவிடாது தியானிப்போமாக.

---

## 28 - ஆம் அதிகாரம்
## கூடா ஒழுக்கம்

---

வெறுத்த காம இன்பத்தை மனவலியின்றிப் பின்னும் விரும்பு வதே ' கூடா ஒழுக்கம் ' எனப்படும்.

மக்களுள் , தருமம் தயை

ஜீவகாருண்யம் பொறுமை அடக்கம் முதலிய நற்குணங்களமைந்தோர் சிலரே ; இம்மை மறுமைக்காக



உழைப்போர் சிலரே ; இன்னும் கணத்தில் அழிவதாகிய சிற்றின்பத்தை வெறுத்து ஒழித்தோர் இல்லமறை காய்போல் மிகச்சிலரே. வீண் பெருமை பேசிக்கொள்வோரே பெரும்பாலும் பெருகியுள் ளார். ஆஹா ! இஃதென்ன வியப்பு ! மனமானது இயற்கையாகவே எதையும் பற்றுஞ் சுபாவமுடையது; எனினும், காந்தம் அயத்தைக் கவர்வதுபோல மனம் கேவல விஷயத்தையே விரைவிற் கவரும். ஒரு காரியத்தை யியற்றுவிடினும், மனத்தால் நினைத்தமாத்திரத் திலேயே அக்காரியம் ' ஆகாய வெளியில் உருவாக அமைந்து விளங்

கும் ' என்று சொல்லப்படுகிறது. இவ்வாறிருக்க, வீண் பெருமை பேசிக்கொள்வது என்ன மதியீனம்! உலகத்தார் ஒரு கால் அதனை உண்மையென்று உணர்ந்தாலும்,

" வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்க
ளைந்து மகத்தே நகும் "

என்ற நான்முகர் கூற்றின்படி, அதனுண்மையைத் தம் மனச்சாட்சி அறிவிக்காம லிருக்குமா? நாம் உண்மைக்கு மாறானவைகளைக் கூறுங் கால், ' ஆ! இது பொய் ' என்று ஒரு சிந்தனை மின்னலைப்போலத் தோற்றுகிறதே. சிலர் அம் மனச்சாட்சியைக் கவனியாமலே பெருமை பேசிக்கொள்வதும், வெறுக்கத்தக்கதாகிய காம இன்பத்தை உண் மையில் வெறுக்க முடியாதவர்களாயிருந்தும், காவி வஸ்திரம் விபூதி உருத்திராக்க முதலிய சின்னங்களை யணிந்து பிறர் நம்பும்படி நடை யுடை

பாவனைகளால் காட்டுவதுமாய்க் காலங் கழிக்கிறார். இஃ துணர்த்தவே,

" வானுயர் தோற்ற மெவன்செய்யுந் தன்னெஞ்சந்
தானறி குற்றப் படின் "

எனப் பொய்யில் புலவரும் புகல்வாராயினர். ஆகவே , அவர்கள் கொண்ட ஒழுக்கம் பிறரை ஏமாற்றுவதற்காகவன்றி வேறன்றென் பது வெளிப்படை. பூர்வம், பாண்டவர்கள் இந்திரப் பிரஸ்தத்திலி ருக்குங்கால் கள்வர்கள் பசுமாட்டைக் கவர்ந்தார்கள். அப்போது அப் பாண்டவர்களில் ' ஒருவனான பற்குனன் ' ஆயுதங்களைக்கொண்டு வர ஆயுதசாலைக்குச் சென்றான். அங்கே அவன் துரௌபதையும் தன் தமயனாகிய தருமரும் ஏகாந்தமா யிருந்ததைக் காணநேர்ந்தது. அங்ஙனங்கண்டது இயற்கைக்கு

விரோதமென்றுணர்ந்த பற்குனன் கஉ௦
திருக்குறள் தீபாலங்காரம்
[அறத்துப்பால் தீர்த்தயாத்திரை
செய்யக்கருதிச் சென்று, பல
தீர்த்தங்களிலும் நீராடி ஸ்ரீ கிருஷ்ணபகவான்
திருக்கோலங் கொண்டிருக்கும் துவார
கையிலிராநின்ற பிரபாஸதீர்த்தத்திற்கு
வந்தபோது, சுபத்திரையை மணக்கவிரும்பித்
தவவேடம்பூண்டு சென்ற தன்மையே
இங்குத் தக்க சான்றாக விருக்கிறது.

இவற்றையுணர்ந்தே பொருளுரையும்,

" வலியி னிலமையான் வல்லுருவம்
பெற்றம்
புலியின்றோல் போர்த்துமேய்ந்
தற்று "

எனப் புகன்றது.

ஆகவே, அவர்கள் கோலமெல்லாம்
குளிக்கப்போய்ச் சேறு பூசிக்கொண்ட
தன்மைபோ லாகுமென்பது

சாற்றவேண்டியதில்லை. அவர்கள் உலகத்தில் உண்மையாக விரக்தியடையாமலும், சம்சார மென்னும் கப்பலை நடத்தத் தெரியாமலும் இங்ஙனம் வீண் சந்நி யாசம் பூண்டு திரிவதானது, இராவணேஸ்வரன் சீதா பிராட்டி யாரைக் கொண்டு செல்லத் தவவேடம் கொண்டவாறேயாகிறது. இஃதுணர்த்தவே திருவள்ளுவர் வைப்பும்,

" தவமறைந் தல்லவை செய்தல் புதன்மறைந்து
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று"

என வழுத்தா நின்றது.

புறத்தே மாத்திரம் தவசிகள்போல வேடங்கொண்டு அகத்தே அழுக்குடையவரா யிருத்தல் மிக்க அவமதிப்பை அளிக்கும்; அம் மட்டோ! இறுதியில் எரிவாய் நரகத்திற்கும் இரையாக்கும். இதனைக் குறித்தே,

" பற்றற்றேே மென்பார் படிற்றொழுக்க

மெற்றெற்றென்

ஏதம் பலவுந் தரும் ”

எனப் பெரியாரும் பணித்தனர்.

பொய் வேடம் பூண்டோர் உலகத்தை மயக்க வந்த பாதகரே யாவர். சாதுசங்கப் பழக்கம் சாஸ்திர ஆராய்ச்சி முதலியன வின்றியும், உண்மையில் உலகத்தை வெருமலும், யாசகஞ்செய்து ஜீவிக்க வென்றே வெளிக்கிளம்பும் வேடத்தார்க்கும் உதவிபுரிய அதிகாரம் •



கஉக லாமா? பரோபகாரம் கருதி உதவி புரியினும், அஃது நம்மை யுயர்ந்த கதிக் காளாக்காமல் தாழ்ந்த கதியையே அடைவிக்கும். இதனை,

“ நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து

வாழ்வாரின் வன்கணா ரில் ”

என்ற உத்தர வேதமே நன்குணர்த்துகிறது.

உலகில் சந்நியாசிகளென்று வருவாருள் உலகப் பற்றையும் மனச்சஞ்சலத்தையும் விடாதவர்களாய், உலகத்தார் தம்மைத் துறவி யென்று மதிக்கும்படி ஆடம்பரம் செய்து கொண்டு தந்திரமான வழிகளிற் பொருள் சேர்ப்போரே மிகுதியாய்க் காணப்படுகிறார். ஆதலால், எவர்களிடத்தும் உண்மையைக் கண்டறியாது வேடத்தாலும் வார்த்தையாலும் மயங்கிவிடாதிருக்க வேண்டும். இதற்கே முப்பாலும்,

"புறங்குன்றி கண்டனைய ரேனு மகங்குன்றி
மூக்கிற் கரியா ருடைத்து"

என மொழிகின்றது.

பூர்வம், துவாதச வருஷப் பஞ்சத்தில் ஓர் ஊரிலிருந்த குடிகளெல்லாரும் வனத்துக்குச் சென்று, காய் கனி கிழங்குகளைத் தின்று சீவித்து,

பின்னர் அவைகளும் அகப்படாது வருந்தி, ஆங்கிருந்த அசுவந்த மகரிஷியின் சமாதியருகிற் சென்று முறையிட் டழுதார். அப்போது , அங்கு அடங்கியிருந்த அம்முனிவரே வெளிவந்து அவர்கள் குறையைக் கேட்டு அருள் சுரந்து அப்பஞ் சத்தை விலக்கியருள வில்லையா ? அவைகளையெல்லா மாராயின், அவர்களுடைய துறவின் பெருமையைச் சொல்ல வேண்டியதில்லை. ஆனால், இப்போது அத்தகைய துறவிகளைக் காண்பது அருமை யாகவே இருக்கிறது . ஆகவே, எவரையும் அவர் தம் உண்மை நிலையை அறிந்தே மதித்தல் வேண்டும். இது கருதியே,

"கணைகொடி தியாழ்கோடு செவ்விதாங் கன்ன

வினைபடு பாலாற் கொளல்"

என்றார் செந்நாப்போதார். ஆகலின் அறிஞர்கள்,

“ மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம்
பழித்த தொழித்து விடின் ”

என்ற பெரியார் ஆஞ்ஞையின்படி, பிறர் பழிக்கத்தக்கதாகிய காம

கசு



தீபாலங்காரம் 

இன்பத்தையும், பிறவிக்கேதுவாகிய ஆசையையும் முற்றுமொழித்து, ஞானக்கினியில் மூழ்கப்பெற்று, ஏகாந்தமான இடத்தை நாடி, மான் தோல் புலித்தோல் சித்திராசனம் என்னும் இவைகளில் ஏதேனும் ஓர் ஆசனத்தைப் பூமியின்மேலிருத்தி, விதிப்படி யமர்ந்து, சின்முத் திரையிட்டு அசையாமலிருக்க வேண்டிய அங்கங்களாகிய கை கழுத்து

இடை கண் ஆகிய இவைகளை ஸ்தம்பம்போ விருத்தி, மனதைச் சத்துவத்திற்கூட்டி நிறுத்தி, 'சாம்பவி' என்னும் சிதாகாசத்தை இமை கொட்டாது நோக்கித் தூங்காமல் தூங்கும் சுகத்தைப் பெறத் துரிதப்படுவோமாக.

---

## 29-ஆம் அதிகாரம்
## கள்ளாமை

---

பிறருடைய பொருளை விரும்பாமையே 'கள்ளாமை' எனப் படும்.

இவ்வுலகில் மக்கட் பிறவியே பகுத்தறிவுபெற்றுச் சிறப்புற்றுள் ளது. முக்தியும் வெற்றியும் இப்பிறவிக்கே அமைந்துள்ளது. ஆக வின் பற்றே மிக்கோன் முதல் துறந்தோரீறாகவுள்ள மக்கள் பிறர் பொருளைக் கவர நினைத்தலாகாது ; நினைத்தால் இம்மை

மறுமைப் பயனுங்கெட்டுப் பெருமையுமிழந்து வசை மொழிக்காளாவர். பிறர் பொருளைக் கவருவோர்க்கு இவ்வுலகில் இராசதண்டனை பழி மானக் கேடு முதலியனவும், மறு உலகில் நரகமும் கிடைக்குமென்பது நிச் சயம்.

" எள்ளாமை வேண்டுவா னென்பா னெனைத்தொன்றுங்

கள்ளாமை காக்கத்தன் னெஞ்சு"

என முப்பாலும் மொழிகின்றது. ஆனால், சிலர் ஒரு காரியத்தைச் செய்தாலன்றிச் சிந்தித்ததனல் எங்ஙனம் பொறுப்பாளியாகக்கூடும் என்று வினவலாம். அவ்வினு ஆராய்ச்சியின்மையா லெழுவதாம். சிந்தனையிலிருந்தே செயல்கள் நிகழ்கின்றன. நாம் முதலில் ஒரு காரியத்தை மனதால் எண்ணுகின்றோம். வாக்கால் வெளியிடுகின் றோம். காயத்தால் செய்கின்றோம். ஆகவே, அக்காரியத்திற்கு மூல அதிகாரம் - ௫௧.]

# துறவற இயல்

கேடுங் காரணமாயிருப்பது எது ? மனமன்றோ ? ஆதலால், பிறருடைய பொருளைக் கவர நினைத்தலே செய்ததோடொக்கு மென்பதை யெண்ணி ஒழுகவேண்டும். பூர்வம், ஏகலைவன் என்ற வேடன் பாண் டவர்களுடைய தருவாசிரியராகிய துரோணரை வணங்கித் தனக்கு வில்வித்தை கற்பிக்க வேண்டினன்; அப்போது அவர், 'இராச குமாரரல்லாதார்க்கு வில்வித்தை கற்பியோம்' என்று மறுத்தார். அவ்வேடன் பின்னும் அவ்வித்தையை விரும்பி ஆசிரியரைப்போல் ஒரு பிம்பம் செய்து வைத்துத் தன் மனவலிமையால் கற்றுவந்தான். இதனை அவ்வாசிரியருடைய மாணாக்கர்களுள் ஒருவனாகிய கிரீடி என்ற பாண்டு குமாரன் கண்ணுற்றுத் தம்மாசிரியரிடம் சொல்ல, அவர் வியப்புற்று,

அவ்வேடன் வஞ்சனையாகக் கற்றதனால் அது பயன்படாதிருக்க வேண்டுமென்றெண்ணி, குருதக்ஷிணை நிமித்தம் அவன் பெருவிரலைக் கொடுக்குமாறு கேட்டுப் பெற்றாரல்லவா? அவ் வேடன் தன் மன வலிமையால் கற்றானெனினும், ஆசிரியரை வஞ்சித்துக் கற்றதால் அடைந்த பயன் யாது? ஆகையாலன்றோ,

"உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கொள்வே மெனல்"

என நான்முகரும் வலியுறுத்திக் கூறுகிறார்? ஆகவே, பிறருடைய பொருளால் நாம் அடையும் பயனனது தற்போது இன்பமாகத் தோன்றினும் பின் துன்பந்தருமென்பதற்கோ ரையமில்லை. அன்றியும், அப்பொருளால் எத்தகைய தர்மமியற்றினும் அது நமக்குப் பழியையும் பாவத்தையுமே கொடுக்கும். இஃதுணர்த்துவான் கருதியே,

"களவினு லாகிய வாக்க மளவிறந்
தாவது போலக் கெடும்"

என்ருர் செந்நாப்போதார்.

பிறர் பொருளால் பெருக்கமடைவதா யிருந்தாலும் பின்வரும் துன்பத்தை அறிந்த ஆன்ரோர்கள் சொற்பனத்திலும் அப்பொருளை விரும்புவரோ ? விரும்பார். பூலோக கைலாசம் என்னும் மதுரையிலே சுந்தரேசபாதசேகர பாண்டியன் தன்பொருளைப் பத்துத் தேர் நூறு யானை ஆயிரங் குதிரை பதினுயிரங் காலாட்களுக்குச் செலவிட்டு எஞ்சியதைச் சோமசுந்தரப் பெருமானுக்கே உரித்தாக்கி

கஉ-ச்
தீபாலங்காரம்

திருக்குறள்
[அறத்துப்பால்

அரசியற்றினன். அப்போது, ஆயிரம் பரிக்கோர் சேவகன் என்னுஞ் சோழனொருவன் பாண்டியனை வென்று அவனுரிமையைக் கைக்கொள்ளக் கருதிவந்தான். ஆனால், எல்லாம் வல்ல நம் கைலாச பதியான அச்சோமசுந்தரக் கடவுள் பக்தனுக்காக வேட வடிவெடுத்து அச்சோழனுடனே போர்புரிய, அச்சோழன் முதுகிட்டோடி முடிவில் மடுவில் வீழ்ந்து இறக்கவில்லையா? சோழன் பிறர் பொருளைக் கவர அவாவுற்றதனால் இத்தகைய துன்பத்திற்காளானன். இது கருதியே பொருளுரையும்,

"களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமந் தரும்"

எனப் புகன்றது போலும்.

திருதராஷ்டிரனுடைய குமாரர்களாகிய துரியோதனுதியர்கள் தங்கட்குத் துணையாக விருந்த ஆசிரியர் முதலாகிய அனைவரையும் அவமே யிழந்து அவலமாகி அழியா நரகத்திற்கும் ஆளானது எதனுல்? பாண்டுவின் குமாரர்களாகிய பஞ்சவர்களுடைய பொருளை அபகரிக்கக் கருதியதனுலன்றோ? அந்தோ! இத்தகைய தன்மையால் இடருற்றழிந்தோர் இன்னும் எண்ணிறந்தவராவர். ஆகவே, அறிஞர்கள் அருளுடைமையை விரும்பி அதற்குரிய வழியில் நில்லாது பிறர் பொருளை வஞ்சித்துக் கவரக் கருதுவரோ? இதனை,

"அருள்கருதி யன்புடைய ராதல் பொருள்கருதிப்

பொச்சாப்புப் பார்ப்பார்க ணில்"

என்ற நாயனுர் கூற்றே

நன்குணர்த்துகிறதன்றோ ?

சரியை கிரியை யோகம் ஞானம் என்பவற்றை யனுட்டிப்

போர்க்கு முறையே சாலோகம் சாமீபம் சாரூபம் சாயுச்சியமென்

னும் பதவிகள் கிடைக்குமென்பது நிச்சயம். இவற்றைக் கிரமமாக

வனுட்டித்து அப்பதவிகளை அடையவேண்டுவோர் அவற்றிற்குரிய

வழிகளில் நின்று இன்புறுவர். அஃதிலாரே பிறர் பொருள்களில்

அவாவுற்று அதனால் வரும் துன்பத்திற்கும், பின்னும் மீளாப் பிறவி

களுக்கு மாளாவார். இஃதுணர்த்தவே,

"அளவின்க ணின்றொழுக லாற்றார் களவின்கட்

கன்றிய காத லவர்"

எனத் திருவள்ளுவப்பயனார்

முதல்வனைப் பற்றவேண்டுமாயின் ஆணவம் மாயை கன்மம் என்ற மும்மலங்களையும் அறவே நீக்கவேண்டும். ஆனால், அந்நீக்கம் கல்வியினாலன்றி யமைவது கடினமன்றோ? அவ்வாறே, முக்தியை அடைய விரும்பும் நாம் எவரும், பிறர் பொருளை விரும்பாமையாகிய குண த்தைப் பூஷணமாகக் கொள்ளவேண்டும். இன்றேல், இருமைப் பயனுமிழப்பது திண்ணம். ஆகையாலன்றோ,

“ கனவென்னுங் காரறி வாண்மை யளவென்னு

மாற்றல் புரிந்தார்க ணில் ”

என்றார் தேவரும்?

கடவுளருளைப் பெறவிரும்பும் ஞானியின் மனம் மோக்ஷத்தை யடைதற்கு ஏதுவாயுள்ள சாதனைகளையும் தத்துவங்களையும் அறிந்து அவ்வழிகளி லீடுபடுவதுபோல, வஞ்ச மனமுடையார் மனமும் தீய வழிகளையேயுன்னி அவ்வழிகளி லீடுபடும். இஃதுணர்த்தவே உத்தர வேதமும்,

" அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்குங்

களவறிந்தார் நெஞ்சிற் கரவு "

என்று கூறுகின்றது.

ஆதலால், எவரும் கொடியதாகிய களவினைக் கைக்கொள்ளா திருக்க வேண்டும். பிறர் பொருளைக் கவர்வோர் எவரேனும் அவர் களிடத்து உண்மை விளக்கம் உதித்தலரிது. இதனை,

" அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல

மற்றைய தேற்ரு தவர்"
என்ற மேலையோர் வாக்கே அறிவிக்கும்.

இத்தகைய இழிந்த குணமுடையார் தருமம் தயை ஜீவ காருண்யம் பொறுமை முதலிய நற்குணங்களை ஒருங்கிழந்தவர் களாகவே யிருப்பார்களென்பதும், அதன் காரணமாக இம்மை யிலும் மானமிழந்து பெருமை குன்றிப் புலன்கெட்டு, எல்லோ ராலும் இகழப்பட்டு, இராச தண்டனைக்கும் உட்பட்டு, மறுமை யிலும் இயமபடர்களால் தண்டிக்கப்பட்டு, மீளாநரக மெய்துவரென் பதும் எளிதில் விளங்குகின்றனவல்லவா?
இவைகளையெல்லாம் நன் குணர்ந்து ஒழுகினலன்றி இம்மக்கட் பிறவி எவ்வகையால் மாண் புடைத்தாகும் ? இது கருதியே திருவள்ளுவரும்,

" கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை
கள்ளார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு "

எனத் தெரிவித்துள்ளார்.

ஆகவே, நன்மை தீமைகளை நன்குணரப்பெற்ற மக்களாகிய நாம் அனைவரும், உண்மைப் பொருளையுணர்ந்து, இருமைப் பயனையும் அடையும் நிலைகளைக் கைக்கொண்டு, என்றும் அழியாத பேரின்பத்தை யடைய எல்லாம்வல்ல ஈசனைப் பிரார்த்திப்போமாக.

---

## 30 - ஆம் அதிகாரம்
## வாய்மை

---

உண்மை யுரைத்தலே 'வாய்மை' எனப்படும்.

" செய்தா னறியுஞ் செழுங்கடல்
வட்டத்துப்

பொய்தான் மிகவும் புலம்பு மனிதர்கள்
மெய்தா னுரைக்கில் விண்ணோர்
தொழச்செய்வன்
மைதாழ்ந் திலங்கு மிடறுடை யோனே"

என்பது திருமந்திரம்.

மக்கள் அடையவேண்டிய எல்லா நற்குணங்களிலும் முதன்மை யானது வாய்மை. நாம் வாய்மையால் எவ்வுலகத்திலும் சிறப்புறலாம். வாய்மையினும் பிறர்க்குத் தீமைபயவாத வார்த்தைகளைக் கூறுவதே சிறந்தது; இன்றேல், நாம் பாவங்களுக்கும் பழிகளுக்கும் ஆளாகி நரகமடைந்து வருந்த நேரும். தருமர், "அசுவத்தாமா என்ற யானை யிறந்தது" என்ற உண்மையைக் கூறினாரெனினும் அது பிறர்க்குத் தீமை விளைத்ததா லன்றோ நரகத்தைக் கண்ணுறவேண்டி யிருந்தது. இது கருதியன்றோ முப்பாலும்,

"வாய்மை யெனப்படுவ தியாதெனின்

யாதொன்றுந்

தீமை யிலாத சொலல்"

எனக் கூறுகின்றது?

ஆகலின், பிறர்க்குத் தீமை பயக்கின்ற சொற்களும் பொய்ச் சொற்களே யென்பது புகலவேண்டியதில்லை. ஆதிகாலத்தில் வேத சாஸ்திரங்களையெல்லா- முணர்ந்த கௌசிகரென்னும் ஓரந்தணர்



உண்மையையே உரைக்க வேண்டுமென்ற விரதங் கொண்டிருந்தார். அதனால், அவர் பெருமை அவனியில் பரவியது. அப்போது, ஒரு நாளிரவு பலர் திருடர்களால் துரத்தப்பட்டு ஓடிவந்து அவரிருக்கும் இடத்திற் கருகிலுள்ள காட்டிற் புகுந்து மறைந்திருந்தார். துரத்தி வந்த அக்கள்வர்கள் கௌசிக பிராமணரைக்கண்டு 'இங்கு வந்த ஜனங்கள்

எங்குச் சென்றூர்கள் ?' என்று கேட்க, அவர் வாய்மை யின் சூக்ஷமத்தை யறியாது அவர்கள் ஒளித்திருக்கும் இடத்தை உரைத்ததனல், ஒளித்தவர்களும் அக்கள்வரால் கொல்லப்பட்டு, அவ் வந்தணரும் அழியா நரகத்தை அடைய விருந்த தல்லவா ? இத் தன்மைகளை யெல்லாம் எளிதிலுணர்த்துவான் கருதியே,

"பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்"

எனப் பெரியாரும் பணித்தனர். ஆனல், இங்கொரு ஐயம் எழலாம். அதாவது, '"நெஞ்சை யொளித்தொரு வஞ்சகம் இல்லை" என்ற நம் மூதாட்டியார் வாக்கியப்படி, நம்மனச்சாட்சிக்குப் புலப்படாத வார்த்தைகளுண்டோ ? உண்மைக்கு மாறுனதைப் பிறர் அறிந்திலரேனும், நாம் உண்மைக்கு மாருக ஒன்றைக்

கூறுங்கால் நம்மனம் ஒப்பவில்லையன்றோ ? நம்மனமே சாட்சியாக விருந்து இது சரி இது தவறு என்று புலப்படுத்துகின்றதே. ஆகவே, மனச்சாட்சி யைக் கவனியாது கூறுவோமாயின், அம்மனமே நமக்குச் சாட்சி யாக விருந்து,

" தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்

றன்னெஞ்சே தன்னைச் சுடும் "

என்ற உத்தரவே தப்படி கன்மத்திற்குப் பாத்தியப்பட விருக்கும்.'

ஆராயுமிடத்து, அவையும் ஒருவாறு ஒப்பத்தக்கதே யெனி னும், ஒருவன் சொல்லுகின்ற சொல்லின் பயனை நோக்கியே அதனை மெய்ச்சொல் அல்லது பொய்ச்சொல் என்று துணிய வேண்டுமேயன்றிச் சொல்லளவால் அவ்வாறுகூறுதல் பொருந்தாது. அதர்மம் என்ற சொல்லைக் கேட்ட அளவிலேயே அதனைத் தீதென்று கொள்ளலாமோ ?

அதனால் ஒரு வேளை நன்மை விளைவதுமுண்டு. பலாஹன் என்னும் ஒரு வேடன் தன் குடும்ப கஉ௮
திருக்குறள் தீபாலங்காரம்
[அறத்துப்பால் சவரக்ஷணையின் காரணமாக அதர்மத்தை மேற்கொண்டு அடவியில் வசிக்கும் மிருகங்களை யெல்லாம் கொன்று வந்தான். ஒரு நாள் காடெங்கும் தேடியும் ஒரு மிருகமும் அகப்படாது வருந்தி, இறுதியில் ஒரு குருட்டு மிருகத்தைக் கண்டு அதனைக் கொல்லக் கூடாதென்ற தம்மதா சாரத் தருமத்தையும் தவறவிட்டுக் கொன்று னென்றும், இக்கொடுஞ்செய்கை செய்தோன் நரகமடைவதை விட்டுச் சுவர்க்கம் புகுந்தானென்றும் ஒரு கதையுண்டு. அதனை ஆராயுங்கால், அவன் அதர்மமே செய்தானெனினும் அக்காட்டில் வசிக்கும் ஏனைய மிருகங்களுக்கெல்லாம்

நமனுக விருந்த அம்மிருகத்தைக் கொன்று ஏனைய மிருகங்களுக்கு ஹிதத்தைச் செய்ததனுலும், குடும்ப சம்ரக்ஷணமென்ற தருமத்தைப் பரிபாலித்ததனுலுமன்றே அக்கொடியோன் செய்த அதர்மமும் தருமமாக மாறியது? ஆதலால், நயனின்று நன்மை பயக்கும் சொற்களையே எவரும் விரும்ப வேண்டுமென்ப தொருதலை.

பொய்யென்னும் கொடிய பொருளை விரும்பாதவர் எக்காலத் தும் உயர்ந்தோர் உள்ளத்தின் கண் பிரகாசித்துத் தேவர்களாலும் போற்றப் படுவார்களென்பதற் கையமில்லை. அரிச்சந்திரன் தன் நாடு நகரமெல்லா மிழந்து தன் மனைவியையும் மகனையும் விலைப்படுத்தித் தானும் புலையனுக் காட்பட்டகாலத்தும் வாய்மை தவருததனுல் அல்லவா இனி வருவோருங்கூட அவரைப் போற்ற

விருக்கிறது ? இஃதுணர்ந்தே தெய்வநூலும்,

“ உள்ளத்தாற் பொய்யா தொழுகி
னுலகத்தா
ருள்ளத்து ளெல்லா முளன் ”

எனத் தெரிவிக்கிறது.

வாய்மையாளருடைய அருமை பெருமைகட்களவில்லை ; அவர் களால் ஆகாத காரியமும் அவனியில் இல்லை. ‘ உலகமென்பது உயர்ந்தோர் மாட்டு ’ என்ற தொல்காப்பியர் வாக்கியப்படி உண்மை யுடையோரை உயர்ந்தோரே பொருட்படுத்துவர். பஞ்சபாண்ட வர்கள் வனத்தில் வாழுங்கால், அவர்களுள் ஒருவனான அருச் சுனன் திரௌபதி இஷ்டத்திற்கிணங்கி, அமித்திர முனிவரது அரும் பசிக்குதவும் நெல்லிக்கனியை அறியாது பறித்தபோது, அம்முனிவ ருடைய சாபத்தினின்றும் விலக்கியது ல்லவா ? இவை கருதியே,

துறவற இயல் கஉ௩

" மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய் வாரிற் றலை "

என்றார் திருவள்ளுவனார்.

மக்கள் இவைகளை யெல்லாம் எண்ணி மனச்சாட்சிக்கு விரோத மில்லாமல் நடக்க முயன்றால், பொய் பொறாமை கொலை களவு காமம் வஞ்சனை சூது முதலிய துர்க்குணங்களொழிந்து மனமானது பரி சுத்தமடைந்து, மெய்யுடையவராகித் தானந் தவ மியற்றுவாரினுஞ் சிறப்புற்று, இம்மையில் அனைவராலும் புகழப்பட்டு மறுமையிலும் முக்திக்குடை யவராவார்கள்.

இஃதுணர்த்தவே பொய்யாமொழியும்,

" பொய்யாமை யன்ன புகழில்லை யெய்யாமை
யெல்லா வறமுந் தரும் "

எனப் புகல்கிறது.

நாம் நன்மை யடைவதற்கு எத்தகைய தான தருமங்களை யியற்றினும் மனத்தூய்மை யின்றேல் பயனில்லை. அம் மனத்தூய்மை யைப் பெற வேண்டுமாயின், 'அகத்தூய்மை வாய்மையாற் காணப் படும்' என்ற செந்நாப்போதார் வாக்கியப்படி, வாய்மையாற் பொருந்துமேயன்றி ஏனைய வகைகளால் இம்மியும் பொருந்தாதென்பது எவரும் மறக்கத்தக்க தன்றாம். இஃதுணர்த்தவே,

"சான்றோர்க்குப் பொய்யா விளக்கே விளக்கு"

எனப் பின்னும் வலியுறுத்திக் கூறப்பட்டது.

இதுவன்றி, எந்நூலும் வாய்மையையே முதற்பொருளாகப் பெற்றுள்ளது. இதனை,

"பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற

செய்யாமை செய்யாமை நன்று"

என்ற முதற்பாவலர் கூற்றே மொழிகிறது.

உலகில் சிலர், இதனை அறிந்தோ அல்லது அறியாமலோ உண்மைக்கு மாறான காரியங்களில் உழைக்க ஊக்கங்கொள்கிறார். அவர் கள், விளையாட்டுக்கேனும் பொய் பேசலாகாதென்னும் விதியையும் விட்டு, பிறரால் வஞ்சிக்கப்பட்டு நியாயம் பெறப் பாடுபடு மொருவனுக்கு மாறாக, பொருளை விரும்பியேனும் தாக்ஷணியத்தை

விரும்பியேனும் இல்லதை உள்ளதாகவும் உள்ளதை இல்லதாகவும்

கள



பொய்ச்சாட்சி சொல்லவும் போகிறார்கள். ஆனால், அவர்கள் வமி சம் அடியோ

டழியுமென்பதற் கையமில்லை. அத்தகைய கேட் டைக் கடைப்பிடித் தொழுகும் அறிவுதான் என்ன அறிவோ ? ஒரு பொய்யும் கூறத்துணியாது உலகில் துயருற்ற உத்தமர்களைப்பற்றி அவர்கள் என்னதான் எண்ணுவார்களோ ? அந்தோ பாவம்! அவர் கள்தான் அஞ்ஞானமென்னும் இருளால் கவரப்பட்டு அழியா நரகத்தை விரும்பி அங்ஙனம் பொய் கூறுகிறார்களெனினும், அறி வுடைய பெரியோர்கள் அதனை ஆமோதிப்பரோ ? ஆகையாலன்றோ ஆன்றோரும்,

" யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யெனைத்தொன் றும்
வாய்மையி னல்ல பிற"

என்றறிவுறுத்திக் கூறுகிறார் ?

அறிவுடைய நாமனைவரும் எவ்வளவுக் கெவ்வளவு வாய்மையை முதன்மையாகக் கொண்டொழுகுகின்றோமோ ,

அவ்வளவுக்கவ்வளவு நம் இறைவனுடைய அருளையும் இருமைப் பயனையும் எளிதில் அடையலாம் என்றுன்னி, அதனையே உறுதிப் பொருளாகப் பெற்று எல்லாம்வல்ல ஈசனை என்றும் தியானிப்போமாக.

---

## 31 - ஆம் அதிகாரம்
## வெகுளாமை

---

எத்தகையோரிடத்தும் கோபங் கொள்ளாமையே ' வெகு ளாமை ' எனப்படும்.

" உள்ளங் கவர்ந்தெழுந் தோங்கு சினங்காத்துக்
கொள்ளுங் குணமே குணமென்க—வெள்ளந்
தடுத்த லரிதோ தடங்கரை தான்பேர்த்து
விடுத்த லரிதோ விளம்பு "

என்றார் ஆன்றோர்.

மக்கட்கு அகப் பகை புறப்பகை என இருவகைப் பகைமை இயல்பாகவே யுண்டு. காமம் குரோதம் உலோபம் மோகம் மதம் மாச்சரியம் என்ற ஆறும் அகப்பகை ; புறப் பகை அவற்றிற்கு அன் னியமா யிருப்பன. இவற்றுள் அகப் பகையே முக்கியமாக இப் அதிகாரம் - ௩௧.]

## துற்வற இயல் ௩௩க

பிறவியைக் கெடுப்பது. ஆதலின், அத்தகைய பகைகளிலொன்றாகிய குரோதத்தை எவரும் குணமென்று கொள்ளலாமோ ? அந்தோ ! அதினின்றும் உய்யும்வகை தேடுவதன்றோ நமக்குரிய கடமை ? ஆனல், உலக அனுபவத்தை உற்று நோக்கின்,

" செய்தக்க வல்ல செயக்கெடும் செய்தக்க
செய்யாமை யானும் கெடும் "

என்ற மேலையோர் வாக்கியப்படி, ஒருவன் அவசியமான வேளையில் கோபத்தைக் காட்டாவிடில் அவனை எவரும் மதிக்கமாட்டார். கோபம் கொடிதெனினும் அதை வேண்டிய சமயங்களில் மேற்கொண்டு அளவுக்கு மிஞ்சாமல் அடக்கி நிறுத்துவதே நலந்தருமென்னலாம். உலகில் இராஜதருமத்தை நடாத்திக்காட்ட வந்த விஷ்ணுமூர்த்தியான நம் இராமபிரானும் சீதாதேவியைச் சிறைமீட்கச் சென்றபோது கடலைத் தாண்ட .க்கருதி சமுத்திராராஜனாகிய வருணனை அழைத்தார்; வருணன்வரத் தாமதமானதால் அவர் அடங்காக்கோபங் கொண் டவர்போல எழுந்து அவன் வந்ததும் மனமிரங்கி அருளினார். அது போல, துறவியிடத்தும் தவத்திற்குப் பங்கம் வருங்கால் சினம் தோன்றுவது இயல்பெனினும், அது தோன்றியவுடனே, அதனைக் கொழுந்துவிட்டெரியச்

செய்யாமலும் நிலைத்திருக்கச் செய்யாமலும், 'நீரில் எய்த வடுப்போல மாறுமே சீரொழுகு சான்றோர் சினம்' என்றபடி, க்ஷணத்தில் ஒழிப்பதே சிறப்பு. இவற்றையெல்லா முணர்த்தவே,

" செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பா னல்லிடத்துக்
காக்கினென் காவாக்கா லென் "

என்றார் பெருநாவலரும்.

சினமே வஞ்சனை பொறாமை இகழ்தல் தூற்றுதல் முதலிய தீவினைகட்கு முதற்படியாக விருந்து மக்களை சஞ்சலத்திற் குட் படுத்துகிறது. இத்தகைய கோபத்தை அறஒழித்துவிட வேண்டுமென் றறிவிக்கவந்த ஔவைப் பிராட்டியாரும், 'ஆறுவது சினம்' என்று ஆஞ்ஞாபித்துள்ளார். இவைகளையெல்லா மறியவல்ல நாமெவரும் வலியார் ஒப்பார் எளியார் என்ற யாவரிடத்தும் கொடிதாகிய

இக்கோபத்தைக் காட்டுதல் கூடாது. ஆகையாலன்றோ செந் நாப்போதாரும்,



"செல்லா விடத்துச் சினந்தீது செல்லிடத்து
மில்லதனிற் றீய பிற"

"மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய
பிறத்த லதனான் வரும்"

எனப் பலவாறு வலியுறுத்திக் கூறினார்?

கோபம் என்னும் இக்கொடிய பாவியால் எண்ணிறந்தோர் பெருமை யிழந்து, கொடிய துன்பங்கட்கும் ஆளானார். தவ சிரேஷ்டரான கௌசிக முனிவர் தவத்தைக் கொட்டியது கோபத்தாலன்றோ? பூலோக அரசனான நகுடன்

என்பவன் நூறு அஸ்வ மேத யாகம் செய்து தேவேந்திர பட்டத்தையும், சப்தவிருடிகளும் தாங்கா நிற்கும் பல்லக்கில் ஆரோகணிக்கும் பாக்கியத்தையும் பெற்றானெனினும், கோபமென்னும் இக்கொடிய குணத்தாலன்றோ, அச் சப்த விருடிகளுள் ஒருவரான அகத்திய முனிவருடைய சாபத்திற்குட்பட்டு அவமே அப்பதவியை யிழந்தனன்? இவை கருதியே,

* "நகையு முவகையுங் கொல்லுஞ் சினத்திற்

பகையு முளவோ பிற"

என்றார் திருவள்ளுவர்.

ஆகவே, புண்ணியம், பெருமை, கீர்த்தி, மேன்மை முதலிய புருஷார்த்தங்களை யிழந்து பழி பாவங்களுக் காளாகச் செய்வது சினமே என்பது தெற்றென விளங்குகிறது.

பூர்வம், சேர சோழ பாண்டியர் என்ற மூவரும் பன்னிரண்டு வருஷம் தம்நாட்டில் மழை இல்லாமையால் வறுமையடைந்து, அகத்திய முனிவர் வாக்கியப்படி தேவருலகத்திலே இரத்தின சிம்மாசனத்தில் அமர்ந்திருந்த இந்திரனிடஞ் சென்றபோது, உக்கிர பாண்டியன் தன்னுடன் ஒப்ப அமர்ந்தான் என்ற குரோதத்தை மேற்கொண்டதால் அல்லவா தேவேந்திரனும் தன் குலிசத்தை இழக்க விருந்தனன்? இஃதுணர்ந்தே,

"தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க
காவாக்காற்
றன்னையே கொல்லுஞ் சினம்"

என முப்பாலும் மொழியா நிற்கிறது. கோபத்தால் விளையுந் தீங்குகள் இன்னும் பல. ஒருவன் உள்ளத்தே

கோபமென்னும் கொடிய குணம் தோன்றியவுடன், அவன்



பைத்தியங் கொண்டவன்போல நடக்கிறானன்றோ ? இம்மட்டோ ! கோப காலத்தில் கண்ணும் முகமும் சிவக்க இரத்தம் மீறிட்டுப் பொங்குவதால், உடல் விடவிட த்து உதடு துடிதுடித்து நாப்பட படத்துக் கஷ்டப்படுவதுமன்றி, இரத்தம் இரத்தக் குழாய்களில் அளவுக்கு மிஞ்சி ஓடுவதோடு, அக்குழாய்கள் வெடித்து அபாய மரணத்திற்கும் ஆளாக நேருமென்பதற் கையமில்லை. இது குறித்தே பொய்யா மொழியும்,

" சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யினமென்னு

மேமப் புணையைச் சுடும் "

எனப் புகன்றது போலும்! இத்தகைய கோபத்தைக் கைக் கொண்டோர் எக்காலத்தும் உய்யாரென்ப துறுதி. இதனை,

“ சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று”

என்ற பெரியார் வாக்கே நன்கு தெரிவிக்கும்.

இந் நுட்பங்களையுணர்ந்த அறிவாளிகளே எக்காரணம் பற்றி யும் கோபத்திற்கு இடங்கொடாதவர்க ளாவார்கள். பூர்வம், சடபா தர் என்னும் முனிவர் காட்டில் தவஞ் செய்துகொண் டிருக்குங்கால், அவரைச் சில மறவர்கள் பிடித்துக்கொண்டுபோய்க் காளிகோவிலுக் குப் பலிகொடுக்கத் துணிந்தார்கள்; அவர் அதனை யுணர்ந்து தம் தபோ மகிமையால் அவர்களை யழிக்காது ஒன்றுமறியாதவரைப் போல்

இருக்கவில்லையா ? ஆதலால், நாமும் பெருந் தீமைகளை அளிக்கவல்ல இக்கோபத்தை அடக்க முயற்சிப்பதன்றோ அருமையுடைத்து ? இஃதுணர்த்தவே,

" இணரெரி தோய்வன்ன வின்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று "

என்றார் முதற்பாவலரும்.

ஆகவே, யாவரும் இங்ஙனம் அறிந்தொழுகுவாராயின் இவ் வவனியில் அவர்கட்கு ஆகாத காரியம் யாது ? மறவர்களால் மரண மடையவிருந்த அச் சடபாதர் கோபமென்னும் குணத்தைக் கொள்ளாதிருந்ததனாலன்றோ, அக் காளிதேவி பிரசன்னமாகி மறவர்க்கு

திருக்குறள் தீபாலங்காரம்
[அறத்துப்பால் களைக் கடிந்து விலக்கி

அவரைக் காப்பாற்றி யருளினுள் ? இரப்போர் முதல் துறவியீறாகக் கோபங் கொள்ளாதிருத்தலே சிறப் புடைத்து. தெய்வப் புலவரும்,

" இறந்தா ரிறந்தா ரனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை "

எனத் தெரிவித்தார்.

மேலாகிய பிறவியையும் அறிவையும் பெற்ற மக்கள் அகங் காரத்திற்குக் காரணமான கோபத்தை முற்றுமொழித்து ஞானத் தைப் பெறவேண்டும் ; வெகுளாமையால் " உள்ளிய வெலாமுட னெய்தும்" என்ற தேவர் வாக்கியப்படி, எல்லாப் புருஷார்த்தங்களை யும் எளிதிலடையப் பெறுவர். ஆகவே, நாம் அனைவரும் வெறுக் கத்தக்க குணங்களுள் கோபமென்னும் குணத்தையே முதன்மையாக ஒழித்து, அகங்காரம் மமகாரம் என்ற

பேய்களை யோட்டியும், சாத்துவிக குணத்தை யீட்டியும், எங்கும் நிறைந்த எல்லாம் வல்ல நம் இறைவனை என்றும் தியானிப்போமாக.

---

## 32 - ஆம் அதிகாரம்
## இன்னா செய்யாமை

---

எவ்வகையாலும் பிறவுயிர்களுக்குத் துன்பஞ் செய்யாமையே 'இன்னா செய்யாமை' எனப்படும்.

" சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள் "

என்றார் தேவரும்.

மக்கள் உயர்திணை முதல் அஃறிணை யீறாகவுள்ள உயிர் கட்கு

மறந்தும் தீமை புரியலாகாது. முக்தியை
விரும்பும் யாவர்க்கும் ' இன்னு செய்யாமை
' இன்றியமையாத குணமாம். இரப் போர்
முதல் துறவியீருகவுள்ள யாவரும்
இதனைக் கைக் கொண் டொழுகவேண்டும்.
இவ்வாறிருக்கப் பெரும்பான்மையோர்
காரணம்பற்றியேனும்
வஞ்சனையாகவேனும் பிறர்க்குத் துன்ப

 மியற்றி வருகிறார்கள். நாம் பிறர்க்குத்
துன்பமியற்றாமையே பெருஞ் சிறப்பைத்
தரும். இஃதுணர்த்தவே,

" கறுத்தின்னு செய்தவக் கண்ணு
மறுத்தின்னு
செய்யாமை மாசற்றார் கோள் "

என்றது முதுமொழி.

பூர்வம், காட்டில் தவஞ்செய்து
கொண்டிருந்த காளமாமுனிவ ரென்பவர்

வஞ்ச நெஞ்சோனாகிய துரியோதனன் வேண்டுகோளுக் கிரங்கிப் பஞ்சவர்களைக்கொல்ல ஒரு வேள்வி யியற்றி, அதினின்றும் வந்த பெரும் பூதத்தை நோக்கி, ''காட்டிற்குச் சென்று பாண்டவர்களைக் கொன்று வா'' என்று கட்டளையிட்டார். யாவு முணர்ந்தவரும் அடியார்க் கெளியவருமான கண்ணபிரான் அப்பாண்டவர்க்குத் தீங்கு நேராவண்ணம் அவர்களைப் பிணம்போ லாகச்செய்தார். பிறகு, அவர்களை யணுகிய அப்பூதம் 'செத்தாரைக் கொல்லவோ நம்மை யேவினர்' என்ற சீற்றங்கொண்டு திரும்பிச் சென்று துன்ப மியற்றத் துணிந்தவராகிய அம்முனிவரையே கொன்றதல்லவா ? ஆதலால் இன்னாதவற்றைச் செய்வோர் எத்தகையரேனும் இழி வடைவரென்பது திண்ணம். இது கருதியே மேலையோரும்,

" செய்யாமற் செற்றார்க்கு மின்னாத

செய்தபி

ஞய்யா விழுமந் தரும்"

என மொழிவாராயினர்.

நாம் பிறர்க்குத் தீமை செய்யாமலிருக்கப் பிறர் நமக்குத் தீமை செய்த போதிலும், நாம் அதனை வினைப்பயனென்று கொண்டும் பழி பாவங்களுக்கு அஞ்சியும் அவர் செய்த தீமையை மறக்கவேண்டும் ; அதுவே பெருமையாம். அங்ஙன மொழுகாவிடின், நாமும் தீங் கிழைக்கக் கருதி, பழிபாவங்களுக் குட்பட்டுப் பிறவிப் பயனையும் இழக்கநேரும். துன்பமியற்றினோரிடத்தும் பழியியற்ற நினையாது அவரை நல்வழிப் படுத்தும்படியான ஒரு நெறியைத் தேடுவது அறிவுடையோர் கடமையாகும். அந் நெறியாவது, "அவர் நாண நன்னயஞ் செய்துவிடல்'' என்ற செந்நாப்போதார்

நீதியின்படி, நம் மிடத்துத் தீங்கு செய்தவர் பின்னும் எவரிடத்தும் தீங்கிழையா வண்ணம், அவர் நாணுதற்கேதுவாகிய நன்மையைச் செய்துவிடுவ தாம். இதனைக் குறித்தே,



“அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்
தந்நோய்போற் போற்றாக் கடை”

எனப் பெரியாரும் பணித்தனர்.

நன்மை செய்தார்க்கு நன்மை செய்வது இழிந்தோர்கண்ணு முள்ள தன்மை. தீமை செய்தார்க்கு நன்மை செய்வதே உயர்ந்தோர் மாட்டுள்ள தன்மையாம். பிறர்

நமக்குப் பல துன்பங்
களைச் செய்த காலத்தும், அகழ்வாரைத்
தாங்கும் நிலம்போல,
அவர்கட்கு இதத்தையே செய்ய
எக்காலமும் முயற்சிக்க வேண்டும்.
இவ்வாறொழுகுந் தன்மையின் அருமை
பெருமைகட் களவுண்டோ?
ஆகையாலன்றோ பொய்யில் புலவரும்,
" இன்னா வெனத்தா னுணர்ந்தவை
துன்னாமை
வேண்டும் பிறன்கட் செயல் "
என வலியுறுத்திப் புகட்டுகின்றார்?
எவரும் பிறர்க்குக் கனவிலும்
இன்னாதவற்றைச் செய்யா
திருப்பதே மேன்மையாம். குருகுல
திலகனாகிய பரிக்ஷித்து மஹா
ராஜன் ஒருநாள் காட்டிற்குச் சென்று
வேட்டையாடுங்கால், புலி
யொன்றைத் துரத்திக்கொண்டு வெகு

தூரஞ்சென்றும் அஃது
அகப்படாமல் மறைந்தபோது, ஆங்கு
யோகத்திலிருந்த பயிலவ
ரைக் கண்டு, அப்புலி எங்குச்
சென்றதென்று கேட்டார். அதற்கு
அவர் பதில் சொல்லவில்லையென்ற
காரணத்தால், அரசன் அவ்
விடத்தில் இறந்து கிடந்த ஸர்ப்பத்தைக்
கோலாலெடுத்து அவர்
கழுத்தில் சுற்றியதனால், அவனே
இறந்தொழிய நேர்ந்தது. இவை யெல்லா
மறிவிக்கவே,

" எனைத்தானு மெஞ்ஞான்றும்
யார்க்கு மனத்தானு
மாணு செய்யாமை தலை "

என்றார் பெரியாரும்.

இவைகளையெல்லா
முணர்ந்தொழுகாவிடின் நாம் எவ்வகையால்
சிறப்பெய்த வியலும்? பிறர் நம்மிடத்து

இன்னுதவைகளை யியற்றுங்

கால் நாம் துன்பப் படுகிறோமல்லவா ?

அவ்வாறிருந்தும் பிறர்க்கு

நாம் இன்னுதவற்றை வியற்றத்

துணிவதென்னே ? இது வியப்

புன்றோ ? அங்ஙனம், தீதியற்றத்

துணியின் நாம் கண்ணோட்டமும் அருளும்

இல்லாதவராய் மனக்குரோத

முடையவராகிறோம். இதை,



கேட்ள் புளிக்க நறுங்கனியிருக்க வறிய

செங்காயை அருந்துவதுபோ லன்றோ

வாகிறது ? இஃதுணர்ந்தே,

" தன்னுயிர்க் கின்னுமை தானறிவா

னென்கொலோ

மன்னுயிர்க் கின்னு செயல்"

என்றார் நாயனாரும்.

கல்வி, கேள்வி, அன்பு, அருள், அடக்கம், பொறை முதலிய நற்குணங்க ளொருங்கே வாய்ந்த பேரறிவாளர் தம்முயிர்க்கிறுதி வருவதாயினும் பிறர்க்குத் துன்பமியற்றக் கனவிலும் கருதுவரா? கருதார். அவர் தீமை செய்தோர்க்கும் நன்மையே செய்வரென்க. பிறந்த நாள்தொட்டுப் பாண்டவர்கள்மீது பொறாமைகொண்டு, வஞ்சனை பாராட்டி, எத்தனையோ வழிகளில் இன்னாதவற்றைச் செய்த கௌரவர்களைப் பாண்டவர்கள் கருணை கூர்ந்து நன்னெறியில் ஒழுகப் புத்திபுகட்டியும் அதற்கு அவர்கள் ஒப்பாததனாலன்றோ முடிவில் சமர்க்களத்தில் மாய்ந்தொழிந்தார்கள் ?

" பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா

பிற்பகற் றாமே வரும் "

என முதற்பாவலரும் மொழிகிறார்.

எவ்வகையாலும் பிறர்க்குத் துன்பஞ் செய்தோர் தாமுந் துன்ப மடைவது திண்ணம். ஆகவே, தம்முயிர்க்குத் துன்பமில்லாதிருக்க விரும்புவோர் பிற வுயிர்களுக்கு இன்னா செய்யாமையைக் கைக் கொள்ளவேண்டும். வமிச சூடாமணி என்னும் பாண்டியன் திரு வாலவாயென்னும் பதியாகிய மதுரையில் செங்கோலோச்சுங்கால், தந்தை தாயில்லாதவரும் பிரமசாரியும் ஆகி சைவகுலத் துதித்தவரு மான 'தருமி' என்பவர் இல்லறம் நடத்தவேண்டி அத்திருவால வாயில் எழுந்தருளி யிராநின்ற சோமசுந்தரக் கடவுளைப் பொருள் கேட்டார். அக் கருணாகரக்கடவுள் செய்யுளொன்றை யியற்றி யருளி,

அதனைப் பாண்டியனிடங் கொடுத்து அப்பொருளைப் பெறுமாறு ஏவினர். அவ்வாறே, அச்செய்யுளைக் கொண்டு அரசனிடஞ் சென்ற தருமி அப்பொருளைப் பெறுதவாறு தடை செய்ததனால் அல்லவா புலவர் திலகமான நக்கீரர் துன்புற்றார் ? இஃதுணர்த்தவே,

" நோயெல்லா நோய்செய்தார் மேலவா நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர் "

என்றது திருக்குறளும்.

கஅ



ஆகலின், தம்முயிர்க்குரிய துன்பம் போலவே பிற வுயிர்களுக்

குரிய துன்பங்களையும் நன்குணர்ந்து, எவ்வுயிரிடத்தும் இன்னா செய்யாமையை மேற்கொண்டொழுகுவதே நம் கடமை. நாம் இவ்வாறொழுகி இம்மையில் பெறுதற்குரிய புருஷார்த்தங்களை எளிதிற் பெறவும், மறுமையில் தேவர்களாலும் போற்றப்பட்டு மோக்ஷத்தை யடையவும் எல்லாம் வல்ல ஈசனைப் பிரார்த்திப்போமாக.

---

## 33 - ஆம் அதிகாரம்
## கொல்லாமை

---

ஜீவவதை செய்யாமையே 'கொல்லாமை' எனப்படும்.

" கொல்லா விரதங் குவலயமெல் லாமோங்க
எல்லார்க்குஞ் சொல்லுவதென் னிச்சை பராபரமே."

" கொல்லா விரதமொன்று கொண்டவரே நல்லோர்மற்
றல்லாதார் யாரோ வறியேன் பராபரமே "

என்றார் தாயுமானார்.

மக்கள் கொல்லாமையாகிய தருமத்தை அனுட்டித்து வருவதனால், எல்லா நலன்களையும் எளிதில் அடையலாம். நாம் அநித்திய மான சரீரத்தை வளர்த்தற்காகக் கொல்லுதலாகிய தொழிலை மேற்கொண்டால் எல்லாப் பழிபாவங்களுக்கும் ஆளாகி, இறுதியில் நரகத்தையே அடைவோம்; இன்னும் கோரமான நடக்கை, பட்சபாதம், வன்குணம், அகந்தை, மனக்கள்ளம், அறியாமை, அருளிற் செல்லாமை, கற்க வேண்டியவைகளைக் கல்லாமை, விருதா கோஷ்டியிற் பிரவேசம், பயனில்லாத முயற்சி, அன்னிய சரீரத்தில் வாஞ்சை முதலியனவும் உண்டாகும். ஆகவே,

கொலைத் தொழிலை அற ஒழிக்க வேண்டியது மக்களுடைய முதற் கடமை. ஔவைப் பிராட்டியார், ' புலையும் கொலையும் களவும் தவிர் ' எனத் திருவாய்மலர்ந் துள்ளார். பிற பெரியோர்களும் கொல்லாமையாகிய தருமத்தையே முதன்மை யாக எடுத்துக் கூறுகிறுர்கள். இதனை,

" அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும் "

என்ற குறளடிகளால் கண்டுகொள்க.



ஆராயுமிடத்துப் புல், பூண்டு, மரம், பக்ஷி மிருகமாகிய எண்ணரிய பிறவிகளெடுத்துக் கடைசியில் அபூர்வமாகிய இம்மானிடப் பிறவியை அடைந்த நாம், " உடம்பினைப் பெற்ற பயனவதெல்லாம் உடம்பினி லுத்தமனைக்

காண் '' என்ற ஔவைப் பிராட்டியார் வாக்கியப்படி, அண்ட சராசரங்களைப் படைத்த ஆண்டவனை நம் உள்ளத்தினுள்ளே தரிசிக்கும் முயற்சியையன்றோ மேற்கொள்ள வேண்டியிருக்கிறது? இஃதுணர்த்தவே,

"பகுத்துண்டு பல்லுயி ரோம்புத னூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை''

என்றார் பெருநாவலரும்.

உலகில் நீடித்த வாழ்வுடன் நல்ல புகழையும் பெற விரும்பும் எவரும் எல்லா விரதங்களிலும் மேலாகிய கொல்லா விரதத்தையே கைக்கொண் டொழுகுதல் மேன்மை. அங்ஙன மொழுகுவோர் பெருமைக் களவில்லை. பூர்வம், மனுநீதிகண்ட சோழன் அநேக நாளாக அருந்தவமிருந்து அருமையாகப் பெற்ற புதல்வனாகிய

வீதிவிடங் கனை , அவன் அறியாது செய்த குற்றத்திற்காகப் பழிவாங்கத் துணிந் ததும், அதனால் அவர் அடைந்த கீர்த்தியும் பயனுமே இங்குப் போதிய சான்றாக விருக்கின்றன. இவைகளையெல்லா மறிவிக்கவே,

"ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று"

என்றார் நாயனாரும்.

ஆகலின் , நாம் ஜீவவதை செய்யாமையாகிய தருமத்தையே முதன்மையாகக் கொண்டு, சரியை கிரியை யோகம் ஞானம் என்ற படிகளிலேறி, முதல்வனருளைப் பெற முயற்சி செய்யவேண்டும். இதனை,

"நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்
கொல்லாமை சூழு நெறி"

என்ற உத்தர வேதத்தாலு முணர்க.

மக்கட்கு மாமிச ஆகாரம் இயற்கையானதன்று. அஃது, நம்மைச் சிருஷ்டித்த கடவுளின் நோக்கத்திற்கும் விருப்பத்திற்கும் மாறுனதே. 'எங்கும் நிறைந்த கடவுள் எல்லா வுயிர்களுள்ளும் விளங்குகிறுர்' என்பது யாவரும் மறுக்கொணுத உண்மை. அண்ட

சராசரங்களிலும் அவனருள் நிறைந்திருப்பதால், காய் கனி புல் பூண்டு நெல் முதலியவைகளை அருந்துவதும் பாவமன்றோ? எனின், நாம் உரோமம் நகம் முதலியவைகளைச் சேதிப்பதால் நமக்கு எப்படித் துன்பம் உண்டாவதில்லையோ, அவ்வாறே அவைகளும் உயிர்க்கொலை யாகா. ஆனல், அக் காய்கனிகளும் இல்லறத்தார்க்கே உரியன; அவர்கள்

அதனுல் வரும் சிறு பாவத்தை நீக்கிக் கொள்ள வும் பரிகாரமுண்டு. துறவிகளோ மறந்தும் கொலைத்தொழிலைச் செய் தல்கூடாது ; செய்யினும் அவர்கட்குப் பரிகாரம் கிடையாதென்ப துணர்த்தவே தெய்வப் புலவரும் கொல்லாமை யென்னும் அதி காரத்தைத் துறவற வியலில் வைத்துள்ளார் போலும்! அன்றியும்,

"நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங்
கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் றலை"

என்றதானும் அஃதுணரக் கிடக்கிறதன்ரே ?

ஆகவே, உலகில் இறைவனது ஆணையால் வாழும் உயிர்களைக் கொல்வதனுல் எய்தற்பாலதாகிய ஆக்கம் எத்தகையதாயினும், அதனை எவரும் விரும்பாமையே மேன்மையுடைத்து. இன்னும்,

" எவ்வுயிரும் பராபரன் சன்னிதிய தாகும்
இலங்கும் உயிர்உட லனைத்தும்
ஈசன்கோயில் "
என்ற திருவாக்கும் இங்குச்
சிந்திக்கற்பாலது.

ஜீவப் பிராணிகள் நமது
ஆகாரத்திற்கெனச் சிருஷ்டிக்கப்பட்
டிருப்பதாகக் கருதி அவைகளைக்
கொல்வதென்றால் அஃது எத்தகைய
அநீதி. அதனை ஜெகத்பிதாவான
பகவான் சகிப்பாரா? அந்தோ! கொலைத்
தொழிலைச் செய்யா தொழிப்போர்,

" கொல்லான் புலாலை மறுத்தானைக்
கைகூப்பி
யெல்லா வுயிருந் தொழும் "

என்றவாறு, இவ்வுலகிலும் மாட்சிமைப்பட்டு,
மேலாகிய மறு உலகத்
திற்கும் ஆளாவரென்பது திண்ணம்.
இன்னும், கொல்லாமையை மேற்கொண்
டொழுவோனுடைய வாழ்நாள்மேல்

இயமனுஞ் செல்லான் என்பதை யறிவிக்கவே,

"கொல்லாமை மேற்கொண்
டொழுகுவான் வாழ்நாண்மேற்
செல்லா துயிருண்ணுங் கூற்று"

என்றார் பெரியார்.



இவைகளையெல்லாம் உற்று நோக்காத சிலர், பஞ்ச மகாபாதகங் களில் ஒன்றாகிய இக்கொலைத் தொழிலை மேற்கொண்டொழுகிய கண் ணப்ப நாயனார் மாமிசங்களைக் கடவுளுக்குச் சமர்ப்பிக்க வில்லையா? அக்கடவுள் அவருக்கு முத்தி

யளிக்கவில்லையா? எனத் தருக்கித்துப் பேசுகிறார். அந்தோ ! அவர், இது பாவம் இது புண்ணியம், இது செய்யலாம் இது செய்யலாகாதென்று சுருதி மூலமாகவாவது குரு மூலமாகவாவது அறிந்து செய்தவர் அல்லரே. அவர் பழகிவந்த பழக்கத்தைப் பக்தி மிகுதியாற் செய்தனர். அவர் முற்பிறப்பிற் செய்த தபோ பலத்தினாலே திருக்காளத்தி மலையிலே யெழுந்தருளி யிராநின்ற சிவலிங்கப் பெருமானைத் தரிசித்தார். அவர், சுவாமியைக் கண்ட வழி வணங்குதல் பயின்றறியாராதலாலும், தாய் தந்தையர் தங்களுடைய குழந்தைகளைக் கண்டவுடன் பேராசையினால் விரைந்தோடிப்போய்த் தழுவி மோத்தல் உலக வியற்கையாதலாலும், தைலதாரை போன்ற தீவிரதரமாகிய அன்பின் பெருக்கத்தால் விரைந்தோடித் தழுவினார். அப்போது , அன்பிற் கெளியரான அவ்

விறைவன் திருமுடியிலே நீர் வார்த்து மலரிட்டிருத்தலை அவர் கண் ஊற்றுப் பின்னும் அன்பின் பெருக்கத்தால் இனிதாயுள்ள மாமிசத் தைச் சமர்ப்பிக்கக் கொலைத் தொழிலைச்செய்தும், வாய்நீரால் திரு மஞ்சன மாட்டியும், கண்ணைப்பிடுங்கி அப்பியும் முக்தி யடைந் தார். ஏனைய சிவபக்தர்களுள் ஒருவரான சிறுத்தொண்ட நாய னார் முதல்வனிடம் வைத்த வைராக்கிய பக்தியாலும், அவர் அநுஷ்டித்துவந்த பழக்கத்தாலும் பிள்ளைக்கறியைக் கொடுத்து முக்தியைப் பெற்றார். இச்சரித்திரங்களை உதாரணமாகக் கூறு வதும் அங்ஙனம் நடத்துவதும் மதியீனமன்றோ ? ஆகவே, கொடிய பாவங்களைச்செய்து நரகமடைந்து அநுபவித்துப் பின்னும் பாவ ஜன்மங்களாகப் பிறந்த பகுத்தறிவில்லாத பிராணிகளைக் கொல்வோர் தாமும்

பழிபாவங்களுக்குட்பட்டு அத்தகைய பிறவிக்கும் ஆளாக விருக்கும் என்பதை யாவரு முணரவேண்டும். இஃதுணர்த்தவே,

" தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
இன்னுயிர் நீக்கும் வினை"

என்றது தெய்வநூல்.

இருகஸ்தாச்சிரமத்தைப்பெற்ற எவரும் உபகாரத்திற்கே யுரிய வராதலால், அங்ஙனம் உபகாரம் கருதி ஒரு சீவனை யாகத்தால் கொல்ல, அச்சீவனும் சுத்தியடைந்து, இயற்றியோரும் சுவர்க்கத்தை கிச்உ.

## திருக்குறள் தீபாலங்காரம்

[அறத்துப்பால் அடைவர் என்ற ஒரு நியதியுண்டு. எனினும் அது முக்தியன்று. ஆகையினாலன்றே திருவள்ளுவரும்,

" அவிசொரிந் தாயிரம் வேட்டலி ஞென்ற
ஹுயிர்செகுத் துண்ணுமை நன்று"

எனக் கூறிப் போந்தார்?

சுவர்க்கம் சிறு பதமுத்தியே யாதலால், அங்குச் செல்வோர்க்கு மீண்டும் பிறவியுண்டு. இதனுல் துறவோர் ஓர் உயிரைக்கொன்று அதனுல் வரும் பயனைப் பெறுதல் தாழ்ந்ததென்ப துணர்த்த வந்த ஆன்ருேரும்,

" நன்ருகு மாக்கம் பெரிதெனினுஞ் சான்ருேர்க்குக்
கொன்ருகு மாக்கங் கடை"

என அறிவிக்கிருர்.

உலகிற் பெரும்பாலோர் இவைகளை யுணர்ந்தொழுகாதவர் களே யாவர். அவர்கள் கொலையின் இழிவை யறியாரெனினும், ஆன்ருேரால் அவர்கள் புலையரென் றெண்ணப்படுவார்களென்பது புகலவேண்டுமோ ? கொலைத்தொழிலை

மனத்தால் நினைப்பினும், அதன் பொருட்டு இம்மையில் துன்பத்தை அடையாவிட்டாலும், மறுமையில் அப்பாவம் வந்து மூண்டு நோய்க்கும் தரித்திரத்திற்கும் ஆளாக நேருமென்பது திண்ணம். இதனை,

" உயிருடம்பி னீக்கியா ரென்ப செயிருடம்பிற்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்"

என்ற முப்பாலே மொழிகிறது.

நாம் கொல்லாமையை மேற்கொண்டொழுகி உயிர்களிடத்து அன்பைச் செலுத்தினால், அண்ட சராசரங்களிலும் நிறைந்த இறைவனுடைய அருளைப்பெற்று இம்மையிற் புகழையும் மறுமையில் என்றும் அழியாத மோக்ஷத்தையு மடையலாம்; இன்றேல் இருமைப் பயனுங்கெட்டு இயமபடர்களால்

துன்புற்று மீளா நரக மடைவோம். ஆகலின், நாம் " அஹிம்சா பரமோதர்ம " என்ற வேத வாக்கியத் தைக் கடைப்பிடித்து நடந்து, இறுதியில் சச்சிதானந்தத்தை யெய்த முயலுவோமாக.

---

## 34 - ஆம் அதிகாரம்
## நிலையாமை

---

உலகத்திலுள்ள எவ்வகைப்பட்ட பொருளும் அழியுமாதலால், அதற்கே ' நிலையாமை ' எனப்பட்டது.

" தந்தையார் தாயா ருடன்பிறந்தார்
தாரமார் புத்திரரார் தாந்தாமாரே
வந்தவா றெங்ஙனே போமாறேதோ
மாயமா மிதற்கேது மகிழவேண்டா
சிந்தையீ ருமக்கொன்று

சொல்லக்கேண்மின்

நிகழ்மதியும் வாளரவுந் திளக்குஞ்சென்னி

யெந்தையார் திருநாம நமச்சிவாய

வென்றெழுவார்க் கிருவிசும்பி லிருக்கலாமே"

என்றருளிச் செய்தார் திருநாவுக்கரசு சுவாமிகள்.

பரம்பொருளால் படைக்கப்பட்ட இவ்வுலகமும் இங்கே காணப் படும் பொருள்களும் இடைவிடாது மாறிக்கொண்டே யிருக்கின்றன. இவை நிலையற்ற தன்மை வாய்ந்தனவே யன்றி நிலையாக விருப்பனவல்ல. மக்களே அறிவின் ஆராய்ச்சியால் இவ்வுலகத்தின் உண்மையான நிலையை அறியக்கூடியவர். அவ்வுண்மை நிலையே ஞானம் என்பது. தீபம் பிரகாசமுடையதாயினும், மூடுபனி யில்

அதன் பிரகாசம் புலப்படுவதில்லை ; அதுபோல, மக்கட்கு ஞானம் உடன் பிறந்ததெனினும் அஃது அவித்தையில் மறைப் புண்டிருக்கிறது. அவித்தை நீங்கின் அதன் பிரகாசம் வெளிப்படும். அங்ஙனம், அப்பிரகாசம் தோன்றினலன்றி உலக வியல்பையும், தத் துவக் கூறுகளையும், செல்வ இயற்கையையும் நாம் அறிவது அசாத்தியம். பெரும்பாலோர் முத்துச் சிப்பியை வெள்ளியென்று நினைக்கும் தன்மைபோல், உலகமும் காணப்படும் பொருளும் தாமும் நிலை யுடைப் பொருள்களென்றெண்ணிப் பிறவித் துன்பங்களுக்குட்பட்டு உலக மாயையிற் சிக்கி மோக்ஷத்தை யிழக்கக் கூடியவர்களாக விருக் கிறார்கள். இதுபற்றியே,

" நில்லாத வற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை"
என்றது வேதமும். தாயுமானவரும்,
" தந்தைதாய் தமர்தார மகவென்னு
மிவையெலாஞ்
சந்தையிற் கூட்டமிதிலோ
சந்தேக மில்லைமணி மாடமா
ளிகைமேடை
சதுரங்க சேனையுடனே
வந்ததோர் வாழ்வுமோ ரிந்த்ரசா
லக்கோலம்
வஞ்சனை பொறாமைலோபம்
வைத்தமன மாங்கிருமி சேர்ந்தமல
பாண்டமோ
வாஞ்சனை யிலாதகனவே
யெந்தநா ளுஞ்சரி யெனத்தேர்ந்து
தேர்ந்துமே
யிரவுபக லில்லாவிடத்
தேகமாய் நின்றநின் னருள்வெள்ள
மீதிலே

யானென்ப தறவுமூழ்கிச்
சிந்தைதான் றெளியாது சுழலும்வகை
யென்கொலோ
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான
தெய்வமே
தேசோ மயானந்தமே"

எனத் திருவாய்மலர்ந் தருளினர்.

ஆகவே, உலகம் நிலையற்றது; இடைவிடாது மாறிக்கொண்டேயிருக்கும் இயல்புடையது என்று உணர்ந்து, எவ்விதமான ஆசைகளுக்கு முட்படாமல், சமுத்திரத்தில் குளிப்பவன் அலைகள் வரும் போது வணங்கிக் கொடுத்துத் தன் காரியத்தை நிறைவேற்றிக் கொள்ளுவதுபோல, எவரும் உலகமாகிய சமுத்திரத்தில் நீந்துங்
கால் மாயையாகிய அலைகளால் தள்ளுண்டு போகாமல் மோக்ஷமென்னும் கரையைச்

சேரவேண்டும். சமுத்திரத்தில் அலைநுரையாதிகள் உண்டாவதுபோல உலகின்கண்ணேயும் பல்தோற்றங்கள் உண்டாகின்றன. நாம் அத்தோற்றங்கட்குட்படுவதென்றால், அஃது எத்தகைய மதியீனம்! இஃதுணர்த்தவே,

"கூத்தாட் டவைக்குழாத் தற்றே
பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று"

எனச் செந்நாப்போதாரும் கூறிப்போந்தார்.



நாம் ஆய்ந்த மட்டில், "ஆறிடு மேடு மடுவும்போ லாஞ்செல்வம்" என்றவாறு செல்வம் நிலையற்றதென்றே தெரிகிறதன்றோ? உலகில்

செல்வமுடையவர்களா யிருந்து தேவேந்திர போகத்தை யடைந் தோரும் அப்பொருளையிழந்து இரக்கக் காண்கிறோம். பூர்வம், கருணை கரக் கடவுளாகிய நம் சோமசுந்தரப் பெருமான் எண்ணிறந்த காலம் திருவாலவாயென்னும் பதியில் அரசாண்டபோது , அவருடைய திருவருளால் உதித்த உக்கிரபாண்டியனே ஒரு காலத்தில் வறுமை யடைந்து, உலக ரக்ஷகரும் தம் பரம பிதாவுமான ஆலாலசுந்தரருடைய அருளால் பொருள்பெற்றனெனின் ,பொருளின் நிலையாமையை யுணர்த்த வேறு சான்று எற்றுக்கு ? ஆகவே, இத்தகைய செல்வத்தைப்பெற்ற நாம் இதை ஒரு பொருளாக எண்ணக்கூடுமோ ? இவை கருதியே,

“ அறுசுவை யுண்டி யமர்ந்தில்லா ளூட்ட
மறுசிகை நீக்கி
யுண்டாரும்—வறிஞராய்ச்
சென்றிரப்ப ரோரிடத்துக் கூழெனிற்

செல்வமொன்

றுண்டாக வைக்கற்பாற் றன்று"

என்று நாலடியாரும் கூறுநிற்கிறது.

செல்வம் தேர்ச்சக்கரம்போலக் கீழுமேலுமாக மாறு மியல் புடைய தாதலால், நாம் அதனை நித்தியமென்று நினையாமல் பொருந் திய தருமங்களைச் செய்து, இம்மையில் புகழைப்பெற்று மறுமை யிலும் இறைவனுடைய கிருபைக் காளாகவேண்டும். இஃதுணர்த் தவே,

"அற்கா வியல்பிற்றுச் செல்வ மதுபெற்றா

லற்குப வாங்கே செயல்"

என்றார் நான்முகரும்.

"நிறை செல்வம் நீரிற் சுருட்டு நெடுந்திரைகள்" என்ற குமர குருபர சுவாமிகள் திருவாக்கின்படி, அநித்தியமான பொருளை அற வழியிற் செலவிடாமல் இறுகப்பிடித்து வைத்தாலும் நிற்பதில்லை. நாமரூபமான இப்பிரபஞ்சம் கானலில் தோன்றும் ஜலம்போலவும், கிளிஞ்சிலில்

தோன்றும் வெள்ளி போலவும், இந்திர ஜாலத்தில் காணப்படும் நகரம்போலவும் பொய்யேயாம். இதனை,

"ஊரும் சதமல்ல உற்றார் சதமல்ல உற்றுப்பெற்ற
பேருஞ் சதமல்ல பெண்டீர் சதமல்ல பிள்ளைகளும்





சீரும் சதமல்ல செல்வஞ் சதமல்ல தேசத்திலே
யாரும் சதமல்ல நின்றாள் சதம்கச்சி யேகம்பனே"

என்று பட்டினத்தடிகளும் பகர்ந்துள்ளார்.

இதற்கு மாறாக இவ்வுலகம் நித்தியமென்று கருதித் தருக்கிப் போரும் உளர். அக் கொள்கை சுருதி யுக்தி அநுபவங்களுக்குப் பொருந்திய தன்று. நாம் அநுபவமாக ஒன்றை அறியாவிடினும், ஆன்றோர்கள் அவ்வாறு அறிந்து கூறியவற்றையாவது நம்பவேண்டும். தாயுமானவர்,

" விதிக்கும் பிரபஞ்ச மெல்லாம்—சுத்த
வெயின் மஞ்ச ளென்னவே வேறாக
மங்கள்

மதிக்கு மதனை மதியார்—அவர்
மார்க்கந் துன்மார்க்கஞ் சன்மார்க்கமோ
மானே

சங்கா சங்கா சம்பு"

எனத் திருவாய்மலர்ந் தருளியுள்ளார்.

நம் வாழ்நாளோ சூரியனையே அளவு கருவியாகக் கொண்டு அளக்கப்படுகிறது. ஒட்டிய இளமையில் ஓரைந்து நீங்கும்.

ஆக்கை யிளமையால் ஐம்மூன்று நீங்கும். இரவில் துயிலா லொருபாதி போம். எஞ்சியுள்ள காலம் பிணி மூப்புக் குட்படும். எல்லாம் கழிய நிற்பது ஒரு சிறிதே. அதுவும் இவ்வளவென்று நிச்சயமாக அறியக் கூடாதது. ஆகலின், இவ்வளவு குறுகிய காலத்தில் செய்யவேண்டிய வேலை பெறுதற்கரிய பிறவியைப் பெற்றதன் பயனை அடைய வேண்டியதன்றோ? இவ்வுண்மையை அறிந்த ஆன்றோர், ஒருநொடிப் பொழுதையும் வீணாக்காது, இம்மை மறுமைப் பயனுக்குரிய அறவினைகளைப் புரிகிறார்கள். இஃதுணர்த்தவே, திருவள்ளுவப்பயனும்,

"நாளென வொன்றுபோற் காட்டி யுயிரீரும்

வாள துணர்வார்ப் பெறின்"

என்றது.

இஃதுணர்ந்த நாம் அனைவரும்

மோக்ஷத்திற் கேதுவாகிய தரு மங்களை விரைந்து செய்யவேண்டும். நாம் லௌகிக சம்பந்தமான விஷயங்களைச் செய்யும்போது, அவற்றிலேயே அவாவுற்று அழுந் தாமல் புகவ தார்ப்பணமாகச் செய்துகொண்டு, மற்றக் காலங்களி லெல்லாம் கடவுள் தியானம் அறநெறி முதலியவற்றிலேயே நாட்



க்கள்.

டத்தைச் செலுத்தி, ஆன்றோர் கூறிய முறைகளைக் கைக்கொள்ள வேண்டுவது அவசியம். இதனை,

" நாச்செற்று விக்குள்மேல் வாராமு னல்வினை

மேற்சென்று செய்யப் படும் "

என்ற திருக்குற ளடிகளால் கண்டுகொள்க.

' ' நீரில் எழுத்தாகும் யாக்கை " என்றபடி நிலையில்லாததும், க்ஷணத்தில்

அழிவதுமான உடம்பைப் பெற்ற நாம் சன்மார்க்கத் தில் ஒழுகி மன ஒடுக்கம்பெற்று மோக்ஷமடைய வேண்டும். இஃதுணர்த்தவே,

“ எற்றி யிறக்கி யிருகாலும் பூரிக்கும்
காற்றைப் பிடிக்கும் கணக்கறி வாரில்லை
காற்றைப் பிடிக்கும் கணக்கறி வாளர்க்குக்
கூற்றை யுதைக்கும் குறியது வாமே ”

எனத் திருமூலர் திருவுளம் கனிந்தார். எத்தொழி லியற்றிக்கொண் டிருப்பினும் இம்மை மறுமைக்குரிய பயன்களை அடைவதிலேயே நாட்டமுடையோரா யிருக்கவேண்டும் . இன்றேல், பிறவியின் பய னும் கெட்டு இருமைப் பயன்களையு மிழப்பது திண்ணம். நம் முடைய பிம்பத்தை நன்குணர ஒரு கண்ணாடி வேண்டுவதுபோல, பரமாத்மாவை அறிய ஜீவாத்மாவுக்கு ஒரு கண்ணாடி வேண்டும் ; இவ்வுடம்பே அந்தக் கண்ணாடியாகும்.

ஆனால், இக் கண்ணாடி க்ஷணத்தில் அழியும் தன்மையுடையது. இஃதுணர்த்தவே,

" நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு "

என்றது உத்தரவேதம். இத்தகைய உணர்வில்லாதவரே க்ஷணத்தில் அழிவதாகிய உடம்பையும் பொருளையும் பெற்றோமென்ற இறுமாப் படைந்து , பயனில்லாத எண்ணங்களைக்கொண்டு ஆகாயக் கோட்டை கட்டி, ஆசையென்ற பேயாற் பிடிபட்டுப் பேதைமைக்குட்பட் டு மாய்வரென்பது நிச்சயம். இதனை,

" ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல "

என்ற மூப்பாலே முழுது முணர்தும். இது நித்தியம் இது அநித்தியம் என்று உணராமல், உலகம் நித்தியப்

மயங்கும் புண்ணிய சிலர்கள்,
மனைவி மக்கள் பண்டு பதார்த்தங் களையே
அறம் பொருள் இன்பம் வீடென மயங்கி,
கடின சித்தமும் வஞ்ச மனமும்
பொறாமையான சொற்களும் உலோப
குணமுங் கொண்டு, கேவல
வழிகளிலீடுபட்டு அவல மாவார்கள்.
இதனைக் குறித்தே,

" மலைமிசைத் தோன்று
மதியம்போல் யானைத்
தலைமிசைக் கொண்ட
குடையர்—நிலமிசைத்
துஞ்சினா ரென்றெடுத்துத்
தூற்றப்பட் டாரல்லா
லெஞ்சினா ரிவ்வுலகத் தில் "

என்று நாலடியாரில் கூறப்பட்டுள்ளது.
உலக இயல்பினையும் யாக்கை

நிலையாமையினையும் நன்குணர்ந்த மகான்களும், முற்றும் துறந்த முனிவர்களும் தம் வாழ்க்கையை இறைபணி செய்தலிலேயே கழித்துள்ளார்கள். இஃதுணராதவருடைய நிலையை,

"பூக்கைக் கொண்டரன் பொன்னடி
போற்றிலார்
நாக்கைக் கொண்டர னுமை
நவில்கிலா
ராக்கைக் கேயிரை தேடி யலமந்து
காக்கைக்கே யிரை யாகிக் கழிவரே
"

என்ற தேவாரத்தாற் காண்க.

நாம் அரிய மானிடப் பிறவியை யெடுத்தது வயிறு வளர்ப்பதாகிய ஒரு காரியத்தின் பொருட்டா? அந்தோ! உலகில் மிருக பக்ஷியாதி ஜீவன்களுமன்றோ இத்தொழிலைச் செய்கின்றன? நாமும் இதையே செய்தால், நாம் மிருகங்களினும் எங்ஙனம் உயர்ந்தவர்களாவோம். '

மானிடராகப் பிறந்த நாம் யார்? இவ்வுலகம் எத்தன்மைத்து? இதில் நமக்கென்ன சம்பந்தம்? நமக்கும் இத்தேகத்திற்கும் உள்ள சம்பந்தம் எத்தகையது? இவற்றில் எது நித்தியம்? எது அநித்தியம்?" என்று ஆராய்ந்து, நித்தியமான வஸ்துவை யடையு மார்க்கத்தை யுணர்ந்து, ஆத்மார்த்தத்தைப் பெற்றுய்வ தன்றோ நம் கடமையாகும்? இஃதுணர்த்தவே தாயுமானவரும்,

"காக மோடுகழு கலகை நாய்நரிகள் சுற்று
சோறிடு துருத்தியைக்
காலி ரண்டுநவ வாசல் பெற்றுவளர் காமவே
ணடன சாலையை
மோக வாசைமுறி யிட்ட பெட்டியைமு
மலமிகுக் தொழுகு கேணியை
மொய்த்து வெங்கிருமி தத்து கும்பியை முடங்க
லார்கிலாட சாக்கினை அதிகாரம்-க.ச.]

துறவற இயல் கசசக

மாக விந்த்ரதனு மின்னே யொத்திலக வேத மோதிய குலாலனுர்

வினைய வெய்யதடி காரனுன யமன் வந்த டிக்குமொரு மட்கலத்

தேக மானபொயை மெய்யெனக் கருதி யைய வையமிசை வாடவோ

தெரிவ தற்கரிய பிரமமே யமல சிற்சு கோதய விலாசமே"

எனக் கூறியுள்ளார்.

சூரியன் உதிக்க வேண்டிய காலத்தில் உதித்து, அஸ்தமிக்க வேண்டிய காலத்தில் அஸ்தமிக்கிறது. மரங்கள் இலைகளை உதிர்க்க வேண்டிய காலத்தில் உதிர்த்துத் தளிர்க்க வேண்டிய காலத்தில் தளிர்க்கின்றன. அவ்வாறே நாமும், "காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்" என்ற பழமொழியை மனதில் வைத்து, நீரிற் குமிழி போன்ற இவ்வாக்கையைப் பெற்றுள்ள காலத்திலேயே சரியை கிரியை

யோகங்களி லீடுபட்டு, எங்கெந்தக் காரியத்தை எங்கெந்தக் காலத்திற் செய்யவேண்டுமோ அந்தந்தக் காலத்திற் செய்து நம்பிற விப்பயனை யடையவேண்டும். இன்றேல், நாம் பிறவித் துன்பங்களுக் குட்படுவோம். ஆகவே, நாம் அருமையான காலத்தை வீண் போக் காமல் பரோபகார முள்ளவர்களாயிருந்து , ஆத்மார்த்தத்திற்குரிய நூல்களைக் கற்று, யோகமுறைகளை அநுஷ்டித்து, ஒரு பெண் தன் தலைமீதுள்ள தண்ணீர்க் குடத்தைக் கையாற் பற்று து கைகளை வீசிக்கொண்டு நடந்தாலும் எங்கே தண்ணீர்க்குடம் விழுந்து விடுமோ என்று அதன் பேரிலேயே கவனத்தை வைப்பாளோ அது போலவும், சோர நாயகி யொருத்தி தன் வீட்டில் எவ்விதத் தொழிலைச் செய்யினும் தன் ஆசை நாயகன் மீதே எவ்வாறு கவனத் தைச் செலுத்துவாளோ அவ்வாறுகவும்,

என்ன தொழி லியற் றிய போதிலும் அத்துவித நிலைக்குரிய பயன்களை யடைவதி லேயே நாட்டமுடையவர்களாக வேண்டும். இஃதுணர்த்தவே,

"குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே

யுடம்போ டுயிரிடை நட்பு"

என்றார் தேவரும்.

தொண்ணூற்றாறு தத்துவங்களா லமைக்கப்பெற்ற வீட்டினுள் வசிக்கும் ஆன்மாவானது வாத பித்த சிலேத்துமம் என்ற மூன்றனோடும் ஒதுக்குக் குடியிருப்பதே. வாத முதலிய மூன்றனுள் யாதானு மொன்று அதிகாரத்திற் குட்படுமெனின், அதனை அஃது அடக்கி

கும்

தீபாலங்காரம்



ஆளும்

சக்தி வாய்ந்தது மன்று ; நாம் ஒரு வீட்டில் குடிக்கூலிக்கிருக் குங்கால், அவ்வீட்டில் யாதேனும் சச்சரவு எற்படின் வேறு வீட்டிற் குச் செல்வதுபோல், இவ்வான்மாவும் தத்துவங்களா லமைந்த இவ் வீட்டினின்றும் செல்லும். இத்தகைய தன்மைகளேயெல்லா மறிந்தே,

"உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு"

என்று பொய்யா மொழியாரும் கூறியுள்ளார்.

எத்தகையோரும் ஒருநாள் இறப்பது மெய். ஜீவனோ என்றும் அழியாத வஸ்து. ஆதலால், நாம் அநித்தியத்திற்குட்பட்டு அழி யாமல் நித்தியத்தை யுன்னி, என்றும் அழியாத பேரின்பத்தை அடையும் வழிகளில் நின்று, எல்லாம் வல்ல ஈசனைத் தியானித்து, எவ்வுலகத்திற்கும் மேலாகிய மோக்ஷ உலகத்தை யடைவோமாக.

# 35 - ஆம் அதிகாரம்

## துறவு

அகப்பற்றையும் புறப்பற்றையும் ஒழித்து மோக்ஷ வீட்டை நாடுவதே 'துறவு' எனப்படும்.

" அந்தக் காண மடங்கத் துறப்பதுவே
யெந்தத் துறவினுநன் றெந்தாய் பராபரமே"

" நித்திரையிற் செத்தபிண நேருமுடற் கிச்சைவையாச்
சுத்தர்களே நல்ல துறவோர் பராபரமே"

என்றார் தாயுமான சுவாமிகள்.

மக்கள் தங்கள் ஆத்மசொரூபத்தை யறிவதே ஞானமாகும்.

நாம் நமக்குள்ளிருக்கும் கண்டமாகிய ஆன்மாவை யறிந்த பிறகே
அகண்டமாகிய பரமான்மாவை யறியக்கூடும். உள்ளிருக்கும் ஆன்
மாவை யறிவதே தன்னையறிவ தென்பது. தன்னை யறிந்த பின் பர
மான்மாவையறிந்து அதில் ஒன்றுபடும் நிலையே துறவு. தன்னை
யறிந்தாலன்றி அவ னுடன் ஒன்றுபட முடியாது; ஏனெ னில், அவர்
சடப்பொருளல்லர். அவர் சித்ரூபியாதலின்
தன்னையறிந்து அவரை அதிகாரம் - ௩௫.]
துறவற இயல் கருக
அறிவதாயுளது. தன்னையறிந்தவர்களுக்கு ஆண்டவன் பற்றுத லன்றி
வேறுபற்றிராது. இஃதுணர்ந்தே,

" தன்னை யறிந்தாற் றலைவன்மேற் பற்றலது

பின்னையொரு பற்றுமுண்டோ பேசாய்

பராபரமே"

எனத் தாயுமானவரும் கூறியுள்ளார்.

இறைவனைப்பற்ற நான் எனது என்னும் அகங்கார மமகாரத்தை ஒழிக்கவேண்டும். அவற்றுள் அகப்பற்றே புறப்பற்றிற்குக் காரணம். அகப்பற்று அவித்தையால் உண்டாயிற்று. அவித்தைக் குட்பட்ட காலத்தே தன் சுயரூபம் மறக்கப்படுகிறது. ஆன்மாவாகிய தன் சுயரூபத்தைத் தரிசித்தபோது அகப்பற்று ஒழியும். அப்போது, தன்னையன்றி உலகத்திலுள்ள மற்ற நாமரூப தோற்றமெல்லாம் அநித்தியமென்றுணர்ந்து அவற்றின் மீதுள்ள ஆசையையொழித்தால் புறப்பற்றும் ஒழியும். இவ்வாறு தம்மிடத்துள்ள பற்றுக்கள் ஒழியவே எவரும் எவ்வகைத் துன்பத்தினின்றும் விடு பட்டுப் பிரகாசிப்பர் என்பது திண்ணம்.

இதனை,

"யாதனின் யாதனி னீங்கியா னோத
லதனி னதனி னிலன்"

என்ற திருக்குற ளடிகளால் நன்குணர்க.

உலகப்பற்றைவிட்டு எவ்வழியில் சென்றாலும், கடைசியில் ஒரு வழியாகவே யிருக்கிறது. வானரம் ஓர் இடத்திலிருந்து மற்றோ ரிடத்திற்கு அந்தரமாகத் தாண்டும்போதும் மரத்தில் ஏறும் போதும் பாய்ந்தோடும்போதும் அதன் குட்டி அதனை விடாமல் பற்றிக்கொண்டே யிருக்குமாறுபோல, நாமும் நம் பகவானை விடாது பற்றவேண்டும். அவ்வாறு பற்ற அவர் எங்குளார்? எனில், சர்வ வியாபியாகிய அவரைத் தேடிச்செல்லவும் வேண்டுமோ? அவர் நம் உள்ளத்திலேயே உள்ளார். ஆனால் அவரைப் பக்தியால் பற்ற வியலுமேயன்றி

மற்றொன்றாலும் பற்றவியலாது. ஆகவே, ஏனைய பொருள்கள் யாவும் மாயா சங்கற்பிதம், கானலில் தோன்றும் ஜலம், கிளிஞ்சிலில் தோன்றும் வெள்ளி, பழுதையில் தோன்றும் பாம்பு, கட்டையில் தோன்றும் கள்வன் என்றெண்ணி அவற்றை வெறுத்தொழித்துப் பக்தியால் பரப்பிரம்ம சொரூபனாகிய சுப்பகவானைப்பற்றி, அதனாலுண்டாகும் அமிர்தப் பிரவாகத்தை



யுண்டு ஆநந்திக்கும் ஆற்றலையே அத்தியாவசியமாகக் கொள்ள வேண்டும். இஃதுணர்த்தவே திருவள்ளுவப் பயனும்,

"வேண்டி னுண் டாகத் துறக்க துறந்தபி
னீண்டியற் பால பல"

எனத் தெரிவியா நிற்கிறது.

சிலர், 'இல்லறத்தில் பெண்டு

பிள்ளைகளோடு இருந்தால் ஞானம் வருமோ ? அதற்கு முயலவியலுமோ ? யாவையும்விட்டு சந்நியாசம் பெற்றாலன்றோ ஞானம் வரும்' என்று கூறுகிறார்கள். அந்தோ ! இது வியப்பினும் வியப்பன்றோ ! எல்லாவற்றையும் வெறுக்கவும் ஞானத்தைப் பெறவும் எங்குச் செல்ல வேண்டும் ? எவ்வாச்சிரமத்தில் இருப்பவராயினும், வைராக்கியம் பெற்றவர் அப்போதே சந்நியாசம் பெறலாமென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. எந்த நேரத்தில் உலகப் பொருள்களில் வெறுப்புண் டாகிறதோ அந்த நேரமே சந்நியாசத்துக்குரிய காலமாம். அன்றியும், எப்போதும் சந்தோஷம், அபகாரம் செய்தவனுக்குப் பிரதியாக அபகாரம் செய்யாமல் பொறுமையுட னிருத்தல், மனதைக் கவரத்தக்க பொருள்கள் எதிரிலிருந்தாலும்

அவைகளில் விருப்பமில்லாதிருத்தல், பிறர் பொருளை அபகரியாமை, சரீர சுத்தி, சம்சர்க்கத்தில் ஆசையற்றிருத்தல், சாஸ்திர உணர்ச்சி, ஆத்ம ஞானம், சத்தியம், பிறர் தான் கோபங் கொள்ளும்படியான துர்க்கிருத் தியத்தைத் தனக்குச் செய்தாலும் அவர்களிடத்தில் கோபங் கொள்ளாமலிருத்தல் ஆகிய இப்பத்துத் தருமங்களும் யாரிடத்தில் இருக்கின்றனவோ அவரே சந்நியாசத்திற் கருகராவா ர். அக்குணங் களுடையவர்கள் எங்கிருந்தாலுமென்ன ? பிரபஞ்ச வாசனையை ஒழித்துப் பஞ்சேந்திரியங்களை ஜெயித்து, பிரமத்திற்கும் தனக்கு முள்ள ஐக்கிய ஞானத்தை யடைந்து மோக்ஷத்தைப் பெறுவதன்றோ முக்கியம் ? இவ்வாறிருக்க, மேற்சொன்ன குணங்களில் லாதார் உலகப்பற்றில் ஒன்றையும்விட முடியாமலும், முக்திக்கான

வழியில் முயலாமலும் அரிதாகிய இவ்வுத்தம ஜன்மத்தை வீணாக்குகிறார்கள். அவர்கள் தன்மை யாதாகும்?

மனம் ஒரு பற்றையும் எளிதில் விடாது. ஆதலால் பெண்டு பிள்ளை பொருளாதிகளை விட்டுக் கானகஞ் சென்றாலும் மனத்தின் அதிகாரம் - ௨௫.]

## துறவற இயல் ௧௫௩

கண்ணுள்ள பற்று ஒழியாத வரையில் துறவுகொள்வது எங்ஙனம்? ஆகவே,

" சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு "

என்ற பொய்யா மொழிப்படி, அறிவை விளங்கச் செய்தால், ஞானம் உதயமாகி, அது முதிர முதிர எல்லாப் பற்றுக்களும் தூங்கியவன் கைப்பொருள் நழுவி விடுவதுபோல நழுவும் ; நாமும் உய்யலாம். ஐம்புலன்களையும் ஒடுக்கினவன்

இல்லத்திலிருந்த போதிலும் அவன் துறவியே யென்பது சொல்லவேண்டுமோ ? கர்மமும் அவனை யணுகாது. அவன், பார்வைக்குப் புறப்பற்றுடையவனுகக் காணப்படினும், அவனுடைய மனமானது ஒன்றிலும் பற்றின்றி இருக்கும் என்பது நிச்சயம். ஐம்பொறிகளை ஒடுக்காமல் அடவியில் சென்றிருப்போருடைய மனம், உலக போகங்களை அனுபவித்துக் கொண்டிருப்பவர்களுடைய மனதைக் காட்டிலும் அதிகமாகவே அப் போகங்களை நாடும். ஒரு மாத்திலுள்ள கிளைகளை வெட்டினல் அவைகள் கொஞ்ச காலத்தில் தளிர்த்துத் தழைத்து முன் இருந்தபடியாகும் ; அதுபோலவே புறப்பற்றுக்களை மட்டும் விட்டால், அவைகளும் முன்போலவே யாகும் ; துறவு கிட்டாது. அகப்பற்றை அற ஒழித்தாலன்றி அத்துறவிற்கு ஒருவரும் அருகரல்லர்.

இது கருதியே,

" அடல்வேண்டு மைந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய வெல்லா மொருங்கு"

எனத் தெய்வப்புலவரும் திருவாய்மலர்ந்துள்ளார்.

நாம் இறைவன் திருவருள் வழி ஒழுகுதலே நன்னெறி யெனக் கடைப்பிடித்து, ஆன்றோர் விதித்த தியானுதி உபாயங் களைச் செய்துவந்தால் அந்தக்கரணத்திலுள்ள அழுக்குகள் நீங்கும். கண்ணாடி சுத்தமாயிருந்தாலன்றி அதனுள் முகம் பிரதிபலியாது. அதுபோல அந்தக்கரணத்திலுள்ள அழுக்கை யொழித்தா லன்றி ஆத்மாவின் சுத்த சைதன்யம் பிரதிபலியாது. அந்தக் காணம் சுத்தமானுல் ஞானத்தைப் பெறவும், சம்சாரமென்னும் சமுத்திரத்தைக் கடக்கவும்,

பரமாத்மாவைத் தரிசிக்கவுமாகும்.

௨௦

கருசா திருக்குறள்
தீபாலங்காரம் [அறத்துப்பால்

முக்தியை யடைய விரும்பும் நாம் யாதொரு பொருளிடத் தும் பற்றின்றி ஒழுகவேண்டும். ஒரு பொருளின்கண் பற்று அணு வள வுளதேனும் அது ஆலவிருக்ஷ மெனவாய், அதன் விழுது களைப்போலப் பிற பொருள்கள் மீதும் பற்றுதலுண்டாகும். இஃ துணர்த்தவே,

" இயல்பாகு நோன்பிற்கொன் றின்மை யுடைமை
மயலாகு மற்றும் பெயர்த்து"

என்றது முதுமொழி.

இல்லறத்திற்கு முற்றும் மாறுனதும், பரம்பொருளின் கருணை யிலடங்கி நிற்பதும், ஜனன மரண பயங்களை யொழிப்பதும், எந்தப் பிராணிகளோடும் கலவாமல்

தனித்து நின்று செய்யப்படுவதும், ஜீவன் முத்தத் தன்மையை எளிதில் அளிப்பதும், ஒப்புயர்வற்றதும், அநந்தகோடி ஜன்மாந்தரங்களிற் செய்த புண்ணிய கன்மங்களின் பலனக அடையப்படுவதும், சச்சிதானந்த பரம்பொருளோடு தான் அது என்னும் வேற்றுமை யறக்கலந்து நிற்பதுமாகிய துறவறத்தை விரும்பும் எவரும் மேற்கூறியவைகளை யெல்லாம் ஐயந்திரிபற அறிந் தொழுகினலன்றி, யாதொரு பயனும் அடையப் பெருரென்பது திண்ணம். ஆகையாலன்ரு,

" மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்ருர்க் குடம்பு மிகை"

எனப் பெரியாரும் வலியுறுத்திக் காட்டுகிருர் ?

துறவை விரும்பும் எவரும் சற்குருவை யடுத்து, அவரது உபதேச மொழிகளைக் கவனத்துடன் கேட்டு,

பின்னர் அதனை அடிக்கடி சிந்தித்துக் கடவுள் ஆன்மா மோக்ஷம் என்பவைகளின் இலட்சணங்களைப் பற்றிக் கூறியுள்ள ரிஷிகளின் அனுபவ வார்த்தைகளை நன்குணர்ந்து, அவ்வாறே அனுபவிக்க அவாக் கொள்ளவேண்டும். நாம், ' உலகம் நிலையற்றது ; இடைவிடாது மாறிக்கொண்டே யிருக்கும் இயல்புடையது ' என்று அடிக்கடி நிச் சயித்துணரும் அனுபவஞான முதிரப் பெற்று, அகங்காரம் கபடம் காமம் குரோதம் முதலிய துர்க்குணங்களை யொழித்து, நமது தேகத்தைப் பிராரப்த கருமத்திற்குச் சமர்ப்பித்து, சுகம் வந்தாலும் துக்கம் வந்தாலும் சமமாகப் பாவித்து மனோ · விகாரம் கொள்ளா

கருநு திருப்பின், என்றும் அழியாத அத்துவித பதவியை அடைவோம் என்பது நிச்சயம். எந்நூல்களிலும் இவ்வுண்மையே கூறப்படுகிறது. இதனை,

"யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்"

என்ற உத்தரவேதத்தாலு முணரக்கிடக்கிறது.

ஆகவே, இவைகளை யெல்லா மெண்ணி யொழுகுதல் இன்றி யமையாத தன்மையாகும். இன்றேல், எத்தகையரேனும் மனப் பயிற்சி யில்லாதவராய், மேற்கூறிய உண்மைகளைக் கிரகிக்கமாட் டாது, கானலை நீரென்றெண்ணுந் தன்மைபோல உலகத்தை மெய் யென்றெண்ணி,

இந்திரியங்களின் வழியாக விஷயாதிகளிற் புகவிருக்கும் ; பின்னும், விரும்பிய பொருளையடைய அவாவும் ; அதனை அடையாவிடின் குரோதாதி குணங்களும் ஒன்றின்மேல் ஒன்றாகக் கிளம்பி மாயையில் அழுந்த நேரும். இதனைக் குறித்தே பொருளுரையும்,

"பற்றி விடாஅ விடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு"

எனப் புகல்கிறது.

பூர்வம், திருமாலின் அவதாரமான 'ரிஷபர்' என்ற அரசருடைய குமாரராகிய பரதரென்பவர் நீண்ட காலம் இராச்சிய பரிபாலனஞ் செய்து, பின் வைராக்கியம் பெற்று, அவ்விராச்சிய முதலியவற்றைத் துறந்து, அடவியிற் சென்று தவஞ் செய்துகொண்டிருந்தார். அப்போது, ஒருநாள் ஒரு

மான்குட்டியானது அருகி லுள்ள ஆற்றுநீரோடு போவதை அவர் கண்டு, அதன்மேல் இரக்கம் கொண்டு, அதை அந் நீரிலிருந் தெடுத்துத் தமதாச்சிரமத்திற்குக் கொண்டுபோய் வளர்த்துவர அபிமானங்கொண்டு அங்ஙனமே செய்துவந்தார். பிறகு, அக்குட்டி பெரிதாக வளர்ந்து ஓடத் தலைப் பட்டவுடன் காணமற்போயிற்று. அன்றுமுதல் அவருக்கு அவ் வேக்கமே மேலிட் டமையின், அவரடைந்திருந்த அரிய நிலைமைக்கு ஆனி ஏற்பட்டு அதே ஞாபகத்துடன் இறக்க, அது காரணமாக அவரும் மறுபிறவியில் மானய்ப் பிறந்தாரென்று சொல்லப்படுகிறது. ஆகவே, இத்தேகத்தைத் தானென் றபிமானிப்பதான அகப்பற்றும், கடுங்

தேகத்திற்குப் புறம்பாகிய மனைவி, மக்கள், பண்டு பதார்த்தங்கள் முதலிய பிரபஞ்ச தோற்றங்களனைத்தும் தன்னுடையனஎன் றபிமா னிக்கும் புறப்பற்றும் ஒழிந்தாலன்றோ முக்திக்குரியவர்க ளாகலாம்.
இஃதுணர்த்தவே பொய்யில் புலவரும்,

> " தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
> வலைப்பட்டார் மற்றை யவர் "

எனப் புகன்றுளார்.

இருவகை ஆசைகளையும் வெறுத்தாலல்லாமல் பிறவித் துன்பத் தைக் கடக்க வியலாது. பெண்மக்களுங்கூட இம்மர்மத்தை மனத் துட்கொண் டொழுகுவ தவசியம் ; அவர்கட்கும் சந்நியாசம் உண் டென்று அரும்பெரும் நூல்களிலும் அறியக்கிடக்கிறது. ஆகவே, எல்லையில்லாப் பேரின்பத்தை யடைந்து இறுதியில் முத்தியையும் பெறவிரும்பும் ஆண் பெண் என்ற இருபாலாரும் இத்தகைய மர்மங் களை

மனத்துள் வைத்து, ஐம்புலன்களையும் வசப்படுத்தி, உலகப் பற்றுக்களையெல்லாம் அறவொழித்து, ஊமரைப் போலவும், குருட ரைப் போலவும், செவிடரைப் போலவும் திரியின், அவர்கள் திறத் திற் களவுண்டோ ? ஆனால், இங்ஙனமொழுகுவோரும் ஈசுவரனிடத் தில் பக்தியுடையவராய், அவனருளைப் பெற முயன்று, அஞ்ஞான மாகிய திரையை நீக்கி, ஆன்மாவை அறிந்தாலன்றி அந்நிலையை யடையப் பெறுரென்பது திண்ணம். ஆகவே, நாம் பக்தியையும் அதற்குரிய சாதனைகளையும் கொண்டு, நான் எனது என்னும் அகங் கார மமகாரங் களையொழித்து, எல்லாம்வல்ல ஈசனருளைப் பெற் றுய்யுமாறு அவனை என்றும் பிரார்த்திப்போமாக.

# 36 - ஆம் அதிகாரம்
## மெய் யுணர்தல்

---

மோக்ஷ வீட்டையும், அதனை யடையும் வழிகளையும் நன் குணர்தலே, 'மெய்யுணர்தல்' எனப்படும்.

நாம் பிறந்தநாள்முதல் இறக்கும்வரையும் இன்பத்தையும் துன் பத்தையும் மாறி மாறி அனுபவித்துக்கொண்டே யிருக்கிறோம்.



கருள உலகத்திலே தோன்றுவன யாவும் மறைதலைக் காண்கிறோமல்லவா ? இம்மட்டோ ! ஒருபோதும் பிரிய விரும்பாதவரையும் பிரிந்திருக்க நேரிடுகிறது. தம்முயிரினும் அதிகமாக நேசித்த காதலனைக் காதலி யும், பத்தினியைப் பர்த்தாவும், பெற்றோரைப்

பிள்ளைகளும், பிள்ளைகளைப் பெற்றோரும் இழந்து துன்புறுவது இயல்பாக விருக்கிறது. இன்னும், இன்று அழகுடையதாகத் தோன்றும் ஒரு பொருள் நாளை அருவருக்கத்தக்க நிலையை யடைகிறது. இவைகளையெல்லா மறிந்தும் நாம் இவ்வுலகப் பொருள்களையும் இவ்வாக்கையையும் நிலையுள்ளதென்று எண்ணுவோமாயின், அஃது எத்தகைய அறிவீனம்! நாம் அவ்வாறு எண்ணுவதனால் நான் எனது என்னும் பற்றுக்குட்பட்டு, தேகமே நாம் என்ற அபிமானமேலிட்டு, பிரபஞ்சம் மெய்யென்ற மயக்கமுடையோர்களாகிப் பிறவித் துன்பங்களுக்குட் படுகிறோம். இந்த விபரீத ஞானம், ' நாம் யார்? இவ்வுலகம் யாது? இவைகள் வந்தவாறு எங்ஙனம்?'. என்று விசாரியாமையாலுண்டாவதாம். மாயையின் தோற்றமாகிய இப்பிரபஞ்சம், கானல் நீர்

பொய் யென்றுணர்ந்த பின்னும் தோன்றிக் கொண்டே யிருப்பதுபோல, இருந்துகொண்டே யிருக்கும். இதனலன்றோ ஒரு சாரார் மாயையும் பிரம்மத்தைப்போல நித்தியமேயென்று கூறுகிருர்கள். எனினும், ஜீவன் சம்பந்தப்பட்டவரையில் இம்மாயை யழிக்கக்கூடியதே யாகும். அனுபவத்தில் மாயையை வென்றோரே ஞானத்தையடைந் தவராவார். அவ்வாறின்றி அஞ்ஞான நிலையிலுள்ளோர் மாயைக்குட் பட்டுத் தாழ்ந்த பிறவியை யடைவாரென்பது திண்ணம். இஃ துணர்த்தவே,

" பொருளல் லவற்றைப் பொருளென் றுணரு
மருளானு மாணப் பிறப்பு "

என்றது முப்பாலும்.

மாயையால் நமக்கொரு கெடுதியும் இல்லையென்றே சொல்ல லாம். ஆனால், அதை மெய்யென்று எண்ணும் அஞ்ஞான மாகிய மயக் கமே பந்தத்தையுண்டாக்கி நம்மைப் பிறவிக்குட்படுத்துகிற தென்ப துண்மை. அதிட்டானமாகிய கயிறு தோன்றுமட்டுமே ஆரோப மாகிய பாம்பு மெய்யாகத் தோன்றும் ; கயிறு தோன்றியதே, பாம்பு பொய்யென்று விளங்கி விடும் ; அது போலவே, உண்மை.



யுணர்ந்தால் பிரபஞ்சத் தோற்றமும் பொய்த் தோற்றமென வுணர்ந்து, விபரீத ஞானமுமொழிந்து முக்திக்குரியவராகலாம். இதனை,

“ இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி

மாசறு காட்சி யவர்க்கு"

என்ற பொய்யா மொழியார் வாக்கே வலியுறுத்துகிறது.

இவ்வாறிருக்க, உலகில் சிலர் ஞானமடையாமலே ஐபுணர்வை யுடைய மனத்தை யடக்குவர். ஆனால், அவர்கட்கு முக்தி கிடைக்கும் என்று சொல்லப்படவில்லை. ஏனெனில், அவர்கள் பிரபஞ்சப் பொருள்களின் பாகுபாடுகளை யறிந்து அவற்றை விலக்காததால், அப்பொருள்களை விரும்பிச்சென்று, அவை கிட்டாதபோது குரோத முடையராய் அறிவிழந்து, பலவாகிய பாவச் செய்கைகளுக் குட் படுவர். பிறகு, குரோதம் அடங்கினும் இச்சை ஒழியாது. ஆகவே, ஞானம் சித்திப்பது எங்ஙனம்?

" எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்

மெய்ப்பொருள் காண்ப தறிவு"

என்ற பெருநாவலர் வாக்கியப்படி, அறிவின் விசேடத்தால் பொருள் களின் நிலைமையை உள்ளபடி யுணர்ந்து, சந்தேக விபரீதங்களினின் றும் நீங்கி அவ்வாறொழுகவே முற்பட வேண்டும். அங்ஙனம் அறிந் தொழுகவல்லவர்களே இம்மையில் எல்லோராலும் புகழப்பட்டு, மறுமையிலும் மோக்ஷ சாம்பிராச்சியத்தை எளிதில் அடைபவ ராவர். * இதனை,

" ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து"

" ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயனின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு"

என்ற உத்தரவேதக் கூற்றுக்களான் உணரலாம்.

மனம் வாயுவின் அம்சம். அது

மாயையால் மாறிக்கொண்டே யிருக்கும் இயல்புடையது. ஆகையினாற்றான், நாம் மெய்யுணர்வின்றி அஞ்ஞானத்திற்குட்பட்டு, விபரீதஞான முடையவர்களாக விருக்கிறோம். ஆன்மாக்கள் தமது வாழ்நாட்களில் இன்பங்களை அனுபவிக்



கும் பொருட்டு ஏற்பட்டுள்ள பற்பல செல்வங்களுள்ளும் முதன்மை யானது கல்விச் செல்வம். அஃதும் இருவகைத்து. ஒன்று தாமே எவருடைய உதவியுமின்றி தம்மறிவைக்கொண்டு பன்முறை யாராய்ந் துணர்தல்; மற்றொன்று கற்றுணர்ந்த பெரியோர்பாற் சென்று உறுதிப்பொருள்களை அவர்களுரைக்கப் பன்முறையுங் கேட்டுத் தெளிதல். இவைகளில் முன்னையதைவிடப் பின்னையதே சாலச் சிறப்புடைத்து. இவை

கருதியே திருமாலின் அம்ஸமாகிய ஸ்ரீ ராமபிரானும், ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவும் முறையே விசுவாமித்ரர் சாந்தீபமுனி முதலியவர்களிடம் கல்வி கற்றனர் போலும். ஆகவே, எவரும் அறிஞர்பால் கேட்டுணர்ந்து தமக்குண்டாகும் ஐயங்களை அவ்வப்போதே நீக்கிக்கொள்ளுதல்வேண்டும். இவ்வாறு சாஸ்திர விசாரணையாலும் ஞானாசிரியருபதேசத்தாலும் மோக்ஷத்திற்குரிய வழிகளிலீடுபட்டு அஞ்ஞானம் நீங்கப்பெறின் ஞானமுதயமாம்; இரண்டற்ற அத்துவித நிலையையும் அடையலாம். இவற்றை புணர்த்தவே,

" கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி "

என வாயுறை வாழ்த்தும் வழுத்தா நிற்கிறது.

இங்ஙனம் சாஸ்திர விசாரணையாலும் குரு உபதேசத்தாலும் பெற்ற ஞானம் தீபம் போன்றது. தீபம் பிரகாசம் பொருந்தியதெனினும் காற்றினால் அலைப்புண்டால், அது பொருள்களை நன்றாக விளங்கச்செய்யாது . அதுபோலவே பிரபஞ்ச மயக்கத்தால், 'நாம் பிரம்மமோ அல்லவோ ? முடிவான அநுபவம் ஏகமோ துவைதமோ ?' என்ற சந்தேகக்காற்று வீசினால் ஞானமாகிய தீபமும் தானளிக்கக்கூடிய பயனைச் சரியாய் அளியாது. ஆகையால், கேட்டதைச் சிந்திப்பதான மனனம் என்ற கிரியால் அத்தீபத்தைக் காக்கவேண்டும். ஞானமாகிய தீபம் அங்ஙனம் காக்கப்பட்டாலும் சுடர் விளக்கிற்குந் தூண்டுகோலொன்று வேண்டப்படுவதுபோல, நாம் சரியை கிரியை

யாதிகளான தூண்டுகோலைப் பற்றவேண்டும்.

" பிறப்பென்னும் பேதமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு "

என்ற முதுமொழிப்படி, அங்கிங்கெனாதபடி எங்கும் விளங்கா நின்ற ககூ0

திருக்குறள் தீபாலங்காரம்
[அறத்துப்பால்.

பரம்பொருளைச் சுருதி யுக்திகளா லுணர்ந்து நான் எனது என்னும் அகப்பற்றையும் புறப்பற்றையும் ஒழித்தவர் இல்லறத்திலேயே இருந்தபோதிலும், அவர்கள் தாமரையிலையிலுள்ள ஜலம் போலவும் ஓட்டுடன் இருந்தாலும் அந்த ஓட்டோடு பற்றில்லாத புளியம்பழம் போலவும்

பற்றின்றி யிருப்பாராதலால், அவர்களைப் பிறவிக்குக் காரணமான இருவினைப் பயன்களும் அணுகாவாம். இதனை,

"ஓர்த்துள்ள முள்ள துணரி னொருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு"

என்ற திருக்குற ளடிகளால் நன்குணர்க. இன்னும், அவர்கள் ஞானத்தின் படிகளாகிய சரியை கிரியை யாதிகளை அனுஷ்டித்து வரின், எத்தகைய துன்பங்கட்கு முட்படாமல் என்றும் அழியாத மோக்ஷமாகிய இரண்டற்ற அத்துவித நிலையையும் அடைபவராவ ரென்பதற் கையமில்லை. இஃதுணர்ந்தே,

"சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்"

என்று மாதானுபங்கியாரும் கூறியுள்ளார்.

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்

மெய்ப்பொருள் காண்ப தறிவு"

என்ற வேதவாக்கியப்படி, நாம் எப்பொருளின் கண்ணுமுள்ள மெய்ப்பொருளை யுணர்ந்து, ஆசையும் அருவருப்பும் அற்றவராகி, நிலமுதல் உயிரிறுதியா யுள்ளனவெல்லாம் தத்துவக் கூட்டமென் றறிந்து, அவற்றைத் தத்தங் காரணங்களில் முறையே ஒடுக்கிச் சென்று, இறுதியில் காரண காரியங்க ளிரண்டுமின்றி நிற்பது எதுவோ அதுவாகிய பரம்பொருளைக் கண்டு, அஞ்ஞானமாகிய இருளையகற்றி , அநந்தகோடி சூரியரைப்போலப் பிரகாசிக்கும் அப் பரம்பொருளையே யெண்ணி, நினைப்பு மறப்பு மற்றவராய் விளங் கினால், அப்போது இச்சை கோபம் துயரம் என்ற வினைப்பயன் களுக்கு இலக்காகமாட்டோம் . இஃதுணர்த்தவே திருவள்ளுவப் பயனும்,

"காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற

ஒமங் கெடக்கெடு நோய்"
எனக் கூறியுள்ளது.



ஆகவே, அரிதாகிய பிறவியையும் அறிவையும் பெற்ற நாம் அனைவரும்,

"உணர்வாவ தெல்லா முடம்பின் பயனே
யுணர்க வுணர்வுடை யார்"

என்ற நம்முதாட்டியார் வேதவாக்கியப்படி, முக்திக்கான வழிகளைச் சந்தேக விபரீதங்களின்றி யுணர்ந்து, எங்கும் விளங்காநின்ற திருவருட் சோதியை அடைய என்றும் முயலுவோமாக.

---

## 37 - ஆம் அதிகாரம்
## அவா வறுத்தல்

---

ஒரு பொருளை இச்சித்தல் பிறவிக்குக் காரணமாதலால், அவ்விச் சையை அற ஒழிப்பதே, " அவா வறுத்தல்" எனப்படும்.

" வாசியு மூசியும் பேசி வகையினாற்
பேசி யிருந்து பிதற்றிப் பயனில்லை
யாசையு மன்பு மறுமி னறுத்தபி
னீச னிருந்த விடமெளி தாமே"

என்றார் திருமூலனார்.

பரம்பொருளால் படைக்கப்பட்ட எவ்வுயிர்க்கும், சக்கரம் போலச் சுழன்றுகொண்டு வரும் பிறவித் துன்பத்தை விளைவிப்பது ஆசையென்னும் பொருளே. இப்பொருள் இன்பம் பயப்பதுபோலத் தோன்றி இறுதியில் துன்பத்தை விளைவிக்கிறது. உலகிலுள்ள பொருள்கள் புலன்களுக்கு அற்பசுகத்தைக் கொடுக்கின்றனவே யன்றிப் பெரும்பான்மை கெடுதியையே விளைவிக்கின்றன. நம் வாழ் நாளில்

யாதானும் ஒரு பொருளை
இச்சிப்போமானால் அது கிடைப்பது
அரிதாகவே யிருக்கிறது. ஆகலின், நமது
இச்சை நிறைவேறாமலும் போவது
இயற்கையே. அங்ஙனம் இச்சித்த
இச்சை நிறைவேறப் பெறாதோர்
இறந்தபின் அதனை யடைய மீண்டும்
பிறவி யெடுக்கவேண்டி யிருக்கிறது. பூர்வம்,
திருமாலின் அவதாரமாக அவ

தரித்தவரும், 'ரிஷபர்' என்னும்
பெயருடையவருமான ஓர் அரசருக்குப்
பிறந்த 'பரதர்' என்பவர் அடுத்த பிறவியில்
மானாகப் பிறக்க





சேர்ந்த வரலாறு சொல்லப்பட்டிருப்பதைக் கவனிக்க.

நிலையற்ற பொருள்களின் மேல் பற்று வைத்தால், நம்
ஆதலால்,

மனம் புண்

பட்டு, பிறப்பிறப்பென்னும் பெருஞ் சாகரத்தில் அழுந்தி,
பொருளாகிய பரம்பொருளை யடைய வியலாமற்போம்.

மெய்ப்

உத்தர

வேதமும்,

"அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ்

ஞான்றுந்

தவாஅப் பிறப்பீனும் வித்து"

எனக் கூறியுள்ளது.

ஆகவே, இத்தகைய துன்பத்தை யுணர்ந்தபின்னுவது ஆசையை ஒழிப்பது அவசியமன்றோ? இவ்வாசைக்குப் பிறப்பிடம் மனமாதலால் அது எதையும் விரும்பிச் செல்லாமல் நிலை பெறுவதற்குப் பிராண வாயுவை யடக்குவதே உபாயமென்பர் ஒருசாரார்; மற்றொரு சாரார் வாயுவை ஒடுக்கி மனதை வசப்படுத்துவது கஷ்டமாதலால், அந்தக் கஷ்டமில்லாமல் ஆசையை யடக்குவதே உபாயமென்பர். ஆசையை அடக்கி மனதை யொடுக்கும் முறையே சிறந்ததாம்.

"யாதனின் யாதனி னீங்கியா னோதல்
லதனி னதனி னிலன்"

என்ற பொய்யா மொழியாரின் பொருளுரைப்படி, ஒரு பொருளி லுள்ள ஆசையை ஒழித்தால், அதனுல் வருந்துன்பம் சிறிதும் இல்லை. பிறவித் துன்பத்தை நன்குணர வல்ல மக்களாகிய நாம் பிறவாமையை வேண்டுவதே அறிவுடைமை; யாதொரு பொருளை யும் இச்சியாமையால் அது கைவரப்பெறும் என்பது நிச்சயம். இஃதுணர்த்தவே,

"வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை
மற்றது
வேண்டாமை வேண்ட வரும்"

என்றது முப்பால்.

'ஆசை ஒடுங்கினல் மனம் ஒன்றிலும் செல்லாமல் ஒரு நிலையை அடைகிறது. அப்போது இடையறு இன்பம் நுகரப்படுகிறது. ஒருநிலைப்பட்ட மனம் பிறவாமையை இச்சித்து, அதற்குரிய யோக வழிகளி லீடுபடுங்கால் இன்பத்தை அனுபவிக்கிறது. அவ் வின்பமே பேரின்ப மெனப்படும். அங்ஙனம் ஒழுகுவோரே, ' ஜீவன் முத்தர்,



பிறவியை அறுப்பவர்' எனப்படுவர். அவர்தம் பெருமை இவ்வுலகத்திலும் மறுவுலகத்திலும் பிரகாசிப்பதாயுளது. இதனை,

"வேண்டாமை யன்ன விழுச்செல்வ மீண்டில்லை
யாண்டு மஃதொப்ப தில்"

என்ற நாயனருடைய வேதவாக்கியத்தால் நன்குணர்க.

ஆசையானது உலகமாயையால் தோன்றும் மண், பெண்,

பொன் என்ற மூன்று வழிகளில் வருவதாயுளது. இப்பொருள் களை விரும்பி அடைந்தோர் மேன்மேலும் அவாவுற்றுப் பல பிறவி களைப்பெற்றுத் துன்புறுவர். கிடைத்ததைக்கொண்டு திருப்தி யடைவோர் மிகச் சிலரே. பெருஞ்செல்வத்தைப் பெற்றோரும் திருப்தியடையாது, ரசவாதவித்தை வேண்டுமென் றலைவர். அவர் கள் முடிவில் அடையும் பயன் ஒன்று மின்றெனினும், ஆசை என்ற பேய் அதை அறியவொட்டாமல் செய்கிறது. இத்தன்மையை அறிந்தே தாயுமானவரும்,

“ ஆசைக்கொ ரளவில்லை யகிலமெல்
லாங்கட்டி
யாளினுங் கடன்மீதிலே
ஆணைசெல வேநினைவ ரளகேச னிகராக
வம்பொன்மிக வைத்தபேரு

நேசித்து ரசவாத வித்தைக்க லைந்திடுவர்
நெடுநா ளிருந்தபேரு
நிலையாக வேயினுங் காயகற் பந்தேடி
நெஞ்சுபுண் ணவரெல்லாம்
யோசிக்கும் வேளையிற் பசிதீர வுண்பது
முறங்குவது மாகமுடியு
முன்னதே போதுநா னெனக்
குள றியே
யொன்றைவிட் டொன்றுபற்றிப்
பாசக் கடற்குளே வீழாமல் மனதற்ற
பரிசுத்த நிலையையருள்வாய்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற
நிறைகின்ற
பரிபூரணா னந்தமே"
எனத் திருவாய்மலர்ந் துள்ளார்.

பெண் ஆசையோ யாவற்றினும் கொடியது. இவ்வாசையானது சிற்றின்ப மயக்கத்தால் விளைவது. இவ்வாசையே எவரையும் அழிக் கும் இயல்புடையது.

இதனால் தாழ்ந்தநிலை
யடைந்தோர் கோடானு கோடிச்

திருக்குறள் தீபாலங்காரம்
[அறத்துப்பால் கோடியாம். இவ்வாசையால் மனம் மொத்துண்டு அலைபுமாயின், கற்ற கல்வியும், கேட்ட கேள்வியும், மனவலிமையும் அழியுமென் பதற் கையமில்லை. ஆகலின் , பெண்ணாசை யுடையோர் ஈசனை வழி படுவது எங்ஙனம் ? இதுகருதியே, சிவஞானச் செல்வராகிய நம் தாயுமானவரும்,

" ஆசையெனும் பெருங்காற்று டிலவம்பஞ்
செனவுமன தலையுங் காலம்
மோசம்வரு மிதனாலே கற்றதுங்கேட்ட
துந்தூர்ந்து முத்திக் கான
நேசமுநல் வாசமும்போய்ப் புலனாயிற்
கொடுமைபற்றி நிற்ப ரந்தோ
தேசபழுத் தருள்பழுத்த பராபரமே

கிராசையின்றேற் றெய்வ முண்டோ"
எனக் கூறியுள்ளார்.

ஆகவே, ஆசையை ஒழித்தோரே முக்திக் குரியவராவர். நாம் பிரபஞ்சத் தோற்றமாகிய மாயையின்கண் வைத்துள்ள ஆசையை ஒழிப்போமானல், எப்பொருளின் மெய்ப்பொருளையு முணர்ந்து,பரம் பொருளின் அருளென்னும் தோணியைக் கண்டு, முக்திக்குரிய வழி களி லீடுபட்டு, இரண்டற்ற அத்துவித நிலைக்குரியவராவோம். தெய் வப்புலமை வாய்ந்த திருவள்ளுவரும்,

"தூஉய்மை யென்ப தவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும்"

என்றறிவுறுத்தினர்.

மனம் அவாவின் சொரூபமாதலால், அது உயிர்கட்கெல்லாம் எக்காலத்திலும் பிறவியை விளைவிப்பதற்குக் காரணமாயுள்ளது. சாதாரணமாக உலகில்

ஒன்றைக் கண்டபோதும், கேட்டபோதும், அதை மனம் இச்சிக்குமே ஒழிய வெறுக்காது. ஆகவே, மனம் இச் சித்த வழியே ஐம்புலன்களையும் செல்லவொட்டாமல் தடுப்போரே ஆசையற்றவர் என்னலாம்.

"அற்றவ ரென்பா ரவாவற்ருர் மற்றையா
ரற்ருக வற்ற திலர்"

என்ற பொருளுரைப்படி, மற்றைக் காரணங்க ளொழிந்து அவா வென்ற வொன்று மாத்திரம் மனதில் இருக்குமாகுல், அது பலவகை யான நன்னெறிகளையும் மறப்பித்து, பின்னும் துன்பத்தை விளை வித்துப் பிறவி வழியிலே தள்ளவல்லதாயுளது. ஆகலால், முக்திக் அதிகாரம் - ௩எ.] துறவற இயல் க்கு குரிய மக்களாகிய நாம் ஆசையென்ற கொடி ய பாவியை அறுத்தலே முதற்கடமையாகும். இஃதுணர்த்தவே,

"அஞ்சுவ தோரு மறனே யொருவனை
வஞ்சிப்ப தோரு மவா"

என்றார் செந்நாப்போதார்.

யாவையும் விட்டுச் சந்நியாசம் பெற்று அடவியிற் சென்றிருந் தாலும், ஆசை ஒழியாதவரையில் அவ்வாறு சென்றவர் மனம் ஒவ்வொன்றையும் நாடிக்கொண்டே யிருக்கும். ஆதலால், பார்வைக்கு அவாவற்றவராகத் தோன்றுவாரெனினும், சொற்ப காலத்தில் இருமைப் பயனையும் இழப்பரென்பது திண்ணம். மாதாநுபங்கியாரும்,

"அவாவினை யாற்ற வறுப்பிற் றவாவினை
தான்வேண்டு மாற்றான் வரும்"

எனக் கூறியுள்ளார்.

ஆசைக்கு இடம் கொடுத்தால், ஆஹா! அதன் தீவிரதாத்தை என் சொல்வது! அது அதிக விரைவில் பெருகும். அதனால் மன வலிமையும் தேகவலிமையுங் குன்றும்.

மக்களுக்கோ பிணி, மூப்பு, சாக்காடு முதலியன வியற்கையா யுண்டு. ஆசையினிடத்திலோ அவை எட்டியும் பாரா. எல்லாக்கேட்டிற்குங் காரணமான ஆசையை எப்பாடுபட்டேனும் ஒவ்வொருவரும் ஒழிக்க முயலவேண்டும். இன் றேல், நாம் அளவிலாத துன்பங்களுக்கு மேன்மேலும் ஆளாவோம். இதனை வேதவாக்கியமாகிய திருக்குறளும்,

" அவாவில்லார்க் கில்லாகுந் துன்பமஃ
தூண்டேற்
றவாஅது மேன்மேல் வரும்"

என்று வலியுறுத்துகிறது.

ஒரு பொருளின்மீது ஆசைவைத்தால் அல்லது ஒரு பொருளை அடைய விரும்பினுல், அதை அடைவதற்காக முயன்று அடைந்தும் திருப்தியடையாமல், பின்னும் துன்புற்று இவ்வுலகத்திலும்

சுக மிழந்து மறுவுலகத்திலும் கொடிய நரகத்திற்காளாகிப் பிறவிக்குட் பட வரும். ஆனால், அதை விடுவதோ யாவருக்கும் கஷ்டமாகவிருக் கிறது. எனினும் அது சாத்தியமேயாம். ஆசையை ஒழித்தோர் அவ் வுலகத்துமன்றி இவ்வுலகத்தும் ஆனந்தத்தையே அநுபவிப்பர். இஃதுணர்த்தவே,



" இன்ப மிடையறா தீண்டு மவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின் "

எனமொழிந்தார் ஆசிரியர்.

பொதுவாக, இன்பம் துன்பம் லாபம் நஷ்டம் நியாயம் அநியா யம் என்பவற்றைக் கவனியாது தன்னலமே கருதித் தத்தளிக்கச் செய்வது இவ்வாசையே . இவ்வாசைக் குட்பட்டோர் எக்காலத்தும் திருப்தியடைவதில்லை என்பது திண்ணம்.

ஒருகாலத்தும் பூர்த்தி யாகாத இவ்வாசையை விட்டோரே எல்லா நன்மைகளையும் ஒருங்கு பெற்றவராவர் ; இத்தகையோரே ஜீவன்முத்தர் எனப்படுவர். ஆகையாலன்றோ,

"ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
போரா வியற்கை தரும்"

எனத் திருவள்ளுவனார் வைப்பும் தெரிவிக்கிறது ?

ஆன்மா பந்திக்கப்பட்டிருக்கும் வகையை உற்று நோக்கினல், அது மிகவும் ஆச்சரியப்படத் தக்கதாகவே யிருக்கிறது . உல கப்பற்றை முற்றுமொழித்துத் துறவு பூண்டோமென்று சொல் லிக் கொள்பவர்களுள் பலரைப் பார்த்தால், அவர்கள் சில பற்றுக் களினின்று நீங்கி வேறு சில ஆசைகளாற் பந்திக்கப்பட்டவர்க ளாகவே

காணப்படுகிறார்கள். எனினும், அது அவர்களுடைய குற்றமன்று. பின் என்னையோவெனின், ஒரேமுறையில் நினைத்தவுடனே சகல பற்றையும் அறவே விலக்குவது மிகவும் அருமை. அன்றியும், உலகம் நடைபெறுவதற்காக ஒருவர்க்கொருவர் அன்பு வைத்து நடக்க வேண்டியதும், உலகத்திலுள்ள சில பொருள்களில் பற்று வைக்கவேண்டியதும் அவசியமாகவே இருக்கின்றன. ஆகவே, நாம் திடீரென்று முற்றும் விடமுடியாத ஆசையைச் சிறிது சிறிதாகவிட்டு, ஜீவன் முக்தியடைவதற்கான வழிகளிலேயே நாட்டமுடையவராய் , நம்நாளிற் பெரும்பாகத்தைச் செலவழிக்க முயலவேண்டும். இங்ஙனம் செய்வோமாயின் நமக்கு உண்மையான சந்தோஷமும் மன ஆறுதலும் உண்டாகும். இறுதியில், ஆசையென்னும் கொடிய பிணியும்

வேரோடறும். எல்லாம்வல்ல இறைவனும் அங்ஙனமே அருள்புரிவான்.

துறவறவியல்

முற்றிற்று.

---

## 38 - ஆம் அதிகாரம்

### ஊழ்

---

ஜீவனது முன் செய்த நல்வினை தீவினைப் பயன்களைப் பெற்றனுபவிப்பதற் கேதுவாகிய நியதியே, 'ஊழ்' எனப்படும்.

" அழுதாற் பயனென்ன நொந்தாற்
பயனென்ன வாவதில்லை
தொழுதாற் பயனென்ன நின்னை
யொருவர் சுடவுரைத்த
பழுதாற் பயனென்ன நன்மையுந்
தீமையும் பங்கயத்தோ
னெழுதாப் படிவரு மோசலி யாதிரொன்

னேழைநெஞ்சே" என்றார் திருவெண்காட்டடிகள்.

மக்களாகிய நாம் அனைவரும் முற்பிறவிகளிற் செய்த நன்மை தீமைகளின் பயன்களை அநுபவிப்பதற்காகவே இப்பிறவியை யெடுத் திருக்கிறோம். யாவும் ஊழின்படியே உண்டாவதாயுளது. ஊழால் வரும் இன்ப துன்பங்களை அநுபவித் தொழித்தால் பிராரப்த கன்மம் தொலையும்; அதனை அநுபவிப்பதற் கிடமாயிருக்கும் சரீரமும் ஒழியும். அநுபவித்தாலல்லாமல் வினைப்பயனை யறுக்க முடியாது. இதனை,

"தாந்தாமுற் செய்தவினை தாமே யனுபவிப்பார்
பூந்தா மறையோன் பொறிவழியே—வேந்தே
யொறுத்தாரை யென்செயலா மூரெல்லா மொன்று

வெறுத்தாலும் போமோ விதி"
என்ற தெய்வத் தமிழரசி திருவாக்கானு முணர்க.

நன்மை விதைத்தால் நன்மை விளையும்; தீமை விதைத்தால் தீமை விளையும். பெரிய பதவியையும் மிகுந்த அறிவையும் பெற்றோரும், இன்னின்ன காலத்தில் இன்னின்னபடி நடக்கும் என்று கடவுளால் விதிக்கப்பட்டபடி, நன்மையையோ தீமையையோ அனுபவித்தே தீரவேண்டும். 'கேடு வரும் பின்னே மதி கெட்டு வரும் முன்னே' 'யானை வரும் பின்னே மணியோசை வரும் முன்னே' என்றபடி, நல்வினை தீவினைகள் நமது கண்களுக்குப் புலப் படாவிடினும், நாம் அடையவிருக்கும் கதிக்குத் தகுந்தபடி

தாகவே மனதில் ஒரு மாற்றம் உண்டாவதுண்டு. அதுவே நம் பிற்கால நிகழ்ச்சிக்கு அறிகுறியாகும். முப்பத்து முக்கோடி தேவர்களும் சேவிக்க ரத்ன சிங்காதனத்தின்மீது வீற்றிருந்து தேவலோகத்தை யாளாநின்ற தேவேந்திரனுக்கும் குருவை வரவேற்காத காரணமாக ஊழ்வினை வந்துற்றகாலத்துச் செல்வங் குறைந்தது. அது வினைப்பயனென் றுணராத இந்திரன், 'உபாயம் தேடுகிற வழியிலே அபாயம் சம்பவிக்கும்' என்றபடி, துவட்டாவின் குமாரனை விசுவரூபனைக் குருவாகக்கொண்டு கொடிய துன்பங்களுக் குட்படவில்லையா? இவைகளை யெல்லா முணர்ந்தவே,

" ஆகூழாற் றோன்று மசைவின்மை கைப்பொருள்
போகூழாற் றோன்று மடி "
" பேதைப் படுக்கு மிழவூ ழறிவகற்று
மாகலூ ழுற்றக் கடை "
என உத்தரவேதமும் உரைத்தது.

ஆகவே, ' சகலசாஸ்திர ஆராய்ச்சியையும், நுட்பமான அறிவை யும், நற்குண நற்செய்கைகளையும் ஒருங்கு பெற்றுள்ளோரும், ஊழ் வினையின் பயனால், ' விதிக்குப்புத்தி அநுசாரணை ' என்றபடி, ' மாறு பட்ட எண்ணமுடையோராய் இடருறவேவரும் ' என்பது வலியுறுத் தவும் வேண்டுமோ? பூர்வம், நிடதநாட்டு மன்னனை நளன் எத் தகைய குணம் வாய்ந்தவன் என்பது யாவரும் அறிந்த விஷய மன்றோ? அவ்வாறிருந்தும் அவனுக்கு வினைவசத்தா லுண்டான அறிவே மேம்பட்டது; அவன், சூதினால்

தீங்கு வருமென்று யாவராலும்
தடுக்கப்படும் கேளாது, நாடிழந்து,
மனைவி மக்களைப் பிரிந்து, உருமாறி,
தன்னையொத்த மன்னனிடம் ஏவலாளாக
இருக்க நேர்ந்ததும் எதனால்? ஊழ்
வினையாலன்றோ? இஃதுணர்த்தவே
திருவள்ளுவப்பயனும்,

"நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்தன்
னுண்மை யறிவே மிகும்"

எனக் கூறியுள்ளது.

ஒருவன் மூடனாயிருத்தற்கும்
விவேகியா யிருத்தற்கும் ஊழே
காரணமென்பது கரதலாமலகமாம்.
இதனாலேயே உலகில் செல்
வத்தையும் அறிவையும் ஒருங்குபெறுவது
அரிதாயுள்ளது. இதனை,


"இருவே றுலகத் தியற்கை திருவேறு

தெள்ளிய ராதலும் வேறு"
என்ற பொய்யா மொழியார் கூற்றும் புகலுகிறது.

அறிவைக்கொடுக்கும் ஊழும், செல்வத்தைக் கொடுக்கும் ஊழும் வேறு என்பதை நாம் கண்கூடாகக் காண்கிறோம். நற்குண நற் செய்கைகளை யுடையரா யிருந்தும் வறுமைக் குட்படுவதும், பொரு ளுடையரா யிருந்தும் இரக்கம் ஈகை முதலிய நற்குணங்களில்லாமல் உலோபியாய் வாழ்வதும் உண்டு. இவையனைத்தும் ஊழ்வினையின் பயனே. ஆகவே, ஊழ்வினையைத் தடுக்க யாவராலு மியலாது. நல் வினையோ தீவினையோ ஊழால் வந்துற்ற காலத்து, அதனை அனுப வித்தே தீரவேண்டும். போகூழ் வந்த காலத்து எப்பொருளும் நிலையாமல் போய்விடும். மதுரையின்கண் அரசாண்ட வீரபாண்டிய னுடைய அருந்தவப் புதல்வராகிய அபிடேக பாண்டியன் முடி சூட்டப்

பெற்றபோது, வீரபாண்டியனுடைய காமக்கிழத்தியர் களால் அம்முடி களவாடப்பட்டது. பின்னர் அது, "சிவாய நம வென்று சிந்தித்திருப்போர்க் கபாய மொருநாளுமில்லை" என்ற நம் மூதாட்டியார் வாக்கியப்படி, சோமசுந்தரப் பெருமானுடைய திரு வருட் கருணையால் கிடைக்கப்பெற்றது . மறுமுறையும் அம்முடி பகைவரால் கவரப்பட்டுத் திரும்பி வந்தது. இந்நிகழ்ச்சிக்குக் காரணம் ஊழ்வினை யல்லவா ? இஃதறிவுறுத்தவே திருவள்ளுவரும்,

"நல்லவை யெல்லாஅந் தீயவாந் தீயவு
நல்லவாஞ் செல்வஞ் செயற்கு"

"பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்துச்
சொரியினும் போகா தம"

எனப் பலவாறு பணித்தார். ஆதலால், இந்நில வுலகின்கண் உயிர் களால் அனுபவிக்கப்பட்டனவும்

அனுபவிக்கப்படுகின்றனவும் அனுபவிக்க விருப்பனவுமாகிய இன்பதுன்பங்களுக்கெல்லாம் காரணம் அவைகள் முற்பவத்திலாக்கிய வினைகளேயாம். இம்மையில் இயற்று வனயாவும் மறுமையின் மூட்டைகளல்லவோ ? காரணமின்றிக் காரியம் நிகழாது. சாபானுக்கிரகம் பெற்ற மாண்டவியர் கழு வேற்றப்பட்டுக் கடுந்துன்பமடைந்து , ஆணிமாண்டவியர் எனப் பெயர் பெற்றதும் ஊழ் வினையின் பயனேயாம். சிவபக்தனை இராவணேஸ்வரன்

திருக்குறள் தீபாலங்காரம் [அறத்துப்பால்

சீதாபிராட்டியாரை எடுத்துச் சென்றதும், அது காரணமாகத் தன்

அருந்தவப் பயனையும் புயபலத்தைபு மிழந்து அழியவிருந்ததும் ஊழ் வினையின் பயனே. ஆகையாலன்றோ செந் நாப்போதாரும்,

" வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது "

எனத் திருவாய் மலர்வாராயினர் ?

இவ்வாறிருக்க, உலக அநுபவமோ நல்வினை வந்துற்ற காலத்து மகிழ்வதும் தீவினை வந்துற்ற காலத்துத் துன்புறுவதுமா யுளது. இங்ஙனம் மகிழ்வதும் இகழ்வதும் ஆராய்ச்சியின்மையால் நிகழ்வதாம். பூர்வம், குருகுலதிலகனை பரீட்சித்து மகாராசன் சிருங்க முனிவருடைய சாபத்திற் குட்பட்டுச் சமுத்திர மத்தியிற் சென் றிருந்தும் வினைப்பயன் விடவில்லை. ஏழா நாளே இறந்துபட்டான். இதனால், எவரும் எவ்வகையானும் இருவினைப் பயன்களை

அனுப வித்தே தீரவேண்டுமென்பதறியக் கிடக்கிறது. இஃதுணர்ந்தவே,

“ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்”

என முப்பாலும் மொழியா நின்றது.

ஆகவே, எத்தகையோரும் ஊழ்வினைக்குட்படவே யிருக்கு மென்பதை யுன்னி, நல்வினை தீவினைப் பயன்கள் வந்தடைந்த காலத்தும் ஒரு தன்மையாக ஒழுகுவதே அறிவுடையோர் கடமை யாகும். தவராஜ கோளரியாகிய பட்டினத்தடிகள் வீடு நாடு முதலிய வற்றைத் துறந்து தேசசஞ்சாரம் செய்யுங்கால், பத்திரகிரி அரச னுடைய ஊர்ப்புறத்திலுள்ள கணநாத ராலயத்தில் ஞானநிட்டை புரிந்தார். அப்போது, ஊழ்வினைப் பயனால் ஓர் இரத்தின ஆரம் அவர் கழுத்தில் வீழ்ந்திருந்தது. அஃது அரசனுடைய ஆபரணமாத லால், அடிகளே

அதனைக் களவாடியதாக வெண்ணித் துன்புறுத்தப் பட்டார். முற்றுந் துறந்தவரையும் ஊழ்வினை விடவில்லை. இங் ஙனமிருக்க, நல்வினைக்கும் தீவினைக்கும் இன்ப துன்ப மடைவா னேன்? இதனைக் குறித்தே,

" நன்றாங்கா னல்லவாக் காண்பவ ரன்றாங்கா

லல்லற் படுவ தெவன் "

என்றார் தெய்வப் புலவரும்.

அதிகாரம் - ௩அ.] துறவற இயல்

கஎக

உலகத்தில் எல்லாப் பாக்கியங்களையும் பெற்றிருந்தாலும், அநுபவிப்பவை ஊழ்வினையின் அளவேயாகும். இது கருதியே நல்லிசைப் புலவராகிய நம்மூதாட்டியாரும்,

“ஆழ வமுக்கி முகக்கினு மாழ்கடனீர்
நாழி முகவாது நானாழி—தோழி
நிதியுங் கணவனு நேர்படினுந் தந்தம்
விதியின் பயனே பயன்”

எனத் திருவாய்மலர்ந் தருளினார்.

ஆகவே, நாம் மாயைக்குட்பட்டுப் பல எண்ணங்கட்கும் துன்பங்கட்கும் இடங்கொடாமல் எல்லாம் வல்ல பரம்பொருளின் திருவிளையாடலை யுன்னி, இருவினைகளையும் ஒரு தன்மையாகக் கொண்டு நடப்போமாயின், ஊழ்வினையை ஒருவாறு வெல்ல உபாயமுண்டு. இன்னும், இவ்வுலகிலும் இன்புற்று மறு வுலகிலும் என்றும் மாறாத அத்துவித பதவியை அடைய சகுணோபாசனை நிர்க்குணோபாசனை என்ற இவ்விரண்டனுள் ஒன்றைக் கடைப்பிடித்து, எங்கும் விளங்கா நின்ற இறைவனுடைய திருவடிகளை யடைய

முயல்வோமாக.

முதலாவது
அறத்துப்பால் முற்றிற்று.



# இரண்டாவது - பொருட்பால்

## முதலாவது அரசியல்
## 39 - ஆம் அதிகாரம்
## இறை மாட்சி

உலகத்திற்கு உயிரெனச் சிறப்புற்ற மன்னருடைய பெருமையைக் கூறுதலே, 'இறை மாட்சி' எனப்படும்.

“ கல்லா வரசனுங் காலனு நேரொக்குங்
கல்லா வரசனிற் காலன் மிகநல்லன்
கல்லா வரச னறமோரான்
கொல்லென்பான்
நல்லாரைக் கால னணுகிகில் லானே ”
என்றார் திருமூலர்.

மக்கட்குள் மேலான பதவியைப் பெற்று, எவ்வுயிரையும் தம்முயிர்போ லெண்ணிக் காப்பதனல் இறை என்று யாவராலும் புகழ்ப்பெற்ற அரசர்களுக்குச் சிறப்பையும், செல்வத்தையும், ஆயுளையும், அறிவையும் கொடுக்கும் அங்கங்கள் உள. அவை அமைச்சு, நாடு, பொருள், சேனை, நட்பு, அரண் என்பவைகளாம். இத்தகைய அங்கங்க ளமையப்பெற்ற அரசர்களே செல்வம், கீர்த்தி, ஆயுள் முதலிய யாவும் ஒருங்கு பெற்றவராவார். இதனை,

“ படைகுடி கூழமைச்சு நட்பா ணாறு

முடையா னரசரு ளேறு"
எனத் தேவருங் கூறியது காண்க.
அரசன் எத்தகைய காரியங்களைச்
செய்வதிலும் சோர்வில்லாதவனாகவும்,
இருக்கு யஜுர் சாமம் அதர்வணம்
என்ற நான்கு வேதங்கள், ஆறு
சாஸ்திரங்கள், யானை ஏற்றம்,
குதிரையேற்றம், அதிகாரம்-ஙக.]
அரசியல் களங்.

தநுர்வேதம் முதலியவைகளை
நன்குணர்ந்தவனாகவும், தன்னிடத்து
யாசிப்போர் குறிப்பறிந்து குறை
தீர்ப்போனாகவும்,
"எண்பொருள வாகச் செலச்சொலித்
தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்ப தறிவு"
என்ற வேத வாக்கியப்படி விவேகம் என்ற
ஆபரணம் அணிந்தோனாகவும்

விளங்கவேண்டும். இவை அரசனுக்கு எவ்விடத்தும் எக் காலத்தும் நீங்காப் புகழை அளிப்பனவாகும். இவை கருதியே தெய்வப்புலமை வாய்ந்த திருவள்ளுவரும்,

“ அஞ்சாமை யீகை யறிவூக்க மிந்நான்கு
மெஞ்சாமை வேந்தற் கியல்பு ”

எனப் பணித்தனர்.

அரசன் மேற்சொன்ன குணங்களைக் கைக்கொண்டு இராச்சிய பரிபாலனம் செய்து, எக்காலத்தும் மாறாப் புகழைப்பெற்று, தன்னாலும் தன் பரிசனத்தாலும் பகைவராலும் விலங்கினங்களாலும் கள்வர்களாலும் குடிகள் அச்சமுறாவாறு ஆட்சி செய்தல் கடமையாகும். இதனை,

“ அறனிழுக்கா தல்லவை நீக்கி
மறனிழுக்கா
மான முடைய தரசு ”

என நான்முகரும் கூறிப்போந்தார்.

குழந்தைகளைப் பெற்றோர்

காப்பதுபோலக் குடிகளை அரசன்
காக்கவேண்டும்; தன் நாட்டு விளைவுப்
பொருள்களில் தென்புலத்தார் தெய்வம்
விருந்தினர் சுற்றத்தார் தான் என்ற ஐவர்
பாதுகாப்பின் பொருட்டாக ஐந்து கூறு
குடிகள் கொள்ள, அரசன் ஆறிலொரு கூறு
இறை கொள்ளவேண்டும். அரசன்
அங்ஙனம் குடிகளை வருத்தாது
வாங்கும் பொருள்,

"அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்"

என்று பொய்யில் புலவர் கூறியவாறு,
அறத்தையும் இன்பத்தை
யும் அளிக்கும். இஃதன்றியும்,
வைத்தாரிறக்கச் சிலநாள் நிலத்திற்
கிடந்தபின் கண்டெடுக்கப்பட்ட
பொருளும், உரியரில்லாத பொரு ளும்

திருக்குறள் தீபாலங்காரம்

[பொருட்பால் ளும், பண்டங்களுக்கு

விதிக்கும் சுங்க இறைப்பொருளும், பகைவரை வென்று அவர் பாற்கொள்ளும் திறைப்பொருளும் ஆகிய யாவும் அரசர்க்குரியன. இதனை நாயனாரும்,

"உறுபொருளு முல்கு பொருளுந் தன்னொன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்"

என்று கூறினர்.

அரசன், இங்ஙனம் வாங்கிய பொருள்களை ஓரிடத்தே சேர்த்து வைத்து, அவைகளைப் பிறர் கவராது காத்து மேன்மேலும் விருத்தி செய்து, அறத்தையும் இன்பத்தையும் பயக்கும் வழிகளிற்செலவிடும் அறிவுடையனாயின், அவனியற்றும் அறம் சிறிதெனினும் அதன் பயனோ அளவு கடந்து நிற்கும். இஃதுணர்த்தவே,

"இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த
வகுத்தலும் வல்ல தரசு"

என்றார் செந்நாப்போதார்.

அரசன் ஆறிலொரு கடமை வாங்கும் இறைப் பொருளேயும் குடிகள் விளேவின்றித் தளர்வுற்ற காலத்துக் கொள்ளாது விடுவ தும், அறநெறியிற் கூறியவாறு திறைப் பொருள் சுங்கப் பொருள் இறைப் பொருள் முதலிய யாவு மமைந்த பொருட் சாலைகளேத் தமக் குச் சுபகாரியம் நிகழ்ந்தபோது மகிழ்ந்து, ' நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் ' என்ற திருமூலர் வாக்கியப்படி, தம் தேயத் துக் குடிகள் யாவரும் கொள்ளத் திறந்துவிடுதலும் அவனுக் குரிய குணங்களாம். மலயத்துவஜ பாண்டியனும், தசரத சக்கர வர்த்தியும் புத்திரப்பே றுற்றகாலத்துப் பெருமகிழ்ச்சியால் இவ் வாறு செய்திருக்கிருர்கள். இன்னும், நற்குணங்களமைந்த அரசர் கள், குடிகள் தம் குறைகளேச் சொல்லிக்கொள்ள வந்தவிடத்து, " அரசர் துயில்கிருர், ஏதோ

காரியமாகவுளார், சமயமில்லை' என்று வாயிற்காப்போர் மறுதவாறு, சான்றோர்கள் சூழவிருந்து காட்சி கொடுத்து, அவர்தம் குறைகளைக்கேட்டு இனியவைகூறி நீதி செலுத்தவேண்டும். இவை கருதியே,

" காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேன்
மீக்கூறு மன்ன னிலம்"

எனப் பெரியாரும் பணித்தனர். இன்சொல்லுடன் யாவரையும் வர



கவறு

வேற்று, எவ்வகை ஜீவராசிகளும் துன்புறுவாறு காத்துச் செங்கோல் செலுத்தும் அரசர்கள் புகழும் செல்வமும் ஆயுளும் வளரப்பெற்று, எக்காலத்தும் மாறாக்கீர்த்தியை அடைந்து, அறக்கடவுளாகிய நம்

இறைவனால் வேண்டிய யாவும் எளிதில் பெறுவார்கள். திரு
வாரூர் என்ற சோழநாட்டைச்சேர்ந்த திவ்யக்ஷேத்திரத்தில் அந
பாய சோழவம்சத் தரசனான மநுச்சக்ரவர்த்தி அசையாமணிகட்டி,
ஆறிலொரு கடமை வாங்கித் தம்மாலும், பரிசனர்களாலும், பகைவராலும், எவ்வகை ஜீவர்களும் துன்புறுவாறு அரசியற்றினர். அப் போது, தன் அருந்தவப் புதல்வனால் அறியாது நேர்ந்த குற்றத்தைக் கூறி முறையிட வந்த பசுவிற்கு அவர் எவ்வாறு காட்சி கொடுத்தார்? அக்குறைக்கு எவ்வாறு துன்புற்றார்? நீதியை எவ்வாறு செலுத்தினர்? கருணைக் கடவுளான நம்மிறைவன் அருளெவ்வா றிருந்தது? இவை, யாவரும் அறிந்த விஷயங்களல்லவோ?
அவ்வாறொழுகுவதே அரசர் கடமையாம்.

" இன்சொலா லீத்தளிக்க வல்லாற்குத்
தன்சொலாற்

ருன்கண் டனைத்திவ் வுலகு"
என்றது திருவள்ளுவப் பயனும்.

இவ்வாறு யாவரிடத்தும் நீதிதவருது அரசு செலுத்துவதனு லன்ருே, மக்கட் பிறப்பினராயினும் அரசர் இறையென்று அழைக் கப்படுகிருர்?

"முறைசெய்து காப்பாற்று மன்னவன்
மக்கட்
கிறையென்று வைக்கப் படும்"
எனப் பெரியாரும் பணித்தமை காண்க.

தன்னுடைய குடிகள் தளர்வுற்ற காலத்து இறைப் பொருள் கொள்ளாது விடுத்தும், இன்சொல் கூறியும், அவர் கூறும் குறைகளைப் பன்முறை கேட்டும், அக் குறைகூறுவோ ரியல்பை நன் காராய்ந்தும் நீதி செலுத்தும் அரசனிடத்துக் குடிகள் பேரன் புடையராய், அவனுக்கோ ரிடுக்கணுற்ற காலத்துத் தம் ஆருயி ரையும்

பொருட்படுத்தாது அவனைக் காக்க முற்படுவர். இதனை,

> " குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்ன
> னடிதழீஇ நிற்கு முலகு "

என்ற பொருளுரையால் நன்குணர்க.

கள்க் திருக்குறள்
தீபாலங்காரம் [பொருட்பால்

நாட்டில் எத்தகைய சம்பவங்கள் நிகழ்ந்தபோதிலும், யாவ ரிடத்தும் நீதி தவறாது , தன்னுயிர்போல மன்னுயிரை யெண்ணிச் செங்கோல் செலுத்தும் இயல்புடைய அரசர்களை அச்செங்கோலே பழிபாவங்களினின்றும் நீக்கி யருளும் . மநுச்சக்கரவர்த்தி செலுத் திய செங்கோன்மையன்றோ உயிரிழந்த கன்று, மந்திரி, புதல்வன் முதலியோரை மீண்டும் உயிரெழச்செய்தது ?

“ இறைகாக்கும் வையக மெல்லா மவனை
முறைகாக்கும் முட்டாச் செயின் ”

என்றது பொதுமறை.

நீதியே அரசருக்கு வெற்றியைத் தருமன்றிப் படைகளால் அவர்கள் பெறுவதொன்றில்லை. நீதியின்றேல், எத்தகைய படைச் செருக் குடையராயினும் மதியில்லாத வானம்போலும் பதியில்லாத மாதுபோலும் யாதொரு பய னுமில்லை; அப்படைகளே அவர்களைக் கொல்லும்.

“ வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉங் கோடா தெனின் ”

என மாதாநுபங்கியாரும் கூறுவாராயினர். ஆகவே, அரசன் குடி களைக் காக்க, செங்கோல் அவனைக் காக்கும் என்பது கருத்தாயிற்று. அரசன் தன் நாட்டின் குறைகளை நாள்தோறும் அறிந்து அவற்றை நீக்கும் வழிகளில் முற்படவேண்டும். இன்றேல், கொடுங்கோலராய், ‘ கொடுங்கோ

லரசன் வாழுநாட்டிற் கடும்புலி வாழுங் காடு நன்றே ' என்ற நறுந்தொகை வாக்கியத்திற் கிலக்காவார்கள். இதனை,

" நாடொறு நாடி முறைசெய்யா மன்னவ
னாடொறு நாடு கெடும் "

என்ற பெருநாவலர் கூற்று லறிக.

அரசர்கள் பேரறிவாள ர்களைத் துணையாகக் கொள்ளவேண்டு மென்றும், அவ்வறிஞர்கள் இடித்துரைக்கும் மொழிகளால் அவர்கள் தீநெறியினின்றும் விலகி நன்னெறியிற்செல்ல வியலுமென்றும், இன்றேல் அவர்கள் பாகனில்லாத யானைபோல நெறியில்லா நெறிகளிற் சென்று கெடுவரென்றும் அறிவுறுத்த வந்த் மூப்பாலும்,

" செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கு முலகு "

என்றது. மேற்கூறியவாறு அமைந்த அறிஞர்களே அரசர்களுக்கு அமைச்சரெனப்படுகின்றார்கள். அரசர்கள்,

"அறம்பொரு ளின்ப முயிரச்ச நான்கின்
திறந்தெரிந்து தேறப் படும்"

என்ற முதுமொழிக்கிணங்க, அவ்வமைச்சர்களைக் கொண்டே யாவையுந் தெளிந்துகொள்ளவேண்டும். எமாங்கத நாட்டைச் சேர்ந்த இராசமாபுரமென்னும் பதியை யாண்ட சச்சந்தனென்னும் அரசன் தன் மந்திரியாகிய கட்டியக்காரன் தனக்குக் கண்ணுக்கிடுகவசம் போற் காரியம் செய்தொழுகியதாக எண்ணினான். ஆகலின், அவன் அக்கட்டியக்காரனிடத்துத் தன் அரசுரிமையை ஒப்புவித்தான். கட்டியக்காரனோ அரசை விரும்பி அறிவிழந்து.

அவ்வேந்தனைக்கொன்று தானே அரசனாயினான். அரசனுடைய அறியாமையாலன்றோ இவ் வாறு நிகழ்ந்தது? இஃதுணர்த்துவான் கருதியே உத்தரவேதமும்,

" எனைவகையாற் றேறியக் கண்ணும் வினைவகையான்

வேறாகு மாந்தர் பலர் "

எனக் கூறியுள்ளது.

அரசர் தெரிந்து தெளிந்து நியமித்த அமைச்சரோடுகூடி, தாமும் நீதிநூற்பொருளை ஆராய்ந்து அறிந்து, யாசிப்போரை மகிழ் வித்து, குறைகூறுவோர் வருந்திக் கூறுவன யாவையும் அமைதி யுடன்கேட்டு, அவர் கூறும் சொற்கொடுமைகளைக் கவனியாது, உண்மை காணும் சிந்தனையுடன் இனிதிருந்து நீதி செலுத்திக் குடிகளைக் காப்பாற்றவேண்டும். அவர்களே 'வேந்தர் திலகம்' எனப்படுவார்கள். இதனை,

" கொடையளி செங்கோல் குடியோம்ப ளுன்கு

முடையாளும் வேந்தர்க் கொளி "

என்ற திருக்குறளடிகளால் தெளிக. இவ்வாறு அரசர்க்குரிய நற் குணங்களெல்லா மொருங்குபெற்று விளங்கும் தெய்வத்தன்மை வாய்ந்த மன்னரும் நாமும் எல்லா நலன்களையும் பெற்று இறைவனடி சேருமாறு, உலக ரக்ஷகராய் எங்கும் விளங்கும் கருணாநிதியை என்றும் தியானிப்போமாக.

---

## 40 - ஆம் அதிகாரம்

### கல்வி

---

மக்கட்கு அறியாமையென்னும் இருளை

நீக்கி ஞானமென்னும் ஒளியைத் தருவதே, 'கல்வி' எனப்படும்.

" வல்லார்க ளென்றும் வழியொன்றி வாழ்கின்றார்
அல்லா தவர்க ளறிவு பலவென்பார்
எல்லா விடத்து முளனெங்க டம்மிறை
கல்லா தவர்கள் கலப்பறி யாரே "

என்றார் திருமந்திரக்காரர்.

மக்கட்கு எச்செல்வத்தினும் கல்விச் செல்வமே முதன்மை யானது. இக்கல்வியே பிறவிக் குணத்தை விருத்தி செய்து, அஞ் ஞானத்தை நீக்கி ஞானத்தை யடைவித்து, தீயகுணம் தீய நடக்கை முதலியவைகளை யொழித்து, நற்குணம் நன்னடக்கை முதலியவைகளை யுண்டாக்கி, இது நித்தியம் இது அநித்தியம் என்ற மெய்யறிவை யளித்து, ஆன்ம இலக்ஷணம் இன்னது கடவுள் இலக்ஷ ணம்

இன்னது என்று விளக்கி, முக்தியை அளிக்கவல்லது. உயிரி னுஞ் சிறந்த இத்தகைய சிறப்புற்ற கல்வியை முதன்மையாகக் கொண்டு, நுண்ணறிவு பெற்று, அதற்குரிய ஞானத்தால் சரியை கிரியை யாதிகளி லீடுபட்டுப் பிறவிப் பயனை அடைவதே நம் கடமை யாகும். இஃதுணர்த்துவான் கருதியே,

"கற்க கசடறக் கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக"

எனப் பெரியாரும் பணித்தார்.

மக்கள் இவ்வநித்திய உடம்பிலேயே இறைவனையும் ஆன்மா வையும் அறிந்து முத்தியடைதற்குக் கல்வி முதன்மையானது . கல்வியின்றேல் அக்கருணாநிதியாகிய கடவுளைக் காண முடியாதோ எனின், முடியும்; அது, பராபர தத்துவங்களை யுணர்ந் தியற்றுமல், ' சர்வ

வல்லமையுள்ள கடவுள் ஒருவர் உளார் ; அவரே நமக்கு மெய்ப்பொருள் ' என்ற ஒரே சிந்தனையுடன் தியானிப்பதாகிய மூட



பக்தியேயாகும். அவ்வாறின்றி, பராபர தத்துவங்களை அதிசீக்கிரத்தில் உணர்ந்து , பகவத் பிரசாதத்தைப் பெற்று, மாயையை ஒழித்து, அவ்விறைவனை வாயார வாழ்த்தி, மனமாரத் துதித்து, அருளைப் பெறுதற்குக் கல்வி அவசியம். பொய்யில் புலவரும்,

" எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு "

எனக் கூறியுள்ளார்.

கல்லாதவர்களும் அறத்தினியல்பையும்

கடவுளின் நிலையையும் காண்கிருரே எனின், அவர்கள் நூல்களிற் கூறியதை நன்குணரா ராகலின், அவரியற்றும் நெறி பிழைபா டுடைத்தென்று பிறர் கூறின் சந்தேகத்திற்குட்பட்டு அந்நெறியினின்றும் தவறுவர். தவிர, அவர் கள் அவ்வாறு ஒழுகினும், வீட்டு நெறியை யுணர்ந்து நூல்களிற் கூறியவாறு முறைப்படி நடக்க ஆற்றலற்றவ ரா யிருப்பர். ஆனல், கற்றவரோ தாம் செல்லும் நெறி பிழையுடையதென்று பிறர் கூறி னும் அந்நெறியிலிருந்தும் தவருர். இதனைக் குறித்தே தெய்வப் புலமை வாய்ந்த செந்நாப்போதாரும்,

"கண்ணுடைய ரென்பவர் கற்ருேர் முகத்திரண்டு

புண்ணுடையர் கல்லா தவர்"

எனக் கூறிப்போந்தார்.

ஞானத்திற்குக் காரணமான

கல்வியைக் கற்போரிற் பெரும் பாலார் அதனை வளர்ப்பதற்கென்றே கற்கிறார். சிலர், உலகத் தார் தம்மைக் கற்றோராகக் கருதுமாறு சிறிது இலக்கண இலக் கியம் கற்றும், அம்மட்டிலேயே தமக்கு யாரும் இணையில்லை என்று கருதியும், ஆத்மார்த்த நூல்களில் இரண்டொன்றை வாசித்துவிட்டுத் தங்களுக்கு விளங்காதவை களையெல்லாம் குற்றமெனக்கூறி குதர்க்க வாதம்செய்தும் பாவமூட்டை கட்டிக்கொள்கிறார்கள். மெய்யறிவைப் பெற்று முத்திக்கான வழிகளி லீடுபடுவோர்கள் மிகச் சொற்ப மென்றே கூறலாம் ; ஆனால், இவர்கள் உலகோபகாரத்தின் பொருட் டுத் தம் வாழ்நாட்களைச் செலவிட்டு, அரிய நூல்களை இயற்றியும், அந்நூல்களை யியற்றுவதற்குரிய மார்க்கங்களைக் காட்டியு முள்ளார் கள்.

இவை கருதியே தெய்வப்புலமை வாய்ந்த திருவள்ளுவரும், கூழும்
திருக்குறள் தீபாலங்காரம்
{பொருட்பால்

"உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரித
லனைத்தே புலவர் தொழில்"

எனக் கூறியுள்ளார்.

மனமானது யாதாமொன்றினைப்பற்றி யிருத்தலே சுபாவம். ஆகலின், நாம் பிரபஞ்ச காரியத்தினை நோக்கி, அது நிலையுறு பொருளன்றென நன்கு தெளிந் துணர்ந்து, அவ்வழிகளில் பற்று நீங்கி முதல்வன் பற்றினைநாடி, அம்முதல்வனது சர்வமங்கள சகள சொரூபத்தினையாவது, அவனது அகண்ட வியாபக சச்சிதா னந்த நிஷ்களத் தன்மையினையாவது, அவனது அனந்த குணங்களை யாவது முறையே கண்டும் கேட்டும் தியானித்தும் அவனடி சேரக்

கல்வி வேண்டும். தெய்வத்தன்மை வாய்ந்த புலவர்கள் அவனருள் பெற்று அரிய காரியங்களை யியற்றவில்லையா ? நக்கீரர் பூதத்தால் கொண்டுபோகப்பட்ட காலத்துத் திருமுருகாற்றுப்படை என்னும் அரிய நூலைப் பாடித் தாம் மட்டுமன்றித் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்பதின்மரையும் விடுவித்து, அப்பூதத்தையும் முருகப் பெருமானருளாற் கொன்றாரல்லவா ? ஒட்டக்கூத்தப் புலவர் எழுபது தலைகளை வெட்டி, அவற்றின்மீது வீற்றிருந்து, 'ஈட்டி எழு பது' பாடிப் பிறகு முண்டங்களையும் தலைகளையும் சேர்த்து உயிருண் ட ாகச் செய்தது கல்வியா லல்லவா ? மக்களாகிய நமக்குக் கல்வியே சாத்வீகத் தன்மையையும், கடவுள் பக்தியையும், பரோபகார சிந்தனையையும், செல்வத்தையுங் கொடுத்து இருமைப் பயன்களையும் அளிப்பதாயுளது.

ஆகவே, நாம் அனைவரும் இக்கல்வியை முதன்மையாகக் கொள்ள வேண்டுமன்றோ? இஃதுணர்த்தவே முப்பாலும்,

" யாதானு நாடாமா லூராமா
லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு "

எனக் கூறியுள்ளது.

முக்திக்குரிய மக்களாகிய நம் அனைவருக்கும் அறிவை விளக்கி மும்மலத்தை ஒழித்து முதல்வனருளை அளிப்பதாகிய பொருள் கல்வியே எனினும், கற்க வேண்டியவைகளைக் கற்றுச் சாஸ்திர வழி



ஆசை யில்லாது வாழ்தல், அரிய தவங்களைச் செய்து அத்தவத்தால் நரை திரை மூப்பு பிணி சாக்காடு முதலியவைகளை நீக்கக்கூடிய அமுதம் கைவரப் பெற்றோனாகிய ஒருவன் அதனை

உண்ண நினையாது வினை விழலாக்கிய தொப்பச் சிறிதும் பிரயோசனமில்லை. இன்னும்,

" கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவ
னற்ரு டொழாஅ ரெனின் "

என்ற திருக்குறளடிகளின்படி, இறைவனடியை வணங்காவிடின் கற்ற தனல் யாது பயன் ? அறிவு நூல்களைக் கற்று அவ்வழியே நின் ெருழுகுவோமானல், ஊழ்வினையால் உலகத்தில் பல பிறவிகளெடுத் துப் பற்பல தனு கரண புவன போகங்களை அனுபவித்து உழன்று கொண்டிருப்பினும், அப்பிறவி உண்டாவதற் கேதுவாகிய ஆகாமிய வினையைத் தடுத்து ஆன்மாவிற் கிருப்பிடமாகிய முதல்வன் றிருவடி யில் சேரலாம் என்பது நிச்சயம். இதனை,

" ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து "

என்ற தெய்வப்புலவர் வாக்காலுணர்க.

ஆகவே, நமக்கு இம்மையில் இன்பத்தையும் புகழையும் கொடுத்து, மறுமையில் என்றும் மாறாத அத்துவித பதவியைக் கொடுக்க வல்லதாகிய கல்வியை மேன்மேலும் விரும்பிக் கற்பதே நம் கடமையாகும். இஃதுணர்த்தவே வாயுறை வாழ்த்தும்,

“தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்”

எனக் கூறுகிறது.

நாம் எதை யறிந்தால் யாவையும் அறிந்ததாகுமோ, எதைக் கற்றால் யாவையும் கற்றதாகுமோ, எதைக் கண்டால் யாவையும் கண்டதாகுமோ, அத்தகைய மூலகாரணப் பொருளை யறியும்

ஞானத்தை யளிக்கவல்ல ஆத்மார்த்த கல்வியைக் கற்கவேண்டும். இக்கருத்துப் பற்றியே நமது சிவானுபூதிச்செல்வராகிய தாயுமானவரும்,

கஉ௬உ திருக்குறள்

தீபாலங்காரம் [பொருட்பால் "

கற்றதுங் கேட்டதும் தானே யேதுக்காகக்

கடபடமென் றுருட்டுதற்கோ கல்லா லெம்மான்

குற்றமறக் கைகாட்டுங் கருத்தைக் கண்டு

குணங்குறியற் றின்பநிட்டை கூட வன்றோ"

எனப் பணித்தருளினர்.

இஃதுணர்ந் தியற்றவல்ல மக்களாகிய நாம் இருமைப் பயனையும் அளிக்கவல்ல பொருளாகிய கல்விப் பொருளையே விரும்பிக் கற்று, உலகோபகாரமான வழிகளி லீடுபட்டு, இவ்வுலகிலும் சிறப் புற்று,

என்றும் மாறாத பேரின்ப வெள்ளத்தி லாழ்ந்தி, மோக்ஷ மென்னும் கரைசேர எல்லாம் வல்ல இறைவனடியை என்றும் தியானிப்போமாக.

---

## 41 - ஆம் அதிகாரம்
## கல்லாமை

---

மக்களாகிய அனைவருக்கும் உறுதியைத் தருவதாகிய கல்வி யைக் கல்லாமையே, 'கல்லாமை' எனப்படும்.

மக்கள், வேறு பொருள்களிலுள்ள பிரீதியை விடத் தத்தம் அறிவை விருத்தி செய்வதாகிய கல்விப் பொருளிடத்தில் விசேஷப் பிரீதி வைக்கவேண்டும். கல்வியில்லாமல் அறிவு வளர்தல் அருமை யாகும். கல்வியே நம் அறிவை வளரச்செய்து நன்மை தீமைகளை

நன்குணர்த்துவதாயுள்ளது. நெல்லுக்கு உமி போலவும், செம்பிற்குக் களிம்பு போலவும், ஆன்மாவிற்கு ஆணவம் மாயை கன்மம் என்ற மும்மலங்கள் அநாதியே பொருந்தியிருக்கும். இவ்வாறு ஆன்மா மும்மலத்தால் பிணிப்புண்டு வருந்தும் என்றே எல்லாம் வல்ல இறைவன் திருவுளமிரங்கிக் குருடனுக்குக் கோல்கொடுப்பது போல நமக்குக் கல்வியென்னும் அரியபொருளை அளித்துள்ளார். ஆகவே, நாம் இவ்வரிய பொருளைப்பெற்று, மாசற்ற மனமுடையோராய்ப் பொறிகளை யடக்கி, வேட்கையை ஒழித்து, ஓதல் நோற்றல் நேர்மை ஒரு ஜீவனையும் துன்புறுத்தாமை பொய் புகலாமை புறங் கூறாமை முதலிய

நற்குணங்களைக் கைக்கொண்டு,
ஆத்மஞானத்தை யறிந்து அந்நிலையில்
நின்றாலல்லவோ இவ்வுலக
வாழ்க்கையிலும் அதிகாரம் - சுக.]



சிறப்புற்று மறுமைப் பயனையும் பெறலாம்! இதை மறுத்து வாழும் வாழ்க்கையின் தன்மையை,

"அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல்"

என்ற பொய்யா மொழியார் வாக்கியம் நன்குணர்த்தும்.

நம் அறிவை விருத்தி செய்வதற்கு முதற் சாதனையாகிய கல்வியை நம் மனமாகிய நிலத்தில் விதைத்து, ஊக்கமென்னும் நீரைப் பாய்ச்சிச் சோம்பலென்னும் களையைப் பிடுங்கி வளர்த்தால், நாம் நற்குணங்களென்னும் கதிரை யறுத்து

அஞ்ஞானமென்னும் வறுமை யைப்போக்கிக் கடவுளின் திருவடித் தாமரைகளே யடையலாம். இத் தகைய கல்வியைக் கல்லாமலும், அந்நெறிகளேக் கைக்கொள்ளா மலும் வாழும் மக்கள் ஆன்மாவின் இலக்ஷணத்தையும் கடவுளின் இலக்ஷணத்தையும் அறிந்துய்வது எங்ஙனம் ? அவர்கள் மக்கட் பிறவியை யடைந்ததன் பயன் யாது ? அவர் தம்மை நன்கு மதித் துப் பேசித்திரிவது வியப்பினும் வியப்பன்றோ ? இஃதுணர்ந்து வான் கருதியே,

"கல்லாதான் சொற்கா முறுதன் முலையிரண்டு

மில்லாதாள் பெண்காமுற் றற்று"

எனப் பெரியாரும் பணித்தார். ஆகவே, தம் குறைகளைத் தாமே அறிந்துணர்ந்து, அடக்கமென்ற ஆபரணத்தை அணிந்து, ஆன்றோர் பாற்சென்று வழிபட்டு, நன்னெறியில் நின்று ஒழுகுவோர் நல்லவர் களெனப்படுவதில் சிறிதும் ஐயமில்லை. தெய்வப்புலமை வாய்ந்த திருவள்ளுவரும்,

"கல்லா தவரு நனிநல்லர் கற்றார்முற்
சொல்லா திருக்கப் பெறின்"

எனப் பணித்தார். கல்லாதவர்கள் தம்முடைய மூடத்தனத்தை அறிந்து அடங்கி நடந்தாரெனினும், அறியவேண்டியவைகளை யறிந்து அவ்வழியில் அடங்கிலாதலால், அவர்களுடைய அடக்கமும் அவர் தம் நெறியும் ஆன்றோர்களால் மெச்சத்தக்க தாகா. இஃதுணர்த்தவே திருவள்ளுவப் பயனும்.

" கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங்
கொள்ளா ரறிவுடை யார் "

எனக் கூறியுள்ளது.

இவர்கள் கற்றோரைப்போலக் காணப்படினும் கற்கவேண்டிய நூல்களைக் கற்றிலாதலால், கற்றோரிடத்துப் பேசுங்கால் சொற்சோர்வுபடுவர். இதனை,

" கல்லா வொருவன் றகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும் "

என்ற திருக்குறளடிகளால் கண்டுகொள்க.

மக்களே நன்மை தீமைகளை நன்குணர்ந்து, எல்லாம்வல்ல இறைவன் நோக்கத்தையும் அறிந்து, தம் முயிர்க்கேயன்றிப் பிறவுயிர்கட்கும் பயன்படுவோரா யுள்ளார்கள். உலகில்

எண்ணிறந்த பெரியோர் கள் தாமேயன்றிப் பிறருமுய்யுமாறு பல காரியங்களை இயற்றியும் இயற்றிக்கொண்டு முளாரென்பது ய ரவரும் நன்குணர்ந்த விஷயமே. இவையனைத்தும் கல்வியின் விசேடமல்லவா ? இவ்வரிய கல்வியைப் பெறுதார் தாமும் பிறரும் இன்புறுவது எங்ஙனம் ? ஆகையாலன்றோ உத்தரவேதமும்,

"உளரென்னு மாத்திரைய ரல்லாற் பயவாக்
களரனையர் கல்லா தவர் "

.

எனக் கூறியுள்ளது ?

கல்லாதார் மேலைத் தவப்பயனால் அழகும் பொருளும் பெற் றிருப்பினும் மணப்பயிற்சியும் பகுத்தறிவு மில்லாதவராதலின், அவர்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்ற புருஷார்த்தங்களை யடைய வியலாதவராய்

அலங்கரிக்கப்பட்ட சூத்திரப் பாவைக் கொப்பாவார். இஃதுணர்த்தவே முதற்பாவலர் கூறிய முப்பா லூலும்,

" நுண்மா ணுழைபுல மில்லா னெழினல
மண்மாண் புனைபாவை யற்று "

எனக் கூறியுள்ளது. இன்னும், அவர்கள் நுண்ணறிவு இல்லாதவர்களாதலின், உலகவியல்பையும் பிறவிப் பயனையும் செல்வ நிலையா

அதிகாரம் - சுக.]

அரசியல் கஅரு

மையையும் நன்குணராதவராகி, க்ஷணத்தில் அழியு மியல்புடைய அநித்தியப் பொருள்களால் தாம் அடையும் பயனும் அடையாது, அப்பொருள்களைத் தீய வழிகளிற் செலவிட்டு, வறுமையடைந்து, அவ்வறுமையின் கொடுமையால் பின்னரும் பழிபாவங்கட் குட்படுவர். செங்காப்போதாரும்,

" நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே
கல்லார்கட் பட்ட திரு "

எனக் கூறிப்போந்தார்.

உலகமானது ஒருவருடைய அறிவையும், குணத்தையும், ஒழுக்கத்தையுமே பெரிதும் பாராட்டிப் புகழ்ந்து கூறி வருகிறதேயன்றிக் குலத்தைக் கவனிப்பதில்லை என்பது யாவரும் அறிந்ததே. மேற் கூறிய நற்குணங்கள், ஒருவர்க்குக் கல்வியின்றேல் அமைவது அரி தினும் அரிது. உயர்ந்த குலத்துப் பிறந்தோரெனினும் கல்வி யில்லாதவிடத்துச் சிறப்படையார். இது,

" மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார்
கீழ்ப்பிறந்துங்
கற்றா ரனைத்திலர் பாடு "

என்ற திருவள்ளுவர் தமிழ்மறை அடிகளால் நன்குணரப்படும்.

கல்வியுடையோரே நித்தியா

நித்தியத்தை யுணர்ந்து, மக்கட் பிறவிக்குரிய புருஷார்த்தங்களை விரும்பிச் சரியை கிரியை யோகங் களி லீடுபட்டு, இம்மையில் எல்லோராலும் புகழப்பட்டு மறுமை யில் எல்லா லோகங்களுக்கும் மேலாகிய மோக்ஷ லோகத்தை எளிதில் அடைவர். நெல்லுடன் பிறந்த பதரானது நெல்லைப்போலக் காணப்படினும் அதனுட் பொருளில்லாமையால் எவ்வாறு தள்ளப் படுகிறதோ, அவ்வாறே கல்லாதவரும் கற்றோரைப்போல உருவத் தில் ஒத்திருந்தாலும் மக்கட் பிறவியினின்றும் புறக்கணிக்கப்படுவர். எந்நூல்களின் துணிபும் இதுவே.

"விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றோரோ டேனை யவர்"

என உத்தரவேதத்திலும் கூறப்பட்டுள்ளது.

ஆகவே , எப்பிறவியினும் மேலான மக்கட் பிறவியைப் பெற்ற நாம் அனைவரும் கல்விப் பொருளையே முதன்மையாக விரும்பி றன்

உச



னறிவு பெற்று, நாமும் இன்புற்று உலகமும் இன்புற அறிவின் வன் மையாற் பல அரிய நூல்களை யியற்றி, ஆத்மாவிற்குரிய அ த்துவித பதவியையும் அடைய அண்ட சராசரங்களிலும் விளங்காநின்ற பரம கருணை நிதியாகிய நம் இறைவனை என்றும் பிரார்த்திப்போமாக.

---

# 42 - ஆம் அதிகாரம்
# கேள்வி

ஆன்றோர்கள் கூறும் அரிய நூல்களின் பொருளைக் கேட்பதே, 'கேள்வி' எனப்படும்.

" திரையற்ற நீர்போற் றெளியவெனத் தேர்ந்த
வுரைபற்றி யுற்றங் கொடுங்குநா ளெந்நாளோ "

" அறியா வறிவி லவிழ்ந்தேற வென்ற
நெறியா முறையுணர்ந்து நிற்குநா ளெந்நாளோ "

என்றார் தாயுமான சுவாமிகள்.

இவ்வுலகத்தில் அறம் பொருள் இன்பம் வீடு என்ற புருஷார்த் தங்களை யுறுதிப்படுத்தி இருமைப் பயனையும் அளிப்பவை, ஆன் றோர் கூறும் அரிய மொழிகளேயாம். இஃதுணர்ந்தவே தெய் வப்புலமை வாய்ந்த திருவள்ளுவ நாயனாரும்,

" செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ

மச்செல்வஞ்
செல்வத்து ளெல்லாந் தலை"
எனக் கூறிப்போந்தார்.

இருமைப் பயனையும் அளிப்பதாகிய இவ்வரிய செல்வம் அமையப்பெறின், இதுவே பாவமாகிய களைகளைக் களைந்து, தருமமாகிய பயிரை வளர்த்து, அதன் பயனை நுகர்தற் பொருட்டுச் சுவர்க்கத்தையும் அளிக்க வல்லது. ஆன்றோர் கூறும் அரிய நூற்பொருளைக் காதாற் கேட்போர் இன்பத்தையும் பின்னர் ஞானத்தையும் அடைவரென்பது திண்ணம். பாண்டி நாட்டுப் பதியொன்றிலுள்ள ஒரு தடாகத்தின் கண் வசித்த நாரையானது அங்கு மழையின்மையால் தடாகம் வற்றவும் வேறோர் பதியிலுள்ள தடாகத்து இரை தேடச் சென்றதென்றும், அங்கே இருடிகள் நாடோறும் ஸ்நானஞ்-

கீழ்ள்

செய்து கரையேறி நித்திய கருமாநுஷ்டானங்களை முடித்து அறுபத்து நான்கு திருவிளையாடல்களைச் செய்தருளிய கருணாநிதி யாகிய நம் சோமசுந்தரக் கடவுளது பெருமையைச் சொல்லா நின்ற புராணத்தை வாசிக்கக் கேட்டதென்றும், அதனால் அந்த நாரை ஞானமடைந்து பசியின் கொடுமையையும் அறியாது அப் பெருமான் எழுந்தருளாநின்ற திருவாலவாய் என்னும் பதியை யடைந்து பதினைந்து நாள் விரதமனுட் டித்து உயிர்களிடத்துப் பெருங்கருணை கொண்ட அப்பெருமானுடைய அருளைப் பெற்ற தென்றும் கேட்கவில்லையா?

பகுத்தறிவில்லாத பட்சியானாலும் ஆன்
றோர் வாக்கியத்தைக்
கேட்டதனாலன்றோ இத்தகைய அரிய
பேற்றை யடைந்தது ? ஆகையினாலேயே
முப்பாலும்,

" செவிக்குண வில்லாத போழ்து
சிறிது
வயிற்றுக்கு மீயப் படும் "

எனக் கூறியுள்ளது. ஆன்றோர் கூறும்
அரிய பொருள்களை யுண
ரும் எவரும் மாயைக்குட்பட்டு
வருந்தாமையாலன்றோ அவ்வான்
றோர் பெருமை எவ்விடத்தும்
சிறப்புற்றுளது ? உத்தரவேதமும்,

" செவியுணவிற் கேள்வி யுடையா
ரவியுணவி
னான்றாரோ டொப்பர் நிலத்து "

எனக் கூறியுள்ளது.

எவ்வகைச் செல்வத்துள்ளும்,

இருமைப் பயனையும் உணர்த்த வல்லது செவிச் செல்வமே. ஆகவே நாம், நம் முன்னோர்கள் நமக் கென்று இயற்றியிருக்கும் நூல்களைக் கல்லாது போனாலும், 'கேள்வி முயல்' என்ற தெய்வத் தமிழரசியார் திருவாக்குக் கேற்ப கற்றவரை யணுகி நற்பொருளை யறிய முயற்சிப்போமானால், எவ் வகைத் துன்பங்களினின்று மீண்டு இன்புறலாமென்பது திண்ணம்.

" கற்றில னாயினுங் கேட்க வ
ஃதொருவற்
கொற்கத்தி னூற்றாந் துணை "

எனப் பொய்யா மொழியாரும் கூறியுள்ளார்.

உலகில் எவரும் ஊழ் வினையால் துன்பப்படுவ ரெனினும், அறிவு ஒழுக்கங்களில் சிறந்த

பெரியோர்களுடைய வாக்கியங்

'களை அவர்களை

அத்துன்பத்தினின்றும் நீக்கும்.

மதுரையின்கண் [illegible]

## திருக்குறள் தீபாலங்காரம்

[பொருட்பால் ஒருவன் அரிய தருமங்களைச் செய்தும், பேதமையால் சிறிது பாவத்திற்குட்பட்டுக் கரிக் குருவியாகப் பிறக்க நேர்ந்தது. ஆனால், அவன் ஆன்றோருடைய அரிய மொழிகளைக் கேட்டமையால், அப் பாவத்தினின்றும் நீங்கி, காருண்ய மூர்த்தியாகிய நம் சோமசுந்தரப் பெருமானிடத்து உபதேசம் பெற்று, முக்தியடைய விருந்தது. அவ்வான்றோர் சொற் பெருமையை,

"இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே
யொழுக்க முடையார்வாய்ச் சொல்"

என்ற செந்நாப்போதார் திருவாக்கால்

நன்குணர்க.

ஆன்றோர் வாக்கியங்கள் அஞ்ஞானத்தை நீக்கி, அறம் பொருள் இன்பம் வீடு என்ற சதுர்வித புருஷார்த்தங்களையும் அளிக்கக்கூடியனவெனினும், மேலைத்தவமுடையாருக்கே அவை எளிதில் கைகூடும். அவர்களே அவ்வரிய பொருள்களை நுட்பமாக ஆராய்ந்துணர்ந்து, பசு மரத்தாணிபோலத் தம் மனத்தில் பதியச் செய்வர். ஆயினும், பிறரும் அவ்வுரைகளைச் சிந்தித்துணர்வார்களாயின், அவர் கள் ஊழ் வினைக்குட்பட்டகாலத்தும் பேதமைக்குட்படாரென்பது திண்ணம்.

" பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லா
ரிழைத்துணர்ந்
தீண்டிய கேள்வி யவர் "

என்றார் நாயனாரும்.

அஞ்ஞான இருள் நீங்க ஆயிரஞ்

சூரியர்கள் உதித்ததுபோல உதிக்கும் ஆன்ருேர்களுடைய வாக்கியங்களைக் கேளாத காதுகளை யுடையோரே தம் அறிவினத்தையும் உணராது, 'கண்டதே காட்சி கொண்டதே கோலம்' எனத் திரிந்து, பேதமைக்குட்பட்டு ஆன்ருேர் பலரும் அருவருக்குமாறு பேசித்திரிவர்.

" நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய
வாயின ராத லரிது "

என்றது உத்தரவேதமும். முக்திக்குரிய மக்களாகிய நாம் ஆன்ருேர் களுடைய அரிய சொற்களைக்கேட்டு நன்குணர்ந்து இருமைப்பயனை யும் அடைவதன்ருே எக்காலத்தும் மாருப் புகழை யளிக்கும்? இவ்வாறின்றி வாழ்நாளை வீணுளாக்கி

உண்டுறங்கிக் காலம் கழித்தல் அதிகாரம்-

௪௮.] அரசியல்

கழிக்க மிக்க இழிவைத் தருவதாயுள்ளது. இஃதுணர்த்தவே திருவள்ளுவப் பயனும்,

"செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்க

ளவியினும் வாழினு மென்"

என்றது. அறிவில்லாமையினாலாவது வறுமையினாலாவது துன்புற்ற காலத்தும், அத்துன்பத்தினின்றும் நீக்க வல்லதாகிய செவிச் செல்வத்தையே முதன்மையாக விரும்பி, இருமைப் பயனையுமடைந்து, எல்லாம்வல்ல இறைவனடி சேர எவ்வழியிலும் முயலுவோமாக.

---

## 43 - ஆம் அதிகாரம்
## அறிவுடைமை

---

அரசன்முதல் அனைவரும்

கற்கவேண்டிய நூல்களைக் கற்று அவ்வழி நிற்றலே, 'அறிவுடைமை' எனப்படும்.

ஓர் இந்திர ஜாலக்காரனுடைய மந்திர ரூபமான சக்தி அருவமானதால் அது கண்ணுக்குத் தோன்றுவதில்லை. அவன் விளையாடியபின் அச்சக்தியின் காரியமாகத் தோன்றும் நாம ரூப நகரங்கள், ஜனங்கள், மிருகங்கள் முதலியவற்றைக் காண்பதாலேயே அவனுடைய மந்திர சக்தியை யுணர்கிறோம். அவ்வாறே நம்முடைய அறிவு நாம ரூப மற்றிருத்தலின் நாம் காணக் கூடவில்லை; நாமியற்றும் காரியங்களாலேயே அதனை அறிகிறோம். டக்களாகிய நாம் அனைவரும் கல்வி கேள்விகளால் மெய்யறிவு பெற்று உலகவியல்பினை அறிந்து வாழவேண்டும். எத்தகைய

துணைவலியுடைய அரசரும் இந்நெறியினின்றும் தவறுவரேல் பயனின்று. அரிய தவங்களைச் செய்து, அழியாத வரத்தைப்பெற்ற இராவணேஸ்வரனும் அறிவீனத்திற் குட்பட்டதனாலன்றோ அழிய நேர்ந்தது ? ஆகவே, எவரையுங் காக்க வல்லது அறிவென்னும் பொருளேயாம்.

“ அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கு
முள்ளழிக்க லாகா வரண் ”

என்றது உத்தரவேதமும்.



ஆகவே, நாம் முன்னேற்ற மடைவதற்குரிய கல்வி, கேள்விகளைப் பெற்றவிடத்தும், அறிவாலுணர்ந்து செய்யத்தக்கதும் பய னுடையதுமான

காரியங்களைச் செய்து நமக்கு நேரிடும் தீங்குகளி னின்றும் விலகிக்கொள்ள வேண்டும்.

ஒரு குதிரையை அதன் மனம் போனபடி முரட்டுத்தனமாய் மேடு பள்ளம் பாராது பாய்ந்தோடும்படி விட்டுவிடுவது கஷ்டமன்று; அதன் கடிவாள வாரை இழுத்துப்பிடித்து அதை அடக்கி நிறுத்து வதே கஷ்டம். அவ்வாறே மனதை அதன் இச்சைப்படி விட்டுவிட்டு அதன் பின் அலைவது கஷ்டமன்று. அதை யடக்கி யாள்வதே கஷ்டம். அப்படி அடக்கி ஆளக் கற்றவரே அறிவுடையோர் எனப்படு வர். இதனை,

" சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ

நன்றின்பா லுய்ப்ப தறிவு"

என முதற்பாவலர் கூறிய திருக்குறளடிகளால் நன்குணர்க.

எல்லாப் பிறவிகளிலும் மானிடப் பிறவியே மேம்பாடுடைய தென்பது யாவரும் நன்குணர்ந்த விஷயமே. ஒரு மரக்கலத்தில் நீராவி யந்திரத்தை வைத்துப் பொருத்தி, அதற்குச் சரியான மாலுமியை வைத்து நடத்தா விட்டால், அம்மரக்கலம் பாறையிலடிபட்டு நொறுங்கிவிடும் . அம்மாலுமியைப் போலவே, எல்லாம் வல்ல நம் மிறைவன் நமக்குப் பகுத்தறிவென்னும் மேலான பொருளை யளித் துள்ளார் ; அவ்வறிவை நாம் சீர்திருத்திக்கொள்ளாவிட்டால், பல விதமான தீமைகட்குட்பட்டு நம்பிறவியை வீணாக்கி விடுவோம். ' ' மனம்போன போக்கெல்லாம் போகவேண்டாம் ' ' என்ற நம் மூதாட்டியார் வாக்கியப்படி, மனதைப் பலவாறு சிதற விடாமல் சீர்திருத்தம் செய்துகொண்டால், இவ்வுலகில் அரிய காரியங்களைச் செய்து

என்றும் மாறுப்புகழையும் நற்கதியையு மடையலாம். அங்ஙனம் மனதை யடக்கி ஆண்டவரே உலகில் எண்ணிறந்த காரியங் களை யியற்றி யுள்ளார்கள். கல்வியில்லாத ஒருவன் ஒரு புத்த கத்தை யெடுத்துப் புரட்டிப் புரட்டிப் பன்முறை பார்த்தாலும் புத்தகத்திலுள்ள விஷயம் அவனுக்கு விளங்குமா? அதுபோல அறிவென்னும் பொருள் இல்லாவிடில் உலக வியல்பினை யாதன்றோ? இஃதுணர்த்தவே நான்முகனாரும்,

அறிய முடி
அதிகாரம் - சுட.]

அரசியல் கககக.

" எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு "

எனக் கூறியுள்ளார்.

இவ்வாறு பகுத்தறிவு முதிர்ந்து,

சுயநலங்கருதாது பிறர்நலங் கருதிய பெரியோர்களே உலகோபகாரமாக எவ்விஷயங்களி லும் உழைத்துள்ளார்கள். உதாரணமாகத் தெய்வவழிப்பாட்டிற் குரிய ஆலயங்களைக் கவனிப்போம். அவ்வாலயங்களோ சரீரத்தி லுள்ள தத்துவங்களையே ய அடக்கிக்கொண்டுள்ளன. சரீரத்தில் மூலாதாரம் சுவாதிஷ்டானம் மணிபூரகம் அநாகதம் விசுத்தி ஆக்ஞை என்ற ஆறு ஆதார ங்களிருப்பதுபோலத் தேவாலயங்களிலும் கர்ப பக்கிருகம் அர்த்த மண்டபம் ஸ்தபனமண்டபம் மஹாமண்டபம் பூர்வவேதி சபாமண்டபம் என்ற ஆறு ஸ்தலங்களும், பரமாத்மா விற்கு அறிகுறியாக லிங்க முதலிய திவ்ய சொரூபங்களும், ஜீவாத் மாவுக்கு ஒப்பாகநந்திதேவரும் அமைக்கப்பட்டிருத்தல் காண்க. இரு தய ஸ்தானத்தில் கடவுள்

வழிபாடுசெய்வதுபோல அவ்வாலயத்தி லும் இருதய ஸ்தானத்திலேயே கடவுளாராதனே விதித்து, அந்தத் தானத்தைச் சுற்றிநிற்கும் இரத்தக் குழல்களைப்போல அவ்வாலயத் தைச் சூழ ஒரு பிராகாரம் அமைத்து, அதன் வழியாகச் சுற்றிவந்து கடவுளே வணங்கும்படியாகவும் விதித்துப் பாமரர்களுக்குங்கூடப் பகவானுடைய ஞாபகம் வரும்படி நிரூபிக்கப்பட்டிருக்கிறது.,இவை யாவும் பெரியோர்களுடைய காரியமன்றோ ? அப்பெரியோர்கள் தங் கள் அனுபவங்களே யாவரும் எளிதிலுணர்ந்து பயனடையுமாறு இத்தகைய மகிமை வாய்ந்த ஆலயங்களே யமைத்துள்ளார்கள். அரிய விஷயங்களே யாவரும் எளிதிலுணருமாறு எடுத்துக்காட்டுவதே அறிவுடைமையாகும்.

" எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்

நுண்பொருள் காண்ப தறிவு"

என்ருர் செங்காப்போதார்.

எத்தகையோரும் சுருதி யுக்தி அனுபவங்களைக்கொண்டு, 'கால தேசவர்த்தமானங்களையும் கவனித்து, உலகத்துடன் பொருந்தி நடக்கவேண்டும். அவ்வாறின்றி, 'கண்டதே காட்சி கொண்டதே கோலம்' என்று நடப்போர் தம் பதவியையு மிழந்து, பழிபாவங்



களுக்கும் ஆளாய், பொறிவாயிலகப்பட்ட வருந்துவர். இதனைலன்றே திருவள்ளுவர்,

"எவ்வ துறைவ துலக முலகத்தோ
டவ்வ துறைவ தறிவு"

"அறிவுடையா ராவ தறிவா ரறிவிலா
ரஃதறி கல்லா தவர்"

எனப் பலவாறு கூறினர். இன்னும் அவர்கள்

எலிபோல் · இடருற்று

தம தறிவினைத்தையும்

அதன் பயனையு முணராது அநீதியான
வழிகளிலீடுபட்டு இழிவான காரியங்களையே
இன்பமெனக்கொண்டு ஒழுகுவர். மேலத்
தவப்பயனால் அவர்கள் ஆன்றோர் கூறும்
அரிய மொழிகளைக் கேட்கப்
பெற்றவிடத்தும் அவை பயன்படா
தழியுமென்பது நிச்சயம். இஃதுணர்த்தவே,

"பன்றிக்கூழ் பத்தரிற் றேமா வடித்தற்று

னன்றறியா மாந்தர்க்
கறத்தா—றுரைக்குங்காற்
குன்றின்மேற் கொட்டுந் தறிபோற்
றலைதகர்ந்து
சென்றிசையா வாகுஞ் செவிக்கு"
என்று நாலடியார் கூறு நின்றது.

உலக வியல்பினை அறிந்து இருமைக்கான வழிகளையுணர்ந்து அந்நிலையினின்றும் தவறாத நெறியினையுடையோரை வருத்துவ தாகிய துன்பம் எவ்வுலகத்தும் இல்லை. இதனை,

"எதிரதாக் காக்கு மறிவினார்க் கில்லை
யதிர வருவதோர் நோய்"

என்றறிவுறுத்தியது வாயுறைவாழ்த்தும்.

பஞ்சபாண்டவர்கள் யாவையு மிழந்து மரவுரி தரித்துக் கானக மடைந்த காலத்தும் அறிவின் வன்மையாலன்றோ மீண்டும் எல்லாச் செல்வங்களையும் ஒருங்குபெற்று இன்புற்றார்கள்? எல்லாச் செல்வங் களையும்

பதினெட்டக்ரோணி சேனைகளையும்
பெற்ற கௌரவர் அழிந்ததும்
பேதமையினலன்றோ? இஃதுணர்த்தவே
திருவள்ளுவப்பயனும்,

" அறிவுடையா ரெல்லா முடையா
ரறிவிலா

ரென்னுடைய ரேனு மிலர்"

எனக் கூறுகின்றது. ஆகவே,
இஃதுணர்ந்த அனைவரும் வாக்கும்



செயலும் ஒத்த ஆன்றோர் நெறியைப்
பற்றி நடந்து பிறவிப் பயனைப்
பெறவேண்டும்.

" தன்னை யறிவதே யறிவாம்
பின்னை யறிவது பேயறிவாமே"

எனப்பெரியாரும் பணித்தனர்.

கானல் நீர் பொய்த் தோற்றமென் றறிந்தவன் மறுபடியும் அதனை நீர் என்று நம்பிச் செல்லான். அவ்வாறே உலக வியல்பினையும் பிறவிப் பயனையும் நன்குணர்ந்த நாமனைவரும் ஆத்ம ஞான மடைந்து அங்கிங்கெனாதபடி எங்கும் அருட்சோதியா யிலங்கும் நம் மிறைவனடி சேர, அவனை என்றும் பிரார்த்திப்போமாக.

---

## 44 - ஆம் அதிகாரம்
## குற்றங் கடிதல்

---

அரசர் முதல் அனைவரும் தம்மிடத்தே குற்றங்கள் தோன்றுதவாறு அவற்றை நீக்குதலே, 'குற்றங் கடிதல்' எனப்படும்.

மக்கள் அறிவென்னும் கருவியால்

காமம் குரோதம் உலோபம் மானம் உவகை மதம் எனப்பட்ட ஆறு குற்றங்களாகிய கரடிகளுந் தம்மிடத்தே அணுகாதபடி காக்கவேண்டும். இன்னும், அரசர்கள் குற்றங் கடிதலாகிய இக்குணத்தை விசேடமாகக் கொள்ளவேண்டும். இவ்வாறொழுகுவோர் நீதியினின்றும் தவறாது நடந்து, நீதியல்லாதவைகளை அறவே யொழித்து, இருமைப் பயனையும் எளிதிலடைவார்கள். இதனை,

"செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து"

என்ற ஆன்றோர் வாக்கே நன்கு விளக்குகிறது. இஃதுணர்ந்தும் அரசர்கள் அகங்காரங்கொண்டு, தம்மைத் தடுப்பாரெவரென்ற எண்ணமுடையோராய் மனஞ்சென்றவாறு நடந்து, தன்னெறியி னின்றும் தவறுவரேல், அவர் கொண்ட எண்ணமே அவரை யழிக்கும்.

இஃதுணர்த்தவே மாதானுபங்கியாரும்,

உரு



“ இவறலு மாண்பிறந்த மானமு மாணு
வுவகையு மேத மிறைக்கு ”

என்றார். ஆகவே, மேற்சொன்னபடி குற்றங்களில்லாமலிருந்தால், இகபரமிரண்டிலுஞ் சுகத்தைப் பெறலாம். இன்றேல், எப்படி அணையப் போகிற விளக்கு பிரகாசமாக எரியுமோ அவ்வாறு கொஞ்ச காலம் வரையில் சுகத்தைப் பெற்றாலும், பின் துன்பத்தைப் பெறுவனென்பது திண்ணம். அப்போது பலராலும் இகழப்பட்டு மானமும் போய்விடும். பிறகு, “மான மழிந்தபின் வாழாமை முன்னினிதே

" என்ற ஆன்றோர் வாக்கியப்படி, உலகில் உயிரை வைத்துக்கொண்டு வாழவும் வேண்டுமா ? இஃதுணர்ந்த பெரியோர் தன்மையை யறிவுறுத்தவே,

" தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்

கொள்வர் பழிநாணு வார் "

என்றார் செந்நாப்போதார்.

ஆகலின், ஒவ்வொருவரும் தம் பிறவியை அவமாக்காது பய னுள்ளதெனப் பெரியோர்க ளறிந் தொழுகிய வழிகளை நன் குணர்ந்து அந்நிலை நிற்றல் அவசியமன்றோ ? அவ்வா றொழுகாக்கால் பலவகைப் பட்ட துன்பங்களுக் குட்பட்டுப் பழிபாவங்களுக்கும் ஆளாக நேரு மென்றே பொய்யில்புலவர்,

" குற்றமே காக்க பொருளாகக் குற்றமே

யற்றந் தருஉம் பகை "

என வலியுறுத்தினர். இத்தகைய குற்றங்களாலேயே எண்ணிறந் தோர் தம் பதவியை யிழந்துள்ளார். உலகில் சிலர் இத்தகையகுற்றங் களைச் சலியாதியற்றிக்கொண்டு, பிறரை நன்னெறியிலொழுகப் புத்தி புகட்ட முன் வருவதையும் சாதாரணமாகக் கண்டிருக்கலாம். இஃது என்ன மதியீனம் ! இவர்கள் தம் தன்மையை யுணராது, பிறர்க்குப் போதிக்கப் புகுவது வியப்பினும் வியப்பே. அத்தகைய ஒருவரை 'நீர் நன்னெறி வழாது நடுநிலையாக ஒழுகுகின்றீரா ?' என்று பிற ரொருவர் வினவின், அக்கணமே அவர் தன்மை வெளிப்படுமன்றோ ? ஆகவே, எவரும் முதலில் தம்மிடத்துக் குற்ற மணுகாது பாதுகாத் துக்கொண்டு பரிசுத்தராயிருந்த

பின்னர்ப் பிறர் குற்றங் காணவல்ல ரேல்,
அவர்பால் பிழை யணுவு
மணுகாதென்பது நிச்சயம். அவர்



க்கூறு

களே பிறர்க்குப் போதிக்கும் பெருமை
வாய்ந்தவர். இத்தன்மை அரசர்மாட்டு
இன்றியமையாதிருத்தல் வேண்டும். இதனை,

"தன்குற்ற நீக்கிப் பிறர்குற்றங்
காண்கிற்பி
னென்குற்ற மாகு மிறைக்கு"

என நாயனார் வாயுறைவாழ்த்தில்
வலியுறுத்திக் கூறியுள்ளார்.

பெரும்பாலும் எவருக்கும் கெட்ட
பேரையும் கெட்ட பலனையும்
அளிக்கவல்லது உலோபம் என்ற
இழிகுணமே. உலோபிகள் தம்மிடமுள்ள

பொருள்களை யொருவர்க்குக் கொடுக்கவும்,
தருமம் செய்யவும், பிறர்க்கு உணவு
முதலியவற்றை யளிக்கவும் சம்மதியார்.
அவர்கள் மேலைத் தவப்பயனால் பொருளைப்
பெற்றவிடத்து, அஃது அவர்கட்கு
யாதொரு பயனையும் நல்காது ஒழியும்.
இஃதுணர்த் தவே நான்முகரும்,

"செயற்பால செய்யா திவறியான் செல்வ
முயற்பால தன்றிக் கெடும்"

எனக் கூறியுள்ளார். அவர்கள் தமது
குணத்தை அன்னியர் அறிந்து இகழ்ந்து
கூறுவர் என்பதையும் அறிந்திலர்போலும்!
புகழும் புண்ணியமும் பெற விரும்புவோர்
இவ்வுலோப குணத்தை அடியோடு
விட்டொழிக்க வேண்டும். இஃதுணர்த்தவே,

"பற்றுள்ள மென்னு மிவறன்மை
யெற்றுள்ளு
மெண்ணப் படுவதொன் றன்று"

எனப் பெரியாரும் பணித்தார்.

நமக்கு இறுதியில் துன்பம் பயப்பதாகிய எத்தொழில்களையும் மனத்தாலும் விரும்பக்கூடாது. பூர்வம், பூலோக அரசனான நகுடன் நூறு அஸ்வமேதம் செய்து தேவேந்திர பட்டத்தைப் பெற்றகாலத்தும், அவன் கொண்ட கர்வமன்றோ அப்பதவியை யிழக்கச் செய்தது? இத்தகைய குற்றத்தால் கெட்டபேர்கள் கோடானு கோடி. ஆகையாலன்றோ வள்ளுவனார் வைப்பும்,

"வியவற்க வெஞ்ஞான்றுந் தன்னை
நயவற்க
நன்றி பயவா வினை"

எனக் கூறு நின்றது?

உலகில் எல்லாச் செல்வங்களையும் ஒருங்கு பெறக்கூடியவர் பெரும்பாலும் அரசரே யாதலால், அவர் செல்வச்

காரியங்களையும் ஆராய்ந்துணராது இயற்றும் இயல்புடையோராவ ரென்பது கருதியே தெய்வப்புலவர் 'குற்றங்கடிதல்' என்னும் இவ் வதிகாரத்தை அரசியலில் வைத்துக் கூறியுள்ளார். ஆகவே மேற் கூறப்பட்ட ஆறுவகைக் குற்றங்களே அரசர்கட்குப் பகை எனப் படும். இத்தகைய பகையுள்ளும் தாவரம் நீங்கலான எவ்வகைப் பிறவிக்கும் இயற்கையாய் அமைந்ததும், யாவரும் எளிதில் வெறுக்க முடியாததுமாகிய காம இன்பத்தைப் பிறராறியாது நீதி நூலுக்குப் பொருந்த சிறுபான்மை

அனுபவிப்பரேல், அப்பகை அவரை வருத் தாது. முன்னே, ஏமாங்கத நாட்டிற் கரசனும் ஜீவகன் பிதாவுமான சச்சந்தன் அழிந்ததற்குக் காரணம் அவன் கொண்ட காம நுகர்ச்சி யல்லவா? இவை கருதியே,

"காதல காத லறியாமை யுய்க்கிற்பி
னேதில வேதிலார் நூல்"

என்றார் நாயனாரும்.

அந்தோ! இத்தகைய கொடிய துன்பங்களைப் பயக்கும் வழி களை இன்பமெனக் கருதலாமா? இத்தகைய சரித்திரங்களை யும் சாஸ்திரங்களையும் நம்முன்னோர் நமக்காகவன்றோ வரைந்துள் ளார்கள்? ஆகலின், நாம் இக்குற்றங்களை நன்குணர்ந்து நீக்கி இருமைக்கான வழிகளி லீடுபட்டு இறைவனை யடைய என்றும் முயல்வோமாக.

# 45- ஆம் அதிகாரம்
# பெரியாரைத் துணைக்கோடல்

---

அறிவு ஒழுக்கங்களிற் சிறந்த ஆன்றோர்களைத் துணையாகக் கொள்ளுதலே, 'பெரியாரைத் துணைக்கோடல்' எனப்படும்.

" நல்லா ரிணக்கமு நின்பூசை நேசமு ஞானமுமே
யல்லாது வேறு நிலையுளதோ வகமும் பொருளு
மில்லாளுஞ் சுற்றமு மைந்தரும் வாழ்வு மெழிலுடம்பு
மெல்லாம் வெளிமயக்கே யிறைவா கச்சி யேகம்பனே "

என்றருளிச் செய்தார் பட்டினத்தடிகள்.

அதிகாரம் - ௪ரு.] அரசியல்

"கக்கள்

மக்களாய்ப் பிறந்த நாம் பெருமையை யடையவும் இருமைப் பயனையும் எளிதிற் பெறவும் பெரியாரைத் துணையாகக்கொள்ள வேண்டும். பெரியாரெனின் உருவத்தினுலும் வயதினுலும் பெரிய வர்களாகத் தோன்றுபவர்களெனக் கருதலாகாது. கல்வி, அறிவு, தானம், தவம், முயற்சி முதலிய நற்குண நன்னடக்கை யுடையவர் கள் யாவரோ அவர்களே பெரியா ரெனப்படுவர். அவர்கள் கல்வி யறிவொழுக்கங்களினுல் மேம்பாடெய்தியது மன்றி உலக வியல்பை யும் நன்குணர்ந்தவரா யுள்ளார்கள். அவர்களைத் துணையாகக் கொண்டொழுகினுல், பூவின் மணம் அதைச் சார்ந்த நாரிலும் காணப்படுவதுபோலப் பேரறிவுடையா ரிடத்துள்ள பெருமை தங்கிய குணங்கள்

அவர்களைத் துணையாகக் கொண்ட நம்மிடத்திலும் உண்டாம். அங்ஙனம் உண்டாகவே நம்மிடத்திலுள்ள தீய குணங்களெல்லாம் சிறிது சிறிதாக அகன்றுவிடும். ஆகவே, பூமியை ஆளும் திருவினையுடைய அரசர்கள் அவர்களைத் துணையாகக்கொண் டொழுகுதல் அத்தியாவசியமாக வேண்டற்பாலது. இதனை,

"அறனறிந்து மூத்த வறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல்"

என்ற திருவள்ளுவர் தமிழ் மறையாற் றெளிக.

பேரறிவாளரை நமக்குத் துணையாகக் கொள்ளுதலே உலகில் நாம் அடையும் பேறுகள் எல்லாவற்றிலும் அரியபேறு என்னலாம். அவர்கள் துணை இம்மைக்கு மாத்திரமன்றி மறுமைக்கும் எவ்

வளமோ நன்மை பயக்கக் கூடியதாயிருக்கிறது. கௌரவர்கட்கும் பாண்டவர்கட்கும் நடந்த பாரத யுத்தத்தில் பாண்டவர்கள் ஸ்ரீ கிருஷ்ண பகவானைத் துணையாகக் கொள்ளாவிடில் ஜெயமடைவார் களா? கௌரவர்கள் சேனையோ பாண்டவரின் சேனையைவிட அதிகமாகவிருந்தும் அபஜெயமடைய நேரிட்டதே! பாண்டவர்கள் 'பெரியாரைத் துணைக்கொள்' என்ற நம்தெய்வத் தமிழரசியா ருடைய திருவாக்கின்படி ஒரு பெரியாரைத் துணையாகக் கொண் டமையாலன்றோ உய்ந்தனர்? அப்பெரியார் அவர்களுக்கு எந் நேரத்தில் எவ்வித இடையூறு நேரினும் அவ்வப்போ தெல்லாம் பாண்டவர்களுக்குத் துணையாக நின்று காப்பாற்றி யருளினார். கூர்ந்து நோக்கின், பெரியாரைத் துணைக்கோடல்

அரசர்கட்குப் க்க்ஆ

திருக்குறள் தீபாலங்காரம்

[பொருட்பால் பெருமையைத் தருமென்பது வெள்ளிடை மலைபோல் விளங்குகின்றதன்றோ? இஃதுணர்த்தவே,

"உற்றநோய் நீக்கி யுறாஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல்"

என உத்தரவேதமும் கூறுகின்றது.

மானிடராய்ப் பிறந்த நாம் ஒவ்வொருவரும் பெரியாரைத் துணைக்கோடல் அவசியம். இவ்வாறு கல்வி அறிவு ஒழுக்கங்களிற் சிறந்த ஆன்றோர்களைத் துணையாகக் கொண்டால், அவர்கள் தம்மையடைந்தவர்களைத் தீய செயல்களிலிருந்து மீட்டு நற்செயல்களிற் படிவிப்பரென்பது நிச்சயம். இதனை,

"பாலோ டளாயநீர் பாலாகு மல்லது
நீராய் நிறந்தெரிந்து
தோன்றுதாற்—றேரிற்

சிறியார் சிறுமையுந் தோன்றாதா நல்ல
பெரியார் பெருமையைச் சார்ந்து"

என்றும்,

"அறியாப் பருவத் தடங்காரோ டொன்றி
நெறியல்ல செய்தொழுகி

யவ்வு—நெறியறிந்த

நற்சார்வு சாரக் கெடுமே வெயின்முறுகப்
புற்பனிப் பற்றுவிட் டாங்கு"

என்றும் நாலடியார் கூறியது காண்க. மேலும் அவ்வான்றோர் களுடைய சேர்க்கையால் எவரும் சாஸ்திர ஆராய்ச்சியும், பெரியோரிடத்தில் வணக்கமும், பழிபாவங்களில் அச்சமும், ஆத்மஞான மும் பெற்று, யாவராலும் போற்றப்படுவர்.

"அரியவற்று ளெல்லா மரிதே
பெரியாரைப்

பேணித் தமராக் கொளல்"

என்ற பொய்யா மொழிக்கிணங்க,

அறிவிற்சிறந்த பெரியோர்கள்
எவ்விடத்திலிருந்தாலும் அவர்கள்
ஒருவர்மீது வைத்த தயவை மறக்க
மாட்டார்கள்; தம்மை யடைந்தவர்கட்கு
எவ்வகையான தீங்கு நேரினும், உடனே
அவர்கள் அதை நாசம் செய்துவிடுவர்.
இத்தகைய அருமை பெருமை வாய்ந்த
ஆன்றோர்களோடு பழகும்
அரசர்கள் எல்லா நன்மைகளையு
தலை மாதாவுபல்லியாரும்,
மூடையவராவார்கள். இஃதுணர்த்

அதிகாரம் . ௪௫.] அரசியல்

௪௪௪

"தம்மிற் பெரியார் தமரா வொழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை"

எனப் பணித்தார்.

அரசர் அத்தாணி மண்டபத்தே

வீற்றிருக்குங்கால் அறிஞர் கள் யாவரும் சூழவிருத்தல் அவசியம் வேண்டற்பாலது. 'கற்ற மாந் தரைக் கண்ணெனக் கோடலும்' என்ற ஆன்ரோர் மொழிப்படி, கற்ரோரை மந்திரியாகக் கொண்டு இராச்சிய பாரம் நடத்தலே அரசர்க்குரிய கடமையாம். அம்மந்திரிகள் நீதி நூலை யாராய்ந்து உலக இயற்கையை நன்குணர்ந்து அரசன் மேவிய தொழிலை யமைதி யோடு செய்வர்.

" சூழ்வார்கண் ணாக வொழுகலான் மன்னவன்

சூழ்வாரைச் சூழ்ந்து கொளல் "

என்று நாயனாரும் கூறியுள்ளார். ஆகவே, இத்தகைய ஆன்ரோர் களைத் துணையாகக் கொண்டு, அவர்களோடு தானும் தருமநூலை யாராய்ந்து நெறி தவருது நடக்கவல்ல அரசர்களைத் துன்பமும் அணுகுமோ? இஃதுணர்த்தவே,

" தக்கா ரினத்தனய்த் தானொழுக வல்லானைச்

செற்றார் செயக்கிடந்த தில்"

என்றார் வள்ளுவரும்.

கண்களுக்கு ஆனந்தத்தைக் கொடுக்கக்கூடிய சந்திரன் சமுத்திரத்தின் விருத்திக்குக் காரணமாக விருப்பது போலவே, உலகத்திற்கு இன்பத்தைக் கொடுக்கக்கூடிய ஆன்றோர்கள் அரசர்களுடைய விருத்திக்குக் காரணமென்னலாம். ஆகவே, அரசர் இத்தகைய ஆன்றோர்களுள்ளும் தக்காரிவரெனத் தேர்ந்தெடுத்து அவரைத் துணையாகக் கொண்டு இராச்சியபாரம் நடத்தாவிடில் மாலுமியில்லா மரக்கலம் சமுத்திரத்தில் தத்தளிக்குமாறு போல பூமியில் தத் தளிக்க நேருமென்பது திண்ணம். இதனை,

"இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும்"

என்ற தேவர்வாக்கா லுணர்க.

பெரியாரை அவமதித்து நடத்தல், அந்தோ! ஒருவர் தேகத்தின் கண் அவர் உணராவண்ணம் அற்ப அங்குரமெனத் தோன்றி,



மறைவிலே வளர்ந்து, பின் எத்தகைய சிகிச்சைக்கும் அடங்காது, உண்ணும் ஔஷதங்களை யெல்லாம் விழுங்கிவிடும் இயல்புடைய ஒரு கொடிய வியாதியை ஒக்கும். சிந்தித்துப் பார்க்கின், பெரியோரை அவமதிப்பதனால் உண்டாகும் ஆபத்து பயங்கரமானதென் பதும், மேலைத் தவப்பயனாற் பெற்ற பலன்களையும் அது அழித்து விடத் தக்கதென்பதும், பின் சுலபத்தில் நீக்கிக்கொள்ளக் கூடிய தல்லவென்பதும், உள்ளங்கை நெல்லிக்கனிபோல் அனைவருக்கும் விளங்கும். இஃதுணர்த்தவே,

“ பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த

தீமைத்தே

நல்லார் தொடர்கை விடல்"

என நந்தமிழ் மறையும் நவிலா நின்றது.

ஆகவே, அறிவுடையார் ஆன்றோர்களுடைய பிரிவு துன்பத் திற்கு இடமாமெனத் தேர்ந்து அம்மகான்களைக் கனவிலும் பிரியச் சகியார். இஃதுணரவல்ல நாம் அனைவரும் அறிஞர்களைச் சகாய மாகக்கொண்டு, அவர்கள் அருளைப்பெற்று, ஜனன மரண துன்பங் களை நீக்கி, எப்போதும் ஆனந்த சாகரத்தில் மூழ்கி, என்றும் அழி யாத பேரின்ப வாழ்வையடைய எல்லாம்வல்ல இறைவனைப் பிரார்த் திப்போமாக.

---

## 46 - ஆம் அதிகாரம்
## சிற்றினஞ் சேராமை

---

புல்லறிவினரோடு பொருந்தாமையே,

'சிற்றினஞ் சேராமை' எனப்படும்.

" ஆயிரஞ் சொன்னாலு மறியாத வஞ்சநெஞ்சப்
பேயரொடு கூடிற் பிழைகாண் பராபரமே "

என்றார் தாயுமானார்.

பரமகருணாநிதியாகிய கடவுள் இவ்வுலகின்கண் படைத்த ஓரறிவுடைய வுயிர்தொடங்கி ஆறறிவுயி ரீறாயுள்ள எண்பத்து நான்கு லக்ஷம் ஜீவபேதங்களில், இது நன்மை இது தீமை எனப் பகுத்துணரும் ஆறும் அறிவை மக்கட்பிறவிக்கே அளித்துள் ளார். அவ்வறிவைப்பெற்றும் அதன் பயனையடையாது அவமாக்கும்

அதிகாரம் • ௬௬ ] அரசியல்

௨௦௧ மக்களின் மதிதான் என்னே! பகவானால் அளிக்கப்பட்ட பகுத்தறிவைப்

பேணுது, அரியநூல்களை ஆராயாது, ஆன்றோர்களால் அருவருக்கப்பட்டுத் தம் வாழ்நாளை வீணுளாக்கும் மக்களும் மக்களா? அவர்கள் தாம்பெற்ற விசேட அறிவையும் அதனுல் அடை யும் புருஷார்த்தங்களையும் அவமாக்குவதானது, நடந்துசென்ருல் கால்நோகுமென்று ஒரு குதிரையை ஒருவனுக் களிக்க, அவன் அக் குதிரையின் வால்புறம் திரும்பி உட்கார்ந்துகொண்டு அதை ஓட்ட முயன்றவா றொக்கும். அந்தோ! இஃது எத்தகைய் வெட்கக் கேடான நிலைமை! இத்தகையோர் எங்ஙனம் மேம்பா டடைவது? 'தீயார் குணங்க ளுரைப்பதுவுந் தீதே' என்ற நம்மூதாட்டியாராகிய ஔவைப் பிராட்டியார் வாக்கியப்படி, அவ்வற்பர்களுடைய குணங் களைக் கூறுவது நன்றுகாது. இதனை,

"சிற்றின மஞ்சும் பெருமை சிறுமைதான்

சுற்றமாச் சூழ்ந்து விடும்"

என்ற நான்முகர்கூற்றே நன்குணர்த்துகிறதன்றோ?

'சகவாசத்தால் ஒருவர் குணமும் நடக்கையும் இன்னொருவரைப் பற்றும்' என்பதைப் படித்தும் கேட்டும் இருப்பதோடு, கண் கூடாகக் கண்டும் இருக்கிறோமல்லவா? 'தான் பத்தினியாயின் தாசி வீட்டில் குடியிருந்தால்தானென்ன?' என்ற ஒரு பழமொழியுண்டு. அத்தகைய சந்தர்ப்பம் நேருங்கால் ஒருவித சமாதானத்திற்காக அப்பழமொழியைக் கூறிக்கொள்வதேயன்றி வேறன்று. உலக அநுபவமறிந்து திடப்பட்ட மனவலிமையுடையோரே சகவாசத்தால் மாறுதல் அடையக் கூடுமென்றால், ஏனையோர் மிகச் சுலபத்தில் அன்னியருடைய குணம் நடக்கைகளைப் பற்றிக்கொள்வர் என்பது

யாவரும் எளிதில் உணரத்தக்கதே. ஆகையாலன்றோ பொய்யில் புலவரும்,

“நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு மாந்தர்க்
கினத்தியல்ப தாகு மறிவு”

எனப் பணித்தார்?

பலம் பொருந்திய ஒரு குதிரைக்குச் சரியான கடிவாளம் போட்டு, அதை இழுத்துப் பிடித்து நடுப்பாதையிலே செல்லும்படி





கொஞ்சகாலம் பழக்கிவிட்டால், நாம் பயமின்றி எந்தவிடத்திற்கும் க்ஷேமமாகவே சென்று வரலாம். அதைவிட்டுக் கடிவாளமே போடாத ஒரு குதிரை பூட்டிய வண்டியில் ஏறிச்சென்றால், அது காடு மேடெல்லாம் ஓடி நம்மையும் கீழே தள்ளும். அவ்வாறே தம்

அறிவை யடக்கியாளும் ஆன்றோர்களைச் சேர்ந்தால், அறிவு விசாலப்பட்டு அரிய காரியங்களை யியற்றி இவ்வுலகிலும் அவ்வுலகி லும் சிறப்புறலாம். அற்பர்களைச் சேர்ந்தால் பொறாமை கோபம் அகங்காரம் கபடு சூது முதலியவற்றிற் குட்பட்டு இருமைப் பயனையு மிழப்பது திண்ணம். நாம் ஒவ்வொருவரும் இதனை அறிந்து நடந்தாலன்றி எவ்விதத்திலும் சுகமில்லை. இஃதுணர்த்தவே உத்தரவேதம்,

"மனத்தானு மாந்தர்க் குணர்ச்சி
யினத்தானு
மின்னா னெனப்படுஞ் சொல்"

என நவில்கிறது.

ஒருவனுடைய நற்குணமோ அல்லது தீய குணமோ அவனிடத்துள்ளதாகக் காணப்படினும், அஃது உண்மையில் அவன் சேர்ந்த இனத்தின் இயல்பே என்னலாம். எவர்க்கும் சேர்க்கையின்படியே மனம்

வாக்கு காயங்கள் மாறுபடுகின்றன. 'விதை ஒன்று விதைக் கச் சுரையொன்று காய்க்காது ' என்பதுபோல, இனத்தின் இயல்பு போலவே அறிவு விளங்கும் என்பது நிச்சயம். ஆகலின், மக்கள் ஐம்பொறிகளையும் அடக்கியாளும் ஆன்ருேர்களைச் சேர்ந்து , இயற்கை யறிவை மேன்மேலும் உயர்த்தி, ஞானமடைவதற் கேது வாகிய நூல்களைக் கற்று, யாவராலும் போற்றுதற்குரிய உயர் குணத்தை அடையவேண்டும்.

" மனத்து ளதுபோலக் காட்டி யொருவற்
கினத்துள தாகு மறிவு "

எனப் பெரியாரும் பணித்தமை காண்க.

இதனல், எவர்க்கும் விசேட அறிவை அளிப்பது அவரவர் சார்ந்த இனமென்ப தறியக்கிடக்கிறது. முன்னே, சுகலன் சுகலை என்ற சதிபதிகள் பெற்ற பன்னிரண்டு புதல்வர்களும் பிருகற்பதி யின்

சாபத்தை ஏற்றுப் பன்றிக் குட்டிகளாகப் பிறந்தது, அவர்கள் 

வேடரைச் சேர்ந்திருந்ததனல் வந்த தோஷமன்ருே? இஃதுணர்ந்தவே செந்நாப்போதாரும்,

“மனந்தூய்மை செய்வினை தூய்மை யிரண்டு
மினந்தூய்மை தூவா வரும்”

எனக் கூறியுள்ளார்.

இவைகளையெல்லாம் நான்காராயுமிடத்துப் பேரறிவுடை யாரைச் சேர்ந்தால் பெருமையும், சிற்றறிவுடையாரைச் சேர்ந்தால் சிறுமையும் அடைவோமென்பது யாவர்க்கும் வெள்ளிடை 'மலை போல் விளங்குமன்ருே? ஆகவே, ஒருவன் தன்னை உயர்த்திக் கொள்வதற்கும், தாழ்த்திக் கொள்வதற்கும் அவன்

கொண்ட சகவாசமே காரணமாம். இதனை நாலடியாரும்,

" உணர வுணரு முணர்வுடை யாரைப்

புணரப் புணருமா மின்பம்—புணரிற்
றெரியத் தெரியுந் தெரிவிலா தாரைப்
பிரியப் பிரியுமா நோய் "

எனக் கூறுநின்றது. திருவள்ளுவரும்,

" மனந் தூயார்க் கெச்சநன் றாகு
மினந்தூயார்க
இல்லைநன் றாகா வினை "

எனக் கூறியுள்ளார்.

முன்னர் நடந்த பாரத யுத்தத்தில் குற்றமற்றோராகிய பீஷ்மர், துரோணாச்சாரியர் முதலியோர் அற்ப அறிவுடையோராகிய கௌரவர்களைச் சார்ந்ததனாலன்றோ இறக்க நேர்ந்தது? இஃதன்றியும் ஏமாங்கதநாட் டரசனும், ஜீவகன் பிதாவுமாகிய சச்சந்தன்

புல்லறிவுடையோனாகிய கட்டியக்காரனை நன்குணராது, அவனை மந்திரியாகப் பெற்றதனாலன்றோ தன் அருமை பெருமை யாவுமிழந்து இறந்தான்? ஆகவே, எல்லாச் செல்வங்களையும் ஒருங்கு பெற்ற அரசர்கட்கும் இனநலம் அவசியம் வேண்டற்பாலது. இஃ துணர்த்தவே முப்பாலும்,

"மனநல நன்குடைய ராயினுஞ்
சான்றோர்க்
கினநல மேமாப் புடைத்து"

எனக் கூறியது.



ஆகவே, மக்கள் சிற்றினத்தைச் சேரலால் பகவானால் அளிக் கப்பட்ட பகுத்தறிவையும் அற்ப அறிவாக்கி, அனைவராலும் இக ழப்படுவரென்பது

தெளிவாம். இதுகருதியே,

"நல்வினைத்தி னூங்குந் துணையில்லை தீயினைத்தி

னல்லற் படுப்பதூஉ மில்"

என உத்தரவேதமும் வலியுறுத்திக் கூறியுள்ளது.

இவைகளையெல்லாம் நன்குணரவல்ல நாம் அனைவரும் இருமைப் பயனையும் நீக்கி இடருறச் செய்யும் இனத்தைக் கனவிலுங் கருதாது, கல்வி யறிவொழுக்கங்களிற் சிறந்த பெரியோர்களைச் சேர்ந்து இம்மை மறுமை யின்பங்களை எளிதிலடைந்து, என்றும் மாறாப் பேரின்பப் பெருவாழ்வைப் பெற எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திப்போமாக.

---

# 47 - ஆம் அதிகாரம்
# தெரிந்து
# செயல்வகை

---

எக்காரியங்களையும் ஆலோசித்துச் செய்யுந் திறமையே, 'தெரிந்து செயல்வகை' எனப்படும்.

“ தன்னிலைக்கட் டன்னை நிறுப்பானுந்
தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானு நிலையினு
மேன்மே லுயர்த்து நிறுப்பானுந்
தன்னைத்
தலையாகச் செய்வானுந் தான் ”

என்றது நாலடியார்.

நாம் கடவுளருளால் நன்மை தீமைகளை நன்குணர்ந்து இம்மை மறுமைகளில் இன்புறுமாறு, எக்காரியங்களையும் எளிதி லறிந்தியற்ற வல்ல பகுத்தறிவைப் பெற்றுளோம்.

இச்சிறப்புடைய நாம் கண்மூடித்தனமாகக் காரியங்களைச் செய்தால் கலக்க முறுவதற்குச் சந்தேகமோ? மரணத்திலுங் கொடிய ஆபத்தை நாமே வலிய உண்டாக்கிக் கொள்கிறோம். பகுத்தறிவைப் பெற்றதன் பயனிதுவோ? இது பட்டப்பகலில் விளக்கை வைத்துக்கொண்டு கிணற்றில் விழு



வதுபோலிருக்கிறதே யன்றி வேறில்லை. இவ்வாறு அறிவைப் பறி கொடுத்துப் பின் பரிதவிப்பதால் என்ன பயன்? ஆகவே, நாம் செய்யும் காரியங்கள் அனைத்தும் நன்காலோசித்தும் ஒழுங்கோடும் அளவோடும் செய்யப்படவேண்டும்.

இன்றேல், நம் முயற்சியும் கை கூடாமல் போவதோடு குளிக்கப்போய்ச் சேறு பூசிக்கொண்ட கதை போல நமக்கு இடையூறும் அவமானமும் நேரிடுவது திண்ணம். இஃதுணர்ந்தவே தேவர் குறளும்,

“ அழிவதூஉ மாவதூஉ மாகி வழிபயக்கு
மூதியமுஞ் சூழ்ந்து செயல் ”

எனக் கூறு நின்றது.

எக்காரியங்களையும் நன்காராய்ந்து அவற்றை உலக அனுபவ முள்ள ஆன்றோர்களோடும் ஆலோசித்து இயற்றினால், அவை எக் காலத்திலும் சிறப்பையும் இன்பத்தையும் அளிக்கும். இவ்வாறிருக் கச் சிலர் தம்மனஞ் சென்றவாறு காரியங்களை இயற்றி, அவற்றிற் சித்திபெறாது கலக்கமுற்று வருந்துவதைக் கண்ணாரக் கண்டும் கேட்டும் இருக்கிறோம். உலகில்

இத்தகைய குற்றத்தால் கெட்டோர் கோடானுகோடி. ஆகவே யாவரும் இவ்வறிவீனத்தை அடியோடொழித்து எவ்விஷயத்தையும் ஆலோசித் தியற்றுவது அவசிய மன்றோ? அரசர்கட்கு இத்தகைய குணம் அத்தியாவசியமாக வேண்டற்பாலது. இதனை,

" தெரிந்த வினத்தோடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்

கரும்பொருள் யாதொன்று மில் "

என்ற தெய்வப்புலவர் வாக்கே நன்குணர்த்துகிறது.

ஒரு தொழிலை ஆராய்ந் தியற்றும் இயல்புடையோரே அறி வுடையோரெனப்படுவர். ஆராய்ந்துணராது அறிவீனத்திற் குட் பட்டு ஒரு தொழிலைச் செய்வோர், தாம் தொடங்கிய தொழிலும் நிறைவேறப்பெறாது அவமானத்திற்

குட்பட்டு அழிவரென்பது நிச்சயம். பூர்வம், ஆயிரம் பரிக்கோர் சேவகன் என்ற சோழ ெனாருவன் பாண்டி நாட்டைக் கவர வுத்தேசித்து, ஆலோசியாமலே பாண்டியன் மீது படையெடுத்துச் சென்று தன் பெருமை இழந்தும் அவமானப் பட்டும் அழிந்தானன்றோ ? ஆகையினாற்றான் தமிழ் மறையும்,



"ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
யூக்கா ரறிவுடை யார்"

என நவிலா நின்றது.

அறிவுடையோர் எக்காரியங்களையும் நன்காராய்ந்து, ஆன்றோர்க ளுடனும் ஆலோசித்துச் செய்து, அதிற்

சித்தி பெறுவர். அவ்வா றின்றி நுனிப்புல் மேய்வோராகிய மக்கள் தாம் மேற்கொண்ட தொழிலும் நடைபெறாது அவமானத்திற் குட்பட்டு அவமாவர். முன் ெனாரு காலத்தில் தமிழ்நாடு பஞ்சத்தினல் வருந்த, சேரசோழ பாண் டியரென்னும் மூவேந்தர்களும் அகத்திய முனிவருடைய உதவியால் தேவேந்திரனிடத்துச் சென்றபோது, அவர் வரவேற்றுத் தன்னுச னத்திற்குச் சிறிது கீழாக மூன்று சிங்காசனம் இட்டருள, உக்கிர பாண்டியன் மட்டும் அவ்வாசனத்தில் அமராது இந்திரனேடு ஒப்ப அமர்ந்தான். அதனல், தேவேந்திரன் ஆலோசியாது அவர்மீது சீற் றங்கொண்டு பாண்டி நாட்டில் மாத்திரம் மழை பெய்யாதபடி செய் தான். அப்போது, பாண்டியன் அம்மேகங்களையுஞ் சிறைப்படுத்தித் தேவேந்திரனுடைய மகுடத்தையும் சிதைத்தான் .

அளவில்லாதவர் கள் தாங்கி வருந்தும் ஆரத்தைப் பூ மாலைபோல எளிதாகத் தமது கழுத்தில் அணிந்துகொண்ட அப் பாண்டியனுடைய வன்மையை ஆராய்ந் துணராததனாலன்றோ தேவேந்திரனும் இத்தகைய அவ்
மானத்திற் குட்படவிருந்தது? ஆகவே, எவ்ரும் நன்காராயாது ஒரு தொழிலை யியற்றுவரேல் முடிவில் அத்தொழில் நிறைவேறாது வருந்துவரென்பது திண்ணம். இவை கருதியே திருவள்ளுவர் முது மொழியும்,

"தெளிவி லதனைத் தொடங்கா ரிளிவென்னு
மேதப்பா டஞ்சு பவர்"

எனக் கூறியுள்ளது. இன்னும், ஆராயா தியற்றுதல் பகைவரைவிடப் பதின்மடங் கதிக துன்பத்தை யளிக்குமென்ப தறிவுறுத்தவே,

" வகையறச் சூழா தெழுதல் பகைவரைப்
பாத்திப் படுப்பதோ ராறு"

என்றும் அறிவுறுத்தினர் நாயனர்.

ஒரு கருவியைக்கொண்டு ஒரு தொழிலை முடிக்கும்போது, அக்கருவியை முறைப்படி உபயோகப்படுத்தினற்றுனே காரிய



உ௦எ சித்திபுண்டாகும். ஒரு தச்சனிடம் வேலைக்குரிய ஆயுதங்கள் பல உள. ஆனல், அவன் அதை உபயோகப்படுத்தும் முறையாக உப யோகப்படுத்தினலன்றி அத்தொழிலிற் சித்தியடைய முடியுமா? அவ்வாறே அறிவென்னுங் கருவியைக்கொண்டு ஒரு தொழிலை முடிப்பதானல் அதனைச் சமயமறிந்து ஆலோசித் தியற்றுவிடில் அஃ தென்னனஞ்

சித்தியாம்? ஆகவே, எதையும் சுருதி யுக்தி அனுபவங் களுடனே பொருந்த ஆலோசித்துச் செய்வன செய்தும், தவிர்வன விலக்கியும் நடந்தாலன்றி, நாம் சித்தியடைய இயலாது. ஆதலால், இத்தகைய ஆராய்ச்சி அரசர்மாட்டு அவசியம் இருத்தல்வேண்டும். இதனை,

"செய்தக்க வல்ல செயக்கெடுஞ் செய்தக்க
செய்யாமை யானுங் கெடும் "

என்ற பொய்யா மொழியார் வாக்கே நன்கு விளக்குகிறது.

மணி, மந்திர, ஔஷதங்களால் வாயுத்தம்பனம், ஜலத்தம் பனம், அக்கினித்தம்பனம் முதலியன செய்யும்போது வாயு, ஜலம், அக்கினி இவைகளிலுள்ள சலனம், திரவத்தன்மை, உஷ்ணம் ஆகிய சக்திகள் மறைந்து போகின்றவா றுபோல, நாம் செய்யும்

ஒவ்வொரு தொழிலையும் ஆன்றோர்களுடன் ஆலோசித்துச் செய்வோமாயின், அறியாமை நீங்கி, ஒருவிதமான அபாயமுமின்றி, அக்காரியத்திலும் சித்தியடைவோம். ஆகவே, ஒரு தொழிலை இயற்றுமுன் இது நமக்கு அவசியமா? இதனால் நன்மையுண்டா? இக்காரியம் சித்தி பெறுமா? என்று ஆராய்ந்து அறிஞர்களுடனும் ஆலோசித்து இயற்ற வேண்டும். இஃதுணர்த்தவே,

" எண்ணித் துணிக கருமந் துணிந்தபி

னெண்ணுவ மென்ப திழுக்கு "

எனப் பெரியாரும் பணித்தமை காண்க.

அரசர்கள் சாம பேத தான தண்டமென்னும் சதுர்வித உபாயங்களைக்கொண்டு விஷயங்களை ஆராய வேண்டும். இங்ஙன மாராயாத அரசர்கள்

எத்தகைய வலிமை பெற்றிருந்தாலும் யானை யுண்ட விளாம்பழம் போலாவாரென்பது நிச்சயம். ஆகையாலன்றோ,

> “ ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று
> போற்றினும் பொத்துப் படும்”

எனத் திருவள்ளுவரும் திருவாய் மலர்ந்துள்ளார்?



பூர்வம், ஏமாங்கத நாட்டை யாண்ட சச்சந்தனுடைய அரசுரிமையைக் கவர்ந்தோனாகிய கட்டியக்காரன், விதய தேசத்தரசனான கோவிந்தனது கருத்தை ஆராய்ந்துணரச் செய்தது, தன்னுயிரைக் கொல்லும் யமனைத் தானே கையால் அழைத்தவா றாயிற் றன்றோ? இவைகருதியே திருவள்ளுவனார் வைப்பும்,

“ நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவாவர்
பண்பறிந் தாற்றாக் கடை ”

எனக் கூறுகின்றது.

ஆதலால், நாம் எக்காரியங்களையும் ஆலோசித் துணர்ந்து, இருமைக்கான வழிகளி லீடுபட்டு, இம்மானிட ஜென்மமாகிய பயிரைத் தீவினையாகிய மிருகங்கள் மேயாமற் காத்து, நற்கதியாகிய இன்பத்தை யடைய எல்லாம் வல்ல கடவுள் அருள் புரியுமாறு பிரார்த் திப்போமாக.

---

# 48 - ஆம் அதிகாரம்
## வலி யறிதல்

---

ஒரு தொழிலைச் செய்யக் கருதியவிடத்து, காலம், இடம், காரி யம் முடிக்குந்திறம் என்பவைகளை ஆராய்ந் தறிதலே, ‘வலி யறிதல்’ எனப்படும்.

நாம் ஒரு காரியத்தை முடிக்கக் கருதிய காலத்து, காலதேச வர்த்தமானங்களையும், நம் திறமையையும், காரியம் முடிக்கும் வகை களையும் நன்காலோசிக்க வேண்டும். அவ்வாறின்றி 'ஆத்திரக்கார னுக்குப் புத்திமட்டு' என்ற பழமொழிப்படி, அவசரப்பட்டு ஒரு காரியத்தை யியற்றுவோமாயின், அக்காரியம் சித்திபெறாது அவ மானப்பட்டு அழியினும் அழிவோம். ஆகவே, அரசர்கட்கு இத் தகைய திறம் அவசியம் வேண்டற்பாலது. பகைவரை வெல் லக் கருதியவர், தாம் வெல்லுதற்குரிய நால்வகை வலிமைகளை யும் காரியம் முடிக்கும் வகைகளையும் ஆராய்ந்து, காலம் இடம் முதலியவைகள் வாய்த்தபோது படையெடுத்து வெற்றிகொள்ள வேண்டும். இதனை,

"வினைவலியுந் தன்வலியு மாற்றான் வலியுந்
துணைவலியுந் தூக்கிச் செயல்"

என்ற வள்ளுவதேவர் கூற்றே வலியுறுத்துகிறதன்றோ? இவ்வாறு ஆராய்ந்து தெளிந்து பகைமேற் செல்பவர்கட்கு இயலாத காரியம் யாதாம்? இது கருதியே, பாண்டுவின் குமாரர்களான பஞ்சபாண் டவர்கள் தாம் வலியராய் இருந்தும், பாசுபதாஸ்திரத்தையும் பக்த வத்ஸலனாகிய கிருஷ்ணபகவானையும் துணையாகக் கொண்டார்கள் போலும்! ஆகவே, வலியறிந்து பகைமேற் செல்லும் இயல்புடையோரை வெல்பவர் எவ்வுலகத்துமில்லை. இஃதுணர்த்தவே வாயுறை வாழ்த்தும்,

"ஒல்வ தறிவ தறிந்ததன் கட்டங்கிச்
செல்வார்க்குச் செல்லாத தில்"

எனக் கூறுகின்றது.

குயில் கூவாமையைக் கண்டு காகம் தனக்கும் குயிலுக்கும் என்ன பேதம் என்று எண்ணியவாறுபோல, தம் வலியையுணராது பகைமேற் சென்றவர் பட்ட பாட்டையும், கெட்ட கேட்டையும் படித்தும் கேட்டும் இருக்கிறோமன்றோ? பூர்வம், கோகுலத்தி லிருந்த ஜனங்கள் வருஷந்தோறும் தேவேந்திரனுக்குப் பிரீதியாக இந்திர யாகஞ் செய்தார்கள். ஒருமுறை அவர்கள் அது செய்வதைவிட்டு ஸ்ரீ கோவர்த்தன பர்வதத்தைப் பூசித்துப் பர்வதயாகஞ் செய்தார்கள். அப்போது, பகை மேற்கொண்டு அவர்களை மிகவும் துன்புறுத்தக் கருதிய அவ்விந்திரன், தன் வலிகுன்றி நாணமடைந்தானல்லனோ? இதனால் தன் வலியுணராது பகைமேற் செல்வோரில்லைமை நன்கு விளங்குகிறதன்றோ? இதனை,

"உடைத்தம் வலியறியா ரூக்கத்தி னூக்கி
யிடைக்கண் முரிந்தார் பலர்"
எனப் பெரியாரும் பணித்தமை காண்க.
நல்ல விதையை நல்ல
நிலத்திலேயே விதைக்கினும் அது
நீரின்றிப் பயிராகுமா? கொழுக்
கொம்பின்றிப் பைங்கொடி படர்ந்து
நிலைபெறுமா? இஃதுணர்ந்தே,
முற்காலத்தில் சுக்கிரீவன் வாலியினால்
வருத்தப்பட்டபோது,
மதங்கபருவதத்தைச் சேர்ந்து அவ்விடத்
உஎ

தீபாலங்காரம் [பொருட்பால்
தில் வசித்தான் போலும் !
இவைகளையெல்லாம் நன்காராயுமிடத்து,
எத்தகைய வலியுடையவரேனும்,
அவர்கள் மேற்கூறப்பட்ட

துணை வலிகளின்றித் தம்மை மெச்சிச் செல்வரேல் பயனடையார்.

இதனை,

" அமைந்தாங் கொழுகா னளவறியான் றன்னை

வியந்தான் விரைந்து கெடும் "

என்ற பொய்யில்புலவர் கூற்றே நன்கு விளக்குகிறது.

ஆகவே, அரசர் பகைமேற் செல்லுமிட த்துத் தம் வலியையும் பகைவருடைய வலியையும் ஏனைய துணை வலிகளையும் நன்காராய்ந்து கொண்டு, அதன்பின்னரே படை யெடுத்துப் போய்ப் போர்செய்ய வேண்டும். அவ்வாறின்றி, ஆராய்ந்துணராது அறிவினத்தால் அகங்காரங்கொண்டு பகைவரை வெல்லச் செல்வரேல், அவமானப் பட்டு அழிவது திண்ணம். இவ்வாறு கெட்ட அரசர்கள்

உலகத் தில் பலர். இதனை,

" பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டஞ்
-
சால மிகுத்துப் பெயின் "

என்ற வள்ளுவதேவர் வாக்கால் நன்குணர்க.

பூர்வம், கௌரவர்கட்கும் பாண்டவர்கட்கும் பகை மேலிட்ட காலத்துக் கௌரவர்கள் பாண்டவர்களைச் சூதாட்டத்தால் வெற்றி கொண்டு, அவர்களைப் பலவிதமான கஷ்டங்களுக் குட்படுத்திப் பின்னும் வெற்றிகொள்ளக் கருதி, மேன்மேலும் சென்று அவமானப் பட்டு அழிந்த கதையே இதற்குத் தக்க சான்றாகும். இஃதுணர்த் தவே நாயனாரும்,

" நுனிக்கொம்ப ரேறினா ரஃதிறந் தூக்கி
னுயிர்க்கிறுதி யாகி விடும் "

எனச் சாற்றி யுள்ளார்.

' பொருளில்லார்க்கு இவ்வுலகமில்லை '

என்ற பெரியாரின் வாக்கு இங்குக் கவனிக்கத் தக்கது. இவ்வுலகில் ஒருவன் பெறக்கூடி யன அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு. அறம் செய் வதற்கும், இன்பம் பெறுவதற்கும் பொருளின்றி முடி யாதன்றோ ? அப்பொருளும் அறவழி யல்லாப் பிறவழியிற் றேடியதாயின், அஃது



எவர்க்கும் இன்பத்தை அறுக்கும் அரமாகும். பிறரை அழச் செய்து சம்பாதித்த பொருளை இழந்தழுவாரினும் பதின் மடங்கு துயருற் றழுமாறு செய்துவிட்டுச் செல்லும் அப்பொருள். ஆகவே, பொருளை அறவழியால் பெற்றாலும், அல்லது பூர்வ புண்ணிய வசத் தால் முயற்சியின்றியே பெற்றாலும் அதனை அறவழியிற் செல விடல்வேண்டும்.

இத்தகைய குணம் அரசர்களிடத்து அவசியம் இருக்கவேண்டும். அரசர்கள் தமக்கும் தம் நாட்டார்க்கும் நன்மை பயக்கும் காரியங்களிலும், பொதுநன்மைக்கேற்ற காரியங்களிலும் அப்பொருளைச் செலவிடமுற்படவேண்டும். ஆனால், அச்செலவை யாவருந் தன் பொருளின் அளவறிந்து செய்யவேண்டுவ தவசியம். ஆகையாலன்றோ

,

"ஆற்றி னளவறிந் தீக வதுபொருள்
போற்றி வழங்கு நெறி"

எனத் தேவர் குறளும் திருவாய் மலர்ந்துள்ளது ?

அரசர்கள் தமக்குப் பொருள் வரும் நல்வழிகளை மேன்மேலும் உண்டாக்கி, அவ்வாறு நல்வழியிலே வந்த பொருள்களை ஓரிடத்திலே சேர்த்துவைத்து, அவைகளைப் பிறர் கவர்ந்து கொள்ளாது காத்து, அவ்வாறு காக்கப்பட்ட பொருளை

அறம் பொரு ளின்பத்தின் பொருட்டுச் செலவிட வேண்டும். அங்ஙனஞ் செய்யாதார் எத்தகைய பெருஞ் செல்வத்தையும் இழப்ப ரென்பதற்கோ ரையமில்லை. இஃ துணர்த்தவே முப்பாலும்,

"உளவரை தூக்காத வொப்புர வாண்மை
வளவரை வல்லைக் கெடும்"

எனக் கூறியுள்ளது.

எவ்வலியையும் ஆராய்ந்தியற்றும் அரசரேனும் காலத்தை அவசியம் கவனிக்க வேண்டும். கடையுகம் வருமுன்னே சமுத்திரமானது தன் எல்லையைக் கடவாதன்றோ? அரசர்களும் போர்புரிவதற்கு ஏற்றகாலம் வருமட்டும், பொறுமையோடு வேண்டிய சாதனங்களைத் தேடிக்கொண்டு இருக்க வேண்டும். கருங்குயிற் குஞ்சானது பறக்கும் பருவம் வருமளவும் காக்கைக் கூட்டினிடத்திலிருந்து தனது குரலொலியையும் மறைத்திருப்பதுபோல, அரசர்களும் காத்திருந்து தமது கருமத்தை முடிக்க வேண்டும். இதனை,

“பகல்வெல்லுங் கூகையைக் காக்கை
யிகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது”
என்ற செந்நாப்போதார் திருவாக்கால்
தெளிக.

இங்ஙனம் வலியறிந்து யாவையுஞ்
செய்யும் இயல்புடையார், யாதும்
இலராயினும், செல்வ முதலிய
எல்லாவற்றையும் உடையவ ராவார்.
இன்றேல், எத்தகைய வலியைப்
பெற்றவிடத்தும், சூரிய னுக் கெதிரில்
தீபம் வைத்ததுபோற் பயனின்றி,
செல்வமும் சிறப்புமிழந்து சிந்தை வருந்துவ
ரென்பதற்கோ ரையமில்லை. ஆகை
யாலன்றோ,

" பருவத்தோ டொட்ட வொழுக
திருவினைத்
தீராமை யார்க்குங் கயிறு "
எனத் தமிழ்மறையும் வலியுறுத்திக்
கூறுகிறது?
யாவரேனும் காலத்தை அறிந்தே
காரியத்தைத் தொடங்க வேண்டும்.
பஞ்சபாண்டவர்கள் பகைவரை வெல்லும்
வல்லபம் மிகுந்தவிடத்தும் காலத்தைக்
கவனித்தன்றோ கரந் துறைந்தனர்? இவ்வாறு
காலத்தை அறிந்து காரியமியற்றும்
அரசர்கட்கு இய லாதது ஒன்றுமில்லை.
இதனை,
" அருவினை யென்ப வுளவோ கருவியாற்
கால மறிந்து செயின் "
என்ற நாயனர் திருவாக்கே நன்குணர்த்தும்.
முன்னொரு காலத்தில், இவ்வுலக
முழுவதும் போற்ற ஏமாங்கத நாட்டை
யாண்ட சச்சந்தன் குமாரனாகிய

சிவகனென்

னும் இளஞ்சிங்கம் பகைவனாகிய

கட்டியக்காரனால் கஷ்டப்பட்ட காலத்தும்,

காலத்தை நினைத்தன்றோ தன் கருத்தை

மறைத்துப்

பகைமேற் செல்லாது பதுங்கி

இருந்தது ? அமிர்தத்தை நீக்கி

விஷத்தையுண்பவர் யாவர் ? நாயனாரும்,

" காலங் கருதி யிருப்பர் கலங்காது

ஞாலங் கருது பவர் "

என்றார். அச் சீவக சிங்கமானது

கட்டியக்காரனுடைய கொடுமைக்

குட்பட்ட காலத்துத் தன் குணத்தையும்

கோபத்தையும் அடக்கி

யது ஆலோசிக்கத்தக்க தன்றோ ?

இத்தகைய குணம் யாவருக்கும் அதிகாரம்-



உக்ங. அமையாது. அறிஞர்கட்கே

இத்தகைய சிறப் பமையும். இஃதறி

வுறுத்தவே பெருநாவலரும்,

"பொன்னென வாங்கே புறம்வேரார்
காலம்பார்த்
துள்வேர்ப்ப ரொள்ளி யவர்"

எனக் கூறியுள்ளார். ஆகவே, இவ்வாறு காலத்தை அறிந்து காரியஞ் செய்யவல்ல அரசர்களே தன் பகையை வெல்பவராவர்.

இஃதன்றி, எத்தகைய வலியுடையரேனும் தாம் வீரமுடைய யராக வெண்ணி அகங்கரித்து எதையுந் துணிந்து செய்யலாகாது. காலத்தைக் கருதுவது போலவே இடனறிந்து இயற்றுவதும் அவசியம். இடமறியாது சிங்கம் நரிமேல் பாய்ந்து வலையில் அகப்பட்ட கதையை யாவரும் அறிவோமன்றோ? வலியும் காலமும் இடமும் அறிந்து போர்க்குச் சென்ற அரசர்க்குமுன் நிற்கும்

பகைவர்கள் சூரியன் முன் பனியும் இருளும் போலாவர். ஆகையாலன்றோ தெய்வ நூலும்,

"தொடங்கற்க வெவ்வினையு மெள்ளற்க முற்று
மிடங்கண்ட பின்னல் லது"

என வலியுறுத்திக் கூறியுள்ளது! பாண்டுவின் குமாரர்களான பஞ்சபாண்டவர்கள் பாஞ்சாலியுடன் அஞ்ஞாத வாசத்தின் பொருட்டு யாருமறியாது மாறுவேடந்தாங்கி விராடபுரத் தரசனிடம் வேலைக் கமர்ந்தார்கள். அப்போது அவர்கள் பாஞ்சாலியை இச்சித்த கொடியோனாகிய கீசகனை வதைக்கக் கருதியவழிக் காலத்துக் கஞ்சிக் கலங்கினரோனும், அதனை இடனறிந் தியற்றி எளிதில் முடித்தனரன்றோ! ஆகவே, இடனறிந் தியற்றுவது எத்தகைய வலியுடைத்தென்பது யாவர்க்கும் தெற்றென விளங்கும். இஃதுணர்த்தவே உத்தரவேதமும்,

"ஆற்றாரு மாற்றி யடுப விடனறிந்து
போற்றார்கட் போற்றிச் செயின்"

எனக் கூறியுள்ளது.

குலோத்துங்க பாண்டியன் செங்கோலோச்சு நாளில், ஒரு வயோதிகர் மதுரையை யடைந்து அநுதினமும் சோமசுந்தரப் பெருமானை வழிபட்டு வாள்வித்தை பயிற்றிச் சீவனஞ்செய்து



வந்தார். அவர் மாணக்கருள் ஒருவனாகிய சித்தன் என்பவன் ஊழ்வினையினால் அவ்வித்தையை நிரம்பக் கற்றுத் தான் ஒரு வித்யா கூடம்வைத்து ஆசிரியரை மதியாது நாடோறும் இடையூறு செய்ததுமன்றி, அவ்வாசிரியர் மனையாளிடத்து அவர் இல்லாத சமயத்திற்சென்று அடாத வார்த்தைகளைக்கூறி அவள் கையைப் பிடித்திழுத்தான் ; அவள் அவனைத் தள்ளிவிட்டு உள்ளேபோய் அன்று

ஆதிமூலமென்று அலறிய யானைபோல உயிர்க்குயிராகி எங்கும் விளங்கா நின்ற எல்லாம்வல்ல சோமசுந்தரப் பெருமானிடத்து முறையிட, அடியார்க் கடியராகிய அவ்வாண்டவன் அச்சித்தனைக் கொல்ல நகர்ப்புறத் தழைத்தாரன்றோ ? எங்கும் விளங்கா நின்ற நம் இறைவனும் இடத்தைக் கருதியே அவ்வாறு அழைத்தார் போலும் ! ஆகவே, எவரும் இடத்தை யறிந்து எத்தொழிலையும் இயற்றுவது அவசியமன்றோ ? ஆகையாலன்றோ வள்ளுவனார் வைப்பும்,

" அஞ்சாமை யல்லாற் றுணைவேண்டா வெஞ்சாமை

யெண்ணி யிடத்தாற் செயின் "

எனவழுத்தா நின்றது ?

மேற்கூறப்பட்ட வலிமைகளையுடையாரை வெல்பவர் எவ்வுல கத்துமில்லை. இத்தகைய குணம்

அரசர்கட்கேயன்றி ஏனையோர்கட்கும் அவசியம் வேண்டற்பாலது. நாம் எத்தொழிலை யியற்றினும் இத்தகைய வலிமைகளை ஆராய்ந்தியற்றி எக்காலத்தும் சிறப்புற்று, இருமைப் பயன்களையும் அடைய எல்லாம்வல்ல நம்பிறைவனை என்றும் போற்றிப் பணிவோமாக.

---

## 49 - ஆம் அதிகாரம்
## தெரிந்து தெளிதல்

---

ஒருவருடைய இயல்பை எவ்வகையாலும் ஆராய்ந்து நம்புதலே, 'தெரிந்து தெளிதல்' எனப்படும்.

" குடிப்பிறந்து குற்றத்தி னீங்கி வடுப்பரியு
நாணுடையான் கட்டே தெளிவு "

என்றார் வள்ளுவனார்.

அரசர்கள் எத்துணை நுண்மாணுழைபுலன் பெற்றவராயினும், அமைச்சர் முதலானவர்களைக் கொண்டே, அரசியல் நடாத்துதற் குரியவராகிறார்கள். ஆழ்ந்து சிந்திக்கின் அதன் உண்மை அங்கை நெல்லிக்கனிபோல் அனைவர்க்கும் புலப்படும். சுலபமான சமுசார காரியத்தையே ஒருவன் சகாயமின்றி நடத்த முடியாது. அவ்வா றிருக்க அதிக வருத்தமுள்ள இராச்சியத்தைச் சகாயமின்றி ஆளக்கூடுமா ? ஆகவே, அத்தகைய சகாயத்தை அடைதல் அரச ராகிய அனைவர்க்கும் அவசியமன்றோ ? அமைச்சரில்லா அரசாட்சி தாமரையில்லாத் தடாகமும், சந்திரனில்லா

யிரவும், ஞானமில்லாக் கல்வியு ம், கற்பில்லாப்பெண்டிரும் ,புத்திரப்பேறில்லா இல்வாழ்க்கையு மெனப் பொலிவிழந்து போகும். ஆகையால் அச்சகாயத்தை அடையுங்கால் அதனைப் பல்லாற்றானும் நன்காராய்ந்து தெளிந்து கொள்ளுதலன்றோ சிறப்பு? இதனை,

"அறம்பொரு ளின்ப முயிரச்ச நான்கின்
திறந்தெரிந்து தேறப் படும்"

என்ற தேவர் வாக்கானுணர்க.

ஒவ்வொருவருடைய மனநிலையையு மாராய்ந்து அவர்களுள் தகுதியுள்ளவரை அடையப் பெறுதலே அரசர் கடமை. இன்றேல், அவர்கள் யாவருங் கண்டு நகைக்கும்படி நலிந்து, நற்பயன்களையு மிழந்து வருந்துவ ரென்ப துறுதி.

அவ்வாறு ஆராய்ந்து கொள் ளாமையாற் கெட்டோர் பலரென்க. ஆராயுங்கால் அரிய நூல்களைக் கற்றோரென்று அடையக் கருதாது, அவர்களிடத்துள்ள அருமைக் குணங்களையே அவசியம் விரும்பிக் கொள்ளவேண்டும். இஃ துணர்த்தவே திருக்குறளாசிரியரும்,

"அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கா
லின்மை யரிதே வெளிறு"

எனத் தெரிவிப்பா ராயினர்.

உற்று நோக்குமிடத்தும் அங்ஙனம் ஆராய்ந்து தெளிந்த அறி ஞர்களே அரசர்கட்கு ஆப்த நேசர்களாக அமைகிறார்கள். அரசர் கள் அங்ஙனங்கொண்ட அமைச்சர் முதலியோரிடத்துள்ள சிறிய குற்றத்தைப் பெரிதெனப் பாராட்டாது, அவர் தம் பெருமைக் குணங்

களேயே கண்டு மகிழ்ந்து அவர்களைத்
துணையாகக் கொண்டொழுகுதல் அவசியம்.
பொதுவாக நோக்கின்
பேரறிவாளரிடத்தும் அறியாமை ஏகதேச
மிருப்பதுண்டு. ஆதலால், அரசர்கள்
ஒருவரிடத்துள்ள குணங் குற்றங்களை
யாராய்ந்து மிகுதியா யுள்ளவைகளால்
அவரைத் தக்கவரென்றும்
தகாதவரென்றும் அறிந்துகொள்ள
வேண்டும். இஃதுணர்த்தவே பொய்யா
மொழியார் கூறிய பொருளுரையும்,

> " குணநாடிக் குற்றமு நாடி யவற்றுள்
> மிகைநாடி மிக்க கொளல் "

எனப் புகன்றது.

உடம்பைச் சுமையாக நினைத்துப்

பரம்பொருளேயே நோக்கிக்
கொண்டிருக்கின்ற மேலோர்கள், இது
துக்கம் இது சுகம் இஃது ஈனம் என்று
கருதி அஞ்சுவதுண்டோ? கற்பாறைமேல்
பந்தை ஓங்கி அடித்தாலும் அந்தக்
கற்பாறைக்குப் பந்தினல் கெடுதி
யுண்டாகுமோ? அதுபோல,
ஆராய்ந்துணர்ந்த அறிஞர்களைத்
துணையாகக்கொண்ட அரசர்கள்
அஞ்சவேண்டுவதென்? மக்களை
ஆய்ந்து தெரிதல் அரிதென்றெண்ணலாம்.
ஊனக்கண்ணால் காணக்
கூடாத உலகாகஷ்கருடைய
உண்மைகளையே ஒருவாறு யூகித்
துணரும்போது, காணக்கூடியவாது
தன்மைகளைக் கண்டறிவது
கஷ்டமாகுமோ? உற்றுநோக்குமிடத்து
ஒருவருடைய செய்கை
களே அவர் தன்மையை யுணர்த்தும்.

" பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந்
தத்தங்
கருமமே கட்டளைக் கல் "
என்ற ஆன்றோர் வாக்கு மஃதே.
இஃது அரசர்க்கேயன்றி
அனைவர்க்கும் அத்தியாவசிய
மானதே. உலகில் அருமையுடையாரை
அடைந்தவர்களே அரிய
பயன்களை அடைந்தவ ராகிறார். ஆகவே,
எவ்வேந்தரும் அமைச்சர்
முதலானவர்களை ஆராயுங்கால் அன்பைக்
காரணமாகக் கொள்
ளாது, அவர்களுடைய ஆற்றல்களை
ஆராய்ந்துணர்ந்தே தெளிய
வேண்டும் ; இன்றேல், இடருறுவ துறுதி.
இஃதுணர்ந்தவே செங் காப்போதாரும்,

"காதன்மை கந்தா வறிவறியார்த் தேறுதல்
பேதைமை யெல்லாந் தரும்"

எனத் தெரிவித்த துணர்க.

பூர்வம், சச்சந்தனென்பான் தன் அருமை பெருமைகளை யிழந்து, ஆருயிர்க் காதலியையும் ஆகாய மார்க்கமா யனுப்பி அவமே மாண்டது, யாவரும் அறிந்த விஷயமன்றோ ? அந்தோ ! அவன் அமைச்சனை ஆராய்ந்து கொண்டிருப்பின் அத்தகைய சம்பவங்களுக் காளாவனோ ? ஆகையாலன்றோ பெருநாவலரும்,

" தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா விடும்பை தரும்"

எனப் புகன்றார் ?

ஆகவே, அரசர்களுடைய சுக துக்கங்கள் அமைச்சர் முத லானவர்களின்

அறிவிலிருந்து அதிகரிக்கின்றதென்றே கூறலாம். அரவக் கொடியோனுக்கு ஆப்தநேசனாகிய அங்கதேசாதிபதி பாரத யுத்தத்தில் சேனாதிபதியெனச் சிறப்புற்று அருச்சுனனுடன் அமர் புரிந்தபோது, தான் அருமையாக வளர்த்த நாகத்தை அஸ்திரமாக அருச்சுனன்மீது விடுத்தன னல்லவா? அதுகாலை, தன் சாரதியாகிய சல்லியன், "கர்ண! அருச்சுனன் தலைக்கு இலக்ஷியம் வைத்து அஸ்திரத்தை விடுவையாயின், அதன் பயனை அவமே யிழப்பாய்; அவனுக்குச் சாரதியா யிருக்கும் கிருஷ்ணன் பெரிய மாயாவி; அவன், உன் அஸ்திரம் அருச்சுனன் தலையைக் குறியாகக் கொண்டு தேடி வருகிறதென்று தேரைக் கீழே தாழ்த்துவான். ஆகலால், அவ்வருச்சுனன் மார்புக்கு நேராகப் பிரயோகஞ்செய்." எனச் சாற்றியதைக் கேட்டிருப்பின்,

அஸ்திரத்தையும் அவலமாக்கி அவ னும் அழிவனே ? ஆராய்ந்து தெளிந்தோர் வார்த்தையை அலட்சி யம் செய்ததனாலன்றோ அவன் அவமே மாண்டான் ? இஃதுணர்த் தவே முதுமொழியும்,

“ தேறற்க யாரையுந் தேராது தேர்ந்தபிற்
றேறுக தேறும் பொருள் ”

“ தேரான் றெளிவுந் தெளிந்தான்க ணையுறவுந்
தீரா விடும்பை தரும் ”

எனப் பலவாறு வலியுறுத்திக் கூறியதுணர்க,



ஆகையால் நாம், காமம் வெகுளி கடும்பற் றுள்ளம் மானம் உவகை

மதமெனப்பட்ட அறுவகைக் குற்றங்களையும் அற ஒழித்த அறிஞர்களையே ஆராய்ந்து தெளிந்து, அவர் கூறும் அரிய மொழிகளை அசட்டை செய்யாது அரிய காரியங்களி லீடுபட்டு, அருட் கட லாகிய ஆண்டவனடி சேர அல்லும் பகலும் பிரார்த்திப்போமாக.

---

## 50-ஆம் அதிகாரம்
## தெரிந்து வினையாடல்

ஆராய்ந்து தெளியப்பட்டவரை, அவர் செய்யவல்ல தொழில்களை அறிந்து அவைகளிலே ஆளுந் திறமையே, 'தெரிந்து வினை யாடல்' எனப்படும்.

"நன்மையுந் தீமையு நாடி நலம்புரிந்த
தன்மையா னாளப் படும்"

என்ருர் வள்ளுவனுர்.

பரம்பொருள் மக்கட்குப் பகுத்தறிவென்னும் அரியபொருளை அளித்துள்ளார். ஆயினும், அநேகர் அதனை யுணராது மனஞ்செல்லு மிடமெல்லாந் திரிந்து, அஞ்ஞான அந்தகாரத்தில் அழுந்தி, அக் கிரமங்களைச்செய்து அவமே அழிகிருர்கள். அந்தோ ! அஃது எத்தகைய அழிவையும் அவமதிப்பையும் அளிப்பதாக வுளது. இஃதுணர்ந்தே ஆராயப்படுவோ ரிலக்கணம் கூறவந்த ஆன்ருேர் களும், அவர்கள் அறுவகைக் குற்றங்களாகிய காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம், மானம், உவகை, மத மெனப்பட்டவைகளை அற ஒழித்தவர்களாயும், உலக அனுபவங்களை உற்றுநோக்கு மியல் புடையவர்களாயு மிருக்கவேண்டுமென்று எடுத்துக் காட்டியுள்ளார். அத்தகைய அருமை

பெருமை வாய்ந்த அறிஞர்களே அரசர்கட்குப் பொருள் வருவாயை விருத்திசெய்து, அதற்குவரும் இடையூறுகளை நீக்கவல்லவராகவு மிருக்கிறார்கள். ஈண்டு கூறுவது யாதெனில், அரசர்கள் அத்தகைய அருமை பெருமைக ளமைந்தவர்களிடத்து அரசாட்சி காரியங்களை அமைக்கவேண்டு மென்பதாம். இதனை,

அதிகாரம் - 52.] அரசியல்

உ௧௨

“வாரி பெருக்கி வளம்படுத் துற்றவை
யாராய்வான் செய்க வினை”

என்ற ஆன்றோர் வாக்கே அறிவிக்கிறதல்லவா ? அத்தகைய உத்தமர்களே அன்பு, அறிவு, ஆற்றல், ஆசையின்மை முதலிய வை களை

அணிகலனுகக்கொண்டு, அரசர்கட்கு மகிழ்ச்சியை அளிப் பார்கள். ஆகையாலன்றோ இவ்வுலகிற்கு ' இறை ' என் று விளங்கா நின்ற எ வ்வேந்தர்களும் அத்தகைய அருமை பெருமை யுடையா ரிடத்தே அரசுரிமையை வைக்க அவாவுறுகிருர்கள் ? இஃதுணர்த் தவே திருக்குற ளடிகளும்,

" அன்பறிவு தேற்ற மவாவின்மை யிந்நான்கு
நன்குடையான் கட்டே தெளிவு"

எனச் செப்பிய துணர்க.

ஆயி னும், ' காலம் ' என் னும் பொருள் செய்யுங் கோலமோ சிந்தித்தற்கும் செப்புதற்கு மொண்ணுதகா யுளது. அறிவுடை யாரை அறிவினராகவும், அறிவினரை அறிவுடையாராகவும், வீர ரைப் பேடியாகவும், பேடியை வீரராகவும்,

நேசரைச் சத்துருவாக வும், சத்துருவை நேசராகவும் ஆக்குவது காலமே எனப் பெரியோர் கள் கூறுகிறார்கள். காலத்தின் கோலம் இம்மட்டோ ! எத் தனையோ கோடி. அவைகள் சிந்தித்தற்கும் செப்புதற்கும் கூடா. ஆகையால், எத்தகைய அருமை பெருமை புடையோர்களையும் ஆராய்ந்துணர்ந்தே கொள்ளவேண்டுவ தவசியம். பூர்வம், சொர்க்க லோகத்தில் மந்தார நிழலிலே சுதர்மையென்னும் தேவசபையில் முப்பத்து முக்கோடி தேவர்களும் சேவிப்ப இரத்தின சிங்காதனத் திலிருந்து அ ரசாட்சி செய்த தேவேந்திரன், குருவை வழிபாடு செய் யாத அதிபாதகத்தினால் வருந்தி அசுரகுலத்திற் பிறந்தவனும், அறிவொழுக்கங்களிற் சிறந்தவனும், துவட்டாவின் குமாரனுமாகிய விஸ்வரூபனை விரும்பிக் கொண்டதனால் விளைந்த தீமைகளை எவரு முணர்ந்தே

இருக்கலாம். இஃதுணர்த்தவே,

“ எனைவகையாற் றேறியக் கண்ணும் வினைவகையான்

வேறாகு மாந்தர் பலர்”

எனத் திருவள்ளுவரும் செப்புவாராயினர்.



உண்மை யிவ்வாறிருக்கச் சிலர் எவரையுமே நம்பக்கூடாதென இயம்புகிறார்கள். அவர்கள் பிராரப்த வலியால் உண்மையை யுணராதபடி அல்லது நம்பாதபடி மறைக்கப்பட்ட மதியுடையோராத லால், அஃது அவர்கள் குற்றமன்றும். ஆகையால், அவர்கள் கூற்றை

இங்கு விவகரிப்பது அனுவசியம். அறிவாலுயர்ந்த ஆன்றோர் களையே ஆராய்ந்துணர்ந்து, அவர் பால் யாதொரு காரியங்களையும் அமைக்க வேண்டும். அங்ஙனம் அறிந்தொழுகும் அரசர்களே யாவர்க்கும் அஞ்சாது, பெருநில மன்னராய்ப் பெருமையுற்று வாழ் வர்; அவ்வாறின்றி அன்பையே காரணமாகக் கொள்வரேல், அரிய பயன்களும் கெட்டு அவமே வருந்துவ ரென்பது திண்ணம். இஃ துணர்த்தவே பொருளுரையும்,

"அறிந்தாற்றிச் செய்கிற்பாற் கல்லால் வினைதான்
சிறந்தானென் றேவற்பாற் றன்று"

"செய்வினை நாடி வினைநாடிக் காலத்தோ
டெய்த வுணர்ந்து செயல்"

எனப பலவாறு மதாிவ்த்த துணாக.

ஆகவே, செய்பவன், செய்யப்படுந் தொழில் காலம் ஆகிய இம்மூன்றையு மாராய்ந்தே எவ்வினைகளையும் முடிக்கவேண்டும். கொடிதாகிய நோயைக் கொடிதாகிய மருந்தினுல் அறுத்தாலன்றி அது குணப்படுமோ? ஆகையால், அங்ஙனம் ஆராய்ந்துணர்ந்து ஆளும் திறமையே அரசர்க் கழகாம். அவ்வாறுணராத் தன்மையா லன்றோ தேவர்க் கதிபதியாகிய இந்திரன், அறிவொழுக்கங்களிற் சிறந்த அசுரனுகிய விஸ்வரூபனைக்கொண்ட காலத்து யாகமும் முடிவுபெருது அளவிலாத துன்பங்கட்கும் ஆளாகவிருந்தனன்? எவ்வேந்தர்களும் அத்தகைய தன்மைகளை முன்னரே ஆராய்ந் துணர்ந் தேவுதல் அவசியம்; இன்றேல், எத்தகைய காரியமுங் கெட்டு இடருற்று வருந்துவரென்ப துறுதி. இது கருதியே முதற் பாவலர் கூறிய

முதுமொழியும்,

" இதனை யிதனு லிவன்முடிக்கு மென்றுய்ந்
  ததனை யவன்கண் விடல்"

என வலியுறுத்திக் காட்டியது.

அதிகாரம் · ருo.] அரசியல் உஉக

அரசர்கள் அவ்வாறெழுகுவதினின்றுஞ் சிறிதும் தவறலாகாது. அம்மட்டோ! அங்ஙனம் ஆராய்ந்து தெளிந்தோரையும் அபிவிர்த்தி செய்யவேண்டிய தவசியம். ஆகையாலன்றோ, அண்டசராசரங்களை யும் தம்முளடக்கி யாளாநின்ற நம் ஆண்டவனுகிய விஷ்ணுமூர்த்தி யும் ஆதிகாலத்தில் பாற்கடலைக் கடையும்படி பகர்வாராயினர்? அரிய தன்மைக ளமையப்பெற்ற அவ்விந்திராதி தேவர்களையே அவ்வா றுயர்த்தவேண்டிய

தவசியமாக விருந்தமெதன்றால், ஏனையோர்களுக்கு அஃது இன்றியமையாத தென்பது எடுத்துக் கூறவும் வேண்டுமோ? உத்தரவேதமும்,

> " வினைக்குரிமை நாடிய பின்றை யவனை
> யதற்குரிய னாகச் செயல் "

என உரையா நின்றது.

எவ்வேந்தர்களும் தம்முடைய தொழிலினிடத்து முயற்சி யுடையவர்களையே அடைந்து, அவர்கள் உரிமையால் செய்யும் காரி யங்களை யுவந்து அரசு செலுத்தவேண்டும். இன்றேல் எத்தகைய பெருமையுங் கெட்டு, எல்லையில்லாச் செல்வங்களையு மிழப்பரென் பதற் கையமில்லை. இதனை,

> " வினைக்கண் வினையுடையான் கேண்மைவே றாக
> நினைப்பானை நீங்குந் திரு "

என்ற ஆன்றோர் வாக்கானும் நன்குணர்க.

இவை களையெல்லாம் எளிதிலுணரவல்ல வேந்தர்களும் நாமும் எல்லாம்வல்ல நம் இறைவனால் அளிக்கப்பட்ட பகுத்தறிவென்னும் அரிய பொருளால் ஆராய்ந்துணர்ந்து, அறிவிற் சிறந்த ஆன்றோர் களை யடுத்து, அரிய காரியங்களி லீடுபட்டு, அழியாப் புகழையும் ஆண்டவன் அருளையும் அடைய அல்லும் பகலும் முயற்சிப்போமாக.

---

# 51 - ஆம் அதிகாரம்

## சுற்றந் தழால்

---

தனது உறவினரைத் தன்னிடத்தி நின்றும் விட்டு நீங்காதபடி

அணைத்தலே, ' சுற்றந் தழால் ' எனப்படும்.

' அழன்மண்டு போழ்தி னடைந்தவர்கட் கெல்லா
நிழன்மரம்போ னேரொப்பத் தாங்கிப்—பழுமரம்போற்
பல்லார் பயன்றுய்ப்பத் தான்வருந்தி வாழ்வதே
நல்லாண் மகற்குக் கடன் "

என்றது நாலடியார்.

மக்களாய்ப் பிறந்த ஒவ்வொருவர்க்கும், தம் உறவினரைப் பேணிக்கொண் டொழுகும் தன்மை அத்தியாவசியமாக வேண்டற்பாலது. சுற்றந் தழுவுவோர் என்றும் பெருமை யடைவர். நாம் ஒருவர் விஷயத்தில் இரக்கமும் தர்மமுமின்றி யிருப்போமாயின், அவர்களும் நம் விஷயத்தில் அப்படியே

யிருப்பார்க ளன்றோ ?

ஆகவே , பகுத்தறிவைப்பெற்ற மக்களாகிய நாம் நமது உறவினர் எத்தகைய குணமுடையவராயினும் அவர்களுடைய குற்றங்களை மறந்து அவர்களைப் பாதுகாப்பது கடமை. உலகில் இத்தகைய தரும வழி வழுவாமலிருக்க வன்றோ, அரசர்களும் குடிகளுக்குரிய பொருளில் ஐந்தில் ஒருகூறு சுற்றத்தாருக்கென வைத்துள்ளார்கள் ? இஃதுணர்த்தவே தெய்வநூலும்,

" பற்றற்ற கண்ணும் பழைமைபாராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள "

எனச் சிறப்பித்துக் கூறுகின்றது.

க்ஷணத்தில் அழிவதாகிய செல்வத்தைப் பெற்றுள்ளபோதே இத்தகைய சிறப்பைத் தேடவேண்டுவ

தவசியம். இக்குணம் செல்வத்தைக் காப்பதற்குச் சிறந்த வழியாகும். இதனைக் கடைப்பிடித்த சான்றோர்களுடைய அருமை பெருமைகளை யாவரும் அறிந்தே இருக்கலாம். ஆகவே, அரசர்களிடத்து இக்குணம் அவசியம் இருத்தல் வேண்டும். இது கருதியே தெய்வப் புலவராகிய திருவள்ளுவரும், இவ்வதிகாரத்தை அரசியலில் அமைத்துள்ளார் போலும்!

அதிகாரம் - ருக.] அரசியல்

உஉரு

"விருப்பறாச் சுற்ற மியையி னருப்பறா
ஆக்கம் பலவுந் தரும்"

எனப் பெரியாரும் பணித்தனர்.

மேலைத் தவப்பயனால் எல்லாச் செல்வங்களையும் ஒருங்கு பெற்ற

அரசர்களும் இவ்வாறொழுகாவிடில், அவர் செல்வம் அவமே அழியுமென்பது திண்ணம். ஆனால், ‘ உற்றோ ரெல்லாம் உறவின ரல்லர் ’ என்ற பெரியார் வாக்குப் பெரிதும் பாராட்டத் தக்கதாம். ஆகவே, உண்மையான உறவினரெவரென்று உற்று நோக்குமிடத்து, ஒருவர் இன்புறத் தாம் இன்புற்று அவர் துன்புறத் தாமும் துன் புறுபவர் எவரோ அவர்களே உண்மையான உறவினராவர். இத் தகைய உறவினரை யுடையவரே எல்லாச் செல்வத்தையும் ஒருங்கு பெற்றவராக விளங்குகிறார். இதனை,

“ அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று ”

என்ற திருக்குறளே நன்கு தெரிவிக்கிறது.

சமுத்திரமானது குளிர்ந்த சந்திரனலன்றி அழன்ற சூரியனால் பொங்குமோ ? உலகில் நாம் பிறருடன்

சமாதானமாயிருந்து அவர்க ளுடைய உதவியைப் பெற விரும்பினல் அவர்கள் விஷயத்தில் மதிப்பை யுடைத்தா யிருத்தல் அவசியம். நம்மைச் சூழ்ந்திருப்பவர் கள் நம்மை எவ்வாறு நினைப்பினும் அவர்கள் பேரில் நாம் மிகுதியும் கோபித்துக் கொள்வதால் காரியங்களிற் சித்திபெறமாட்டோம். அங்ஙனம் கோபித்துக் கொள்வதால் அவர்களுடைய கெட்ட சுபா வம் அல்லது வீண் எண்ணங்களுக்கு நம்மை அனுவசியமாய் இலக் காக்கிக் கொள்கிறோம். உலகில் அவரவர்களுடைய நற்குண நற் செய்கைகட்குத் தக்கவாறே சுற்றத்தாரும் சூழ்ந்திருக்கிறார்கள். இஃதுணர்ந்தவே முப்பாலும்,

" கொடுத்தலு மின்சொலு மாற்றி னடுக்கிய

சுற்றத்தாற் சுற்றப் படும் "

என மொழியா நின்றது.

உலகில் ஒருவரை யுயர்த்துவது பெருங்கொடையும் பெருமை வாய்ந்த குணமுமேயாம். இவ்விரண்டையு முடையார் இருமைப் பயன்களையும் எளிதில் அடைபவராவர். திருவள்ளுவரும்,



“ பெருங்கொடையான் பேணான் வெகுளி யவனின்
மருங்குடையார் மாநிலத் தில் ”

எனச் சிறப்பித்துக் கூறியுள்ளார்.

ஆகவே, நம் இனத்தார் எத்தகையரேனும் அவர்களுடைய அறிவொழுக்கங்களை ஆலோசியாது அணைத்தல் அவசியம். இவ்வா றொழுகும் இயல்புடையார்கட்கே இனத்தார் பெருக்கமும் எளிதில் உண்டாகும்.

செல்வர்க்கழகு செழுங்கிளை தாங்குதல்' என்ற நறுந்தொகை வாக்கியப்படி நடப்பது அவசியமல்லவா ? உலகில் ஒவ்வொருவருக்கும் உற்று ரிலக்கணம் ஒத்திருப்ப தரிதென் றுணர்ந்தே ஆன்றோர் அவ்வாறு ஆக்ஞாபித்தார் போலும் ! ஆதலால் அரசர்கள் அத்தகைய குணத்தை அடைவது அவசியமன்றோ ?

" காக்கை கரவா கரைந்துண்ணு மாக்கமு
மன்னநீ ரார்க்கே யுள "

என்ற பொய்யா மொழியார் கூற்று ஈண்டுச் சிந்திக்கற்பாலது.

ஆனல், அருமையான அமிர்தத்தைக் கொடுத்தாலும் விஷத் தைத் தருகின்ற பாம்பு போன்ற குணத்தையுடையாரும் உண்டு. ஊனைத் தின்பதாகிய புலிக்குத் தருமநெறியைக் கூறிக் கொலை செய் தல் பாவமென்றால் அதனை அது அங்கிகாரம் செய்யுமா ? ஆகவே, அத்தகையார்க்கு

எற்றவாறு ஒழுகுவதும் அவசியமன்றோ? இஃதுணர்த்தவே தமிழ்மறையும்,

" பொருநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கி

னதுநோக்கி வாழ்வார் பலர்"

எனச் சீர்தூக்கிச் செப்பா நின்றது.

ஆகவே, அவ்வாறறிந் தொழுகவல்லார்க்கு எவ்வகையாலும் இழிவில்லை. குற்றமில்லாத் தூயமனமுடையவருக்கு இழிவும், மனதில் பரிசுத்த மில்லாதவர்கட்குச் சிறப்பு முண்டோ? இத்தகைய சுற்றத்தாரை ஆராய்ந்து அறிந்து அவர்கட்கு அவசியமானதை ஆலோசித்துச் செய்யவேண்டும். இக்குணம் அரசர்க்கே யன்றி அனைவர்க்கும் அவசியமானதே. இவை கருதியன்றோ பெருநாவலரும்,

" உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்த

னிழைத்திருந் தெண்ணிக் கொளல்"

என வலியுறுத்திக் கூறினர்?



# உஉரு

வழி வழியாக மதுரக்கனி தருவதாகிய மரத்தின் கன்றை உவர் நிலத்தில் பெயர்த்து நாட்டினுல், பின்னுளில் அதன் குணமும் பெயரும் வேருவது இயற்கையன்ருே? சுற்றத்தா ரிலக்கண மறியாது அவரைத் தழுவலும் துன்பமாம். ஆகலின், நாம் உறவினரை ஆராய்ந்து தழுவி, இருமைக்கான வழிகளி லீடுபட்டு, எல்லாம்வல்ல கருணைநிதியாகிய நம் இறைவனை என்றும் போற்றிப் பணிவோமாக.

---

## 52-ஆம் அதிகாரம்
## பொச்சாவாமை

---

இம்மை மறுமைக்குரிய எக்காரியங்களிலும் சோர்வடையாமையே, 'பொச்சாவாமை' எனப்படும்.

"பொச்சாப்புக் கொல்லும் புகழை யறிவினை
நிச்ச நிரப்புக்கொன் றாங்கு"

என்றார் நாயனார்.

அரிய பிறவியைப் பெற்ற மக்கள் யாவரும் எக்காரியங்களிலும் சோர்வின்றி இருத்தல் வேண்டும். அவ்வாறின்றி அழகு, செல்வம், ஆற்றல் முதலியவைகளால் இறுமாப்படைந்து மற்றக் காரியங்களில் மறதியுடையவர்களாய்த் திரிந்தால், எத்தகைய பதவியையும் இணையில்லாத வலிமையையும் இழந்து, இடருற நேருமென்பது திண்ணம். இக்காரணத்தாலேயே அநேகர் அளவிறந்த துன்பங்களுக்கு ஆளாகியுள்ளார். பூர்வம், தேவலோகத்தில் மந்தார நிழலிலே சுதர்மையென்னும் தேவசபையில்

முப்பத்துமுக் கோடி தேவர்களும் சேவிப்பத் தேவேந்திரன் இரத்தின சிங்காதனத்தில் வீற்றிருந்து, தேவப்பெண்களுடைய நிருத்தத்தையும் கீதத்தையும் கண்டும் கேட்டும் களிப்பாகிய மதுக்கடலில் மூழ்கி யிருக்குங்கால், மறதியென்னும் இக்கொடிய குணத்திற் குட்பட் டமையாலன்றோ தேவ குருவாகிய பிருகற்பதி பகவான் வரவை மதியாதும் அவருக்கு வழிபாடு செய்யாதும் அதிபாதகத்திற் குட் பட்டு, அப்பதவியை விடுத்து அளவிறந்த துன்பங்கட்கும் ஆளாக நேர்ந்தது? ஆகவே, மேலைத் தவப்பயனால் எல்லாச் செல்வங்களை உகூ

உஉகூ திருக்குறள்

தீபாலங்காரம் [பொருட்பால்

யும்

எளிதிலடையப்பெற்ற வேந்தர்கள்

இத்தகைய கொடிய குணத் திற்

குட்படலாகாது. இதனை,

“ இறந்த வெகுளியிற் றீதே சிறந்த
உவகை மகிழ்ச்சியிற் சோர்வு ”

என்ற ஆன்றோர் வாக்கே
நன்கறிவிக்கின்றது.

அநேகர் இவ்விஷயங்களை உணர்ந்திருந்தும் கண்மூடித்தன மாகக் காலத்தைக் கழிக்கிறார். ஒரு மனிதன் தேகத்தில் கண்ணுக்குப் புலப்படாத அணுவினும் சிறிய ஒரு விஷக்கிருமி பிரவேசிக்கும்போதும், அது தேகத்தில் விருத்தி யடையும்போதும் அவன் அதை யுணர்வதில்லை. அது கடைசியில் ஒரு வியாதியை யுண்டாக்கிக் கொல்லுவதற்குச் சில மணி நேரத்திற்கு முன்புதான் தெரிகிறது. ஆனல், அப்போது அதற்குத் தப்பமுடியுமா? மேற் கண்ட குணமும் அக்கிருமியைப் போன்றதே. இஃதுணர்த்தவே தேவர் குறளும்,

“ பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை

யதுவுலகத்

தெப்பானூ லோர்க்குந் துணிவு ”

எனத் திருவாய் மலர்ந்ததுபோலும்.

ஆகவே, இம்மறதி எவரிடத் திருப்பினும் அவர்கள் செல்வத்தையும் சிறப்பையும் இழந்து பெருங்கேட்டை யடைவரென்பது நிச்சயம். இவ்வாறிருக்கச் சிலர், 'இதனால் என்ன தீங்கு வந்து விடப் போகிறது' எனக் கருதுகிறார்கள். அந்தோ! அறிவா லூன்றி நோக்கும் அறிஞர்கள் அவ்வாறு கருதுவார்களா? இஃது எத்தகைய பதவியையும் கெடுத்துப் பெருங்கேட்டை விளைவிக்கக் கூடிய உபகரணம் என்பதில் சற்றும் ஐயமில்லை. இது, மனிதனுடைய தேகத்தில் புளகாங்கிதம் உண்டாகுமாறு நாவினால் நக்கி அதன் வழியாகத் தேகத்தில் விஷத்தை யேற்றிக் கொல்லும் காட்டுப் பசுவைப் போன்றதாகும். இன்னும், இதனால் நேரிடுங் கெடுதியொன்றன்று. ஆகையாலன்றோ உத்தரவேதமும்,

> " அச்ச முடையார்க் கரணில்லை யாங்கில்லை
> பொச்சாப் புடையார்க்கு நன்கு "

எனப் புகன்றது?

அதிகாரம் - ௫௨.] அரசியல்

௨.௨எ

ஆகவே, அனைவரும் இத்தகைய துன்பங்கட்கு ஆளாகாமல் அறிந்தொழுகவேண்டும். முன்னொரு காலத்தில் இலங்கேஸ்வர னாகிய இராவணன்

தனது செல்வச் செருக்கால் எவரையும் மதியாது தேவர்களையும் வருத்தி அரசியற்றுங்கால், அளகாபுரிக்கு இறைவனாகிய குபேரனுடன் போர் செய்ய எண்ணங்கொண்டு, அவ்வூரை யடைந்து அவனை வென்று, அவனது புஷ்ப விமானத்தை அபகரித் தான்; பிறகு, அவன் அதன்மேல் ஆரோகணித்து, லோகரக்ஷகராகிய சிவபெருமான் எழுந்தருளி யிராநின்ற பெரும் பாக்கியத்தைப் பெற்ற கைலாய மலைக்கு மேலாக ஆகாய மார்க்கமாக வரும்போது, அம்மலை யின் மகிமையால் அவ்விமானம் மேற்செல்லாது தடைபட்டு நின் றது . அது கண்ட அவன், காரணம் யாதென்று கவனிக்குங்கால், அம்மலையில் சிவகணங்களுக்குத் தலைவராய்க் காவல் செய்திருக்கும் திருநந்திதேவர் அதனைத் தெரிவித்தார். ஆயினும், இராவணேஸ்

வரன் பொச்சாப்புக்குட்பட்டுத் தன் பிரயாணத்தைத் தடை செய்த அம்மலையின் மகிமையை மதியாது, அதனை வேருடன் பறித் தெறிய வெண்ணித் தனது இருபது கைகளாலும் எடுக்க முயற்சித்த காலத்துப் பெருந் துன்பத்திற்குட்பட்டு வருந்தினன். திருநந்தி தேவர் தெரிவித்த காலத்திலாயினும் அடக்கமுற்று நடந்திருப்பா னாகில் இத்தகைய துன்பத்திற்கு இலக்காகானன்றே ! இஃதுணர்த் தவே,

" முன்னுறக் காவா திழுக்கியான் றன்பிழை
பின்னூ றிரங்கி விடும் "

எனப் பெரியாரும் பணித்தமை காண்க.

ஆகவே, எவரும் இத்தகைய மறதிக்குட்படுவரேல், இறுதியில் இடருற்றுத் துன்புறுவரென்பது உள்ளங்கை நெல்லிக்கனியாம்.

பெரும்பாலும் அத்தகைய துன்பங்கட்கு இலக்காகாமையே எவர்க் கும் சிறப்பாம். அரசர்கள் இத் தன்மைகளை அறிந்தொழுகுதல் அத்தியாவசியமாக வேண்டற்பாலது. இவற்றை எளிதிலுணர்த் தவே திருவள்ளுவ நாயனர் திருவாய்மலர்ந்த தெய்வநூலும்,

" இழுக்காமை யார்மாட்டு மென்றும் வழுக்காமை
வாயி னதுவொப்ப தில்"

என வழுத்திய துணர்க,

உ௨அ திருக்குறள்
தீபாலங்காரம் [பொருட்பால்

அரசர்கள் அற நூல்களிற் கூறிய அரிய காரியங்களை அசட்டை செய்யா தியற்றவேண்டும். இன்றேல் எல்லாச் செல்வங்களும் கெட்டு இருமைப் பயனையும்

இழப்பரென்பது எவரும் நன்குணர்ந்த விஷயமே. இவ்வுலகின்கண் இத்தகைய கேட்டால் இழிவடைந் தோர் பலர். இஃதுணர்ந்தவே நாயனாரும்,

" புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டுஞ் செய்யா

திகழ்ந்தார்க் கெழுமையு மில் "

என் வலியுறுத்திக் கூறுவாராயினர்.

மறதி யென்னும் துர்க்குணம் ஒழிவதனாலேயே மற்றைய துர்க்குணங்களெல்லாம் தமக்குத் தாமே விலகிவிடும். இஃதுணராது இறுமாப்புற்று இம்மறதிக்குட்படுவரேல் பலர் பகையு மூண்டு பரிதவித்துப் பாழாவ துறுதி. ஆதலால், எவரும் தமக்குப் பின்னால் வரப்போகும் துன்பங்களை முன்னதாகவே யூகித்துணர்ந்து அதி னின்றும் தப்பிப் பிழைக்கும் மார்க்கத்தைத் தேடவேண்டும். அங் ஙனம் அறிந்தொழுகாது, மறதியால்

சும்மாவிருக்கும் மாந்தர் பெருந் துன்பத்தையே பிரதிபலனுகக் கொள்வர். இது கருதி யன்றோ செந்நாப் போதாரும்,

" இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து "

எனத் தெரிவிப்பாராயினர்?

ஆகவே, இவைகளையெல்லாம் நன்குணரவல்ல மக்களாகிய நாமனைவரும் மகிழ்ச்சியினுலுண்டாகும் மறதிக் குணத்தினின்றும் விடுபட்டு, ஆன்றோர்க ளொப்பத்தக்க அரியவழிகளி லீடுபட்டு, அருட்கடலாகிய நம் ஆண்டவ னடிசேர என்றும் பிரார்த்திப்போமாக.

---

## 53 - ஆம் அதிகாரம்
## செங்கோன்மை

---

இறையெனச் சிறப்புற்ற அரசராற் செயற்பாலதாகிய ஆட்சி முறையே, 'செங்கோன்மை' எனப்படும்.

அதிகாரம் - ருட.] அரசியல் உ௨ங

"வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி"

என்றார் வள்ளுவனார்.

எவ்வுயிர்களினும் சிறப்புற்று மேலானபதவியைப் பெற்றுத் தம் முயிர் போல் மன்னுயிரைக் காக்கின்ற அரசர், ஒழுக்க நெறியினும் வழக்கு நெறியினும் வழீஇனுரை நமரெனக் கோல் கோடாதும் பிறரெனக் குணங் குன்றாதும் ஒப்பநாடி, அதற்குத்தக ஒழுக்க வேண்டும். அவ்வாறொழுகுந் தன்மையே செங்கோலின் வனப் பென்று செப்பப்படும்.

மநுச்சோழனுடைய நீதி மறக்கத்தக்கதோ !
ஆகவே, அறத்திற்கு ஊறாக அல்லவை புரிந்தார் யாவராயினும், அவர் குறை தெரிந்துழி கண்ணோடாது, நடுகண்மை யுடையரா யிருந்து தண்டஞ் செய்தலே தகுதி.

" ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந் தியார்மாட்டுந்
தேர்ந்துசெய் வஃதே முறை"

என முதற்பாவலரும் மொழிந்த துணர்க.

முறைதவறாது செங்கோலோச்சும் அரசர்களையே உலகம் பெரிதும் பாராட்டுவதா யுளது. அவ்வாறொழுகுந் தன்மையே மழை சுரத்தற்கும், நிலம் விளைதற்கும், அற மோங்கற்கும், விதிநூல் செழித்தற்கும், பொருள் பெறுதற்கும், வெற்றி யுறுதற்கும், குற் றம் ஒழிதற்கும் காரணமாயுளது .

இஃதுணர்த்தவே உத்தர வேதமும்,

"அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்
நின்றது மன்னவன் கோல்"

என வுரையா நின்றது.

ஆதலால், அத்தகைய அருமை பெருமை வாய்ந்த அரசர்களையே அனைவரும் விரும்புவரென்பதற்கோரையமில்லை. வேந்தர்கள் தமது மக்களைப்போலவே குடிகளையுங் காக்கவேண்டும். அரசனும் குடிகளும் ஒருவருக்கொருவர் உடலும் உயிரும்போல ஒற்றுமையுடன் வாழவேண்டுவ தவசியம். உடலில்வழி உயிரில்லை. உயிரில்வழி உடலில்லை; அரசனில்வழி குடிகளில்லை: குடிகளில்வழி அரசனில்லை. இம்முறைக்கோக் கவனித்தவர்களன்றோ,

அளத்தற்கரிய உ௩௦

திருக்குறள் தீபாலங்காரம்

 அன்பும் கண்ணோட்டமு மமைந்தவராவர் ? 'மன்னுயிரெல்லா மண்ணாள் வேந்தன் தன்னுயிர்' என்ற ஆன்றோர் வாக்கும் இங்கு அறியத்தக்கது. இன்னும் இதனை,

"குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்ன
னடிதழீஇ நிற்கு முலகு"

என்ற குறளும் நன்கு அறிவிக்கும்.

அரசர் எத்துணைப் படைப்பெருக்க முடையராயினும் செங்கோலராகாக்கால் அவர் வெற்றிபெறுமாறில்லையென்பது வெளிப்படை. துரியோதனாதியர்களுக்கும் பாண்டவர்களுக்கும் நடந்த பாரதயுத்தத்தில், பாண்டவர்கள் நீதி தவறாது நடந்திராவிடில் போரில் வெற்றி பெறுவார்களோ ? துரியோதனாதியர்கள் பதினெட்டக்ரோணி சேனைகளைப் படைத்தும் பாழாக நேரிட்டதே ! பாண்டவர், 'பீடு பெறநில்' என்னுங்

கருத்தைக் கடைப்பிடித் தொழுகியபடியி னாற்றான் உய்ந்தனர். இதனைக் குறித்தே,

> "வேலன்று வென்றி தருவது மன்னவன்
> கோலதூஉங் கோடா தெனின்"

என நான்முகரும் கூறிப்போந்தார்.

ஆகவே, அரசராவார் அவர்கட்குரிய அறத்தினின்றும் அணுவளவும் பிசகுத லாகாது. அவர்கள் நடுவு நிலைமை குன்றாது அரசு புரியுங்கால், தம்மிடம் வழக்கிட்டுவரும் இருவர் கூற்றையும் பன் முறை கேட்டும், கரியுரைப்பாரியல்பை அரிதினாராய்ந்தும், 'கண்ணாரக் கண்டதும் பொய், காதாரக் கேட்டதும் பொய், தீர விசாரித்தது மெய்' என்ற பழமொழிப்படி தாமுணர்ந்த வுண்மையை உலகோ ரொப்புமாறு கூறுதலே கடமையாம். கரிகாற் பெருவளத்தானென்ற சோழன், தம்முன் மறுதலையாயினா ரிருவர் வந்து குறை கூறி முறை வேண்டியபோது,

அவ்வேந்தன் ஆண்டி விளைஞுதலின் யாங்கனம் உண்மை கண்டு கூறுவனென் றையுற்றார்கள் . அஃதறிந்த அப் பொன்னியந்துறைவன் தான் நரை முடித்து வந்திருந்து முறை செய்தானென்பது நன்குணர்ந்த விஷயமன்றோ ! அன்றியும் மதுரை யின்கண் குலோத்துங்க பாண்டியன் செங்கோலோச்சும் நாளில் ஓர் அந்தணன் மனைவி அடவியில் மரண மடைந்தாள் . ஆனால், அதன்



உண்மை தெரியாத அம்மறையவர் மன்னர்பால் முறையிட்டார். பழியஞ்சு நாதராகிய நம் பகவான் அதனுண்மையை மறையவர்க் குணர்த்தி மனமுவக்கச் செய்ததும்

அம்மன்னவனுடைய செங்கோ
லின் மகிமையன்றோ !

“ இறைகாக்கும் வையக மெல்லா மவனை
முறைகாக்கு முட்டாச் செயின் ”

என்ற ஆன்றோர் வாக்கும் அபத்தமாகுமோ
?

ஆகவே , அரசர்கள் குடிகளுடைய
குறைகளை ஆன்றோர் பல
ரோடும் ஆராய்ந்து அகற்றி அரசியற்ற
வேண்டும். இன்றேல், எத்
தகைய பதவியுமிழந்து இருமையிலுந்
துயருறுவ துறுதி. பாண்டி
யன் கோவலனை ஆராயாது கொல்வித்த
அநீதியை யுணர்ந்து தானே
தன் னுயிரை நீத்தமையும், பொற்கைப்
பாண்டியன் தன் கையைக் குறைத்தமையுமே
தக்க சான்றாகுமன்றோ ! அரசர்கள்
இத்தகைய
தன்மைகளை அறிந்தொழுகுதல்

அத்தியாவசியமாக வேண்டற் பாலது. இஃதுணர்த்தவே திருவள்ளுவனையனூர் திருவாய் மலர்ந் தருளிய திருக்குறளும்,

" எண்பதத்தா னோரா முறைசெய்யா மன்னவன்
தண்பதத்தாற் றானே கெடும் "

எனத் தெரிவித்த துணர்க.

ஆகவே, அரசர்கள் அறிந்தியற்ற வேண்டிய விஷயங்கள் பல உள. அவர்கள் தம்மாலும் தமது பரிசனராலும் பகைவராலும் கள்வராலும் விலங்கினங்களாலுங் குடிகள் வருத்தமுறுவாறு அணைத்தும், அவர்கள் வறுமையால் பீடிக்கப்பட்டகாலத்து அரசிறை வாங்காது விடுத்தும், அறநெறி வழுவினரைத் தக்கவாறு தண்டித் தும் அரசியற்ற வேண்டும். அத் தண்டனை காலிற்றளை பூட்டியும் பிரம்பாதியவற்றாற் புடைத்தும் துன்புறுத்தலும், பொருளைக்

கோட லும், கொலை செய்வித்தலுமென மூன்று வகைப்படும். இஃது நன் னெறி செல்வார்க்குத் துன்பந் துடைத்தற் பொருட்டேயாதலின்,

" கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர் "

எனப் பொய்யாமொழியாரும் புகல்வாராயினர்.



ஆதலால், இத்தகைய தன்மைகளை அறிந்துணர்ந்து அரசியற் றுவதே அரசர்க் கழகு. காலந்தவறாது மழை பொழிந்து, குறைவற்ற விளைவையும் நிறைவுற்ற செல்வத்தையு மீந்து, குடிகளை நற்கதியடையச் செய்வது மஃதே.

இவ்வாறிருக்க, இஃதுணராதியற் றுங் தன்மையானது அளத்தற்கரிய தீமைகளே அளிக்கு மென்பது அனைவரு முணர்ந்த விஷயமே. கொலைபாதக ரியற்றுந் துன்பமேனும் அன்றே டொழியும். அநீதியுடைய அரசரியற்றுந் துன்பமோ எந் நாளும் நீங்காது. அவ்வரசர் அன்பும் கண்ணோட்டமுமில்லாப் பெரும் பாதகரினும் கொடியவரே யாவர். இதனை,

" கொலைமேற்கொண் டாரிற் கொடிதே யலைமேற்கொண்

டல்லவை செய்தொழுகும் வேந்து "

என்ற செந்நாப்போதார் வாக்கே நன்கு தெரிவிக்கும். ஆகையா லன்றே, அவர்கள் இந்திரனுடைய வச்சிரவாளுக்குந் தகராத பெரு வலிக்கல்லை யொத்த சிந்தை புடையோராகவும், பன்னி ரண்டு சூரியரும் ஒன்று கூடிப் பிரகாசிக்கினும் தொலையாத வல் லிருளை யொத்த வஞ்சனை

யுடையோராகவும், வரை பேசுவதில் ஒவ்வொரு மயிர்க்கால்தோறும் ஒவ்வொரு வாயுடையோராகவும், தமது குற்றங்களை நோக்குவதில் திருதராட்டிரனாகவும், பிறர் குற்றங் காண்பதில் ஆயிரங் கண்ணுள்ள இந்திரனாகவு மிருந்து, தமது நிலையற்ற வாழ்வை நீடூழிகாலம் நிலைக்கத்தக்க தென்ற நினைவுடையோராய்ப் பாவகன்மங்களாகிய இராச்சியத்தைப்பெற்று, அநீதியென்னும் புகழை அடைந்து, மீளாப்பதவி யென்னும் நரகத்தைப்பெற விரும்புகிறார்கள் ? அக்கொடியோருடைய ஆட்சிக் குட் பட்ட குடிகள் மிகுந்த வெப்பமுடைய வெயிலில் அகப்பட்ட புழு வைப்போல வாட்டமடைந்து வருந்துவா ரென்பதற்கையமில்லை. இஃதுணர்ந்தவே வள்ளுவப் பயனும்,

" வேலொடு நின்று னிடுவென்

றதுபோலுங்

கோலொடு நின்றா னிரவு "

எனத் தெரிவித்ததனு லுணர்க.

ஆகவே, இத்தகைய கொடுங்கோலனுகிய அரசன் குடிகளா லடையும் பயன் யாது? குரு, அரசன், அன்னை, பிதா, தமயன் என் அதிகாரம் - ரூ.]

## அரசியல்

உங்டீ ளும் பஞ்சகுரவரும் தம் நிலையறியாது பொறுத்தற்கரிய பிழைகளைச் செய்வாராயின், அவரைத் தண்டித்தல் கடனெனத் தரும நூல் கூறுகிறது. 'கொடுங்கோன் மன்னர் வாழுநாட்டிற் கடும்புலி வாழுங் காடு நன்றே' என்றார் ஆன்றோர். கொடுங்கோ லரசன் தேயத் துக் கோள்கள் நிலைகுலையும்; மழை பெய்யாது; மாநிலத் துயிர்கள் வாழா. ஆகவே, அவ்வரசன் அரிய பயனடைவ தெங்ஙனம்?

இஃது உணர்த்தவே தெய்வப்புலவரும்,

"நாடொறு நாடி முறைசெய்யா மன்னவ
னாடொறு நாடு கெடும்"

எனத் தெரிவித்தது போலும்.

இராவணன் துரியோதனன் முதலிய கொடுங்கோ லரசர்கள் எத்தகைய செல்வத்தையும் படையையும் பெருமிதத்தையும் படைத்திருந்தும் அவர்கள் கதி என்னவாயிற்று? தரும நெறிக்கு மாறாகத் தீமை செய்கின்றவரை வானவர்கோன் போரிலே அழித்து வருதல் முற்காலத்திலே மாத்திரமன்று; இக்காலத்து முள்ளதே.

பின்வருங் கேட்டை யெண்ணாது முறை தப்பி ஆள்வதனாலன்றோ, அரசர்கள் மேலைத் தவப்பயனா லடைந்த அரிய பதவியையு மிழந்து அவமே அழிகிறார்கள்? இவ்வாறு, இப்பூவுலகின்கண் கொடுங்கோன்

மையாற் கெட்டோரும் கெடுகின்றவரும் கெடுவோரும் பலரென்க.

ஆகையாலன்றே பொதுமறையும்,

" கூழுங் குடியு மொருங்கிழக்குங் கோல்கோடிச்
சூழாது செய்யு மரசு "

என்பு புகன்றது ?

அரசராயிருப்பவர் தம்முயிர்போன்று மன்னுயிரையும் நினைத் துச் சகல ஜீவர்களுக்கும் தீங்கு ஏற்படா வண்ணம் அவர்களைக் காப் பாற்றவேண்டுவது கடமை. இவ்வாறின்றி, எந்த அரசாங்கம் மிகுந்த அகங்காரம் கொண்டு குடிகளுடைய குறைகளைப் பொருட் படுத்தாது தம் மனம்போன போக்கெல்லாம் போகிறதோ, அப்படிப் பட்ட அரசாங்கம் அவமே யழியு மென்பது திண்ணம்.

இங்ஙனம் அருந்தவத்தா லடைந்த அரிய
பயன்களை அழிக்கவல்லதாகிய
பொருள் யாதென் றாராயுமிடத்து,
அவ்வரசின் கீழுற்ற குடிகள்



அழுத
கண்ணீராகவன்றோ வமைகிறது ?
கடுந்தவம் செய்து எப் போதும்
சாகாவரத்தைப் பெற்ற
கொடுங்கோலனாகிய இரணியன்
இடருற்றழிந்ததும், எனையோர்களை
மனமெரியச்செய்த இயல்பினா லன்றோ ?
இதனை,

“அல்லற்பட் டாற்றா தழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை”

என்ற ஆன்றோர் வாக்கே அறிவிக்கும்.

அறத்திற்கு மாறாக அல்லவை

புரிவதனாலன்றோ, அத்தகைய துன்பங்கட் காளாக நேருகின்றது? இவ் வநீதியுடைய அரசர் கீழுற்ற குடிகளே, பொய்யுரை யாடல், புறங் கூறல், செய்ந்நன்றி கோறல், தீயாரோ டிணங்கல், பிறர்மனை நயத்தல், கொலைபுரிதல், கள் ளுண் ணல், கவருடல் முதலிய அக்கிரமங்களையும் அஞ்சாது செய்கிறார் கள். ஆகையா லன்றோ, ஆன்றோரும் உலகங் கெடுதற்கு அரசர் கோல்கெடுதலே காரணமெனக் கூறுவாராயினர் ? இஃதுணர்த்தவே முதுமொழியும்,

" துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்த
னளியின்மை வாழு முயிர்க்கு "

" இன்மையி னின்னா துடைமை முறைசெய்யா
மன்னவன் கோற்கீழ்ப் படின் "

எனப் பலவாறு மொழிந்தது ணர்க.

இவைகளை யெல்லாம் நன்குணரவல்ல வேந்தராகிய எவரும் எவ்வகை ஜீவர்களிடத்தும் இரக்க முடையோராய்த் தாம் அடைதற் குரிய ஆறிலொரு கூறையும் அறநோக்கிப் பெற்று அரசியற்றவேண் டும். இங்ஙனம் அறிவுடையோராய் முறையறிந்து திறை கொள் ளின், அந்நாடும் செழிப்புற்று அளவிறந்த பயன்களையும் அளிக்கு மென்பதற் கையமில்லை. இன்றெனில், அவர் கீழுற்ற குடிகள் அருளில்லாமையால் வருந்துவர்; அரசரும் பொருள் பெறார்; உலக மும் கேடெய்தும். இவை கருதியே பொய்யில் புலவரும்,

"முறைகோடி மன்னவன் செய்யி னுறைகோடி

யொல்லாது வானம் பெயல்"

எனப் புகன்றார் போலும்! இன்னும்,



கோடின் பசுக்களும் பால்கொடா; பார்ப்பனர் தமக்குரிய வேதத்தை மறப்பார். இஃதுணர்த்தவே முப்பானூலும்,

" ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர்
காவலன் காவா னெனின் "

என மொழிந்த துணர்க.

ஆகையால், மேலைத்தவப் பயனால் எவ்வுயிரினுஞ் சிறப்புற்று எல்லாச் செல்வங்களையும் எளிதிலடையப்பெற்று, " இறை " எனப் பெயர் கொண்டு விளங்காநின்ற எவ்வேந்தரும் மேற்கூறிய காரியங்களை அசட்டை செய்யாது, அவற்றை அறிந்தியற்ற விரும்புவாராக. நாமும் அரிய

பயன்களை அடைந்து அருட்கடலாகிய ஆண்டவ னடி சேர அல்லும் பகலும் தியானிப்போமாக.

---

## 54 - ஆம் அதிகாரம்
## வெருவந்த செய்யாமை

---

இம்மை மறுமைக்குத் தீதாகிய எக்காரியங்களையும் செய் யாமையே, 'வெருவந்த செய்யாமை' எனப்படும்.

"தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தா
லொத்தாங் கொறுப்பது வேந்து"

இவ்வுலகில் அறமானது தழைத்தோங்கி அனைவரும் சுகத்தை அநுபவிக்கவே அருட்கடலாகிய நம் ஆண்டவன், எவ்வுயிர்களினும் சிறப்புற்று விளங்காநின்ற வேந்தரிடத்து இந்திரன்

வாயு, இய மன், சூரியன், அக்கினி, வருணன், சந்திரன், குபேரன், முதலிய எண்மர் அம்சங்களேயும் இயற்கையாகவே அமைத்துள்ளான். ஆகையாலன்றே, பொய்யாமொழி முதலிய விதிநூல்களும் மற்றும் பல பெருநூல்களும் அரசர்களைத் தெய்வமென் றறையலாயின? ' திருவுடைய மன்னரைக் காணிற் றிருமாலைக் கண்டேன் ' என்ற திருவாய்மொழியா விதனைத் தெளிக. பிறப்பிலே மனிதனுயினும் செய்கையினுலன்றே அங்ஙனம் செப்பலாயிற்று. ஆகவே, அர சர்கள் அத்தகைய தெய்வத் தன்மைகளை அறிந் தியற்றுதல் அவ [illegible] திருக்குறள் தீபாலங்காரம் [பொருட்பால் [illegible]] சியம். அங்ஙனம் அரசியற்றுங்கால், அறநெறி வழுவினுரை

அந்தக னென வெறுத்தலும் அவர் கடமையன்றோ? இஃதுணர்த்தவே,

> "கடிதோச்சி மெல்ல வெறிக நெடிதாக்க
> நீங்காமை வேண்டு பவர்"

என ஆன்றோரும் ஆஞ்ஞாபித்த் தறிக.

ஆகவே, அரசர்கள் அத்தகைய தன்மைகளை அறிந்தொழுக வேண்டும். எவரும் விரும்பற்பாலது மஃதே. இஃதுணராது எந்த அரசர் தமக்கு மேற்பட்டவர் தரணியில் எவருமில்லை யெனக் கர்வித்துக் குடிகளும் மந்திரி முதலிய அங்கங்களும் அஞ்சத்தக்க காரியங்களைத் தாமிட்டதே சட்டமென் றியற்றுகின்றாரோ, அந்த அரசர் யாவராலும் அருவருக்கப்பட்டு, ஆயுளையும் செல்வத்தையும் அவமே போக்குவ ரென்பதற் கையமில்லை.

இஃதுணர்த்தவே செங்காப்போதாரும்,

" வெருவந்த செய்தொழுகும் வெங்கோல
ஞயி
னொருவந்த மொல்லைக் கெடும் "
எனச் செப்பியதுணர்க.

அவ்வாறு அகங்காரங்கொண்டு யாவரும் அஞ்சத்தக்க காரியங்களுக்குட்பட்டமையாலன்றோ, அரிய தவத்தைச் செய்து அழியாத வரத்தைப்பெற்று அஷ்டதிக்குப் பாலகரும் வணங்க அரசியற்றிய இராவணேஸ்வரனும் தன் அருமை பெருமைகளையிழந்து ஆயுளுங் குறைந்து அவமே யழிந்தனன்? அளத்தற்கரிய தவத்தைச் செய்து அத்தகைய வரங்களைப்பெற்ற அவ்விராவணேஸ்வரனே அவ்வாறாயினானென்றால், ஏனையோர் கதி யென்னவாகுமென்பது எடுத்துக்கூறவும் வேண்டுமோ? ஆகவே பொருளுரையும்,

" இறைகடிய னென்றுரைக்கு
மின்ஞச்சொல் வேந்த
னுறைகடுகி யொல்லைக் கெடும் "
எனப் புகலா நின்றது.

வேந்தர்கள் தம்பிரஜைகளுக்குப் பகைவர் சுற்றத்தார் கள்வர் வினைசெய்வார் முதலியவர்களா லுறுந் துன்பங்களைச் சாம பேத தான தண்டங்களாகிய சதுர்வித உபாயங்களா னேற்றவாறு நீக்கி யும், வலியரான் மெலிவெய்தினோர் குறை கூற வந்வழி அத்தாணி அரிசாகம்-௫௬.]

அரசியல் ௨௩௪

மண்டபத்தே அமர்ந்து அன்னோர் குறைகேட்டு இனியவை கூறியும் முறை புரியவேண்டும். அதுவே அரசர் கடமையாம். அவ்வாறின்றி எவர் குறையும் பொருட்படுத்தாது அரசராயினேமென்ற அகங்காரங் கொண்டால், யாவராலும் வெறுக்கப்பட்டு அளவற்ற பெருஞ் செல்வ

மும் அழிய அவமே வருந்துவரென்பது திண்ணம். இதனை,

" அருஞ்செவ்வி யின்னு முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண் டன்ன துடைத்து"

என்ற திருக்குறளடிகளே நன்கு தெரிவிக்கின்ற தல்லவா?

எவ்வேந்தரும் தமதறிவிற்கெட்டிய காரணத்தைக் கொண்டு எவ்விஷயத்தையும் முடிவுசெய்து விடலாகாது. அவ்விதம் செய்வ தால் அறிவை விளங்க விடாமல் அணைபோட்டவா ருகின்றது. ஆகையால், அரசர்கள் தமக்குக் கண்ணென அமையா நின்ற அமைச்சர்களிடத்துக் கலந்தே கருமங்களை முடிக்கவேண்டும். இவ்வாறு செய்தலே அவர்க்குச் சிறப்பு. இவ்வாறொழுகாத வேந்தர்களுடைய தன்மைகளை எடுத்துக் கூறவும் வேண்டுமோ ?

"இனத்தாற்றி யெண்ணாத வேந்தன்
சினத்தாற்றிச்
சீறிற் சிறுகுந் திரு"
என்னும் பெரியார் வாக்கே பெரிதும் விளக்கும்.

ஆகையால், அரசர்கள் அறிவிற் சிறந்த ஆன்றோர்களையே அமைச்சர்களாகக் கொண்டு செங்கோலோச்சுதல் வேண்டும். அத் தகைய வேந்தரும் நாமும் ஆன்றோர்க ளொப்பத்தக்க அரிய காரியங் களை யியற்றி, நற்பயன்களைப் பெற்று, தோற்ற ஒடுக்கமற்ற சுயம்பு வின் ஜோதியுட் கலக்கத் துரிதப்படுவோமாக.

---

## 55 - ஆம் அதிகாரம்
## கண்ணோட்டம்

---

தன்னோடு பயின்றாரைக் கண்டபோது ஒருவருக்குண்டாகும் தாக்ஷணியமே, '

கண்ணோட்டம்' எனப்படும்.

" கண்ணிற் கணிகலங் கண்ணோட்ட ம
ஃதின்றேற்
புண்ணென் றுணரப் படும்"

உ௫௭ திருக்குறள்
தீபாலங்காரம் [பொருட்பால்

மக்கட்குத் தாக்ஷணியமென்று
சொல்லப்பட்ட அரிய தன்மை
அவசியம் இருக்கவேண்டும். அது
யாவரையும் மேன்மைப்படுத்து
வதா யுள்ளது. சோமசுந்தரப் பெருமான்

திருவாலவாயென்னும்
திவ்விய க்ஷேத்திரத்தின்கண் அறுபத்து நான்கு திருவிளையாடல்களைச் செய்தருளியதும் மக்கள்மீது வைத்த தாக்ஷணியத்தாலன்றோ? பூமியை யாளும் திருவினையுடைய அரசர்கட்கு இத்தகைய தாக்ஷணியம் அத்தியாவசியமாக இருத்தல்வேண்டும். இன்றேல் அவ்வரசர்களுடைய ஆட்சி ஒரு பயனையும் நல்காது. இஃதுணர்த்தவே தேவர் கூறிய திருக்குறளும்,

"கண்ணோட்ட மென்னுங் கழிபெருங் காரிகை
யுண்மையா னுண்டிவ் வுலகு"

எனச் சிறப்பித்துக் கூறியது.

கண்ணோட்டமுடைய அரசர்தம் ஆட்சிக் குட்பட்ட குடிகளன்றோ, அடுப்புத் தீ வெம்மையும் ஆதித்தன் வெம்மையுமல்லது பிறிது வெம்மை அறியாராய் இன்புற்று வாழ்வர்? இக்குணமில்லாத வேந்தர் இருப்பதினும் இறப்பது நன்று. உத்தரவேதமும்,

"கண்ணோட்டத் துள்ள துலகிய லஃதிலா
ருண்மை நிலக்குப் பொறை"

எனச் சீர்தூக்கிச் செப்பாநின்றது.

கண்ணோட்டம் அரசர்கட்கே யன்றி அனைவருக்கும் அவசியமானதே. அது கண் சென்ற வழியல்லது காண்ப தரிதாகலின் கண்

ணோட்டமென்று காரணப் பெயர் கொண்டது. ஆகவே, அஃதிலாத கண்கள் கண்களாகா; அவை புண்களேயாம். அந்தோ! கண்ணோட்ட மில்லாதாருடைய இழிவையும் தன்மையையும் எடுத்துக் கூறவும் வேண்டுமோ? அவர்கள் அவயவக் குறைவின்றிப் பிறந்தாரே யல்லாது அக்கண்களாலடைய்த்தக்க பயன்களை யடைந்தவராகார். பொய்யில் புலவரும்,

" பண்ணென்னும் பாடற் கியைபின்றேற்
கண்ணென்னுங்
கண்ணோட்ட மில்லாத கண் "

எனக் கூறுவாராயினர்.

அதிகாரம் - ருரு.] அரசியல்

உ௱௬

வளையிலுள்ள பெட்டை நண்டானது எதிர்சென்று அழைக்காதாயின், ஆண் நண்டானது உயிர் நீங்கும். கவரிமான் தன்மயிர்க் கற்றையில் ஒரு மயிர் உதிர்ந்தாலும் அல்லது சிக்குப்பட்டாலும்

தன்னுயிரை விடுகின்றது. அந்தோ! இத்தகைய தன்மையை யாவது இக்கண்கள் அறிந்ததாகக் காணோம். இதன் இழிவை,

“ உளபோன் முகத்தெவன் செய்யு மளவினாற்
கண்ணோட்ட மில்லாத கண் ”

எனப் பெரியாரும் கூறியது காண்க.

கண்ணோட்டமில்லாத கண்களையுடையோர் அவற்றி னிழிவைக் கவனிப்பதில்லை. அதனை அறியாக் குறையினாலேயே இரணியனும் எளிதில் மாண்டான். இவ்வாறு உலகில் இழிவடைந்தவர் எண்ணிறந்தோர். ஆகையாலன்றோ நாயனாரும்,

“ மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ
டியைந்துகண் ணோடா தவர் ”

எனக் கூறியுள்ளார்?

பெரும்பாலும், இவ்வுலகில்

தாக்ஷணியத்தைத் தமக் கணிகல ஞகக் கொண்டவர்களே தக்கோரெனப் புகழப்படுகிருர். அவர் களே எவ்வுலகிலும் இன்புறுபவரு மாவார். தாக்ஷணியத் தன்மை யுடைய அரசர்களே குழந்தைகளைப் பெற்ருேர் காப்பதுபோலக் குடிகளைக் காக்கும் குணமுடையோர்களு மாவர். இஃதுணர்த்தவே பெருநாவலரும்,

" கண்ணேட்ட மில்லவர் கண்ணிலர் கண்ணுடையார்
கண்ணேட்ட மின்மையு மில் "

என வலியுறுத்திக் கூறினர்போலும்! தாக்ஷணியமென்னும் அரிய தன்மையுள்ளும் முறையறியாது தாக்ஷணியம் செய்வது முற்றும் பிசகாம். ' தாக்ஷணியம் தலே நாசம் ' என்ற பழமொழி இங்குப் பெரிதும் பாராட்டத்

தக்கதாம். முறையறியாது ஒருவன் செய்யும் தாக்ஷணியமன்றோ, அவனுடைய முதலை அழிக்கும் அரமாகின்றது ? ஆகவே இத்தகைய தாக்ஷணியத்தை இடனறிந் தியற்ற வேண்டும். இவ்வாறறிந் தியற்றிய

ஆன் உஸ்ரு திருக்குறள்

தீபாலங்காரம் [பொருட்பால்

றோர்களின் அருமை பெருமைகளை நாம் படித்தும் கேட்டும் இருக் கின்றோமல்லவா ? இதனை,

"கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்

குரிமை யுடைத்திவ் வுலகு"

என்ற தேவர் வாக்கே நன்கு தெரிவிக்கும்.

இத்தகைய தாக்ஷணியமானது பகுத்தறிவைப் பெற்ற மக்கள்

ஒவ்வொருவருக்கும் உண்டாவதான உத்தம குணங்களில் ஒன் றுகவே யுள்ளது. அரசர்களிடத்து இத்தகைய குணம் அவசியம் இருக்கவேண்டும். இத்தகைய குணத்தை ஆபரணமாக அணிந் தோர்களும் தன்னிடத்துத் துன்பம் செய்த விடத்துத் தாக்ஷிணியம் செய்வது தகுதியே யன்றி, ஏனையோர்கட்குத் துன்பம் செய்த விடத்து த் தாக்ஷிணியம் செய்வது தகுதியன்று. எல்லாம் வல்ல நம் இறைவனும் மக்கள் தன்பா லியற்றும் துன்பத்தைச் சகிப்பன். அவர்கள் அடியவராயினும் ஏனையோர்கட்குச் செய்த துன்பத்தை எக்காலத்தும் சகியான். இத்தகைய காரணத்தாலன்றே இரணியன் வதைக்கப்பட்டான். ஆகவே, அரசர்களும் இத் தன்மையை அறி வது அவசியம். இஃதுணர்த்தவே முப்பாலும்.

" பெயக்கண்டு நஞ்சுண் டமைவர்
நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்"
எனப் புகலா நின்றது.

இவைகளை யெல்லாம் நன்குணரவல்ல மக்களாகிய நாமனை வரும் அருமை பெருமைகளை யளிக்கவல்ல அரிய பொருளாகிய தாக்ஷணியத்தைத் தக்க வழியிற் செலுத்தி, இவ்வுலகில் எல்லோராலும் போற்றப்பட்டு இன்புறவும், மறுவுலகில் என்றும் மாறாத அத்துவித பதவியைப் பெறவும் அருட்கடலாகிய நம் ஆண்டவனைப் பிரார்த்திப்போமாக.

---

## 56 - ஆம் அதிகாரம்
## ஒற்றாடல்

---

அரசர்கள் ஆங்காங்கு நிகழ்வன வறிதற்குத் தக்காரை யாளு தலே, ' ஒற்றுடல்' எனப்படும்.

" எல்லார்க்கு மெல்லா நிகழ்பவை யெஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் றொழில்"

என்றார் நாயனார்.

கொக்குகள் மீன்களைக் காத்திருந்து பிடிப்பதுபோல, அரசர்கள் சத்துருஜெய முதலான காரியங்களை யோசித்து முடிக்கவேண்டியவ ராக விருக்கிறார்கள். ஆகையால், அவர்கள் தமது கண்கள் செல்லாத பரப்பில் நிகழ்வன வெல்லாவற்றையும் ஆங்காங்குச் சென்று அறிந்து வந்து கூறுவோராகிய வேவுகாரர்களை வைத்திருக்க வேண்டுவ தவசி யம். இன்றேல், பகைவர்,அயலார், நட்பினர் என்னும் மூன்று திறத்

தாரிடத்தும் நடக்கும் செயல்களைச் செவ்வனே யுணரமுடியாது. இவைகருதியே வள்ளுவனாரும்,

" ஒற்று முரைசான்ற நூலு மிவையிரண்டுந்
தெற்றென்க மன்னவன் கண் "

என மொழிவாராயினர்.

பூர்வம், திருவாலவாயென்னும் திவ்யக்ஷேத்திரமாகிய மதுரை யின்கண் குலோத்துங்க பாண்டியன் அரசியற்றுங்கால், திருப்பத் தூரினின் றும் ஒரு பிராமணன் மனைவியோடுங் குழந்தையோடுந் தன் மாமனிடத்திற்கு மதுரையை நோக்கிக் காட்டுமார்க்கமாக வந்தான். அப்போது, அவன் நீர் வேட்கைகொண்டு வருந்தும் தன் மனைவியை வழியிலே ஓராலமர நிழலின் கீழே குழந்தையுடன் இருத்திவிட்டுத் தான் நீர் தேடிச்சென்றான். அவ்வாலமரத்தில்

முன்னாளில் எய்யப்பட்ட ஒரு கூரிய பாணங்கோப்புண்டு கிடந்தது ; அச்சமயத்தில் அது காற்றினால் அலைப்புண்டு வீழ்ந்து அங்கிருந்த பார்ப்பனி வயிற்றிற்பட் டுருவி அவளைக் கொன்றது. தண்ணீர் கொண்டுவரச் சென்ற பிராமணன் மீண்டுவந்து இரத்தவெள்ளத்தில் மூழ்கிக் கிடக்கும் தம் மனைவியைப் பார்த்து வருந்தி, அவளை





அங்ஙனம் செய்த பாவி யாரென்று ஆராய்ந்து, அங்கு அம்புங் கையுமாக நின்ற வேடனைக் கண்டு, அவனே அவளைக் கொன்றதாக வெண்ணி, அவனை அரசனிடத்து அழைத்துக் கொண்டுபோய்

முறை யிட்டான். அறநெறி வழுவாது அரசியற்று நின்ற பாண்டியன் பலவாறாக வாராய்ந்தும் அதனுண்மை அறியமாட்டாது, ஒற்றரா லறியவேண்டுமென் றாகித்து, யாவரையும் ஆட்கொள்ள அப்பதியில் எழுந்தருளியிரா நின்ற சோமசுந்தரப் பெருமானையே ஒற்றாகக் கொண்டு உண்மை யுணர்ந்தது ஒவ்வொருவரு மறிந்த விஷயமன்றோ? ஆகையால், அரசர்கள் இதனை அறிந்தொழுகினாலன்றி வெற்றி யடையாரென்ப துறுதி. இஃதுணர்த்தவே தெய்வநூலும்,

" ஒற்றினா னொற்றிப் பொருடெரியா மன்னவன்

கொற்றங் கொளக்கிடந்த தில்"

எனத் திருவாய் மலர்ந்துள்ளது.

ஆகவே, ஒற்றரில்லா வேந்தர் அவமே வருந்துவ ரென்பதற் கையமில்லை.

அறிவிற் சிறந்த மகான்களும் அவர்களே அரசர்கட் குச் செவிகளாக வரைந்துள்ளார்கள். இதனே, 'அரசர்கட்குச் செவி கண்' என்ற ஆன்றோர் வாக்கும் அறிவிக்கின்றது. ஆகையால், அரசர்கள் அத்தகைய அருமை பெருமை வாய்ந்த ஒற்றர்களேயே உற்ற துணை யாகக் கொள்ளவேண்டும். இன்றேல், இராச்சிய காரியங்களேயும் வினையோர் தன்மைகளேயும் எளிதிலுணர முடியாது. இஃதுணர்த் தவே உத்தரவேதமும்,

" வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதா ரென்றாங்
கனைவரையு மாராய்வ தொற்று "

என வலியுறுத்திக் காட்டியது.

ஒற்றர்களே ஒருவர்க்கு மஞ்சாது உண்மையை யாராயும் உயர் குண முடையோராக உலகில் பிரகாசிக்கிருர்கள். ஆஹா ! அவர்கள் அறிவும் வலிமையும்

அளவிட்டுக் கூறப்படுமோ ? பொதுவாக எவன் சந்தேகப்படாத வடிவத்துடன் சிறிதும் அஞ்சாது தன் மனதி லுள்ள மர்மத்தைப் பிறர்க்கு வெளிப்படுத்ாதவனே, அவனையே ஒற்றரிற் சிறந்தவ னென்னலாம்.

"கடாஅ வுருவொடு கண்ணஞ்சா தியாண்டு
முகாஅமை வல்லதே யொற்று"

என்ற ஆன்றோர் வாக்கு மலைதே.

அதிகாரம் · ருக.] அரசியல்

உ௬௯.

ஒற்றர்கள் மாறுவேடங் கொண்டு பலவிடங்களிலுஞ் சென்று ஆங்காங்கு நடக்குங் காரியங்களைக் கவனிப்பவராக விருக்கிறார்கள். ஆகையால், அரசர்கள் அத்தகைய திறமுடையோரையே ஆராய்ந்து கொள்ளவேண்டும்.

அவ்வொற்றர்களையுடைய வேந்தர்களே

யாவர்க் கும் அஞ்சாது பெருநில மன்னராய்ப் பெருமையுற்று வாழ்வர். ஆகையாலன்றோ பொய்யில் புலவர் கூறிய பொருளுரையும்,

"இறந்தார் படிவத்தா ராகி யிறந்தாராய்த்
தென்செயினுஞ் சோர்வில தொற்று"

என்றது?

அம்மட்டோ ! ஒற்றர்கள் அறிந்தவைகளைப் பின்னும் பல வழிகளால் ஆராய்ந்து அணுவளவும் சந்தேக மில்லாம லறிவித்தல் வேண்டும். அங்ஙனமின்றேல், எவ்வேந்தரும் யாது செய்வதென் றறியாது தயங்குவர். ஒற்றரிலக்கணம் கூறவந்த ஆன்றோர்களும் 'அறிந்தவை யையப்பா டில்லதே யொற்று' என வலியுறுத்திக் கூறுவாராயினர். இன்னும் அரசர்கள் தெளியப்பட்ட ஒற்றரை யுடையோராயினும், ஒருவனுணர்ந்த விஷயத்தையே உறுதி யாகக் கொள்வது ஒவ்வாத விஷயமாகும். உலகில் ஒருவருடைய சொல்லையே கேட்டு

துன்புற்ஞேர் பலர். ஆகையினுலேயே,

“ ஒற்ஞெற்றித் தந்த பொருளை யு
மற்றுமோ

ரொற்றினு லொற்றிக் கொளல்”

என்ருர் செந்நாப்போதாரும்.

இவைகளை யெல்லா
முணர்ந்தோராகிய எவ்வேந்தரும் வெவ்
வேறு ஒற்றர் மூலமாக உலக விஷயங்களை
யுணரவேண்டும். ஆனுல்,
அவ்வொற்றர்களுள் ஒருவரை யொருவ
ருணரா திருப்பதே நன்று. இஃதுணர்ந்தவே
பெருநாவலரும்,

“ ஒற்ஞெற் றுணராமை யாள்க
வுடன்மூவர்

சொற்ஞெக்க தேறப் படும்”

எனப் புகல்வாராயினுர்.

அரசர்கள் ஒற்றர்க்குப் பரிசளித்தல்
கடனும். ஏனெனில், அவர்களாலேயே
அரசர்கள் அரிய பயன்களை

அடைகிறார்கள். ஆனால், அதனை எனையோ ருணராத வண்ண மளிப்பதே சிறப்பு.



“ சிறப்பறிய வொற்றின்கட் செய்யற்க
செய்யிற்
புறப்படுத்தா னாகு மறை ”

எனப் பெரியாரும் பணித்தமை காண்க.

ஆகவே, உயர்வடைய விரும்பும் வேந்தரும் நாமும் அறநெறி வழுவாதிருந்து, அரிய காரியங்களை அன்புடனியற்றி, அருட்பெருஞ் சோதியாகிய ஆண்டவ னடிசேர அல்லும் பகலும் தியானிப்போமாக.

---

## 57 - ஆம் அதிகாரம்
## ஊக்க முடைமை

ஒரு தொழிலை யியற்றுமிடத்து மனந்தளராது விடாமுயற்சி செய்தலே, 'ஊக்கமுடைமை' எனப்படும்.

" மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்டுஞ்சார்

எவ்வெவர் தீமையு
மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரா ரவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார் "

என்றார் குமரகுருபர சுவாமிகள்.

கடவுளருளால் மிக அரிதிற் கிடைக்கப்பெற்ற மக்கள் யாக்கை யுடையாரெல்லாரும் தம் பிறப்பா னெய்தற்பாலனவாகிய உறுதிப் பயன்களை யெய்துதற்குரிய நற்செய்கைகளை என்ன கஷ்ட நஷ்டங் கள் எதிர்பாராதுவரினும் மனந்தளராது விடாமுயற்சிசெய்து முடிப்பதே கடமையாகும். உலகில் எத்தகைய நற்செய்கைகளைச் செய் யப் புகினும்

இடையூறுகள் பல நேரிடுவது இயற்கை. இவ்வாறு இடையூறுகளால் மனந்தளரும்போது நாம் எடுத்த கருமத்தைக் கைநழுவ விடுவோமாயின், அதுவரையில் செய்த முயற்சியும் வீணாய்ப் பலனின்றிப் பாழாகி விடுமன்றோ? ஆகலின், ஊக்கத்தை விடாது கருமத்தைக் கண்டிப்பாய்ச் செய்தே தீரவேண்டும். பெரும் பாலார் மனோதிடமின்றி, தொடுத்த கருமங்களைச் சரிவர நிறைவேற்றாமல் விட்டுவிடுகிறார்கள். அந்தோ! அஃது எத்தகைய அழிவையும் அவமதிப்பையும் அளிப்பதா யுள்ளது! ஆகையாலன்றோ முப்பாலும்,

அதிகாரம் - ருஎ.] அரசியல்

உ௬ரு

"உடைய செனப்படுவ தூக்கமஃ தில்லா

ருடைய துடையரோ மற்று"
எனக் கூறியது ?

ஊக்கத்தினாலேயே மக்கள் எத்தகைய காரியங்களையும் எளிதில் முடிக்கிறார்கள். மேலைத் தவப்பயனால் எல்லாச் செல்வங்களையும் ஒருங்குபெற்ற அரசர்களுக்கும் இத்தகைய குணம் இன்றேல் அவர்கள் அடையும் பயன் யாதாம் ? இவை கருதியே திருவள்ளுவ தேவரும்,

"உள்ள மு டைமை யுடைமை பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும்"

எனத் திருவாய் மலர்ந்தார்.

ஆகவே, உலகில் ஊக்கமென்னும் ஆபரணத்தை அணிந்தோரே எல்லா நலன்களும் ஒருங்கு பெற்றவராவர். ஊக்கமுடையோரே எத்தகைய துன்பங்கட்கும் மனஞ்சலியாது அரிய காரியங்களை யியற்றிக் கொண்டிருக்கிறார்.

இஃதுணர்த்தவே உத்தரவேதமும்,

“ஆக்க மிழந்தேமென் றல்லவா ரூக்க
மொருவந்தங் கைத்துடை யார்”

என வலியுறுத்திக் கூறு நின்றது.

உலகில் எல்லா நற்காரியங்களையும் கைகூட்டிப் பெருமையையும் அளிக்கவல்லது அவரவர் மன ஊக்கமே என்பது யாவரும் நன்குணர்ந்த விஷயம். உயர் குலத்திற் பிறந்தவராயினும் ஊக்கமின் றேல் யாது பயன்? மிகச் சுவையுள்ள கரும்பிற் பிறந்தும் அதன் நுனியிலுள்ள மலருக்குச் சிறப்புண்டோ? ஆகவே, எவருக்கும் ஊக்கத்தை யன்றிச் சிறந்த பொருள் யாது? இஃதுணரவல்ல அறி ஞர்களே எக்காரியங்களையும் மனஞ்சலியா தியற்றுபவராவர். இவர்கள் தொடங்கிய தொழில் முடியாமல் ஒருகால்

இடையூறுற்று வறுமையால் வருந்தினரேனும், அம்முயற்சியை முடிக்கும் உபாயத்தைத் தேடுவார்களேயன்றித் தளர்வடையார். ஆகையினலேயே திருக்குறளும்,

" ஆக்க மதர்வினய் செல்லு மசைவிலா
ஊக்க முடையா னுழை "

எனச் சிறப்பித்துக் கூறியது.

உ-கங் திருக்குறள்
தீபாலங்காரம் [போதுட்பால்

இவ்வாறிருக்கச் சிலர் ஊக்கத்தின் உயர்வை அறிந்தும் அதனை அனுபவத்திற்குக் கொண்டுவருவதில்லை. அந்தோ! இஃது எத்தகைய கொடுமை! இவர்கள் தங்கள் சாமர்த்தியங்களைத் தாங்

களை குறைவாக எண்ணி, நற்செய்கைகளைச்செய்து பலனடைய முன்னுக்கு வராமல் அவமே அழிகிறார்கள். மற்றுஞ் சிலர் விதிப் பயனென் றும் அதிர்ஷ்ட மிருப்பின் யாவும் வந்துசேரு மென்றும் வீணெக்கருதி, இயற்கையாகிய புத்திகூர்மையையும் இழந்து மன எழுச்சியின்றி வறுமை யடைகிறார்கள். அந்தோ! இஃது அறிவீனத் திலும் அறிவீனமன்றோ ! இத்தகையோர்களுக்கு அறிவுறுத்தவே பொய்யாமொழியார் கூறிய மெய்வேதமும்,

> "வெள்ளத் தனைய மலர்நீட்ட மாந்தர்தம்
> உள்ளத் தனைய துயர்வு"

என வழுத்தா நின்றது போலும்!

ஆகவே, ஒவ்வொருவர் அடையும் பயனும் அவரவர் கொண்ட ஊக்கத்தின் அளவாம். உதாரணமாக, உலகில் அரிய

காரியங் களைச்செய்த எண்ணிறந்த மகான்கள், காரியத்தின் பயனையும் அதனாலடையும் கீர்த்தியையும் கவனித்து விடாமுயற்சியுடன் உழைத்திருக்கின்றார்களேயன்றி, அதனால்வரும் கஷ்ட நஷ்டங்களுக்குக் களைத்துக் கருதிய கருமங்களைக் கைவிட்டவர்களல்லர். இஃதன்றி, ஊக்கமின்றிக் கீர்த்திபெற்றவர் உலகத்தில் யாருமிலர் என்பது யாவரும் நன்குணர்ந்த விஷயமே. ஆகவே, நாம் நீரிற் குமிழி போன்ற இவ்வாக்கையை நற்கருமங்களிற் பயன்படுத்தாது நிலையற்ற அற்ப சுகங்களில் காலங்கழிப்பது மடமையன்றோ? ஆகையாலன்றோ,

“ உள்ளுவ தெல்லா முயர்வுள்ளன் மற்றது
தள்ளினுந் தன்னாமை நீர்த்து”

எனச் செந்நாப் போதாரும் வலியுறுத்திக் கூறியுள்ளார்?

ஆகவே, இவ்வூக்கம் எவருக்கும் அவசியம் வேண்டற்பாலது. சிலர் தங்களுடைய கடமைகளைச் செய்யப் போதுமான காலம் இல்லை எனவும், அவை தங்களால் செய்யக்கூடியவை யல்லவெனவும் தப் பபிப்பிரா யங்கொண்டு வாணாளை வீணாளாக்குகிறார்கள். ஊக்கமின்றிச் சித்திபெற்றவர் ஒருவருமில ரென்பதனை அவர்கள் உணரார்போலும்.



பூர்வ புண்ணிய வசத்தினால் எல்லா நலன்களையும் ஒருங்குபெற்ற அரசர்களானாலும், தாம் கொண்ட தொழிலினிடத்து ஊக்க மின் றேல் ஒரு பயனும் அடையா ரென்பது நிச்சயம். இதனை,

"உள்ள மிலாதவ ரெய்தா ருலகத்து

வள்ளிய மென்னுஞ் செருக்கு"
என்ற திருக்குறளடிகளே தெற்றென விளக்குகின்றது.

சோம்பலே எல்லா அவமதிப்புக்களுக்கும் முக்கிய காரணமாம். இத்தகைய சோம்பலுள்ள ஒருவன் சிறப்பும் செல்வமுமடைதல் எங்ஙனம்? இவ்வுலகில் அவமதிப்பையும் அவ்வுலகில் நரகத்தையும் விரும்புவோரே சோம்பலைக் கைக்கொள்ள வேண்டும். அஃது இருமையிலும் துன்பஞ் செய்யும் தன்மையுடையதென் றுணர்ந்தே நம் தெய்வத் தமிழரசியும் 'சோம்பித் திரியேல்' எனச் சுருங்கச் சொல்லி விளங்கக் காட்டியுள்ளார். இஃதுணர்ந்தவே மாதானுபங்கியாரும்,

" குடியென்னுங் குன்றா விளக்க மடியென்னு
மாசூர மாய்ந்து கெடும்"
எனக் கூறிப் போந்தார்.

ஆகவே, இருமையிலும் துன்பத்தை யளித்துத் தான் பிறந்த வமிசத்தையும் கெடுப்பதாகிய சோம்பலை அடியோ டறுக்க வழி தேடுவதே அறிவுடையோர்க் கழகாகும். இவ்வாறு உலகில் சோம்பலால் கெட்டோரும் கெடுகின்றோரும் கெடுவோரும் பலர். ஆகையா லன்றோ திருவள்ளுவரும்,

"மடியை மடியா வொழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவர்"

எனத் திருவாய் மலர்ந்துள்ளார்?

சோம்பலுடையோர் தம் அருமை பெருமை குடி குணம் முதலிய யாவுமிழந்து உடுக்க உடையும் உண்ண உணவுமின்றி வருந்துவதை நாம் பார்த்தும் கேட்டும் இருக்கின்றோம். அந்தோ! நாம் அவர்களைக் கண்ணுற்று மனங்கசியு முன்னர் அவர்கள் அந்நிலையை யடைந்ததன் காரணத்தைச் சிந்தித் தறிந்து,

"எதிரதாக் காக்கு மறிவினார்க் கில்லை

யதிர வருவதோர் நோய் "
என்றவாறு தம்மைத் தாமே காத்துக்கொள்வ தவசியமன்றோ?

உசஅ திருக்குறள்
தீபாலங்காரம் [பொருட்பால்

ஆகவே, நாம் சோம்பலென்னும் துஷ்டப் பேயைத் துரத்தி விட்டு இருமைக்கான வழிகளில் விடாமுயற்சி யுடையோரா யிருப்ப தவசியம். இன்றேல், பலவகைப்பட்ட துன்பங்கள் வருதல் கூடு மென்று பெரியோர்கள் வலியுறுத்திக் கூறியிருக்கிறார்கள்.

" நெடுநீர் மறவி மடிதுயி லென்குங்
கெடுநீரார் காமக் கலன் "

எனத் தேவரும் பணித்தமை காண்க.

மேலைத் தவப்பயனால் எல்லாச்

செல்வங்களும்பெற்றுப் பூமியை யாளும் திருவுடைய அரசர்களும் இத்தகைய சோம்பலுக்குட்படுவரேல், அவர்கள் அடையும் பயன் யாதாம்? இஃதன்றி அவர்கள் ஆனரோர் கூறும் அரிய பயன்களை அறிந்துய்வது எங்ஙனம்? உத்தரவேதமும்,

“ இடிபுரிந் தெள்ளுஞ்சொற் கேட்பர் மடிபுரிந்து

மாண்ட வுஞற்றி லவர் ”

எனக் கூறுகின்றது.

உலகில், பெரும்பாலார் சோம்பலை விரும்பி முயற்சியை மறந்து செல்வம் சிறப்பு முதலிய யாவு மொருங்கிழந்து வருந்தியதை நாம் படித்தும் கேட்டும் இருக்கிறோமல்லவா? அந்தோ! சோம்பலோடு கூடிய வாழ்க்கை எத்துணை இழிவுள்ளது! அஃது என்னென்ன துன்பங்களைச் செய்கின்றது! இதனை,

" மடிமை குடிமைக்கட் டங்கிற்றன்
னொன்னார்க்
கடிமை புகுத்தி விடும்"

என்ற ஆன்றோர் கூற்றே நன்கு அறிவிக்கிறது.

ஒரு கெட்ட வழக்கத்தையாவது நல்ல வழக்கத்தையாவது அப்பியசித்தால், பிறகு அந்த வழக்கத்தை யொழிப்பது அசாத்திய மாய் இருக்கிறது. ஒரு தரம் நன்மைசெய்தால், மறுதரம் அதைச் செய்வது சற்றுச் சுலபமாகவும் இயல்பாகவு மிருக்கிறது. அது போலவே சோம்பலுக்கு இடங்கொடுத்தால், பின்பு அதைவிட்டு நீங்குவது கூடாமையாயிருக்கும். 'எருதைத் தூக்க விரும்பினால் கன்றைத் தூக்கப் பழகு' என்னும் பழமொழியை அப்பியாசத்தினால் இப்பகையை அடியோடொழித்தால், [illegible] அதிகாரிய[illegible]

உஞற்று வியற்றி ஆன்றோர்க ளுறவைப்பெற்று இருமைப் பயன்களையும் எளிதில் அடையலாம். ஆராய்ந்துணருமிடத்து அரிய பயன்களை யளிப்பது இடைவிடா முயற்சியே யாம். இஃதுணர்த்தவே திருவள்ளுவப் பயனும்,

" அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும் "

எனக் கூறியுள்ளது.

உலகில் எவர்களும் அரிய காரியங்களை யியற்ற அவாவுறுவது இயல்பே. ஆனால், அவ்வாறொழுகி அதன் பயனை யடைவது அரி தினும் அரிதாயிருக்கிறது. இதன் காரண மென்னவென் றாராயின், அது சோம்பலின் கொடுமையால் உண்டான மனத்தளர்ச்சியே யன்றி வேறன்றெனப் புலப்படுகிறது. ' வருந் தி யழைத்தால் வாராத தொன்றில்லை ' என்ற வாக்கியம்

பொய்யாகுமா? இவை கருதியே,

" வினைக்கண் வினைகெட லோம்பல் வினைக்குறை
தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு "

எனப் பெரியாரும் பணித்தமை காண்க.

மந்தமதியினர்களென்று கருதப்பட்டவர்கள் தங்கள் விடா முயற்சியினால் அவர்கட்கு அசாத்தியமெனக் கருதிய கருமங்களைச் செய்து கீர்த்தி யடைகிறார்கள். விடாமுயற்சியினால் வென்ற ஆமையின் கதையை யாவரும் அறிந்தே யிருக்கலாம். ஆகவே, விடா முயற்சி யுடையாரை வெல்லுவது யாவர்க்கு மரிது. இஃதுணர்த்தவே தெய்வப்புலமை வாய்ந்த திருவள்ளுவரும்,

" தாளாண்மை யென்னுந் தகைமைக்கட் டங்கிற்றே
வேளாண்மை யென்னுஞ் செருக்கு "

என வலியுறுத்திக் கூறினர்.

இவ்விடா முயற்சி அரசர்களிடத்து அவசியமிருக்க வேண்டும். உலகம் ஒரு பெருங் கண்ணுடியைப் போன்றது ; நாம் அதனிடத்து நகைப்பின் அதுவும் நகைக்கிறது ; வெறுப்பின் நம்மைத் திரும்பி வெறுக்கின்றது ; சிவப்பு நிறமுள்ள கண்ணுடியின் மூலமாக நோக்கின் சிவப்பு நிறமாகப் புலப்படுகிறது ; பச்சையின் மூலமாகப் பார்ப்பின் பச்சையாய்த் தோன்றுகிறது. உலகில் நரம்

நஉ

உரும் திருக்குறள்

தீபாலங்காரம் [போதப்பாக்

எவ்வாறு நடந்து கொள்ளுகிறேமோ, அவ்வாறே லந்து சிறுமைகளே அடைகிறேம். இஃதுணர்த்தவே,

பெருமை அல்

" முயற்சி திருவினை யாக்கு

முயற்றின்மை

இன்மை புகுத்தி விடும்"

என்றார் நாயனாரும்.

உலகில் முயற்சி யில்லாதார் விருத்தி யெய்தியது மில்லை; முயற்சியுடையோர் கெட்டதுமில்லை. ஆகவே, எவ்வகைப் பயன்களை யும் எளிதிலடையவல்ல மக்களாகிய நாம் இருமைப் பயன்களையும் அளிக்கவல்ல எக்காரியங்களையும் விடா முயற்சியுடன் இயற்றுவோ மாயின், எக்காலத்தும் இன்புற்று எல்லா நலன்களையும் ஒருங்கு பெறு வோம். இவ்வாறின்றிச் சோம்பலுக் குட்படுவோமாயின், தாமரை யாள் தானும் சோம்பல்கொண்டு தன் தமக்கையாருக்கும் நம்மைக் காட்டிச் செல்வள். இதனை,

" மடியுளாள் மாமுகடி யென்ப மடியிலான்

றாளுளா டாமரையி னாள் "

என்ற வாயுறை வாழ்த்தே

வலியுறுத்துகிறது.

அவரவர்கள் பூர்வ புண்ணிய வசத்தின்படியே, இப்பிறப்பில் நன்மை தீமைகளை யனுபவிப்பார்களென்று சொல்லப்படுகிறது. ஜலம் பள்ளத்தாக்குகளையும் வண்டுகள் புஷ்பங்களையும் நோக்கிச் செல்லுவதுபோல, முயற்சியும் ஊழ்வினையை அனுசரித்தே அதிகாரத்தைச் செலுத்தும் என்று பெரும்பாலார் மறுத்துக் கூறலாம். ஆனால், அது அறிவுடையோர்கட் கழகாகாது. இஃதுணர்த்தவே பொய்யில் புலவரும்,

> "தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன்
> மெய்வருந்தக் கூலி தரும்"

என வலியுறுத்திக் காட்டியுள்ளார்.

ஊழ்வினை எவ்வாறிருப்பினும், அரிய காரியங்களைக் கைக்கொண் டியற்றுவ தவசியமன்றோ? உலகில் அரிய காரியங்களை யியற்றிய மகான்கள் ஊழ்வினையை யுணர்ந்தா வூக்கங் கொண்டார்கள்? அவர்களுடைய இடைவிடா முயற்சியன்றோ, ஊழையும் புறங்கொடுத் தோடச்செய் துள்ளது? 'முயற்சி யுடையார்



உறுக இகழ்ச்சி யடையார்' என்றது யாவரு முணர்ந்த விஷயமே. பூர்வம், பதினாறு வயதில் சாகும்படியான ஏற்பாட்டுடன் பிறந்த மார்க்கண்டேயரும்,

முயற்சியாலன்றோ என்றும் பதினறு வயதாக வரம் பெற்றிருக்கின்றார்? இதனை,

"ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர்"

என்ற நான்முகர் கூற்றால் நன்கு தெளிக.

ஆகவே, அசாத்தியமெனக் கருதும் அரிய செய்கைகளை அலட்சியம் செய்யாமல், அதற்கான வழிகளில் விடாது முயன்று, எவ் வழியிலும் இன்புற்று, எல்லாம் வல்ல இறைவனடியை யடைவோமாக.

---

## 58-ஆம் அதிகாரம்
## இடுக்க ணழியாமை

---

ஒரு காரியத்தை முடிக்கக் கருதியவிடத்துத் துன்பங்கள் நேரின் அவற்றிற்கு மனங்கலங்காமையே, 'இடுக்க ணழியாமை' எனப்படும்.

அறிவின் மிகுந்த பெரியோர் வருத்த

இரு திணைப் பகுதியுள் உயர்திணைப் பகுதியின் பாற்பட்ட உயிர்கள் மனவுணர்வுடைமை யால் மேம்பாடுடைய ரென்பது யாவருமறிந்ததே.
அவ்வுயர்திணை யுட்பட்டார் மக்கள், தேவர், நரகர் என மூவகையினராவர். இம்மூவருள்ளும் தேவர்கள் நல்வினைப்பயனொன்றே நுகர்ந்து, அந்நுகர்ச்சி யிறுதியில் அத் தேவசரீர மொழிய , மீண்டும் வினைக்கேற்ற தநு கரண புவன போகங்களைக் கொள்வர். நரகர் தீவினைப்பய னொன்றே நுகர்ந்து, அதனிறுதியில் வேறு யாக்கை முதலியவற் றைக் கொள்வர். தேவர்கள் நல்வினைப் பயனாகிய இன்பத்தைத் துய்க்குங்கால் அதற்கெதிராகிய துன்பம் இனைத்தென் றுணரப் பெறு ராதலின், அவ்வின்பத்தி லிறுமாந்து அதனையே நித்திய மென்று கருதி அக்கருத்தால் பல

வினைகளையு மீட்டுவர். நரகர் தீவினைப் பயனாகிய துன்பத்தை அநுபவிக்குங்கால், அதன் கண் வெறுப்புத்தோன்றி அதற்கெதிராகிய சிற்றின்பத்தில் அவா



குடையராய் அதற்கு வேண்டிய செயல்களைச் செய்வர். இவ்விரு திறத்தினரும், 'வினைப்போகமே யொருதேகங் கண்டாய்' என்றபடி நல்வினை தீவினைகள் பொன் விலங்கும் இருப்பு விலங்கும்போலத் தம்மைப் பந்திக்க, அவற்றிற் கீடாகப் பல பிறப்புக்களை யெய்துவ ரென்ப தொருதலை. தேவருட் சிலர் வீடடைதற் குரியரா யிருப்பி னும், பெரும்பான்மைபற்றி இங்ஙனம் கூறப்பட்டது. இந்நிலவுலகின் கண்ணுள்ள மக்கட்பிறப்பினராகிய நாமோ நல்வினை

தீவினைப்பயன் களாகிய இன்ப துன்பங்களைக் கலந் தனுபவிக்கும்படி இறைவனால் நியமிக்கப்பட் டிருக்கிறோம். ஆகவே, நாம் ஒரு தொழிலிலே முயன்ற போது அடையும் துன்பங்கட்கு மனவருத்த மடைதல் அறிவின மன்றோ? இஃதுணர்த்தவே திருவள்ளுவரும்,

" இடுக்கண் வருங்கா னகுக வதனை
யடுத்தூர்வ தஃதொப்ப தில் "

எனத் திருவாய் மலர்ந்துள்ளார்.

அறிவிற்சிறந்த ஆன்றோர்களும் ஆத்மஞான மடைந்த மகான் களும் தாம் கருதிய கருமங்களைமுடிக்க, எவ்வகையான இடுக்கண் நேர்ந்த காலத்தும் மன வருத்தப் படுவதில்லை. அங்ஙனம் இருத் தற் குரியார் மக்களே யாதலின், மற்றெல்லா யாக்கையினும் பெறு தற் கரியது இம்மக்கள் யாக்கையே என்பர் பெரியார். ஆகவே, எவ் வகைத் துன்பங்கட்கும் மனங் கலங்கா

திருத்தலே, பிறவியின் பயனும் அறிவின் விசேடமுமாகும். இதனை,

> " வெள்ளத் தனைய விடும்பை யறிவுடையா
> னுள்ளத்தி னுள்ளக் கெடும் "

என்ற செந்நாப்போதார் திருவாக்கால் தெளிக.

ஒரு தொழிலைச் செய்யும்போது உறுந் துன்பங்கட்கு இடந் தராத தன்மை எவருக்கும் அவசியம் வேண்டற்பாலது. பூர்வம், அல்லம தேவர், சிவபெருமானது இடப்பாகத்தில் எழுந்தருளா நின்ற உமா தேவியாரின் சத்துவ கலையானது தம்மை அறியும்பொருட்டு இவ் வவனியின்கண் அவதரித்த காலத்து, தாம் அடைந்த துன்பங் கட்குத் துயருற்றாரா ? அவர், அப்போது எவ்வாறுகத் தன் காரியத்தை முடித்துக் கயிலைக் கேகியுள் ளார் ? ஆகவே, அறிவிற் சிறந்த ஆன்றோர்கள் ஆகையாலன்றோ,

துன்பத்திற் கிளைத்துத் துயருக்

குட்படார். 



"இடும்பைக் கிடும்பை படுப்ப ரிடும்பைக்
கிடும்பை படாஅ தவர்"

எனத் தேவர் குறளும் திருவாய் மலர்ந்துள்ளது ?

இவ்வாறு, கருதிய கருமத்தைக் கருத்தாகக் கொண்டொழுகும் கனவான்களன்றோ காரியத்தை முடித்துக் கண்ணிய மடைவோ ராவர். இஃதுணர்த்தவே நம் பெருநாவலரும்,

"மடுத்தவா யெல்லாம் பகடன்ன னுற்ற
விடுக்க ணிடர்ப்பா டுடைத்து"

என வலியுறுத்திக் கூறினர்.

ஆகவே, எவ்வகைத் துன்பங்கட்கும் இளையாது விடாமுயற்சி செய்வதே அறிவுடையோர்க்கு அழகு. நிற்க. இவ்வுலக நடக்கை யைச் சற்று உற்றுப் பார்ப்போமாயின், சிலர் திரவியவான்க ளாகச் சந்தோஷத்தை அனுபவிப்பதையும், சிலர் தரித்திரர்களாகத் துக்கத்தை யனுபவிப்பதையுங் காணலாம். இவைகட்குக் காரணம் என்னவென்று யோசிக்குமிடத்து, அஃது அவரவர்கள் செய்த புண்ணியமே யன்றி வேறன்றெனப் புலப்படும். ஆகவே, மேலைத் தவக் குறைவால் வறுமை யடைந்த காலத்து வருந்துவானேன்? அறிவுடையோர் இதனை யுணராம லிருப்பார்களா? இவை கருதியே முப்பாலுனும்,

" அற்றேமென் றல்லற் படுபவோ பெற்றேமென்
றோம்புத றேற்றா தவர்"

என வலியுறுத்திக் கூறுகின்றது.

இவ்வாறு, அரிய காரியங்களிற் றலைப்பட்ட ஆன்றோர்கள் வினை வசத்தால் இடுக்கணுற்ற காலத்தும் இளையார். அவர்க ளுடைய அருமை பெருமைகளை யாவரும் படித்தும் கேட்டும் இருக்கலாம். இஃதறிவுறுத்தவே முப்பாலும்,

"இலக்க முடம்பிடும்பைக் கென்று
கலக்கத்தைக்
கையாறாக் கொள்ளாதா மேல்"

எனச் சிறப்பித்துக் கூறியது.

இத்தகைய பெரியோர்கள் எத்தகைய துன்ப மடைந்தவிடத் தும் வினைப்பயனென் றுணர்ந்து, விடாமுயற்சி யுடையோராய் உ...

விளங்கி யுள்ளார். வலிய இருளைக்கண்டு சூரியன் ஒதுங்குவது இயல்பல்லவே! பெரிய சமுத்திரத் திடையிலேயுள்ள, முத்து பவளம் முதலியவற்றைப் படகு சென்று எடுத்து வருவதில்லையா? அது போலவே, நாம் எடுத்த கருமத்தை யியற்றுவது அவசியமாம். ஆகையாலன்றோ,

"இன்பம் விழையா னிடும்பை
யியல்பென்பான்
றுன்ப முறுத லிலன்"

எனப் பெரியாரும் பணித்தனர்?

மக்களாகிய நாம் இன்ப துன்பங்களை ஒன்றாகக் கொள்ள வேண்டும். உலகில் விவேகிகள், புளியங்காயின் ஓடு முற்றும் வரையில் சம்பந்தித்திருந்து முற்றிய காலத்தில் பிரிந்து ஒன்றியு மொன்றாதிருப்பதுபோல ஒழுகுவர். இத்தகையோர் மட மாத

ருடன்கூடி இன்ப மனுபவிப்பினும் தங்
கருத்தை யதில் அழுந்த விடார்.
அவ்வாறே அறிவிற் சிறந்த ஆன்றோர்களும்
எவ்வினையா லுண்டாகும் இன்ப
துன்பங்கட்கும் இடங்கொடார். இதனை,

" இன்பத்து ளின்பம் விழையாதான்
துன்பத்துட்
டுன்ப முறுத லிலன் "

என்ற ஆன்றோர் வாக்கே அறிவிக்கின்றது.

இத்தகையோர்களே எவ்வுலகத்தும்
சிறப்புற்று இருமைப்பயன் களையு
மடைந்துள்ளார். பொருளுரையும்,

" இன்னுமை யின்ப மெனக்கொளி
னாகுந்தன்
னொன்னார் விழையுஞ் சிறப்பு"

எனக் கூறுகின்றது.

இஃதுணரவல்ல மக்களாகிய எவரும்
எத்தகைய துன்பங்கட்

கும் இளைப்பது இழிவன்றோ? ஆகவே, அரிய காரியங்களை யியற்ற வல்ல நாமனைவரும் எத்தகைய துன்பத்திற்கும் மனங்கலங்காது, இருமைக்கான வழிகளி லீடுபட்டு, எல்லாம் வல்ல அருட்சோதியாகிய இறைவனை என்றும் போற்றிப் பணிவோமாக.

அரசியல் முற்றிற்று.

## இரண்டாவது அங்கவியல்

## 59 - ஆம் அதிகாரம்
## அமைச்சு

மந்திரியின் இயல்பு கூறுதலே, 'அமைச்சு' எனப்படும்.

எல்லாம் வல்ல பரம்பொருளின் திருவருளால் இவ்வுலகிற் குப்

பிரதிநிதிகளா யிராநின்ற வேந்தர்கள்
எத்தகைய நுண்மா ணுழைபுலன்
பெற்றவராயினும், தம்மையும் தம்
குடிகளையும் பாதுகாத் தொழுகுவதற்குத்
தக்க பண்புடையோர்களையு மாராய்ந்து
கொள்ளவேண்டு மென்பது யாவரும்
மறுக்கொணாத விஷயமாகும். ஆகவே,
அரசர்கள் அவசியமான அமைச்சர்களை
யடையுங்கால், அவ் வமைச்சர்களுடைய
அறிவு திறமைகளை ஐயந் திரிபற
ஆராய்ந்தே கொள்ளவேண்டும்.
இன்றேல், எல்லையில்லாத் துன்பங்கட்கு
இலக்காக வேண்டிவரும்.
ஆகையாலன்றோ அமைச்சர் தன்மைகளை
அறிவிக்கவந்த ஆன்றோரும்,

" கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யு
மருவினையு மாண்ட தமைச்சு "

என்றறியக் கூறியுள்ளார் ?

அரசப் பிரதிநிதிகளாகிய அமைச்சர்களிடத்து மேற்சொன்ன தன்மைகள் அவசிய மிருக்கவேண்டும். அவர்கள் அற நூல்களை ஐயந் திரிபற வுணர்ந்து, அரசாங்க முறைகளைத் தெளிவாகவும் உறுதியாகவும் எடுத்துப் பேசுந் திறமையும், தருக்க நூலா ராய்ச்சியும், தாமெடுத்துக் கொண்ட காரியத்தைத் தவறுதலின்றி முடிக்குந் தன்மையு முடையராதல் தகுதியுடைத்து. இத்தன்மைகளையெல்லா மெளிதி லுணர்த்தவே முதுமொழியும்,

"வன்கண் குடிகாத்தல் கற்றறிதலான்வினையோ
டைந்துடன் மாண்ட தமைச்சு"

என வலியுறுத்திக் கூறுகின்றது.

உ௬௩ திருக்குறள்

தீபாலங்காரம் [பொருட்பால்

அமைச்சர்கள் அத்தகைய தன்மைகளை யெல்லா மடையப் பெற்றோராக விருப்பதோடு, போர்புரிய நேரின் பகைவர்கட்குத்துணை யானவர்களை விலக்குவ தவசியமானல் விலக்கியும், வீரமுள்ளோர்கள் தம்மைவிட்டு விலகாதிருக்க வேண்டிய வுபாயங்களை இயற்றியும் வேந்தர்கட்கு வெற்றியைத் தருபவர்களாக வேண்டும். இதனை,

" பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு"

என்ற நாயனர் வாக்கானு முணரக்கிடக்கிறது.

முற்காலத்தில் சுக்கிரீவன் தன் தமையனாகிய வாலியினல் வருந்தப்பட்டு வேறொரு திக்கில்லாதவனாய் மதங்க பருவதத்தைச் சேர்ந்து அவ்விடத்தில் வசித்துவந்த காலத்து, அவனது பிரதம மந்திரியாகிய அனுமானும் மற்றைய

வானரப் படைகளும் அவனு டன் இருந்து அக்கவலைக்கு ஆறுதல் கூறினார்களென்பது யாவரும்
அறிந்தே யிருக்கலாம். அதுகாலை, தமதாருயிர்க் காதலியைப் பிரிந்த வரும் அரசர் திலகமும் தசாத குமாரருமாகிய ஸ்ரீராமர் தம் தம்பியாகிய இலட்சுமணருடன் அம்மார்க்கமா க வந்தார். இராம லக்ஷுமணரைக் கண்ட சுக்கிரீவன், அவர்கள் தம் தமயனு லனுப்பப் பட்டவர்களோவென்று தயங்கி, அநுமானுகிய அமைச்சனலேயே உண்மையை அறிந்து அச்சத்தை யகற்றியதுமன்றி, அவர்களையும் தமக்காப்த நேசராக அடையப்பெற்று, வாலியையும் வென்று அர சாளும் பாக்கியத்தையும் பெற்முன் ? அத்தன்மைகளை யெல்லாம் அறிவிக்கவே பெருநாவலரும்,

" தெரிதலுக் தேர்ந்த செயலு

மொருதலையாச்

சொல்லலும் வல்ல தமைச்சு "

எனப் பணித்தார்.

ஆகவே, அமைச்சர்களாகிய எவரும் அநுமானைப்போல அத் தன்மைகளையெல்லா மடையவேண்டும். இன்னும்,

தம்மரசனுக்

கும் நாட்டிற்கும் உறுதி பயப்பனவற்றைத் தேர்ந்து சொல்லுதலும், அரசனது செவ்வி பார்த்துக் குறிப்பறிந்து தம் கருத்துக்களைச் செம்மையாகச் சொல்லுதலும், அவ்வாறு தாம் அணிந்து கூறிய

டுதளிபொருளை அரசன் அங்கீகரியாவிடின் தம் அறிவாலும் சொல் வன்மையாலு முண்மையை உறுதியா வெடுத்துரைத்தலு அதிகாரம்-

ஙெ.] அங்கவியல்

உறுள மாகிய தன்மைகளையும் அமைச்சர்கள் உடையரா யிருத்தல் வேண்டும். இதனைக் குறித்தே செந்நாப்போதாரும்,

" அறனறிந் தான்றமைந்த சொல்லானெஞ்

ஞான்றும்

திறனறிந்தான் றேர்ச்சித் துணை"

எனத் திருவாய்மலர்ந்தார்.

அத்தகைய அருமை பெருமைகளை யெல்லா மடையப்பெற்ற அமைச்சர்களா லாகாத காரியம் அவனியில் இல்லை. ஆகையா லன்றோ குறளும்,

"மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம்
யாவுள முன்னிற் பவை"

எனக் கூறுநின்றது?

அமைச்சர்கள் தம்மரசர்கட்கு விஷயங்களை அறநூல் வழியாக அறிவிப்பதுமன்றி, அப்போதப்போது நடக்கின்ற உலக வியல்பையும் உற்றுநோக்கி உறுதிகூறும் உத்தமர்களாகவு மிருக்கிறார்கள். இன்றேல், எவ்வேந்தர்களும் பாகனில்லா யானைபோல நெறியில்லா நெறியிற் சென்று நீங்காப்பழிக் கிலக்காக நேரும். இஃதுணர்ந்தவே செந்தமிழ்நாடு செய்தவத்தா லுதித்த திருவள்ளுவ

நாயனாரும்,

> "செயற்கை யறிந்தக் கடைத்து முலகத்
> தியற்கை யறிந்து செயல்"

எனத் தெரிவித்தார்.

அமைச்சர்கள் மேற்கூறிய தன்மைகளை யெல்லா மடையப் பெற்றவர்களா யிருப்பதோடு, தாமறிந்து கூறியவற்றை அரசர்கள் ஆமோதிக்காத காலத்தும் அவர்களை விட்டு அகலாத அருமைக் குணத்தையும் உடையராதல் வேண்டும். இதனை,

> "அறிகொன் றறியா னெனினு முறுதி
> யுழையிருந்தான் கூறல் கடன்"

என்ற நான்முகர் கூற்றே நன்குணர்த்துகிறது.

ஆகையால், அரசர்கள் இத்தகைய விஷயங்களை யெல்லா முணர்ந்து எவ்வகையாலுந் தேர்ந்த மந்திரிகளையே தம்மிடத் திருத்திக் கொள்ளவேண்டும். அத்தகைய

ஆற்றலுடைய அரசர்களே
யாதும் இலராயினும், செல்வ முதலிய
எல்லாவற்றையும் உடைய



ரெனப்படுவர். இன்றேல், செல்வமும்
சிறப்பு முடையவராயினும்
அவர் அவற்றை யுடையவராகார்.
ஆதிகாலத்தில் அரிய தவங்களைச் செய்து
அழியா வரத்தைப் பெற்ற அரக்கனாகிய
இராவணேஸ்வர
னும் தம் அமைச்சர்களுள் ஒருவனாகிய
மகோதரன் என்பவனுடைய
ஆலோசனையினாலன்றோ, அஷ்ட
திக்குகளிலும் அஞ்சாது அமர்க்குச்
சென்று அளவிறந்த பகைவர்களை
யடையவிருந்தது? சத்தியகீர்த்தி சுமந்திரன்
பட்டி அப்பாஜி முதலிய

மந்திரிகளாலேயே அவர்களுடைய அரசர்கள் என்றும் அழியாப் பெரும் புகழெய்தினர். இவை கருதியே நந்தமிழ் மறையும்,

" பழுதெண்ணு மந்திரியிற் பக்கத்துட் டெவ்வோ
ரெழுபது கோடி யுறும் "

என நவிலா நின்றது போலும்!

ஆதலால், இத்தகைய தன்மைகளையெல்லாம் எவ்வேந்தர்களும் அவசியம் கவனிக்கவேண்டும். அம்மட்டோ! ஆலோசனைக் குகந்தவராயிருந்து ஆற்றலுக் கிளைத்தவர்களாயமைபும் அமைச்சர்களும் அநேகருளர். அவர்களையும் ஆராய்ந்து அகற்ற வேண்டுவது அரசர் கடமை. இஃதுணராது இடுக்கணுற்றோர் சரித்திரங்கள் எண்ணிறந்தனவாம். அரசர்களும் அமைச்சர்களும் இத்தகைய விஷயங்

களையெல்லாம் எவ்வகையாலுந்தேர்ந்து இருமைப் பயன்களை எளிதி லடைவதன்றி, எல்லாம்வல்ல இறைவனால் படைக்கப்பட்ட எவ்வகை ஜீவராசிகளும் இன்புறுமாறு அறத்தை அபிவிர்த்தி செய்வார்களாக. நாமும் அண்ட சராசரங்க ளனைத்தையும் தம்முளடக்கி யாளா நின்ற ஆண்டவனை அங்ஙனமே அருள்புரியுமாறு அல்லும் பகலும் தியானிப்போமாக.

---

## 60 - ஆம் அதிகாரம்
## சொல் வன்மை

---

நினைத்த காரியம் முடியும் வகையால் பேசும் திறமையே, 'சொல் வன்மை' எனப்படும்.

" கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாஞ் சொல் "

பகுத்தறிவையுடைய மக்கள் அவ்வறிவைக்கொண்டு எது நன்மையோ அதைச் செய்யவும், எது தீமையோ அதை ஒழிக்கவும் [illegible] ௧௦.]



முயலவேண்டும். அவர்கள் அங்ஙனம் முயல்வதோடு, செய்ய முற் பட்ட ஒரு காரியம் இனிது முடியுமாறு பேசுந்திறமையைப் பெரி தும் பாராட்டவேண்டும். பேசுவதென்றால் ஓய்வில்லாமலும் மூச்சு விடாமலும் முற்றுப்புள்ளி வையாமலும் கோடைகால மாரி போலச் சொரிவதன்று. பின் என்னையெனின், நாம் எடுத் துக் கொண்ட காரியம் இனிது முடிதற்கேற்ற நீதிகளைப் பற்பல நூல்களினின்றெடுத்து, இன்சொற்க

ளமைத்து, கேட்போர் மனதில் பசு மரத்தாணிபோற் பதியப் பேசுதலாம். இச்சொல்வன்மை எவர்க்கும் இன்பத்தைத் தருவதாயுள்ளது. பெரும்பாலும் இவ் வரிய தன்மை அரசாட்சியென்னும் யந்திரத்திற்கு முக்கிய கருவியா யிலங்கும் அமைச்சரிடத்து அவசிய மிருக்கவேண்டும். இவை கருதியே முப்பாலும்,

"நாநல மென்னு நலனுடைமை யந்நலம்
யாநலத் துள்ளதூஉ மன்று"

என மொழிந்தமை காண்க.

அரசர்களுடைய அருமை பெருமைகட்கு அழிவும் பெருக்க மும் அளிப்பது அமைச்சரது தன்மையன்றோ! ஆகவே, சொல் வன்மை யில்லாத அமைச்சரை யடைவது துன்பமாம். இவ்வாறு அவஸ்தைக்குட்பட்ட அரசர்களும் உலகில் பலர். அமைச்சர்கள் சொல்வன்மையை அவசியம்

விரும்பவேண்டுமென்ப துணர்த்தவே செந்நாப்போதாரும்,

“ ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு”

எனத் திருவாய்மலர்ந் துள்ளார்.

உலகமானது இவ்வாறறிந்து பேசுவார்கண்ணே அமைந்துள தென்பது யாவரும் மறுக்கொணாத விஷயம். அற்ப விஷயமேயாயி னும் அனைவருக்கும் புத்திநுட்பம் தோன்றும்படியாகவும், எடுத்த கருமம் முடியும்படியாகவும் பேசுவதே அழகாகும். புலவர் திலகமாகிய பொய்யாமொழியாரும்,

“ திறனறிந்து சொல்லுக சொல்லை யறனும்
பொருளு மதனினூஉங் கில்”

என எளிதிலெடுத்துக் காட்டியுள்ளார்,

ஆகவே, அத்தகைய சொல்வன்மையை யாவரும் அடைவது அவசியமாம். அவ்வன்மை தாம் கூறும் அரிய மொழிகளுக்கு மற்றவர்கள் மறுப்புக்கூற மார்க்கமில்லா திருத்தலாம். பூர்வம், புதிதாய் வந்து கவி பாடுவோர்களை வென்ற ஏகசந்தக்கிராகியாகிய கடைச்சங் கப் புலவர்களுள் ஒருவரை வெல்ல, நம்மூதாட்டியாராகிய ஒளவைப் பிராட்டியார் எவ்வாறு கவிபாடுவாராயினர் ? இஃது அவரது சொல் லின் வன்மையன்றோ ! ஆகவே, பகுத்தறிவைப் பெற்ற மக்களாகிய நாமும் எவ்விஷயங்களையும் வெல்லத்தக்க அரியமொழிகளை ஆராய்ந்து பேசுதல் வேண்டும். இதனை,

" சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொ லச்சொல்லை

வெல்லுஞ்சொ லின்மை யறிந்த"

என்ற ஆன்ருேர் வாக்கா லுணர்க.

தாம் சொல்லும் சொற்கள் அரிய பொருளினவாயினும் கேட்போர்கள் எளிதிலுணருமாறு பேசலும், தாம் பிறர் வாயிற் கேட்கும் சொற்களிற் காணுதற்கரிய நுட்பப் பொருளைக் காணலும் சொல்வன்மை யுடையோர் தன்மையாம். ஆகையாலன்ருே வள்ளுவர் வாக்கும்,

"வேட்பத்தாஞ் சொல்லிப் பிறர்சொற் பயன்கோடன்

மாட்சியின் மாசற்ருர் கோள்"

என வழுத்தாநின்றது ? இன்னும், தான் எண்ணிய காரியங்கள் பிறர்க்குப் பொருந்தாதனவேனும், அவற்றை அவர் நம்பும்படி சொல்ல வல்லவனுகி ஒன்றிலுஞ் சோர்வில்லாதவனுய்ச் சபைக்குப் பயப்படாதவன் எவனே, அவனே

மாறுபாட்டால் வெல்லல் எவர்க் கும் இயலாது. இஃதுணர்த்துவான் கருதியே,

" சொலல்வல்லன் சோர்வில னஞ்சா னவனை

யிகல்வெல்லல் யார்க்கு மரிது"

என உத்தரவேதமும் உணர்த்தியது. ஆனல், இத்தகைய தன்மை எவருக்கும் எளிதி லமையாது. கற்றோர்களெல்லாம் கவீசுவரர் களா? பேசுவோர்களெல்லாம் பிரசங்கிகளா? வாசிக்கத் தெரிந்து கொண் டிருப்போர்க ளெல்லாம் உபாத்தியாயராகத் தக்கவர்களா? ஆயினும் என்ன செய்வது ! பெரும்பாலும் உலகமானது அத் தகைய பெருமை யுடையாரையே பெரிதும் பாராட்டுவதா யுள்ளது. ஆகையாலன்றோ திருவள்ளுவர் தமிழ்மறையும்,

அதிகாரம் - ௬௦.] அங்கவியல்

" விரைந்து தொழில்கேட்கு ஞால
நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின் "
எனத் திருவாய் மலர்ந்தது ?
இவ்வாறிருக்க, உலகில் பலர் இத்தகைய தன்மையை யுணராமலே, ' ஆசை வெட்கமறியாது ' என்ற பழமொழிப்படி, அவமே பேசிக் காரிய சித்தியுமின்றிக் கலக்க மடைகிறார். அறிஞர்கள் இவர்களை அறிவுடையோர்களாகக் கருதுவார்களா ? ' ஊமைய னுக்கு உளறுவாயன் சண்டப்பிரசண்டன் ' என்ற உவமானப் படி, ஒன்றும் உணராதவர்களன்றோ ஒருவாறு உவந்து கூறுவர் ? இஃதுணர்த்தவே,
" பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
சிலசொல்ல றேற்றா தவர் "
என்றார் திருவள்ளுவர்.

ஏனையோர்கட்கு எடுத்துக்கூறும்
இயல்பமையாதார் அரிய நூல்களைக்
கற்றவிடத்தும் யாது பயன்? அந்தோ!
இத்தகையாருடைய தன்மையை
எடுத்துக்கூறுவது எவருக்கும்
இழிவன்றோ? இஃதுணர்த்தவே நம்
பொதுமறையும்,

"இணருழ்த்து நாறா மலரனையர் கற்ற
துணர விரித்துரையா தார்"

எனப் புகன்றது. ஆனால், உலக
அனுபவமோ, மௌனமாக விருந்தால், 'ஊமை ஊரைச்சுடு' மென்பர். பேசினாலோ,
'வாயாடி', 'அதிகப் பிரசங்கி' யென்பர்.
சுருக்கமாகப் பேசினால், 'குன்றக்கூறல்', விரிவாய்ப் பேசினால் 'மிகைபடக்கூற'லென்னும்
குற்றமென்பர். எளிய நடையில் பேசினால், 'கல்வி போதா'தென்பர்; உயர்நடையில்

பேசினல், 'உலக அநுபவமில்லை' யென்பர். முன்னேவந்தால் கடி; பின்னே போனல் உதை. இவை எல்லாவற்றிற்கும் தப்பி எண்ணியதை எய்துவதன்றே சிறப்பு ? ஆகவே, இவைகளை யெல்லாம் நன்குணர வல்ல நாம் அத்தகைய அருமை வாய்ந்த திறமையை அணிகலனுகக்கொண்டு, ஆன்றேர் பலரும் ஒப்பத்தக்க அரிய காரியங்களை ஆற்றியற்றி, நம் ஆண்டவன் அருளேயடைய அல்லும் பகலும் பிரார்த்திப்போமாக.

---

## 61 - ஆம் அதிகாரம்
## வினைத் தூய்மை

---

"செய்யப்படுந் தொழில்கள் பொருளைமாத்திர மல்லாமல் தருமத்தையும்

புகழையுந் தாத்தக்கனவா யிருத்தலே, 'வினைத் தூய்மை' எனப்படும்.

“ துணைநல மாக்கந் தரூஉம் வினைநலம்
வேண்டிய வெல்லாந் தரும் ”

என்றது தெய்வப்புலவரின் திருவாக்கு.

பெரும்பாலார் இவ்வமுத வாக்கினைக் கவனிப்பதில்லை. கல்வி யறிவில்லாத பாமரர்கள்தான் அவ்வாக்கினை அனுசரிப்பதில்லையெனில், கற்றோர்களிலுங்கூடப் பெரும்பாலார் கவனிப்பதாகத் தோன்றவில்லை. அந்தோ ! இஃது எத்தகைய மதியீனம் ! ஒரு காரியத்தைச் செய்ய எண்ணுவோமாயின் அஃது இம்மை மறுமைக்கு ஏற்றதாகுமாவென்றாலோசித்துப் பார்த்து அக்காரியத்தில் பிரவேசிக்க வேண்டும். பொதுவாகக் கூறுமிடத்து இத்தன்மை மக்கள்

யாவர்க்கும் அவசியமெனினும், இது அரசப் பிரதிநிதிகளாகிய அமைச்சர்கட்கு இன்றியமை யாததாம்.

> "என்று மொருவுதல் வேண்டும் புகழொடு
> நன்றி பயவா வினை"

என்ற ஆன்றோர் வாக்கு மஃதே. நன்றி பயவாத வினைகள் ஒழியாவிடின், அவற்றால் ஆபத்துக்கள் நேரிடும்.

ஆகவே, இத்தகைய தன்மைகளை யெளிதி லுணரவல்லார் இழிவான காரியங்களுக்கு இலக்காவரோ ? பூர்வம், சேதி நாட் டில், திருக்கோவலூரில், மலையாளர்கட்கு மன்னராய் அறநெறி தவ றாது அரசியற்றிய மெய்ப்பொருளுயனர் என்பவர் அரிய காரி யங்களி லீடுபட்டு அடியார்களிடத்து அன்புடையோராய் வாழ்ந் தார். அப்போது, முத்தநாதனென்னும் ஓரரசன் அவருடன்

பல முறை அமர்செய்து ஆற்ருதுபோய்ப்
பின் அங்காயனர் அடியார் பக்தியிற்
சிறந்தவரென் றறிந்து, அவ்வழியால்
அவரை வெல்ல வெண்ணித் தன்
தேகமுழுவதும் விபூதி பூசி
உருத்திராக்ஷம் தரித்துச் சடைகளைச்
சேர்த்துக் கட்டி உடைவாளைப்
புத்தகக்கவளி அதிகாரம் - ௬க.]



போலக்கட்டிக் கையில் வைத்துக்கொண்டு,
அவர் அரண்மனை சென்று அக்கிரமமாக
அவரைக் கொன்ருன். அக்காலத்தும்
அருமை பெருமை வாய்ந்த அங்காயனர்
அவனுக்கு யாதொரு தீங்கும் நிகழா
வண்ணம் அருள் புரிந்தது யாவருமறிந்த
விஷயமன்ருே! அவர் பழிபாவங்கட்குப்
பயந்தே அங்ஙனம் முத்தநாதனைக்
காப்பாற்றினர். ஆகையாலன்ருே,

"இடுக்கட் படினு மிளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர்"

எனப் பொய்யா மொழியார் கூறிய பொருளுரையும் புகன்றது?

ஆகவே, தீதென்று பின்னால் வருந்தும்படியான தொழிலைச் செய்யாதிருக்கவேண்டும். ஒருகால் ஆலோசனையின்றிப் பழவினையி னாலாவது பொருளில்லாமையினாலாவது மெய் வருத்தத்தினாலாவது மயங்கிச் செய்தபோதிலும் அதன்பொருட்டு மனங்கலங்குதல் கூடாது. மனக்கலக்கம் உண்டாயின், அதே பின்னும் அறிவைக் கெடுப்பதுமன்றி யாவராலு மிகழப்படுவதாக வுள்ளது. இஃதுணர்த் தவே மாதாநுபங்கியாரும்,

"எற்றென் றிரங்குவ செய்யற்க
செய்வானேன்
மற்றன்ன செய்யாமை நன்று"

எனத் திருவாய்மலர்ந்தது.

ஆகையால், நமக்கு எத்தகைய சம்பவம் நேரிடினும், இயல்பலாத காரியங்களை இயற்றலாகாது. அங்ஙனம் செய்வோமாயின், எல்லாப் பெருமையு மிழந்து இவ்வுலகில் எல்லோராலு மிகழப்படுவதுமன்றி, அவ்வுலகிலும் ஆற்றொணாத் துயரத்திற் காளாவது திண்ணம். இவ்வாறாகத் துன்பமடைந்தோர் எண்ணிறந்தவராவர். ஆகையாலன்றோ திருக்குறளாசிரியரும்,

> "ஈன்றாள் பசிகாண்பா னாயினுஞ்
> செய்யற்க
> சான்றோர் பழிக்கும் வினை"

என வலியுறுத்திக் கூறுவாராயினர்?

பகுத்தறிவைப் பெற்ற மக்களாகிய நாமெவரும் நமக்குப் பின்னால் தீமையை விளைவிக்கக்கூடிய தொழில்களைச் செய்யாதிருக்க வேண்டும். அங்ஙனம்

அறிந்தொழுகுவதனுல், இம்மைக்கு மாத்திர



மறுமைக்கும் எவ்வளவோ நன்மையுண்டாம். பாண்டவர்கட் கும், துரியோதனுதியர்கட்கும் பகையேற்பட்ட காலத்தும், பாண்ட வர்கள் வினைத்தூய்மை யுடையரா யிருந்திராவிடில் வெற்றியடை
வரா ? அவர்கள் அறமும் புகழுமுடைய நெறிகளில் நின்றெழு கியதனுலன்றோ உய்ந்தனர் ? அண்ட சராசரங்கட்கும் அரசனுகிய ஆண்டவனும் அருள்புரிந்தான்? இவை கருதியே உத்தரவேதமும்,

“ பழிமலைந் தெய்திய வாக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை ”

என்றுரைத்தது.

பூர்வம், ஏமாங்கத நாட்டிற் கிறைவனும் ஜீவகன் பிதாவுமாகிய

சச்சந்தனிடமிருந்த அமைச்சர்களுள் ஒருவனாகிய கட்டியக்காரன் தீய தொழிலைச் செய்து தீராவிடும்பைக் குட்பட்டான். ஆகையால், அத்தகைய தீயதொழில்களைச் செய்யாமையே சிறப்புடை .த்து. இஃ துணர்த்தவே தேவர் குறளும்,

> " கடிந்த கடிந்தொரார் செய்தார்க் கவைதா
> முடிந்தாலும் பீழை தரும்"

எனத் திருவாய்மலர்ந்தது போலும்!

ஆகவே, இவ்வாறு ஆன்றோர்களால் அருவருத்துத் தள்ளப் பட்ட வினைகளை அனுசரிப்பதும், அக்கிரம வழிகளில் பொருள் சேர்ப்பதும் அமைச்சர் முதல் அனைவருக்கும் அடுக்காத காரிய மாம். அவ்வாறு உலகில் கெட்டோர் பலர். ஆகையாலன்றோ நம் பொதுமறையும்,

> " சலத்தாற் பொருள்செய்தே மார்த்தல் பசமட்
> கலத்துணீர் பெய்திரீஇ யற்று"

என உரையா நின்றது ? ஆனால், இத்தகைய தன்மைகளை யெல்லாம் எளிதிலுணர்ந்தியற்ற மனவலிமை இன்றியமையாதது. அவ்வலி மையே எக்காரியங்களையும் சித்தி செய்வதால் அதனை எவரும் தத் தமக்குரிய உயர்பொருளாகக் கொள்ளவேண்டும். அவ்வுயர் பொருளை உரிமையாகக் கொண்டோர்க்கு ஆகாத காரியம் இவ்வவனியில் ஒன்று

யில்லை. அஃதற்றோர் எல்லாச் செல்வங்களு முடையவராக விருந்த போதிலும், அவற்றைக் காக்கும் திறமை யற்றோராகவே யிருப்ப ரென்பது திண்ணம். ஆதலால், உயர்வடைய வேண்டுமென்று ஒவ்



உ[illegible] வொருவரும் மனவலிமை யுடையவராய் வாழ்தல்வேண்டும். அங் ஙனம் வாழ்வோர் அரிய காரியங்களை யியற்றி அழியாப் புகழையு மடைவரென்ப துறுதி. பூர்வம், பாண்டவர்கள்

அரவக்கொடியோனால் அளவிறந்த துன்பங்கட்காளாகி அடவியில் சென்றிருக்கும்போதும் மனவலிமையாலன்றோ மகிமை யடைந்தார்கள்? இதனை,

" வினைத்திட்ப மென்ப தொருவன் மனத்திட்ப
மற்றைய வெல்லாம் பிற "

என்ற ஆன்றோர் வாக்கும் அறிவிக்கிறது.

இத்தகைய தன்மைகளை யெல்லா முணர்ந்தவர்கள் இழி தொழிலுக் குட்படுவரோ? அவர்கள் எவ்வகையால் துன்பம் நேர்ந்த காலத்தும் மன வலிமையினின்றும் மாறுபடார். அன்றியும், யாதொரு காரியத்தையும் அவசரப்பட் டியற்றாது ஆழ்ந்து சிந்தித் தியற்றும் ஆண்மை யுடையவராகவு மிருப்பர். பாண்டவர்கள் பன்னிரண்டு வருஷம் வனவாசம் செய்து, பதின்மூன்றாவது

வருஷம் அஞ்ஞாத வாசம் செய்யவேண்டியவராய்த் தங்கள் மனைவியாகிய பாஞ்சாலியுடன் மாறுவேடங் கொண்டு விராட நகரடைந்து அவ் வரசனிடம் வேலைக் கமர்ந்திருக்குங்கால், அவ் விராடநகரத் தரச னுடைய மைத்துனனாகிய கீசகன் பகையை முடித்த தன்மையைப் படித்தும் கேட்டு மிருக்கின்றோம். இவை கருதியே,

"கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை யிடைக்கொட்கி

னெற்றா விழுமந் தரும்"

எனப் பெரியாரும் பணித்தார்.

ஆகவே, அங்ஙனம் அறிந்தொழுகுதல் யாவர்க்கும் அவசிய மல்லவா? ஆனால், வாக்குஞ் செயலும் ஒன்றாகப் பொருந்தியிருப் போரைக் காண்பது மிக்க அரிதென்பது யாவரும்

அறிந்த விஷயமே. பெரும்பாலும் மக்கட்கு இஃது இயற்கையாகவே இருக்கின்றதென்றே கூறலாம். இஃதுணர்ந்தவே மேலோரும்,

> “சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ்
> சொல்லிய வண்ணஞ் செயல்”

என மொழிவாராயினர். ஆனால், இஃது அறிவுடையோர்கட் கழகாகுமோ? அன்றியும், அதனாலடையும் அழிவும், அவமானமும் அளவிட் டுக் கூறப்படுமோ? உலகில் எல்லா காலத்திலும் செய்கை [illegible]

[illegible]

[illegible] திருக்குறள்

[illegible]லங்காரம் [illegible]

[illegible] கூறல் பிழையாம்.

ஆகையால், அரசப் பிரதிநிதிகளாக இவ அமைச்சர்கள் அத்தகைய தன்மைகளை அவசியம் அறிந்தோராக வேண்டும். அவ்வாறொழுகுந் தன்மையானது அவர்கட்கேயன்றி அரசர்கட்கும் அருமை பெருமைகளை யளிப்பதாயுளது. இதனை,

" வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்க
ணூறெய்தி யுள்ளப் படும்"

என்ற திருவள்ளுவர் வாக்கே தெரிவிக்கின்றது.

பஞ்சவருள் ஒருவனாகிய பற்குணன் பகைவரை வாட்டும் பொருட்டுப் பாசுபதாஸ்திரமென்னும் படையைப் பார்வதி நாதராகிய நம்பகவானை நோக்கித் தவஞ்செய்து பெற்றதனருமையைப் பகரவும் வேண்டுமோ ? அதுகாலை, அவர் மனத் திண்மையுடையரா யில்லாவிடில் மகிமை யடைவ தெங்ஙனம் ?

ஆகையாலன்றோ ஆன்றோரும்,

" எண்ணிய வெண்ணியாங் கெய்துப வெண்ணியார்
திண்ணிய ராகப் பெறின் "

எனக் கூறியுள்ளார் ?

இவைகளையெல்லாம் எளிதிலுணரவல்ல எவ்வேந்தரும் அத்தகைய மனத்திட்ப முடையாரை அவசியம் விரும்ப வேண்டும். விஷத்தையுடைய பாம்பானது மூச்சுவிடுதற்கு முன்னே திரண்டு வந்த பல எலிகளும் உயிரை விடும். மலைபோலக் குவிக்கப்பட்டுள்ள விறகு ஒரு நெருப்புப் பொறியினால் வெந்து நீறாகும். ஆதலால், நாம் உருவிற் சிறியவராக விருப்பவரைக் கண்டு அவரை இகழ்தல் கூடாது. உருவிற் சிறியவர்களும் பெரிய தொழில்களைச் செய்யும் ஆற்றலுடையவர்களாக விருப்பர். முற்காலத்தில் சமுத்திரத்தை யும்

காரியத்தையும் ஆலசியமின்றி விரைவில் முடிப்பவராகவு மிருக்கிறார்கள். எக் காரியங்களையும் எளிதாக முடித்தற் கேதுவாகிய மனத்திண்மை அவர்களிடத் திருக்கும்போது அவர்களாலாகாத காரியமும் அவனியில் உண்டோ? துவட்டாவானவன் தன் குமாரனாகிய விஸ்வரூபனைக் கொன்ற இந்திரனைக் கொல்வதற்காக ஒரு யாகத்தினைச்செய்ய, அந்த யாகத்தில் விருத்திராசூரன் என்பவன் வெளிப் பட்டு அவ்விந்திரனோடு போர்புரிந்து அவனது அரிய படையாகிய வச்சிராயுதத்தையும் அழித்தபோது அவ்விந்திரன்,

" துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி

யின்பம் பயக்கும் வினை "

என்ற பெரியார் வாக்கைப் பெரிதும்

பாராட்டிய தனலன்றோ பெருமை யடைந்தனன்?

ஆகையால், எவரும் அத்தகைய தன்மையுடையவராக ஆவ சிய மிருக்கவேண்டும். இன்றேல், கடல் சூழ்ந்த இவ்வுலகத்தில் எத்தகைய செல்வமுஞ் சிறப்பு முடையவராயினும் அவர் அவற்றை யுடையரல்லராவர். அவர்கட்குரிய அழிவையும் அவமதிப்பையும் அளவிட்டுக் கூறப்படுமோ? இதற்குத் திருஷ்டாந்தமாக,

"எனைத்திட்ப மெய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டா துலகு"

என்று திருவள்ளுவப் பயன் திருவாய் மலர்ந்துள்ளது.

அரிதாகிய மக்கள் யாக்கையைப் பெற்றோராகிய அனைவர்க்கும் மனவலிமை

அவசியமேயெனினும், அரசப்
பிரதிநிதிகளாகிய அமைச்சர்களிடத்து
அஃது அவசியமிருக்கவேண்டும்.
இஃதுணர்த்தவே,

"சூழ்ச்சி முடிவு துணிவெய்த லத்துணிவு
தாழ்ச்சியுட் டங்குத தீது"

எனப் பெரியாரும் பணித்தனர்.

எக்காரியத்தையும் செய்யவேண்டிய காலமறிந்து ஒழுங்கோடும் அளவோடும் செய்யவேண்டும். இன்றேல், அது கைகூடாமற் போவதுடன்,

நேரில் குளிக்கப் போய்ச் சேறு
பூசிக்கொண்ட கதைபோல் இழிவும் அவமானமும்
நேர்வது உண்மை. பெரும்பாலர் இது

உவமை
அலங்காரம்

திருக்குறள்
பொருட்பால்

துன்ராது நடந்து காரிய சித்தியும் பெருது விழிக்கும் பழக்க முடையோராக விருக்கிருர்கள். அந்தோ பாவம்! இஃது எத்தகைய மதியீனம். உறங்கிக்கொண்டிருக்கும் ஒருவனை, "அப்பா உறங்க வேண்டாம்; இனி அதனுல் கேடுண்டாகும். விழித்துக்கொண்டு எச்சரிக்கையாக் இரு" என்ருல், அவன் விழித்து உட்கார்ந்து சோம்பலைப் போக்கிக்கொண்டு எச்சரிக்கையோடு காரியங்களைக் கவனித்துச் செய்யாமல் துள்ளி எழுந்து தலைகீழாகக் குதித்துக் கை கால்களை யுடைத்துக் கொள்வது போலிருக்கின்றதல்லவா? இவைகளை யெல்லா முணர்ந்தே மேலையோரும்,

> "தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
> தூங்காது செய்யும் வினை"

என மொழிந்தார்.

ஆதலால், அமைச்சர் அத்தகைய தன்மைகளைக் கவனித்தே யாதொரு காரியத்தையும் தொடங்கவேண்டும். சிலர் ஆராய்ந் தியற் றிய தொழிலை அரை குறையாக விடுகிறார்கள். அஃது எத்தகைய அறிவீனம். அதனாலடையுந் தீங்கையும் அளவிட்டுக் கூறப்படுமோ? ஆகையாலன்றோ தெய்வப்புலவரும்,

" வினைபகை யென்றிரண்டி னெச்ச
நினையுங்காற்
தீயெச்சம் போலத் தெறும் "

எனத் திருவாய் மலர்வாராயினர்?

அறிவிற் சிறந்த மகான்கள் யாதொரு காரியத்தையும் ஆரம் பிக்கு முன்னரே, ஐயந்திரிபற ஆராய்ந் தெண்ணிச் செய்கிறார்கள். அதுவே யாவராலும் புகழத்தக்க அரிய பயனை யளிப்பதா யுள்ளது. அவ்வாறின்றி இழிவடைந்தோர் இவ்வவனியில்

எண்ணிறந்தவ ராவர். இதனைக் குறித்தே முதற்பாவலர் கூறிய முதுமொழியும்,

" பொருள்கருவி காலம் வினையிடனோ டைந்து
மிருடீர வெண்ணிச் செயல்"

என வலியுறுத்திக் காட்டிய துணர்க.

ஒரு தொழிலைத் தொடங்கும்போது அத்தொழிலால் ஏற்படும் முயற்சி யிடையூறுகளை யாராய்ந்து, அவ்விரண்டின் அளவையும் பார்த்தும் தொழிலாலடையும் பயன் பெரிதாயின் அதனைத் தொடங்கவேண்டும். அவ்வாறின்றித் திடீரென்று ஒரு காரியத்



உக்க[illegible] தைச் செய்வாராயின், தீரா விடும்பை யடைவ ரென்பது திண்ணம். அஷ்டதிக்குப் பாலர்களும் அஞ்சும்படி அரசியற்று நின்ற தசமுகன் அளகாபுரிக் கரசனாகிய குபேரனை வென்று, அவனது புஷ்பவிமானத் தில் அமர்ந்து

ஆகாயமார்க்கமாக வருங்கால், அங்கிங்கெனுதபடி எங் கும் விளங்காநின்ற நம் இறைவனுகிய சிவபெருமான் தங்கியிருக் கும் பாக்கியம் பெற்ற பர்வதத்தை வேருடன் பறித்தெடுத்து அப் பால் எறிவதாகச் செய்த ஆராய்ச்சியற்ற செய்கையால் அவமே வருந்தினனன்றே ? அவன் சீர்தூக்கிப் பார்த்திருப்பின் அத்தகைய துன்பத்திற் கிலக்கா யிருப்பனே ? ஆகையாலன்றே,

" முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும்
படுபயனும் பார்த்துச் செயல் "

என்று ஆன்றோரும் ஆஞ்ஞாபிப்பாராயினர் ?

ஆகையால், நாம் எக்காரியத்தைத் தொடங்கினும் இத்தகைய தன்மைகளை யெல்லாங் கவனித்தல் கடமை யென்பது கரதலாமலகமாம். இதனை,

" செய்வினை செய்வான் செயன்முறை யவ்வினை

யுள்ளறிவா னுள்ளங் கொளல்"

என்ற ஆன்றோர் வாக்கானு முணர்க.

ஒருவர் மெலியவரா யிருப்பினும் ஆற்றலுடைமையும் அறிவின் விசேடமு மிருப்பின் அவமாவரோ? ஏமாங்கத நாட்டிற் கிறைவனும் சச்சந்தன் தநயனுமாகிய ஜீவகனென்பான், தன் தந்தையைக் கொன்றோனாகிய கொடியோனைக் கொல்லக் கருதினான். அப் போது அவன் மாமனாகிய கோவிந்தன் தன் மகளாகிய இலக்கணைக் குத் திருமணமென் றறிவித்து, அதிசயிக்கத்தக்க இயந்திர மொன்று நியமித்து அதன்மூலமாக எவரும் வியக்க வெற்றி யளித்தானன்றோ? ஆன்றோரும்,

" வினையான் வினையாக்கிக் கோட னனைகவுள்
யானையால் யானையார்த் தற்று "

என்றறிவுறுத்தியுள்ளார்.

ஆராயுமிடத்தும் அவ்வாறெழுகுதலே ஆற்றலின் வனப்பாம். அவ்வாறியற்றவிடின் அக்காரியத்தை முடித் தல் அதிகப் பிரயாசையாகும். அன்றியும், பகைவருக்குத் தம்மெலிவு தோன்றுதிருப்பதே பண்புடைத்து. இதனை,

[illegible] திருக்குறள்
தீபாலங்காரம் [illegible]

"கட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
யொட்டாரை யொட்டிக் கொளல்"

என்ற நான்முகர் வாக்கா னுணர்க.

எவ்வகையானும் எடுத்த கருமத்தை முடிப்பதே எவர்க்கும் கடமை. இவ்வாறிருக்கச் சிலர் எளிமையால் தாழ்கின்றனர். அஃது அறிவுடையோர்க் கழகாகாது. ஆகையினாலேயே அவர் களை மெலியவரென மேலோரும் மொழிவாராயினர். இஃ துணர்த்தலே.

பெருநாவலரும்,

" உறைசிறியா ருண்ணடுங்க லஞ்சிக் குறைபெறிற்

கொள்வர் பெரியார்ப் பணிந்து"

எனத் தெரிவித்தார் போலும்!

ஆகையால், இத்தகைய தன்மைகளையெல்லாம் ஆராய்ச்சி செய்தோராகிய அமைச்சர்களனைவரும் பொருளை மாத்திரமல்லாமல், தருமத்தையும் புகழையும் தரத்தக்க காரியங்களைப் பொறுமையோ டியற்றிக் கீர்த்தியுடன் வாழ்ந்தால், இம்மையிலும் மறுமையிலும் மேன்மை யடைவரென்பது திண்ணம். இன்றேல், அவர் வாழ்வால் யாது பயன்? பொதுவாகக் கூறுமிடத்து அத்தகைய தன்மை அமைச்சர்கட்கேயன்றி அனைவர்க்கும் அவசியமானதே. ஈரமெவரும் அத்தகைய தன்மைகளை அநுசரித்து ஆன்றோர் களுடைய அன்பிற்

குரியவராகி, அடைதற்கரிய பேரின்பப் பேற்றைப்பெற எல்லாம்வல்ல நம்பெருமானைப் பிரார்த்திப்போமாக.

---

## 62 - ஆம் அதிகாரம்
### தூது

சந்தி விக்கிரகங்கட்கு வேற்றரசர்களிடத்தே செல்வாரது இயல்பு கூறுதலே, 'தூது' எனப்படும்.

" அன்புடைமை யான்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுரைப்பான் பண்பு "

என்றார் நாயனார்.

வேந்தர்கட்கு வேண்டிய அவசியமான அங்கங்களுள் அமைச்சைப்போற் சிறந்தது தூதாம். பொருத்தல்

றரசர்களிடத்துச் செல்வோரே தூதராவர்.
எவ்வேந்தர்களும் அவர் களாலேயே
வேற்றரசர்களுடைய எண்ணங்களை
யெல்லாம் வெளிப் படையா யுணர
வெளிதாயிருக்கிறது. ஆகவே, அரசர்கள்
அத் தகைய அத்திபாவசியமான
அங்கத்தை அடையுங்கால், யாரிடத் தும்
அன்புடையவனாகவும், பொருளாசை
யில்லாதவனாகவும், ஞாபக சக்தியும் காலதேச
வர்த்தமானங்களை யறியுந் திறமையு
முள்ளவனாக வும், தேவர்கட்கு மஞ்சாத
திடமுள்ளவனாகவும், சகல பாஷையு
முணர்ந்த சமர்த்தனாகவு முள்ள
புனிதனையே ஆராய்ந்து கொள்ள வேண்டும்.
இன்றேல், எத்தகைய வேந்தரேனு
மிவ்வுலகில் எவ் வகையான வெற்றியு

மடையா ரென்ப துறுதி. ஆகையா
லன்றோ தூதரியல்பு கூறிய நாயனரும்,

"அன்பறி வாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்
கின்றி யமையாத மூன்று"

என வலியுறுத்திக் கூறினர்?

தூதர்களாகிய எவரும் மேற்சொன்ன தன்மைகளை யெல்லா மவசிய முடையவர்களா யிருக்கவேண்டும். அவர்கள் பகைவர்களிடத் திற் பேசும்பொழுது, உறுதியோடு தம்கருத்தை யுரைக்கவேண்டுமே யன்றிச் சொல்லிற் சோர்வுடையராகவும் கலங்கிய வுள்ளமுடைய ராகவு மிருத்தலாகாது. அவர்கள் அங்ஙனம் அறிவிலும் சூழ்ச்சியி லும் வல்லவரா யிருந்தால், அது அரசர்க்கு மிகுந்த நன்மையை விளைக் கும்.

ஆதிகாலத்தில், பாண்டுவின் குமாரர்களான பஞ்சவர்கட்காகத் தூது சென்றவரும்,

அன்று ஆதிமூலமென்றோதிய
யானையைக் காத்தவருமாகிய நம்
கண்ணபிரானையும், ஸ்ரீராமபிரான்
பொருட்டுத் தூது சென்ற நவவியாகரண
பண்டிதராகிய ஆஞ்சநேயரையும்,
திருப்பாற் கடல் கடைந்த காலத்து
வாசுகியை மந்தரத்தோடிணைத்துத்
தானொருவனே கடைந்த ஆற்றல்வாய்ந்த
வாலி குமாரனாகிய அங்கதனையும்,
தேவர்கள் வேண்டுதலுக் கிணங்கித் தன்
ஆருயிர்க்காதலியாகிய தமயந்தியால் தூது
சென்ற சக்ரேஸ்வரனும் வள்ளலுமாகிய
நளனையும் தூதர்க்குச் சான்றாகக் கூறலாம்.
இவர்களை முறையே கால், அரை, முக்கால்,
முழுத் தூதெனக் கூறுவர். ஆகவே,
இத்தகைய தன்மைகளை யெல்லா
மெனிதிலுணர்ந்தே திருவள்ளுவனாரும்,

[redacted]

> "நூலாருணூல்வல்ல னாகுதல் வேலாருள்
> வென்றி வினையுரைப்பான் பண்பு"

என்றுரைத்தார்.

அத்தகைய தன்மைகளை யெல்லாமறிந் தொழுகுந் தூதர்களை அடைந்தாலன்றி அரசர்கட்கு இவ்வவனியில் யாதொரு வெற்றியு மில்லையென்பது அங்கை நெல்லிக்கனிபோ லறியக் கிடக்கிறது. ஆகலின், அரசர்கள் இயற்கை யறிவும் தோற்றப் பொலிவும் பலரோடும் ஆராயப்பட்ட கல்வியு முடையப்பெற்ற தூதர்களையே ஆராய்ந்து கொள்ளவேண்டும். இதனை,

> "அறிவுரு வாராய்ந்த கல்வியிம் மூன்றன்
> செறிவுடையான் செல்க வினைக்கு"

என்ற நான்முகர் கூற்றானும் நன்குணர்க.

அத்தன்மை யுடைய தூதர்களை அடையப்பெற்ற அரசர்களே இவ்வவனியில் யாதொரு காரி யத்தையும் ஆலசியமின்றி முடிப்ப வர்களாக வமைகிறார்கள். நாயனாரும்,

" தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி

நன்றி பயப்பதாந் தூது "

எனக் கூறியுள்ளார்.

தூதர்கள் மாற்றரசரிடம் தாம் மேற்கொண்ட விஷயத்தைப் பற் றிப் பேசுங்கால், காலமும் இடமும் தேர்ந்து தொகுத்தும் வகுத்தும் இன்சொல்லா லெடுத்துச் சொல்லவேண்டும். தம்முயிர்க்கிறுதி யேற் படினும் எடுத்த கருமத்தை எவ்வகையாலு முடித்தே தீரவேண் டும். அவர்கள் ஆதிகாலத்தில் ஸ்ரீ இராமர் தமதாருயிர்க் காதலி

யுடன் அடவிக்குச் சென்றகாலத்து,
அஷ்டதிக்குப் பாலர்களு மஞ்ச
அரசாட்சி செய்த இராவணேஸ்வரன்
அவ்வணங்கை எடுத்துச் சென்று அசோக
வனத்தில் சிறை வைத்தானல்லவா?
அப்போது,
அவ்வணங்கின் காதலரா லனுப்பப்பட்ட
ஆஞ்சநேயரென்னுந்
தூதர் தன்மைகளை யாவரு மறிந்தே
யிருக்கலாம். ஆகையாலன்றோ
தேவரும்,

"கடனறிந்து காலங் கருதி யிடனறிந்
தெண்ணி யுரைப்பான் றலை" ....

என்றறிவுறுத்திக் கூறினர்.

அதிகாரம் ௬௯.] அங்கவியல்

உஎ௫ அத்தகைய அருமை
பெருமைகளை யெல்லா மறிந்தொழுகும்

தூதர்கள் யாதொரு பொருளிலும் அபேக்ஷையின்றித் தமக்கவசியமான குணவர்களையும் ஐயந் திரிபற ஆராய்ந் துணர்ந்து, மாற்றரசர் சினத்துக்கு மஞ்சாத நெஞ்சம் படைத்தவர்களாக வமைகிறார்கள். இதனைச் செந்தமிழ்நாடு செய்த தவத்தா லுதித்தவரும் திருக்குற ளாசிரியருமாகிய செந்நாப்போதார்,

" தூய்மை துணைமை துணிவுடைமை யிம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு "

எனத் தெரிவித்ததா லுணர்க.

தூதர்கள் தம் மாருயிரையும் பொருட்படுத்தாது, தம்மரசர் சொல்லி விடுத்த வார்த்தைகளை அஞ்சாது கூறும் ஆற்றலை அடைந்த வர்களாக அவனியில் பிரகாசிக்கிறார்கள். பொருளுரையும்,

" விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான் வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன் "

எனப் புகன்றதா லுணர்க.

இவற்றை யெல்லாம், அஞ்சா நெஞ்சம் படைத்த அவ்விரா வணன் அளவிறந்த இம்சை செய்த காலத்தும், ஆஞ்சநேயர் அவற் றிற்கஞ்சாது தாம் மேற்கொண்ட காரியத்தை முடித்த தன்மையே அகங்கை நெல்லிக்கனிபோ லறிவிக்குமன்றோ ? உண்மையை யூன் றிப் பார்க்குமிடத்து அவ்வாறொழுகலே தூதர் கடமையாகிறது. இவை கருதியே பெருநாவலரும்,

"இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற்
குறுதி பயப்பதாந் தூது"

என அறிவுறுத்திக் காட்டிய தறிக.

இவ்வகைகளை யெல்லா முணரவல்ல எவ்வேந்தர்களும் முற்கூறிய தன்மைகளை யெல்லா மடையப்பெற்ற தூதர்களையே ஆராய்ந்து கொண்டால் அவ்வுலகத்தும் இவ்வுலகத்தும் அழியாப்

புகழை அடைவர். ஆகையால், அங்ஙனமே அருள் புரியுமாறு நாம் அகில ரக்ஷகராகிய ஆண்டவனை அல்லும் பகலும் தியானிப்போமாக.

---

உ

## 68 - ஆம் அதிகாரம்
## மன்னரைச் சேர்ந்தொழுகல்

---

அரசனை அடுத்து நடக்கு மியல்பே, 'மன்னரைச் சேர்ந் தொழுகல்' எனப்படும்.

> "அகலா தணுகாது தீக்காய்வார் போல்க
> இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்"

என்றார் குறளாசிரியர்.

அண்ட சராசரங்களைத்

தம்முள்டக்கி யாளாநின்ற அருட் கடலும், கருணைநிதியுமாகிய கடவுள் இவ்வுலகிற்குப் பிரதிநிதியா யிருந்து விளங்காநின்ற எவ்வேந்தரையும், இந்திரன், வாயு, இயமன், சூரியன், அக்நி, வருணன், சந்திரன், குபேரன் என்ற தேவர்களின் அம்சங்களால் படைத்துள்ளார். ஆகையாலன்றோ, அவ்வேந்தர்கள் பிற மனிதர்களைவிடச் சௌந்தரிய முள்ளவர்களாக வும், அனைவரையும் ஆளத்தக்க வீரியமுள்ளவர்களாகவும் விளங்கு கிறார்கள்? அங்ஙனம் அவர்களது விசேஷ மகிமைகளை யுணர்ந்தே, 'திருவுடைய மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேன்' என ஆன் றோரும் செப்பியுள்ளார். 'கல்லெல்லாம் மாணிக்கக் கல்லாமோ' என்ற

கற்றோர் வாக்கும் இங்கு கவனிக்கத் தக்கதே. பொதுவாகக் கூறு மிடத்து, எந்த வேந்தனுடைய தயையினால் பொருளும் சத்துரு ஜெயமும் உண்டாகிறதோ, எவன் துவேஷத்தினால் மாணமுண்டா கிறதோ அவன் தேஜோரூப னல்லவா ? ஆதலால், வேந்தர் களிடத்துள்ள மந்திரி முதலான அனைவரும் அதிக ஜாக்கிரதை யாக விருக்க வேண்டும். அன்றியும், அவர்கள் விரும்புவனவற்றை விரும்பா தொழித்தலே விசேஷ பயனை யீயவல்லதா யுளது. இவை கருதியே,

“ மன்னர் விழைப விழையாமை மன்னரான்

மன்னிய வாக்கந் தரும் ”

என நாயனாரும் மொழிந்தார்.

மந்திரி முதலியோர் அரசனுடைய இயல்புகளை நன்கு அறிந் தொழுகுவதுமன்றி, அவனுடைய பிழைகளையும் அவசியம் விளக்க வேண்டும். அவ்வாறின்றி அரசனைப் பொருந்துதல், பாம்பு கடித்த அக்கணத்திலேயே அதனைத் தடுக்காமல் அதன் விஷம் தலைக்கேறின பின், அவ்விஷ மிறங்கும்படி மந்திரிப்பார் செய்கை போன்றிருக்கு மன்றோ? இவற்றை யெல்லா மெளிதி லுணர்த்தவே செங்காப்போதார் கூறிய திருக்குறளடிகளும்,

[அங்கவியல் உஎ]

"போற்றி னரியவை போற்றல் கடுத்தபின்
றேற்றுதல் யார்க்கு மரிது"

எனத் தெரிவித்தது போலும்.

அரச சபையில் யாருடனும்

அந்தரங்கமாய்ப் பேசுதலும், அங்கே ஓர் ஆச்சரியம் நேர்ந்தவிடத்து நகைத்தலும் அநர்த்தக்ரமாக முடியுமாதலால், அத்தகைய தன்மைகளை அமைச்சர் முதலானவர் கள் அவசியம் ஒழிக்க வேண்டும். பூர்வம், ஸ்ரீராமர் தமது பாரி யாளைக் கவர்ந்து சென்ற பாதகனாகிய இராவணனை வதைத்து, மனையாளுடன் அயோத்திக்குத் திரும்புங்கால், தவசிரேஷ்டராகிய பாரத்துவாசர் வேண்டுகோளால் அங்கு பந்திபோஜனம் செய்து பக்த ஜனங்களுட னமர்ந்திருக்கும்போது, அவர்களுள் ஒருவரும் அவ்விராமர் தம்பியுமாகிய லக்ஷ்மணர் தம்மிடம் ஈரேழு வருஷமாய் அணுகாத தூக்கம் இன்று வருவது போஜனத்தின் பலனே என்று மனத்துள் நினைத்து புன்னகை கொண்டபோது, அங்குள்ளோரும் அவ்விராமரும் ஆலோசித்த விஷயங்கள் அநர்தமல்லவா? ஆகையா

லன்றோ மாதாநுபங்கியார் கூறிய பொதுமறையும்,

" செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையு மவித்தொழுக

லான்ற பெரியா ரகத்து"

எனப் புகலாநின்றது?

அரசருடைய அந்தரங்கத்தை ஆராயப் புகுதல் எவர்க்கும் ஏற் காத விஷயமாகும். ஆதலால், அவ்வரசரே அதனை அறிவித்தாலன்றி, மற்றையோர் வினவுதல் கூடாது. அவர் ஏகாந்தமா யிருக்குங்கால் எத்தகைய ரகசியத்தைச் சொல்லியிருப்பினும் அதனை எவரிடத்தும் வெளியிடலாகாது. இவ்வாறாக அரசர்களிடத்து அறிந்தொழுக வேண்டிய விஷயங்கள் பலவாம். இதனை,

" எப்பொருளு மோரார் தொடரார்மற்

நற்பொருளை

விட்டக்கால் கேட்க மறை”

என்று நூற்பாவலர் கூறியுள்ளார்.

உவக் திருக்குறள்

தீபாலங்காரம் [பொருட்பால்

எவரும் யாதொரு காரியத்தையும் சமயமறிந்தே அரசனுக்குத் தெரிவிக்க வேண்டும். இன்றேல் ஆருயிர்த் துணைவராயினும் அவர் அருவருக்கப் படுவதுமன்றி, அக்காரியமும் அவலமாகும். ஸ்ரீராமர் தமது மனைவியைக் கவர்ந்துசென்ற இராவணனுடன் போர் செய்ய வானரசேனைகளுடன் ஹிர்து மஹாசமுத்திரக் கரையில் இறங்கியிருக்குங்கால், அவ்விராவணன் தம்பியாகிய விபீஷணன் தமயனைப் பார்த்து, ‘அண்ணா! யான் சொல்லுவதைக் கேளுங்கள். ராமருடன் போர்

செய்யவேண்டாம். அவரைச் சாதாரண மனிதனைக் கருதவேண்டாம். அவர் புண்யமே உருவெடுத்து வந்தவர். தந்தை சொல் மறுக்காத உத்தமர். இஷ்டர்களை ரக்ஷித்துத் துஷ்டர் களைச் சிக்ஷிப்பவர். அன்றியும், அவர் இதுவரை காட்டிவந்த வீரத் தையும் யெண்ணிப்பாருங்கள் : முதலில் நமது தாடகையை வதைத் தார் ; மாரீசனை மாய்த்தார் ; விராதனை வெட்டினார் ; சூர்ப்பநகை யைப் பங்கம் செய்தார் ; கரதூஷணரைக் கொன்றார் ; கவந்தனைக் கண்டதுண்டமாக்கினார். அம்மட்டோ ! நாமும் நமது குலத்தவரும் வணங்கி வந்த வாலியை வதைத்தார். ஆதலால், இவற்றை யெல்லாம் யோசித்து அந்த ராமருடன் அமர்புரிவதை ஒழியுங்கள் ' ' என்று அநேக விதமாக அறிவித்தும், அவன் அவற்றைக் கேளாது அவரையும்

அருவருத்தானன்றே? ஆகையினாற்றான்,

"குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல்"

என ஆன்றோரும் ஆஞ்ஞாபித்துள்ளார்.

ஆனால், அரசர்க்கு யாதுமே அறிவித்தல் கூடாதென்பது கருத்தன்று. சமயமறிந்து அரசர்கட்கு அவசியமான விஷயத்தை அவர் கேட்டிலராயினும் அறிவிக்க வேண்டியது அவசியமே. இவ்வாறிருக்கச் சிலர் அரசர்களுடைய பிரியத்தைச் சம்பாதிக்கக் கருதிப் பொய் புரட்டுகளைப் புனைந்து கூறியும், அனுவசியமாக முகஸ்துதி செய்தும் வருவது எத்தகைய அறிவீனம்! அன்றியும், 'அரசர் நம்மை நன்கறிந்தவர் தானே; நமக்கொன்றும் செய்யார்' என்று நினைத்து அவரை அவமதித்தலும் அறிவுடையோர்கட் கழகாகாது. ஆகையால், அரசர்பாற் பழகுங்காலும்

சேவகஞ் செய்யுங்காலும், அவரிளைய ரென்றுவது எளிய ரென்றுவது அதிகாரம்
-க்கூ.] அங்கவியல்

உள்ள் இனமுறையரென்றுவது நம்மை நன்குமதித்துளா ரென்றுவது
வரம்பின்றி நெருங்கி மனம்போன வாறெல்லாம் பேசாமல், எக் காலத்து என்ன சொல்வாரோ யாது செய்வாரோ என்ற அச்சத்தோடு அவரைச் சேர்ந்தொழுக வேண்டும். இன்றேல், பல்வகைப் பட்ட இடுக்கண்களும் முடிவில் உயிர்க் கிறுதியும் வருதலுறுதி.
இஃதுணர்த்தவே நம் திருக்குற ளாசிரியரும்,

"இளைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற
வொளியோ டொழுகப் படும்"

"கொளப்பட்டே மென்றெண்ணிக்
கொள்ளாத செய்யார்
துளக்கற்ற காட்சி யவர்"

எனப் பலவாறு அறிவுறுத்தி யுள்ளார்.

இவைகளை யெல்லாம் எளிதில் உணரவல்ல எவரும் அரசர் களை அலட்சியமாகக் கருதி நடப்பரோ ? முன்னொரு காலத்தில் தக்ஷப்பிரஜாபதி யென்பவன் அரிய தவமிருந்து அடைதற்கரிய பெருஞ் செல்வத்தையும் பெரு வாழ்வையு மடைந்து, அண்ட சரா சரங்கட் கிறைவனாய் விளங்கா நின்ற சிவபெருமானுக்குத் தனது செல்வப் புத்திரியைத் திருமணஞ் செய்வித்துச் சிறப்புற்று வாழ்கை யில், எல்லாம் வல்ல அவ்விறைவன் தன்னை வணங்கவில்லை யென இறுமாப்புற்று, யாகஞ்செய்ய எல்லாத் தேவர்களையும் வரவழைத்து, அவ்வீசனை அழைக்காது அலட்சியம் செய்தமையால் அடைந்த பயனை யாவரும் அறிந்தே யிருக்கலாம். இவை கருதியே,

" பழைய மெனக்கருதிப் பண்பல்ல

செய்யுங்

கெழுதகைமை கேடு தரும்"

என முப்பாலும் மொழியலாயிற்று.

எத்தகையரேனும் அரசர் கருத்துக் கிசையுமாறே நடத்தல் வேண்டுமன்றி, பகைத்தால் உயிர்க்கிறுதிவரை யுள்ள கேடனைத்து மெய்துமென்பது திண்ணம். ஆகலின், நாமனைவரும் இறையென்று விளங்காநின்ற வேந்தர் சிறுவராயிருந்த போதிலும் அவரை மனிதரென்று மனத்துட்கொள்ளாது, அன்பும் பயமு முடையோராய் அறநெறி வழுவாது அரிய காரியங்களை ஆராய்ந்தியற்றி, அருட்பெருஞ் சோதியாகிய ஆண்டவன் அடிசேர அல்லும் பகலும் தியானிப்போமாக.

---

## 64-ஆம் அதிகாரம்

## குறிப்பறிதல்

ஒருவருடைய எண்ணத்தை அவர்
பறிதல்" எனப்படும்.
கூறுமலறிதலே, "குறிப்

" கூறாமை நோக்கிக் குறிப்பறிவா
மாறாநீர் வையக் கணி"

னெஞ்ஞான்று
என்றார் நாயனார்.
அரிய பிறவியைப் பெற்ற மக்கள்

நற்குண நற்செய்கைகளையே
ஆபரணமாகக்கொண்டு வாழவேண்டும். அந் நற்குண நற் செய்கைகளுள் குறிப்பறிதல் என்பது ஒரு முக்கிய இலக்ஷணம். இது பகுத்தறிவைப் பெற்ற மக்களாகிய நம் அனைவரிடத்தும் அவசியம் இருக்கவேண்டும். உத்தரவேதமும்,

" ஐயப் படாஅ தகத்த துணர் வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல்"

எனச் சிறப்பித்துக் கூறியது.

ஆகவே, இவ்வாறான தன்மையை யடைவது எவருக்கும் அவசியமன்றோ? சாதாரணமாக உலகில் இத்தகைய குணத்தை யுடையோர் எவ்வுலகத்தையும் வெல்பவராக விளங்குகிறார். அரசர்கள் இத்தகைய அரிய தன்மை யுடையாரை அமைச்சர்களாகக் கொண்டொழுகுதல் அத்தியாவசியமாக வேண்டற்பாலது. இதனை,

"குறிப்பிற் குறிப்புணர் வாரை யுறுப்பினுள்
யாது கொடுத்துங் கொளல்"

என்ற திருக்குறளடிகளால் நன்கு தெளிக.

குறிப்பறித லென்னுங் குணம் நம் அனைவருக்கும் உடன் பிறந்ததாகவே யுள்ளது. நாம் அதனை விருத்தி செய்யாக் குறையால் அது வியர்த்தமாகிறது. அந்தோ! இத்தகைய அரிய தன்மையை அவமே யிழக்கும் அறிவினர்களும் மானிட வர்க்கத்தைச் சேர்ந்தவர்களாவரோ? ஆகையாலன்றோ நம் திருக்குற ளாசிரியரும்;

"குறித்தது கூறாமைக் கொள்வாரோ டேனை
யுறுப்போ ரனையரால் வேறு"

எனத் தெரிவிப்பா ராயினர்? நிற்க.

அதிகாரம் -[illegible].] அங்கவியல்

உஎக

பெரும்பாலும் ஒருவனுக்கு அத்தகைய அரிய தன்மையை அளிக்கும் பொருள் கண்ணென்றே கூறலாம். படிகம்

தனக்கெப் பொழுதும் சுபாவமான சொரூபத்தைக் காந்து தன்னை யடுத்த பதார்த்தத்தின் தன்மையையே காட்டி நிற்கிறது. அத்தகைய தன்மையை யாயினும் அறிவில்லாதவர்களுடைய கண்கள் அறிந்த தாகக் காணும். ஆகவே, உணர்வில்லாத கண்களை ஒருவனடைந் தது யாது பயன் கருதியோ ? இஃதுணர்த்தவே செந்நாப் போதாரும்,

"குறிப்பிற் குறிப்புணரா வாயி னுறுப்பினு
ளென்ன பயத்தவோ கண்"

எனத் திருவாய் மலர்ந்துள்ளார்.

ஆகவே, பகுத்தறிவைப் பெற்ற மக்களாகிய நமக்கு ஒருவ ருடைய உள்ளத்தை யூகித்துணரும் திறமவசியமாம். அவ்வாறு யூகித்துணர்வார்கட்கு உற்ற துணையாக நிற்பதும் உணர்த்துவார் முகமே. இவை கருதியே தமிழ்மறையும்,

" அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங்

கடுத்தது காட்டு முகம்"

எனச் செப்பிய துணர்க.

ஒருவருடைய அகத்திலே மறைந் திருப்பதாகிய எண்ணங் களை அடுத்திருப்பவர்கட்குத் தெளிவாக அவர் முகமே காட்டி விடுகிறது. அதனை யூகித்துணர்வாரையே உலகம் பெரிதும் பாராட்டு வதாயுளது. நாம் ஒருவரால் எண்ணப்பட்ட காரியத்தை அவர் சொல்லாமற் சோதித் தறிவதே சிறப்பு. உலகில் இவ்வரிய தன் மையை யடைந்தவர்களிடத்து எவரும் தம் குறைகளை எடுத்துக் கூறவும் வேண்டுமோ? இது கருதியே முப்பாலும்,

" முகநோக்கி நிற்க வமையு மகநோக்கி

யுற்ற துணர்வாரப் பெறின் "

என மொழிந்தது.

குறிப்பறிவார்க்கு ஏற்ற துணையாக நிற்கும் கருவி அறிவிப்பார் கண்களேயாம். அவ்வரிய கருவியாலே அமைச்சர்கள் வேற்றரசர்களுடைய பகையையும், கேண்மையையும் பகுத்துணரு கின்ற திருக்குறள் தீபாலங்காரம் [பொருட்பால்] கிறார்கள். இவை கருதியே ஆன்றோர் கண்ணின் அளவு கோலென் றறைந்தார் போலும்!

" நுண்ணிய மென்பா ரளக்குங்கோல் காணுங்கால்

கண்ணல்ல தில்லை பிற "

எனத் தெய்வநூலும் தெரிவித்தலுணர்க.

ஒருவருடைய உள்ளத்தை யூகித்துணர்வோரும் சபையில் உள்ளவர்களுடைய கல்வி கேள்விகளின் தகுதிகளை நுட்பமாக அறிந்து,

அதற்கேற்றபடி அடக்கிப் பேசவேண்டும். இன்றேல், அவர்கள் பிறரால் இகழப்படுவதோடு எடுத்த காரியமும் இனிது முடியாதென்பது திண்ணம். இஃதுணர்த்தவே பெருநாவலரும்,

" அவையறிந் தாராய்ந்து சொல்லுக சொல்லின்

றொகையறிந்த தூய்மை யவர் "

எனக் கூறியுள்ளார்.

'உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டு; பேதை மாந்தர் பெருகிய துலகம் ' என்ற தொல்காப்பியர் சூத்திரப்படி, உலகில் அற்பஞான முடையோர் பலராவர். ஆகவே, அவர்கள் சபையில் தாமும் ஏதாவ தொன்றை எடுத்துச் சொல்லி வாதம்செய்து பிறரோடு மாறு கொள்ள மிக்க விருப்பத்தோடு கிளம்புவார்கள். அவர்கட்குத் தம் மெதிரில் வாதம் செய்பவரது அருமை பெருமை

முதலியனவும் தெரியா. அம்மட்டோ ! அவர்கள் தமக்குத் தெரிந்த விஷயத்தை ஒழுங்குபடுத்திச் சொல்லவும் அறியார். இன்னும், தாமாக ஆசைப் பட்டு எடுத்துக்கொண்ட வாதத்தில் பிறரால் தமது கொள்கை தோற்றுப்போனால், அதனையு மறியாமல் மேன்மேலும் எதையாவது சொல்லிக்கொண்டே யிருப்பார். ஆதலால், அவர்களுடைய வாதத் திற்கும் இடம் கொடாமல் ஆராய்ந்து அறிந்து பேசுதல் குறிப்பறி வோர் கடன்.

" இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக
சொல்லி
னடைதெரிந்த நன்மை யவர் "
" அவையறியார் சொல்லல்மேற்
கொள்பவர் சொல்லின்
வகையறியார் வல்லதூஉ மில் "

எனப் பெரியாரும் வழுத்தியதுணர்க.

உலகில் இவ்வாறு சபையி னியல்பை யறிந் தொழுகுவோர்களே தக்கோரெனப் புகழப்படுவர். இதனை யறிந்தொழுகும் அறிவுடை யோர்கள் எவ்வகையாலும் இன்புறுபவராவர். இஃதுணர்த்தவே, தெய்வநூலும்,

" ஒளியார்முன் னொள்ளிய ராதல் வெளியார்முன்
வான்சுதை வண்ணங் கொளல் "

எனத் தெரிவித்தது.

இவைகளை யெல்லாம் நன்காராயுமிடத்து அறிவுடையார் சபை யையடுப்பதே சிறப்பு. அவர்களுடைய சபையிலும் நாம் அவசரப்பட்டு ஒன்றும் சொல்லலாகாது. இவ்வாறொழுகும் அறிவுடை யோர்களையே உலகம் பெரிதும்

பாராட்டுவதாயுளது. இஃதுணர்த் தவே தேவரும்,

" நன்றென்ற வற்றன்று நன்றே முதுவருண்

முந்து இளவாச் செறிவு "

எனத் திருவாய் மலர்ந்துள்ளார்.

இவைகளை யெல்லாம் நன்குணரவல்ல மக்களாகிய நாம் ஒரு பெரிய சபையில் அவமான மடைவதென்றால் அதனிழிவை எடுத்துக் கூறவும் வேண்டுமோ? ஆராய்ந் துணர்வோர்க ளிதனை அறியாமலிருப் பரோ? இவை கருதியே பொய்யில் புலவர் கூறிய பொருளுரையும்,

" ஆற்றி னிலைதளர்ந் தற்றே வியன்புல

மேற்றுணர்வார் முன்ன ரிழுக்கு "

எனப் புகன்ற தறிக.

உயர் குடியிற் பிறவாதவர் எவ்வளவு படித்திருந்தாலும், சபை யிற் பிறர் பேசும்போது உண்டாகும் குற்றங்களை

இகழாமல் அடக்கி வைக்கிற உத்தம குணத்தை யுடையவராகார். உயர் குடியிற் பிறந்த வரோ சபையிற் பிறர் பேசும்போது அதிலுள்ள குணங்களை மாத் திரம் கிரகிப்பார்களேயன்றி குற்றங்களிற் கருத்தைச் செலுத்தவே மாட்டார். ஆகவே, அத்தகைய சபையை அறிந்து பேசுவதே அறி வுடையோர்கட் கழகாகும். இஃதுணர்த்தவே,

“கற்றறிந்தார் கல்வி விளங்கும் கசடறச்
சொற்றெரிதல் வல்லா ரகத்து”

௩௬



“ உணர்வ துடையார்முற் சொல்லல் வளர்வதன்
பாத்தியு ணீர்சொரிந் தற்று ”

என வலியுறுத்திக் கூறினார் வள்ளுவனார்.

இவ்வாறிருக்கப் பெரும்பாலும் இதற்கு மாறுபட்ட சபையின ரன்றோ தாம் அடக்கமாக இருந்து பிறர் சொல்வதைத் தெரிந்து கொள்வதை விட்டுத் தமது அறியாமைக் குரிய மொழிகளை வெளி யிட்டுப் பேதைமையால் அதனையே வலியுறுத்தி ஸ்தாபிக்கத் தொடங் குபவருமாவர் ? இத்தகையாருடைய இழிவையும் தன்மையையும் இங்கு எடுத்துரைத்த லவசியமன்று. நாம் அப்படிப்பட்ட அறிவிலி களின் முன்னிலையில் நமது சிறந்த மொழிகளை உறுதிப்படுத்திச் சொல்லாமல் விட்டுவிடவேண்டும். இதனை,

" புல்லவையுட் பொச்சாந்துஞ் சொல்லற்க நல்லவையு

ணன்கு செலச்சொல்லு வார் "

என்ற நான்முகர் வாக்கால் நன்குணர்க.

உலகில் இத்தகைய நற்குணமுடையோரையே எவரும் விரும்புவர். இவருக்கு எவரும் பயந்து நடப்பர். இவரையே பெரியா ரென்று மதிப்பர். 'நிறைகுடம் நீர் தளும்பாது' என்றவண்ணம் இத்தகைய குணமுடையோரை யாவரும் நிறைகுடமென நினைத்து வணங்குவர். அஃதன்றியும், சபையை யறிந்தோனே உலகத்தை அறியும் தன்மை வாய்ந்தவனாகிறான். இவை கருதியன்றோ முதற் பாவலர் கூறிய முதுமொழியும்,

"வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்

றொகையறிந்த தூய்மை யவர்"

என மொழிந்தது.

அரிய நூல்களை அதிகமாகச் சேர்த்ததனாலே எவரும் புலவர் களாகப்

போற்றப்படார். அவற்றின் பொருள்களைத் தாமும் அறிந்து பிறர்க்கும் போதித்து விளங்கச் செய்பவர்களன்றோ புலவர்களென்று போற்றப் படுபவராவர்? அவ்வாறே, ஒருவர் தன்னைக் கற்றவராகக் காட்டித் திரிவதனால் கண்ணிய மடையார். கல்வியின் பயனைக் காட்டிக் கற்றோர்க ளொப்பக் கலக்கமின்றிச் சொல் வதே கண்ணியப்படுத்தும். உற்று நோக்குமிடத்து இத்தகைய உத்தம குணமுடையோரை உலகம் உவந்துகொள்ளும். இதனை,



"கற்றாருட் கற்றா ரெனப்படுவர் கற்றார்முற்
கற்ற செலச்சொல்லு வார்"

என்ற ஆன்றோர் வாக்கே நன்கறிவிக்கும்.

பொதுவாக உலகில் இத்தகைய திறமை வாய்ந்தோர் மிகச் சிலரேயாவர்.

ஆயினும், அவர்களுடைய அருமை பெருமைகளோ அளவுகடந்து நிற்கிறது, அத்தகைய அருமை பெருமைகளை யாவரும் அடைய முயல்வது அவசியம். 'கற்றதுகைம் மண்ணளவு கல்லா துலகளவென் றுற்ற கலைமடந்தை ஓதுகிறாள்' என்ற நம் மூதாட்டியாராகிய ஔவைப் பிராட்டியார் அருளிச் செய்த வாக்கியம் இங்கு அறியத்தக்கதன்றோ? ஆகவே, அறிவுடை யோர்கள், ஆன்றோர் பலரிருக்கும் அவையின்கண் தாமறிந்தவை களை அஞ்சாமல் சொல்லலாம். அங்ஙனஞ் சொல்லுதலே அறிவை அதிகப்படுத்தும் வழியுமாம். இஃதுணர்த்தவே திருவள்ளுவப் பயனும்,

"கற்றார்முற் கற்ற செலச்சொல்லித் தாங்கற்ற
மிக்காருண் மிக்க கொளல்"

எனத் தெரிவித்தது போலும்!

ஆன்றோர்களுடைய அரியமொழிகளை ஆராய்ந்துணர அளவை நூல் அவசியமாம். இன்றேல், எவ்விஷயத்தையும் எளிதிலுணர முடியாது. ஆகவே, சொல்லிலக்கண மறிந்தோரே இத்தகைய சூக்ஷமத்தை யுணர்பவராவர். இத்திறமையே எவ்விஷயத்தையும் எளிதிலுணர்த்தி ஏனையோர்களையும் வெல்ல வல்லதாயுள்ளது. ஆகலான், அமைச்சர்கள் இத்தகைய அரிய நூல்களை அவசியம் கற்க வேண்டும்.

"ஆற்றி னளவறிந்து கற்க வவையஞ்சா
மாற்றங் கொடுத்தற் பொருட்டு"

என்று ஆன்றோரும் ஆஞ்ஞாபித்துள்ளார். இவ்வாறு அரிய திறமைகளை

யடைந்தும் அவைக்கு அஞ்சு
பவர் உலகில் பலர் உண்டு. அந்தோ!
அத்தகையோர்கள் அறிவு
தான் என்னே! ஆராயுமிடத்து,
அச்சமன்றோ அவர்களுடைய
அறிவை யாள்கின்றது? 'நீந்தத் தெரியும் வரையில் நீரிலிறங்கேன்'
என்ற கிர்மூடன் கதையாக வன்றோ
நேருகிறது ? அத்தகையோர் உழுஞ்சு
திருக்குறள் தீபாலங்காரம்
[பொருட்பால்
எத்தகைய நூல்களைக்
கற்றும் என்ன பயன் ? இதையுணர்ந்தவே
முப்பாலுனும்,

" வாளொடென் வன்கண்ண ரல்லார்க்கு
நூலொடென்
னுண்ணவை யஞ்சு பவர்க்கு"

னை மொழிந்தது.

அவை யஞ்சுவோர் பெண் தன்மை யன்மைந்திராப் பேடிக்கு ஒப் பாவர். சாதாரணமாக உலகில் இத்தகைய இழிவடைந்தோர் வினை யோர்க்கு என்ன பயனை யளிப்பர் ? இஃதுணர்த்தவே பெருநாவலரும்,

" பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையு
ணன்கு செலச்சொல்லா தார் "

எனச் செப்புவா ராயினர்.

அவை யஞ்சுவோர் தாம் அறிந்து கொண்ட அரிய நூல் களின் பயனை அவலமாக்குகிறார்களன்றோ ? அப்படிப் பட்டவர்களை அறிவாளிகள் என்னென்று மதிப்பார்கள் ! அந்தோ பாவம் ! அவர்கள் அரிய தன்மைகளை அடைந்திருந்தும், அச்சத்தாலன்றோ அவமதிப்படைகிறார்கள் ? இன்னும் அவர்கள் கல்லாத மூடரினும் கடையாகக் கருதப்படுகிறார்கள். இதனைக் குறித்தே,

" கல்லா தவரிற் கடையென்ப கற்றறிந்து

நல்லா ரவையஞ்சு வார் "

என்றார் நாயனார்.

இவ்வாறு அவைக்குப் பயந்து தன் அரிய தன்மைகளை அவமே போக்கும் அறிவினர்கள் அரிய பிறவியை அடைந்தவர்

களாகார். பருவநோக்கி வான்மழை பொழிந்திடுவதும், பகலோன் இருள் துரப்பதும், நதிகளும் பிறவும் பொங்குவதும், ஒப்பிலாத நற்குணப் பெரியோர் அருள் சுரப்பதும் தமக்கொரு பொருள் குறித்தன்றே. ஆகவே, எவரும் அரிய தன்மைகளை அவமாக்குவது ஆகாத விஷயமன்றோ? பொதுவாகக் கூறுமிடத்து இத்தகைய புத்தியினர் பூமியி லிருப்பதைவிடப் போவதுநன்று.

"உளரெனினு மில்லாரொ டொப்பர் களனஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார்"

என்பப் பெரியோரும் பணித்தமை காண்க.

அதிகாரம் ௭௪.] அங்கவியல்

உரை

ஆதலால், அவை யஞ்சுதலை அடியோடு

விலக்குதல் அவசியம்; ஆனால், அனைவருக்கும் இத்தகைய அரிய தன்மை அமைவது அரிது. அரசர்கள் இவ்வரிய தன்மையுடையாரையே அமைச்சராக்கக் கொள்ளுகிறார்கள். ஆகவே, நாமெல்லோரும் அத்தகைய அரிய திறமைகளை அடைந்து, ஆன்றோர் பலரும் ஒப்பும் அரிய வழிகளி லீடுபட்டு, அருட்கடலாகிய நம் ஆண்டவனடிசேர என்றும் பிரார்த் திப்போமாக.

அங்கவியலில் அமைச்சியல் முற்றிற்று.

---

## 65-ஆம் அதிகாரம்
## நாடு

---

அரசரது ஆட்சிக்குட்பட்ட அரண்

முதலிய அங்கங்கட்கு அவசியமான தேசத்தின் இயல்பு கூறுதலே, 'நாடு' எனப்படும்.

"தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு"

என்றது திருக்குறள்.

அறநெறி வழுவாது அரசியற்று நிற்கும் அரசர்களது ஆட்சிக்குட்பட்ட தேசமானது நீர்வளம் நிலவளம் மலைவளம் குடிவளம் முதலிய நால்வகை வளங்களு முடையதாய், வேளாண்மையால் வளம் பெருக்கும் தாளாளர்களையும், நற்றவஞ் செய்யும் நல்லோர்களையும், வாணிபத்தால் பொருள் பெருக்கும் வணிகர்களையும் தம் மகத்தே அடையப் பெற்றதாக விருக்கவேண்டும். இன்னும், அது விட்டில் தன்னரசு வேற்றரசு யானை மிகுமழை மிகுகாற்று கிள்ளை நஷ்டம் என்னும்

எண்வகைக் குற்றங்களு மில்லாததாயும் தம்மிடம் பொருந்தி யிருக்கும் குடிகளுக்கு வருத்தமின்றிப் பொருளளிக்கும் வனப்புடையதாயு மிருக்க வேண்டுவ தவசியம். இதனை,

“ பெரும்பொருளாற் பெட்டக்க தாகி
யருங்கேட்டா
வாற்ற விளைவது நாடு ”

என்ற உத்தரவேதத்தா லுணரக்கிடக்கிறது.

இத்தகைய அருமை பெருமைகளை யெல்லா மமையப் பெற்ற சீர்மையின் பிற நாடுகள் பொறுத்த பாரமெல்லாம் ஒருங்கே தன்னி லுறுங்



வந்த காலத்தும் அவற்றைத் தாங்கும் தகுதி யுடையதாக விளங்கும். அந்நாடுகளை யாளும் வேந்தர்கட்கும் அவர் தம் குடி

கட்கும் யாதொரு வருத்தமும் வாராதென்பது திண்ணம். இத் தகைய தன்மைகளை யெல்லாம் எளிதிலுணர்த்தவே திருவள்ளுவ நாயனர்,

“ உறுபசியு மோவாப் பிணியுஞ்
செறுபகையுஞ்
சேரா தியல்வது நாடு”
“ பல்குழுவும் பாழ்செய்யு முட்பகையும்
வேந்தலைக்குங்
கொல்குறும்பு மில்லது நாடு”

எனப் பலவாறு வலியுறுத்திக் கூறினர்.

இத்தகைய அருமை பெருமைகளையெல்லா மடையப்பெற்ற தேசத்தின் குடிகளே தெய்வ சிந்தனையும் சீவகாருண்யமு முடைய வர்களா யிருப்பதுடன், உலகபோகங்களெல்லாம் அநித்தியமெனக் கண்டு ஆண்டவன் ஒருவனிட மட்டுமே பற்றுதலுடையவர்களாய், இப்பிறவியிலேயே

மோக்ஷமென்னும் பேரின்ப நிலையைப் பெறுபவர்களாக விருக்கிறார்கள். இவைகளையெல்லாம் யெண்ணிப் பார்க்குங்கால், அந்நாடானது எவ்வகையானும் வளம் குறையா தென்பது எளிதில் விளங்குகிறதல்லவா? இஃதுணர்த்தவே நாட்டிலக்கணம் கூறவந்த நாயனாரும்,

> " கேடறியாக் கெட்ட விடத்தும் வளங்குன்றா
> நாடென்ப நாட்டிற் றலை"

என நவின்றார்போலும்!

ஆனால், ஒருநாடு அத்தகைய தன்மைகளைமட்டு முடையதா யிருந்தால் போதுமோ? மண்மீதூற்றுநீரும், கொண்மூவூற்று நீரும், வான் வறந்துழியும் வளந்தரு மலையும், அதன்கட் போதரும் ஆறும், அழியாத நகர்களுமன்றோ நாட்டிற் கவசியம்? இதனை,

" இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணு நாட்டிற் குறுப்பு"
என்ற தேவர்கூற்றே நன்கு தெரிவிக்கிறது. ஆகவே, அரசர்களது ஆட்சிக்குட்பட்ட எந்நாடுகளும் இத் தகைய நலன்களையெல்லா முடையதாயிருக்க வேண்டுமென்பது அவ

அதிகாரம் - ௬௫.] அங்கவியல்

உ௮ஏ சியம். மேற்சொன்ன உறுப்புக்க ளெல்லா மொருங்கே அமையப் பெற்ற தேசங்களே பசியும் பிணியும் பகையுமின்றி, நலனும் வளனும் சுரந்து விளங்குகின்றன. இந்நலன்கள் எத்தேசங்கட்கும் இன்றியமையாதன வென்பது எவரு முணர்ந்த விஷயமே. இதனை,

" நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு"

எனத் திருவாய் மலர்ந்த தெய்வநூலே தெரிவிக்கின்றதல்லவா?

இன்னும், இந்நாடு தன்கண் வாழ்வார் தமக்கு வேண்டும் பொருள்களை யாண்டு பெறுவாமெனத் தேடிவருந்தா வண்ணம் பலவகைப் பொருள்களையும் மல்கப்பெற்றதாகவு மமைகிறது. அத்தகைய அருமை பெருமைகளை யெல்லாமடையப் பெறாத நாடுகள் நாடுகளாகாவாம். இஃதுணர்ந்தவே பெருநாவலரும்,

" பிணியின்மை செல்வம் விளைவின்ப மேம
மணியென்ப நாட்டிற்கிவ் வைந்து"

எனப் பணித்தமை காண்க. நிற்க.

நாடுகள் இத்தகைய தன்மைகளை யெல்லா மடையப்பெறினும், அவற்றை யாளும் அரசன் மாட்டுக் குடிகளன்பும்

குடிகள் மாட்டு அரசனருளும் பொருந்த இருத்தல் அவசியம். இன்றேல், அத்தேச மானது எத்தகைய நலன்களை யுடையதா யிருப்பினும் யாதோர் பயனுமின்றி மதியிலா வானமும், பதியிலா மாதும், மக்களில்லா மனையும், கண்ணில்லா முகமும்போலப் பொலிவழிந்து போகு மென்ப துறுதி. இதனைக் குறித்தே செந்நாப்போதாரும்,

"ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு"

எனத் தெரிவித்தார்.

அரசர்கள் இத்தன்மைகளை யெல்லாம் கவனிப்பதோடு பிறர்மீது போர்க்குச் செல்லுங்கால், தமது உரிமைப்பொருள் முதலியவற்றைப் பிறரொருவர் கவராவண்ணம் காப்பாற்றத்தக்க

காவல்களையும் அவ சிய முடையவர்களா யிருக்கவேண்டும். அங்ஙனம்
அறிந்தொழுகுர் உழுஅ
திருக்குறள் தீபாலங்காரம்
[பொதுப்பாகும் தன்மையே யாதொரு
பயமுமின்றி வாழும் அருமையுடையதா யமைந்துளது. இஃதுணர்த்தவே
முதுமொழியும்,

" ஆற்று பவர்க்கு மரண்பொரு ளஞ்சித்தற்

போற்று பவர்க்கும் பொருள் "

என மொழிந்தது.

இவைகளையெல்லா முணரவல்ல எவ்வேந்தர்களும் இவற்றை அசட்டை செய்வரோ ? அன்றியும், குடிகள்

பகைவர் பயமின்றி வாழுமாறு நால்வகை யரண்களையு மடையப் பெற்றதே நாடென் பதையும் அவர்கள் நன்கறிவார்களன்றோ ? அவ்வரண்கள் நீர் நிலம் மலை காடு என்பவைகளாம். இதனை,

> " மணிநீரு மண்ணு மலையு மணிநிழற்
> காடு முடைய தரண் "

என்னும் மேலையோர் வாக்கே மெய்ப்பிக்கிறது.

ஆகையால், அதிக ஆழமுள்ள ஜலக் கோட்டையையாவது, ஐந்து யோஜனை தூரத்திற் கதிகமுள்ளதாயும் அணுவளவு ஜலமும் கிடைக்காததாயு முள்ள நிலக் கோட்டையையாவது, மலைக்கோட் டையையாவது, ஒரு யோஜனை தூரமுள்ள வனக் கோட்டையை யாவது ஏற்படுத்திக்கொண்டு அதற்குட்பட்ட தேசத்தில் அரசன் வாசஞ்செய்ய வேண்டுவ தவசியம். ஆகையாலன்றோ அரணிலக்

கணைம் கூறவந்த அறிவாளிகளும்,

" உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கி
னமைவா ணென்றுரைக்கு நூல் "

என்றறைவா ராயினர் ?

அரணென்பது பகைவர்களது சூழ்ச்சியைப் பங்கப்படுத்துவதா யிருத்தல்வேண்டும். இன்னும்,

" கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி
யகத்தார்
நிலைக்கெளிதா நீர தரண் "

என்ற திருக்குற ளடிகளின் ஆழ்பொருளும் அரிய விஷயங்களை யெல்லா மறிவிக்கும். ஆகவே, எவரும் இத்தகைய அரண்களை யெல்லா மொருங்கே யடைத லவசியமாம். எனினும், நீரின்றி யமையா தில்லாம் - கூடு.]

விதை நல்ல நிலத்திற் படினும் பயிராகுமா? கொழுகொம் பின்றிப் பைங்கொடி படர்ந்து நிலைபெறுமா? அதுபோல, அவ்வரண்களைக் காக்கும் ஆற்றலுடைய மக்களையன்றி அவை மகிமையுறா. ஆகையாலன்றோ குறளாசிரியரும்,

"எல்லாப் பொருளு முடைத்தா
யிடத்துதவு
நல்லா ளுடைய தரண்"

எனக் கூறினர்?

வேந்தர்களும் அத்தன்மைகளையெல்லா மடையப்பெற்று யாவரையும் வெல்லு மியல்பையே விரும்ப வேண்டும். இன்றேல், எத்தகைய காவல்களை யுடையவர்களா யிருப்பினும், இறுதியில் யாது மிலராவ ரென்பதற் கையமில்லை. இவைகருதியே தேவரும்,

"முனைமுகத்து மாற்றலர் சாய

வினைமுகத்து

வீறெய்தி மாண்ட தரண் "

எனத் தெரிவிப்பா ராயினர்.

ஆகையால், அரசர்களெல்லோரும் தம் நாடுகள் மிகவும் வலிமை யமைந்து பகைவர்களுக்கு அச்சத்தை விளைக்கும் ஆற்றலை அடையப் பெற்றிருந்த போதிலும், அவ்வாற்றலமைந்த நாட்டிற்கு ஆருயிர் போன்ற ஓர் வீரனையும் அமைத்தல் வேண்டும். இன்றேல், அச்சிறப்பு விளங்கா திருத்தலோடு அதுவும் இருந்த இடம், தெரியாம லழிந்தே போகுமென்பது உறுதி. இதனை,

" எனைமாட்சித் தாகியக் கண்ணும்

வினைமாட்சி

யில்லார்க ணில்லது அரண் "

என்ற ஆன்றோர் வாக்கே நன்கு அறிவிக்கும்.

ஆகவே, இவைகளை யெல்லா

முணரவல்ல எவ்வேந்தர்களும் அத்தகைய
தன்மைகளை யெல்லா மாராய்ந்
தொழுகுவதுமன்றி, ஆன்றோர்களின்
அபிப்பிராயங்களையே ஆதாரமாகக்
கொண்டு அறநெறி வழுவாது அரசியற்ற
வேண்டும். நாமும் யாதொரு துன்பங் கட்கு
மருகராகாது, இம்மை மறுமையிலும்
எல்லையில்லா யின்பத்தை யனுபவித்து,
இறுதியில் என்று மாறுப் பதவியை யடைய
எல்லாம் வல்ல நம் இறைவனைப்
பிரார்த்திப்போமாக.

---

௬௬

## 66 - ஆம் அதிகாரம்
## பொருள்செயல் வகை

---

பணம் சம்பாதித்தலின் விதமே,

பொருள்செயல் வகை'
எனப்படும்.

"கல்விற் பிறக்குங் கதிர்மணி காதலி
சொல்விற் பிறக்கு
முயர்மதம்—மெல்லென்
றருளிற் பிறக்கு மறநெறி யெல்லாம்
பொருளிற் பிறந்து விடும்"

என்றது நான்மணிக்கடிகை.

இவ்வுலகில் மக்கள் யாக்கையைப் பெற்றோ ரனைவருக்கும் பொருள் இன்றியமையாத தென்பது எவரும் நன்குணர்ந்த விஷயம். 'பொருளில்லார்க் கிவ்வுலகமில்லை' என்ற பெரியோர் வாக்கு இங்குப் பெரிதும் கவனிக்கத் தக்கது. ஒருவன் பொருளில்லாமலே வாழ முடியாது. இவைகருதியே 'பணம் இல்லாதவன் பிணம்' என்று சொல்லப்படுகிறது. 'ஈட்டி யெட்டின

மட்டும் பாயும்' 'பணம் பாதாளமட்டும் பாயும்' என்பதுபோல, ஒருவனுக்குப் பணம் இருந் தால் அவன் எந்தக்காரியத்தையும் எளிதில் முடித்துக்கொள்ளலாம். நல்லிசைப் புலவராகிய நம்மூதாட்டியாரும் தமது திருவாக்கால் 'அஃகமும் காசும் சிக்கெனத் தேடு' என மொழிந்துள்ளார். நிற்க.

ஒருவன் உலகில் பெறக்கூடியன அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு. அறம் செய்வதற்கும் இன்பம் பெறுவதற் கும் பொருளின்றி முடியாதென்பது ஒவ்வொருவரும் உணர்ந்த விஷயம். அஃதன்றி, அறவழியிற் பொருள் சம்பாதித்து அறவழியிற் செலவிட்டு இன்பத்தை யெய்தினுர் வீடுபெறச் சந்தேகமுண்டோ ? பொருளால் கல்வி ஞானம்

முதலியவற்றை மிகவும் எளிதில் பெறலாம். ஆகவே, உலகில் அருமை பெருமைகளை அளிப்பதற் குரியது பொருளையன்றிப் பிறிதில்லை. இவைகருதியே திருவள்ளுவப்பயனும்,

" பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள் "

எனத் திருவாய் மலர்ந்துள்ளது.

அதிகாரம் - கூ.] ஆங்கவியல் உகக

இல்வாழ்வானுக்குப் பொருளின்றேல், அவனுடைய வாழ்வு நல் வாழ்வாகாது. பொருளில்லார் இல்லறமாகிய நல்லறத்தை எவ்வாறு நடத்துவார் ? இவை கருதியன்றோ, பொருளிலக்கணத்தும் தலைவன் தலைவிகளின் பிரிவுகளைக் கூறிய விடத்துப் ' பொருள்வயிற் பிரிவு' என்பது

சொல்லப்பட்டிருக்கிறது? மக்கள் இல்லறம் நடாத்து தற்குப் பொருளின்றியமையாத தொன்ருகலின், நம் தெய்வத் தமிழரசியும், 'திரைகட லோடியுந் திரவியந் தேடு' எனத் திருவாய் மலர்ந்துள்ளார். பொதுவாக நோக்குமிடத்தும், உலகில் எவரையும் உயர்த்துவதும் தாழ்த்துவதும் இப்பொருளே. இஃதுணர்த்தவே முதற்பாவலரும்,

" இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை
யெல்லாருஞ் செய்வர் சிறப்பு"

என மொழிந்தார்.

பொருளுடையான் எத்தகையோ ஞயினும் அவனை உலகம் பெரிதும் பாராட்டுகிறது. பணம் நினைத்ததை முடிக்கத்தக்க நேச னுக்கு நிகராகும்; சகல இன்பங்களையும் தடையறவூட்டும் தாயா ராகும். ஆகவே; இல்வாழ்வோராகிய

எவருக்கும் இப்பொருள் அவசியமன்றோ ? இது கருதியே,

" பொருளென்னும் பொய்யா விளக்க மிருளறுக்கு
மெண்ணிய தேயத்துச் சென்று "

எனச் சிறப்பித்தார் நாயனுர்.

யாவரும் பொருளை ஈட்டல் அவசியம். ஆனல், அதனை அற வழியி னன்றிப் பிறவழியிற் றேடுவது எவர்க்கும் ஏற்காத விஷயம். அறவழியி லீட்டாத பொருள் அழிவையும் அவமானத்தையுமே அளிக்கும். அங்ஙன மீட்டுவோர் இவ்வுலகி லிருப்பதும் இழிவாம். அறிவுடையோர்க ளிதனை அறியாம லிருப்பரோ ? ' தீவினைவிட் டீட்டல் பொருள் ' என்று தெய்வத் தமிழரசியும் திருவாய் மலர்ந் துளாரன்றோ ? இவை கருதியே,

" அறனீனு மின்பமு மீனும் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்"

எனப் பெரியாரும் பணித்தார்.

உக்க திருக்குறள்

தீபாலங்காரம் [பொருட்பால்

ஆகையாலன்றோ, அரசர்கள் அவரவர் நாட்டுப் பொருள் களில் தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல், தான் என்ற ஐவர்கட்காக ஐந்து கூறு விடுத்து ஆறிலொரு கூறு கொள்ளவேண்டு மென்றும், அங்ஙனம் பெறுவதையும் குடிகள் வருந்தாவாறு கொள்ள வேண்டுமென்றும் ஆஞ்ஞாபித்தது ? அவ்வாறு கொண்ட பொரு ளன்றோ அறத்தையும் இன்பத்தையும் அளிக்கும் ? இதனை அறிக் துணராது பிறவழிகளில்

பொருள் சேர்க்கப் பார்ப்பது பெரும் பிச காம். இஃதுணர்த்தவே மாதானுபங்கியார் கூறிய பொதுமறையும்,

" அருளொடு மன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல் "

எனப் புகன்றது.

பிறரைத் துன்புறுத்திச் சம்பாதித்த பொருள், அதனையிழந்து துன்புறுவாரினும் பதின்மடங் கதிகமாகத் துன்புறச் செய்துவிட் டோடி விடும். ஆகையால், யாவரும் அறவழியிலேயே பொருளைத் தேடவேண்டும்; உயிர்களிடத்து அன்பும் அருளும் காட்டவேண் டும்; சற்பாத்திரத்தில் செலவுசெய்து இவ்வுலகில் புகழை நாட்ட வேண்டும். இந்நெறியே எ வர்க்கும் எஞ்சாத

இன்பத்தை யீயும். 'அருளில்லார்க் கவ்வுலக மில்லை' என்ற ஆன்றோர் வாக்கியப்படி அருளின்றி வீடு பெறுதல் முடியாது. அருளும் பொருளின்றிப் பெருகாது. இதனை,

"அருளென்னு மன்பீன் குழவி
பொருளென்னுஞ்
செல்வச் செவிலியா லுண்டு"

என்ற செந்நாப்போதார் வாக்கே நன்கு தெரிவிக்கும்.

மக்கள் பொருளை அறவழியாற் பெற்றாலும், பூர்வ புண்ணிய வசத்தால் பெற்றாலும் அறவழியிற் செலவிடுதல் அவசியம். இவ்வா றொழுகுவோர் எவ்வுலகத்தும் சிறப்புற்று இருமைப் பயனை யும் எளிதிலடைவர். இஃதுணராது நாம் பொருளை யிறுகப் பிடித்து வைத்தாலும், அது இருக்கா

தென்பது எவரு மறிந்ததே. திருவிளையாடற் புராணத்திற் கூறுகின்ற மெய்க்காட்டிட்ட படலமே இதனை மெய்ப்பிக்கும். இவைகருதியே உத்தரவேதமும்,

“ குன்றேறி யானைப்போர் கண்டற்றாற்
றன்கைத்தொன்
றுண்டாகச் செய்வான் வினை ”



“ ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொரு
ளேனை யிரண்டு மொருங்கு ”

என மொழிந்த துணர்க.

ஆகவே, நாமனைவரும் இல்லறம் நடாத்துவதற்கு இன்றி யமையாததாகிய

இப்பொருளை அறவழியறிந் தீட்டி, ஆன்றோர் பலரும் ஒப்பத்தக்க அரிய வழிகளிற் செலவிட்டு, இவ்வுலகிலும் எல்லோராலும் போற்றப்பட்டு, மறுவுலகிலும் என்றும் மாறாத

அத்துவித பதவியை யடைய அருட்கடலாகிய நம் ஆண்டவனை அல்லும் பகலும் பிரார்த்திப்போமாக.

---

## 67 - ஆம் அதிகாரம்
## படைமாட்சி

---

சேனைகளது பெருமையைக் கூறுதலே, 'படைமாட்சி' எனப் படும்.

"உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை வேந்தன்
வெறுக்கையு ளெல்லாந் தலை"

என்றார் குறளாசிரியர்.

படைமாட்சி யில்லாவிடத்து அரசர் காவல் நீடு செல்லாதென்ப துறுதி. ஆகையால், அரசர்கள் அஞ்சாது போர்க்களத்தில் நின்று போர் செய்யும் நாற்படைகளையு மடையவேண்டுவ தவசியம். படை யிற் சேர்வோர் வீரமும் மானமும் ஒருங்கே அமைந்தவராய்ப் போர்க் களத்தில் பூத வுடம்பை நீத்துப் புகழுடம்பைப் பெறுவதே பெரும் பேறெனக் கருதும் பெருமை யுடையோர்களா யிருத்தல்வேண்டும். ஆனால், அத்தகைய தன்மையானது யாவருக்குமே அமைவதரிது. ஆகையாலன்றோ திருக்குறளாசிரியரும்,

" உலைவிடத் தூறஞ்சா வன்கண்
டொலைவிடத்துத்
தொல்படைக் கல்லா லரிது"

எனச் செப்புவா ராயினர்.

அரசர், மூல சைன்யங்களை ஆயிரக்கணக்காக அடையப் பெற்றிருந்த போதிலும், அதி வீரமுள்ளா ஞெருவனையும் அவசியம் ஆராய்ந்து கொள்ளவேண்டும். அனுபவமாகப் பார்க்குமிடத்தும் ஆக்ச

திருக்குறள் தீபாலங்காரம்
[பொருட்பால்

அவ்வீரனொருவனலன்றி அப்படைகளால் யாதொரு வெற்றியுமில்லை ஆதிகாலத்தில் அஷ்டதிக்குப் பாலர்களும் அஞ்ச அரசாட்சி செய்யாநின்ற இராவணேஸ்வரன், தனது மைந்தர் முதலான நெருங்கிய சுற்றத்தார்களெல்லோரையும் அமரிலிழந்து தானே அவ்விராமருடன் போர் செய்யப் போந்தபோது, நாலா பக்கங்களிலுமுள்ள தனது மூலசைன்யங்களை யழைத்துக்கொண்டு சென்றதும், அதி வீரராகிய அவ்விராமர் தனியாகவே போர்செய்து அச்சைன்யங்களை யெல்லா மழித்துத் தன் பகைவனாகிய அவ்விராவணேஸ்வரனைச் சங்கரித்ததுமே தக்கசான்றாக விருக்கிறது. இஃதுணர்த்தவே முப்பாலும்,

“ ஒலித்தக்கா லென்னா முவரி யெலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும் ”

என மொழிந்த துணர்க.

ஆகவே, எவ்வேந்தர்களும்
இத்தகைய தன்மைகளையெல்லா மவசிய
மறிந்தொழுக வேண்டும். இன்றேல்,
அவர்களுடைய
சூழ்ச்சியெல்லாம் மலடியின்
ஆகாயத்திற் பூத்திருக்கும்

மகன் முயற்கொம்பிற் கால் வைத்தேறி
தாமரை மலரின் மணத்தை நுகர்வா
னென்பதை யொக்கும். ஆகையால், படைப்பயிற்சியில் பலகாலும்
பயின்று பல்லாயிரவரைத் தாமொருவராகவே இருந்து சங்கரிக்கும்
தன்மை யுடையோர்களையே அரசர்கள்
அவசிய மடைந்தோர்களாக விருக்கவேண்டும்.
இஃதுணர்த்தவே தமிழ்மறையும்,

"அழிவின் றறைபோகா தாகி வழிவந்த
வன்க ணதுவே படை"

என்றுரைத்தது. அத்தகைய படைகளை
அடையப்பெற்ற அரசர்களே இவ்வவனி
முழுவதுமாளும் ஆற்ற

லுடையவர்களாகப் பிரகாசிக்கிறார்கள். அவர்களுடைய ஆற்றலையும், அமரின் வனப் பையும் அறிவிக்கப் புகின் எவர்க்கும் அதிசயத்தை விளக்கும். இதனை,

" கூற்றுடன்று மேல்வரினுங் கூடி
யெதிர்நிற்கு
மாற்ற லதுவே படை"

என்ற ஆன்றோர் வாக்காலு மறியக் கிடக்கிறது.

ஆற்றலமைந்த படைகளை அடைதலே அருமை யுடைத்தாம்.
அப்படைகளையுடைய அரசர்க
ளிடத்திலேயே வீரமும் மானமும்

அதிகாரம் - ௯.] அங்கவியல்

௨கூ௫

வேறான்றி, வேற்றரசர்களை வெல்லும்

குணமும் வெளிப்படையா
கத் தோன்றுகிறது. இத்தகைய
தன்மைகளை யெல்லா மெளிதி
லுணர்த்தவே சேனையினது
இலக்கணம் கூறவந்த செந்நாப்
போதாரும்,

" தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த
போர்தாங்குந் தன்மை யறிந்து "

எனத் தெரிவித்தார்.

இன்னும், அலங்கரிக்கப்பட்ட தேர்
யானை குதிரை கொடி
குடை பல வாத்தியம் எக்காளம்
முதலியவைகளாலும் படையைச்
சிறப்பிக்கச் செய்யவேண்டுமென்ப
தறிவுறுத்தவே நாயனார்,

" அடற்றகையு மாற்றலு மில்லெனினுந்
தானை
படைத்தகையாற் பாடு பெறும் "

என்று கூறினர்.

இவைகளை யெல்லா முணரவல்லோர் தம் படையை அங்ஙனமே பண்படுத்துவ ரென்பதற் கையமில்லை. ஆயினும், அரசர்கள் இன்னும் அறிந்தொழுக வேண்டிய அவசியமான தன்மை யாதெனின், அத்தகைய படைகள் எத்தகைய துன்பங்கட் கிலக்கான போதிலும் இளைக்காது போர் செய்யுமாறு போற்றுதலேயாம். மாதானுபங்கியாரும்,

"சிறுமையுஞ் செல்லாத் துனியும் வறுமையு
மில்லாயின் வெல்லும் படை"

என்றுணர்த்துவா ராயினர்.

அரசர்கள் மேற்சொன்ன விஷயங்களை யெல்லாம் கவனிப்பதோடு, படைகளைச் சீர்திருத்தம்செய்து சிறப்பிக்கும் சேனாதிபதி களையும்

தேர்ந்துகொள்ள வேண்டும். இன்றேல் அவைகள் எத்தகைய ஆற்றலை அடையப் பெற்றிருப்பினும், யாதொரு பயனுமின்றி அழியுமென்பது உறுதி. இது கருதியே பெருநாவலரும்,

"நிலைமக்கள் சால வுடைத்தெனினுந்

தானை

தலைமக்க ளில்வழி யில்"

எனப் பணித்தனர் போலும்! அத்தகைய அருமை பெருமைகளை யெல்லாம் அறிந்தொழுகும் அரசர்களின் சிறப்பிற்கு அளவின்று. நிற்க.

உக்க திருக்குறள்

தீபாலங்காரம் [போர்த்]

அருமை பெருமை வாய்ந்த வீரர்கள் அரசர்களிடத்து அறிந்தொழுக வேண்டிய அவசியமான தன்மைகளுமுண்டு. அவர்கள் தம் மினும் தாழ்ந்த பலரைத் தம்

பலங்கொண்டு வெல்லுதல் எக்காலத் தும் சிறப்பாகாது. உயர் பலமுள்ளோ னொருவனை எதிர்த்து அவ னிடம் தோற்றுப் போனபோதிலும், அதுவே பெருமையைத் தருவதா யுள்ளது. உலகில் அத்தகைய குணத்தை அடையப்பெற்ற வர்களே அமரில் இளைத்தவர்களிடத்து இரக்கம் கொண்டு அன்பு பாராட்டும் ஆண்மை யுடையோர்களாகவு மமைகிறூர்கள். முன்னே, ஸ்ரீராமர் இராவணனுடன் போர்புரியுங்கால் அப்பகைவன் வலி யற்ற நிலையைக்கண்டு, ' இன்று போய்ப் போர்க்கு நாளை வா ' என்று சொல்லிய தன்மையே இங்கு சான்றும். அன்றியும், அஞ்சா வீரம் பெற்ற அர்ச்சுனன் அரவக் கொடியோனுடைய படைத்

தலைவனும் அங்கதேசாதிபதியுமாகிய கர்னனுடன் போர் செய்யுங்

கால், அக்கர்னன் தன் படைக்கலமிழந்து தனியாய் நிற்கக் கண்டு

இரங்கினனன்றோ ? இஃதுணர்த்தவே தமிழ்மறையும்,

"கான முயலெய்த வம்பினில் யானை
பிழைத்தவே லேந்த லினிது"

"பேராண்மை யென்ப தறுகணொன் றுற்றக்கா
லூராண்மை மற்றத னெஃகு"

எனப் பலவாறு நவின்றது.

ஆகவே, அமர் செய்வோர்கள் அனைவரும் இத்தன்மைகளை யெல்லாம் அநுசரித் தொழுகுவதோடு, எத்தகைய இடுக்கண்கட்கும் இளைக்காது எதிரியோ டெதிர்த்துப் போர்செய்யு மாற்றலு முடையரா யிருக்கவேண்டும். இவைகளை யெல்லாம் எளிதிலுணர்த் தவே நாயனாரும்,

" விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள்
வைக்குந்தன் னாளை யெடுத்து"
எனப் பணித்தார்.

ஆராயுமிடத்தும் அத்தகைய தன்மையாலன்றோ, உலகத்தார் அவ் வீரர்களது உருவமைந்த ஒரு பெருங்கல்லை நட்டு, அக்கல்லில் அவர்கள் செய்த அரும்பெரும் செயல்களையும் அடைந்த வெற்றி களையும் எழுதி, அவர்களுடைய புகழை அழியாமல் நிலை நிறுத்து கிறார்கள்? அவ்வருமை பெருமைகளை யெல்லாம் ஆழ்ந்துணர்ந்த அறிவாளிகள் என்றும் அழிதற்பாலதாகிய பூத வுடம்பைப் போர்க்களத்தில் மாய்த்தேனும், உலக முள்ளளவும் பொன்றாத புகழுடம்பைப் பெற ஆர்வம் கொள்வார்க ளென்பதற்கையமில்லை. இவைகருதியே பொய்யில் புலவர் கூறிய பொருளுரையும்,

"சுழலு மிசைவேண்டி வேண்டா வுயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து"

எனப் புகன்றது போலும்.

ஆகவே, எவரும் போர் கிடைத்தால் தம்முயிரையும் பொருட் படுத்ாது ஆலசியமின்றி அப்போர்க்குச் செல்லவேண்டுவ தவசிய மன்றோ ? அவ்வாறு போர் செய்வோரே அவ்வுலகத்தும் இவ்வுல கத்தும் அடைதற்கரிய புகழை அடைகிறார்கள். இஃதுணர்த்தவே முதற் பாவலரும்,

"இழைத்த திகவாமைச் சாவாரை யாரே
பிழைத்த தொறுக்கிற் பவர்"

என மொழிந்தார். 'மொழிவ தற மொழி' யென்ற மூதாட்டியார் வாக்கிற்கிணங்க, இங்கு அறிவிக்கவேண்டிய அவசியமான விஷயம் யாதெனிற் பிணியா லிறத்தலினும் போரா லிறத்தலையே அவசியம் விரும்பவேண்டு மென்பதாம். அறிவிற்

சிறந்த மகான்கள் கூறிய அரும் பெரும் நூல்களும் "அமரா விறவாது பிணியா விறந்தவரைத் தருப்பைப் புல்லின்மீது கிடத்தி, வாளாற் போழ்ந்து, 'அமர்செய் திறந்தார் புகுஞ் சுவர்க்கத்தில் சேர்கவென' மந்திரக்கிரியை செய்க"

உகஅ



என்றறிவியா நிற்கின்றதும் அங்கை நெல்லிக்கனிபோ லறியக்கிடக் கிறது. இஃதறிவுறுத்தவே ஆசிரியரும்,

" புரந்தார்கண் ணீர்மல்கச் சாகிற்பிற் சாக்கா
டிரந்துகோட் டக்க துடைத்து"

என மொழிந்தனர் போலும்.

இவைகளை யெல்லாம் நன்குணரவல்ல

எப்படைகளும், அவர் களைப் போற்றும் வேந்தர்களும், நாமும் இவ்வவனியில் அநேக காலமிருந்து, அடைதற்கரிய அரும் பெரும் பயன்களையெல்லா மனுபவித்து, அண்ட சராசரங்கட்கெல்லா மிறைவனும், ஆதிமத் யாந்த ரகிதனுமாகிய நம் ஆண்டவன் அடிசேர அல்லும் பகலும் பிரார்த்திப்போமாக.

---

## 68 - ஆம் அதிகாரம்

## நட்பு

---

ஒருவரிடத்தில் மற்றொருவர் நண்ணுவதே, 'நட்பு' எனப்படும்.

" நல்லார் செயுங்கேண்மை நாடோறு நன்றாகும்

அல்லார் செயுங்கேண்மை யாகாதே—நல்லாய்கேள்

காய்முற்றிற் றின்றீங் கனியாம் இளந்தளிர்கான்
போய்முற்றி னென்ளுகிப் போம் ? ”
என்றது நன்னெறி.

இப்பூமண்டலத்தின்கண் மக்கட் பிறவியைப் பெற்ற நம் ஒவ்வொருவருக்கும் ‘பணம் இருக்க வேண்டும் ; அல்லது பத்து ஜன மிருக்க வேண்டு’மென்பது உலகவழக் கன்ளுே? சாதாரணமாக ஒரு வனுக்குப் பணமிருந்தால் எக்காரியத்தையும் சாதித்துக் கொள்ளச் சாதகமாக இருக்கும் ; ஜனமிருந்தால் அவர்கள் சமயத்துக் கேற்ற உதவி புரிவார்கள். இங்குக் கூறியது பந்துக்களாகிய சுற்றத்தாரை யென்று நினைக்கவேண்டாம். ‘உடன் பிறந்தார் சுற்றத்தா ரென் றிருக்க வேண்டாம் உடன் பிறந்தே கொல்லும் வியாதி, ’ என்ற மூதாட்டியார் வாக்கியப்படி, கூடப்

பிறந்த சகோதரர் முதலிய சுற்றத்தார்களெல்லாம் சமயம் நேர்ந்தபோது தலையில் கல்லிடுஞ் சத்துருக்களாகத் தோன்றினும் தோன்றுவார்கள். இப்படிக்கின்றி

அதிகாரம் - கூஅ.] அங்கவியல்

உடுக்கை நேர்ந்தபோது உதவும் உத்தமர்களே உற்ற உறவின் முறையாராவர். 'சிநேகம் படைத்தவன் செல்வம் படைத்தவன்' என்ற பழமொழியும் பாழாகுமா? சிநேகிதர்களிருந்தால் திரவிய மிருந்தது போலன்றோ ? பணமிருந்தால் எவ்விதம் காரியசித்தி செய்து கொள்ள ஏதுவாகுமோ, அவ்வாறே சிநேகிதர்களைக் கொண்டும் காரியசித்தி செய்துகொள்ள முடியும். இஃதுணர்த்தவே செந்நாப் போதாரும்,

“செயற்கரிய யாவுள நட்பி னதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு. ”

எனத் தெரிவித்துள்ளார்.

ஆகலின், மக்கட்கு நட்பு இன்றியமையாதது தோன்றும். ஆனால், பல காலம் ஒருவனால் பற்பல உதவிகளைப் பெற்றிருந்தும் அவற்றை யெல்லாம் அடியோடு மறந்து, அவனிடம் ஒருபொழுது கோபத்துக் குக் காரணமொன்று யாதாயினும் காணப்பட்டதாயின், அதனையே எப்போதும் மனதிற்கொண்டு, சமயம் நேர்ந்துழி தீங்கிழைக்கும் நீர்மையரோடு நட்புச் செய்யலாகாது. ஒருவனால் செய்யப்பட்டு வரும் துன்பங்களுக் கிலக்காகியும், முன்பு ஒரு காலத்து அவனால் செய்யப்பட்டதொரு சிறிய உபகாரத்தையே உள்ளத்திற்கொண்டு பாராட்டும் இயல்பினருடனே நட்புக்

கொள்ளல்வேண்டும். இவர்களன்றோ, தன் சிநேகனுக் கேற்பட்ட சுக துக்கங்களைத் தானும் உண்மையாக அனுபவித்தல், தாக்ஷண்யமும் நேர்மையு முடையரா யிருத்தல், கெட்ட காரியங்களைச் செய்ய வொட்டாமல் தடுத்தல், மித்திரனுக்காகத் தன்னுயிரைத் தத்தம் செய்தல் முதலிய உத்தம குணங்களை யுடையவராக விருக்கிறார்கள்? ஆராயு மிடத்தும் இத்தகைய நட்பே நுனியிலிருந்து சுவைக்கும் கன்னலின் இரசத்திற் கொக்கும். இதனை,

" நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு "

என்ற திருக்குற ளடிகளே நன்கு தெரிவிக்கும்.

ஆகவே, அறிவாளிகளை நட்பாளராகக் கொண்டொழுகுதல் அனைவருக்கும் அவசியமே. இவர்களைத் தான் ஆப்த சிநேகிதர்

நீ௦௦ திருக்குறள்
தியாலங்காரம் [யோஜ்யோக்

கமென்று உலகத்தார் பெரிதும் கொண்டாடுவர். இவர்தம் நட்பே பூர்வபக்ஷத்து மதியின் கிரணங்கள் போல நாளுக்கு நாள் விருத்தி படைந்து நீடித்து நிலைபெற்றிருக்கக் கூடியது. ஆனால், இத்தகைய நட்பு கிடைப்பது எவருக்கும் அருமையாக வுளது. அவ்வாறு கிடைக்கப் பெற்றவரே பாக்கியசாலியும், புண்ணியசாலியு மாவர்.

இவை கருதியே,

" நவிறொறு நூனயம் போலும்

பயிஞெறும்

பண்புடை யாளர் தொடர்பு."

என்ருர் ஆசிரியர். இத்தகைய அறிவாளிக ளிடத்திலேயே நற்குணம், நன்னடக்கை, நல்லொழுக்கம், ஈசுரபக்தி, சாந்தம், இரக்கம் முதலிய அரிய தன்மைகளும் அடங்கி யிருக்கின்றன. இவர்களைக் குறித்தே,

"நல்லாரைக் காண்பதுவு நன்றே நலமிக்க
நல்லார்சொற் கேட்ப துவுநன்றே—
நல்லார்
குணங்க ளுரைப்பதுவு நன்றே யவரோ
டிணங்கி யிருப்பதுவும் நன்று."

என்று கூறப்பட்டது.

மேற்கூறிய குணதிசயங்களையுடைய நல்லவர்களைக் கண்டால் உள்ளம் மகிழ்ச்சியடைகின்ற தல்லவா? அன்றியும், அவர்களுடைய சொற்களைக் கேட்டால்

எல்லாத் துன்பங்களும் உலகின் இருளை யோட்டும் பகலவனைக் கண்ட பனி போல நீங்கிவிடும். அவர் களுடைய நன்னடக்கைகளை எடுத்து மற்றவர்களுக்குப் பெருமை யுடன் சொல்லிக் கொண்டிருப்பதனால், அவர்களுடைய நற்குணங் கள் நம்மிடம் நிலை பெற்று, நம்மையும் அந் நல்வழிக்கே இழுத்துக் கொள்ளுகிறது. இஃதுணர்த்தவே,

" முத்தி தனையளிக்கும் மோனநிலை சேர்க்கும்
பத்தி மிகப்பெருகும் பண்ணிய—சித்தியெலாங்
கூட்டுவிக்கும் சீர்சூழ் குலவயத்தே சன்னெறியி
லூட்டுவிக்கும் நல்லோர்தம் நட்பு."

எனப் பெரியாரும் பணித்தமை காண்க.

கூடுக் ஆகவே, இத்தகைய அரிய நட்பை யடைவதே சிறப்பாம். அத்தகைய நண்பர்களே கால மாறுபாட்டால் ஒருவர் கெடுதியான வழிகளிற் பிரவேசிக்கக் கண்டால், அவருக்கு இடித்துக் கூறி அத் தீய வழியிலிருந்தும் அவரை மீட்டு நல்வழிப்படுத்துபவ ராவர். இஃதுணர்த்தவே தேவர்குறளும்,

"நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு. "

என்று எடுத்துக் காட்டிய துணர்க. நிற்க.

நட்பு புணர்ச்சியா லாகியதும், பழகுதலாலாகியதும், உணர்ச்சி யொத்தலா லாகியதுமென மூன்று வகைப்படும்.

புணர்ச்சியாவது நெருங்கி யிருத்தல்; அஃது ஒரூரார்கள் செய்யும் நட்பு. 'இன்றே போல்க நும் புணர்ச்சி தானே' எனக் கூறுவது இங்கு அறியத் தக்கது. பழகுதலாவது வேறு தேசத்தாரா யிருப்பினும் பலகாற் கண்டுஞ் சொல்லாடியும் மருவுவதாம். உணர்ச்சி யொத்தலாவது இவ் விரண்டுமின்றி அறிவொத் திருத்தலாம். பூர்வம், பாண்டி நாட்டி லுள்ள பிசிர் என்னும் ஊரிலிருந்த பிசிராந்தையாரென்னும் புலவர் தமது நேசனை கோப்பெருஞ் சோழன் யாவற்றையும் துறந்து உயிர் நீத்தமை கேட்டுத் தாமும் உயிர் துறந்தமை ஒவ்வொருவரும் உணர்ந்த விஷயமே. அவ் விருவருக்கும்போல உணர்ச்சி ஒப்பின் அஃதே உடனுயிர் நீங்கு முரிமைத்தாய கேண்மையைப் பயக்கும். ஆகவே, நட்பிற்குப் புணர்ச்சி, பழகுதல், உணர்ச்சியொத்த லென் னுங் காரணங்கள்

மூன்றனுள்ளும் பின்னதே சிறப்புடைத்தென்பது எவருக்கும் தெற்றென விளங்கும். முப்பாலும்,

"புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதா
னட்பாங் கிழமை தரும்."

என மொழிந்தமை காண்க.

இத்தகைய நட்பாளர் எவ்விடத்திருந்தாலும், பாலும் நீரும் கலந்துழி ஒரே தன்மைத்தாய் வெண்மை நிறம் எங்ஙனம் தோன்றுகிறதோ அஃதேபோல, அவர்கள் உடல் வேறுயிருப்பினும் உயிர் ஒன்றாகவே யிருப்பர். ஜலத்தோடு கூடிய பாலை அடுப்பில் வைத்துக் காய்ச்சினால், சற்று நேரத்திற்கெல்லாம் ஜலம் ஆவியாகப் போக, அதுகண்ட பால் தனது நண்பனுள நீர் பிரிந்த பின்பு [illegible] [illegible]

திருக்குறள் தீபாலங்காரம்

[பொருட்பால் கென்ன வேலையென்று

அக்கியிற் பிரவேச மாகிறதன்றோ ? அது போலவே தனது நண்ப னிறந்தால் தன்னுயிரை மாய்த்துக் கொள்ளத் துணிவாரும் உண்டு. இதுவே உண்மையான நட்பென் றுணரப்படும். இஃதுணர்த்தவே,

"முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
தகநக நட்பது நட்பு."

என நான்முகரும் நவின்றார்.

உண்மை நண்பர்களே நம்முடைய குணாதிசயங்களை அறிந்து நம்மீது அன்புவைத்து, நம்மைக் கண்டவிடத்து மனமார மகிழ்ந்து பேசியும், நமக்குற்ற இன்னல்களைத் தமக்கு வந்தது போலப் பாவித்தும் உதவிபுரிய முன்வருவர். இவ்வாறிருக்கச் சிலர் நண்பராலாவதென் னென்று எண்ணுகிறார்கள். ஆபத்துக் காலத் தில் அவ் வாபத்தினின்று நீக்குவதற்கும்,

சமயாசமயங்களிற் புத்தி புகட்டுவதற்கும், நாம் நினைத்த காரியங்களை முடித்துக் கொடுப்பதற் கும், மாற்றானை வெல்லத் துணைநிற்பதற்கும், துக்ககாலத்தில் நமக்குத் தேறுதல் சொல்லுவதற்கும் மித்திரன் அவசியமன்றோ ? இத்தகைய நலன்களை உத்தேசித்தன்றோ,

" அழிவினவை நீக்கி யாறுய்த் தழிவின்கண்
ணல்ல லுழப்பதா நட்பு "

எனப் பொருளுரையும் புகன்றது.

பூர்வம், பெருநற்கிள்ளி என்னும் பேர்படைத்த சோழமன் னன், தன் பகைவனாகிய சேர நாட்டை யாளாநின்ற சேய் என்னும் அரசனுடைய திறமைக்கும் படை வலிக்கு மஞ்சி, ஆற்றலிழந்து அவமானத்திற்குட்பட நேர்ந்தகாலத்து, அவனுடைய நண்பனே அவ் வவமானத்தை யொழித்து அரசையும் காப்பாற்றினன். அஃ தன்றோ நட்பின் வனப்பு ?

இஃதுணர்த்தவே பெரியோரும்,

> "உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
> யிடுக்கண் களைவதா நட்பு"

என வலியுறுத்திக் கூறுவாராயினர்.

ஒருவன் ஒரு நல்ல சிநேகிதனை உடைத்தாயிருந்தால் உலகில் அவன் அடையவேண்டிய பொருள் ஒன்றுமே அரிதாகாது. ஆகவே, ஒருவன் உலகில் சம்பாதித்துக் கொள்வதற்குரிய அரியபொருள்கள்



௫௦௫

பல வற்றுள்ளும் அரியபொருள் அருமை பெருமை வாய்ந்த அறி வுடையோர்கள் சிநேகமேயாம். முன்னே, பஞ்ச பாண்டவர்களுள் ஒருவரான அர்ச்சுனனுக்கு ஸ்ரீ கிருஷ்ணபகவான் பகவத்கீதையைப் பகர்ந்ததும் நாம் பாராட்டத்தக்க விஷயமன்றோ? பக்தவத்ஸல னாகிய பகவான் அவ்வாறு

அறிவுறுத்தாவிடில், அவ்வர்ச்சுனன் அரசர்க்குரிய தர்மத்தையும் விடுத்து அவதூறுக்கும் ஆளாவனன்ரே ? அத்தகைய நண்பனை அடைந்ததனாலேயே அவனும் அரிய பேறு களை எளிதிலடைந்தான். இஃதுணர்த்தவே முப்பாலும்,

" நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி

யொல்லும்வா யூன்று நிலை "

என உரைத்தது.

இத்தகைய நட்பாளர் ஒருவரையொருவர் விட்டு நீங்கித் திரும்ப நட்டாலும் அந்நட்பு மேலானதாகாது. " நெல்லி னுமி சிறிது நீங்கிப் பழமைபோற் புல்லினும் திண்மை நிலைபோம்' ' என்ற மூதாட்டியார் வாக்கு சிந்திக்கத் தக்கது. நட்பில் இவர் நமக்கித் துணை யன்பினர் யாமிவர்க் கித்தன்மையமென்று ஒருவரையொருவர் புனைந்து சொல்லினும்

நட்பானது புல்லிதாய் முடியும். ஆகவே, உட லிரண்டும் உயிரொன்றுமாகத் தெரியும் வண்ணம் நட்டல் ஒழுங்கு. ஆனால், இவ்வாறு சிநேகிப்பதற்கு நண்பர்கள் எப்போதும் அருகி லிருக்க வேண்டுவ தவசியமன்று; வேண்டுவது அவர்கள் மனங்கலந் திருத்தலேயாம். எண்ணுதற்கரிய தூரத்திலுள்ள ஆதித்தனோடு தாமரை மலர்க்குச் சிநேகமும், எப்போதும் அருகிலுள்ள மற்றப் பொருள்களோடு அதற்குச் சிநேகமில்லாமையுந் தக்க உவமானமாம். பொதுவாக நட்பாளர் ஒருவரோ டொருவர் பொருந்துவதை யோசிக்குமிடத்து,

" கற்று மறைக்கயத்தி னல்லன்னஞ் சேர்ந்தாற்போல்

கற்றாரைக் கற்றாரே

காமுறுவர்—கற்பிலா

மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் முதுகாட்டிற்

" காட்டாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு "

என நவின்றது.

நாம் ஒருவருடன் நட்புக் கொள்வதன் முன்னரே அவருடைய குணத்தையும் செய்கைகளையும் செவ்வனே அறியவேண்டும். அவ்வாறின்றித் திடீரென் றொருவருடன் சிநேகம் செய்வோமாயின், அதனால் துன்பத்தையே அடைவோ மென்பது திண்ணம். பூர்வம், மதுரையை அரசாண்ட கூன்பாண்டியன் தன் புய வலிமையினாலே புகழடைந்து, சேரனையும் சோழனையும் வென்று சிறப்புற்று வாழுங்காலத்தும், ஆராயாது கொண்ட சமணர்களுடைய நட்பாலன்றோ சகிக்கொணுத் துயரமடைந்தான்? அந்தோ! இவ்வாறு ஆராயாது கொண்ட நட்பால் அவஸ்தைக்குட்பட்டோர் உலகில் பலராவர்.

இஃதுணர்த்தவே,

" ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரந் தரும்."

என்று உத்தரவேதமும் உரைத்தது.

ஆகவே, அறநூல்களில் விலக்கியவை நீக்கி விதித்தவைகளாகிய, ஈகை, பொறை, ஈசுரபக்தி முதலிய நற்குணங்களையும், தான் பிறந்த குடியைத் தழுவி நிற்கும் ஒழுக்கத்தையு முடையோரையே தெரிந்தெடுத்தல் வேண்டும். அங்ஙனம் ஆராய்ந்து தெளியாது அடையும் நட்புப் பிரிந்தாலும் மனவருத்த முண்டாகு மாதலால், பின்னொரு காலத்தும் பிரியவேண்டாதபடி முன்னரே ஒருவரிடத்துள்ள குணங்களை யூகித்துணர்ந்து சிநேகிக்கவேண்டும். ஆனால், இத்தகைய தன்மைகளை எளிதிலுணர்வ தரிது. இதனைக் குறித்தே,

" இற்பிறப் பெண்ணி யிடைதிரியா ரென்பதோர்
நற்புடை கொண்டமை யல்லது—பொற்கேழ்

புனைவொழுகப் புள்ளிரியும் பூங்குன்ற நாட

மனைமுதியும் பட்டதொன் றன்று"

என ஔவையாரும் கூறினர்.

அதிகாரம்-௯௮.] அங்கவியல்.

௯௦௫

ஆகவே, உயர்குடிப் பிறந்தார்க்கே அத்தகைய உத்தம குணங்களுமையும். பொதுவாகக் கூறு மிடத்துக் குற்ற மற்ற மனிதர் உலகில் இல்லை. ஆதலால், ஒருவரிடத்துள தாகும் சிறிய குற்றங்களைப் பெரிதெனப் பாராட்டுதல் கூடாது. நாம் ஒருவரிடத்துள்ள குற்றங்களையும் குணங்களையும் ஆராய்ந்து, மிகுதியா யுள்ளதெதுவோ அதனுல் அவரைத் தக்காரென்றும், தகாதவரென்றும் அறிந்துகொள்ள

வேண்டும். இஃதுணர்த்தவே நான்முகரும்,

“குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்றா
வினனு மறிந்தியாக்க நட்பு”

என வழுத்திய துணர்க.

ஆனல், அனைவர்க்கும் அவ்வாறு அருமை பெருமை வாய்ந்தோர் நட்பு அமைவதரிது. ஒருவன் இத்தகைய அரிய சிநேகத்தை அடைந்தால், அவன் அடையவேண்டிய பொருள் உலகில் ஒன்றுமே அரிதாகாது. எவன் தன்னைத் தீ நெறியினின்றும் விலக்கி நன்னெறியிற் செலுத்த வல்லவனே, அவனே உற்ற நண்பனவன். ‘இணக்க மறிந்திணங்கு’ என்ற ஆன்றோர் வாக்கும் இங்கு அறியத்தக்கது.

உத்தரவேதமும்,

“குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்

கொடுத்துங் கொளல்வேண்டு நட்பு"
என்று உரைத்தது.

உத்தம நண்பர்கள் ஆன்றோர்க ளொப்பத்தக்க அரிய காரி யங்களை எவருக்கும் எடுத்துக் காட்டி இடித்துக் கூறுவார்கள். அவர்களுடைய நட்பை அடைந்தவர்களே இவ்வுலகிலும் சிறப் புற்று, எல்லாச் செல்வங்களையும் அடையப் பெற்று, அவ்வுலகிலும் அரிய பதவியை அடைபவ ராகிறார்கள்.

"அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளல்"

என்ற திருக்குறளடிகளால் நன்குதெளிக.

அத்தகைய சிநேகிதர்களே எக்காலத்தும் நம்மைவிட்டு நீங்காத இயல்புடையவ ராவர். இவ்வாறிருக்கச்

வேண்டிய காரியங்களை முன்னிட்டு நம்மிடம் சிநேகம் செய்வது முண்டு, அவர்கள் காரியம் முடியும்வரை நம்மை அடிக்கடி நேரிற் புகழ்ந்து பேசியும், ஏவற் பணிவிடைகளை இதமாகச்செய்தும் வருவார்கள். அக் காரியம் முடிந்தவுடன் அவர்தம் சிநேகம் அமர பக்ஷத்துச் சந்திரனைப் போலத் தேய்ந்து மாய்ந்து ஓடிவிடும், சிலர் பொருளையே முன்னிட்டுச் சிநேகம் செய்ய வருவது முண்டு. ஆனால்! அத்தகையோர் உடன் கட்டையேறும் உத்தமர்களைப் போல உறவு கொண்டாடி,

நயவஞ்சகத்தால் நமது பொருள்களைப் பல வழிகளிலும் பறித்துண்டு, கூடவே இருந்து தீயவழிகளிலீடுபடுத்தி விடுவர்; அம்மட்டோ! கைப்பொருளற்ற காலத்து, 'அற்ற குளத்தி லறுநீர்ப் பறவைபோல்' நம்மிடத்துற்ற நட்பையும் ஒழிக்க மார்க்கம் தேடுவர். ஆராய்ந்து பார்க்குமிடத்து உலகில் இத்தகை யோர்களை எண்ணிறந்தோர் எனலாம். ஆகவே, அவ்வற்பநண்பர்களை நாம் கனவிலும் கைக்கொள்ளலாகாது. இதனைக் குறித்தே,

"ஊதிய மென்ப தொருவற்குப் பேதையார்
கேண்மை யொரீஇ விடல்"

எனப் பெரியாரும் பணித்தார்.

நாம் எவரையும் நன்காராய்ந்துணர்ந்தே சிநேகிக்க வேண்டுவ தவசியம். இன்றேல், எத்தகைய பதவியும் கெட்டு

இடருறுவது திண்ணம். இவைகருதியே, 'தெளிவிலார் நட்பிற் பகை நன்று' என்று மேலோரும் மொழிந்துள்ளார். பொருளுரையும்,

"உள்ளற்க வுள்ளஞ் சிறுகுவ கொள்ளற்க
வல்லற்க ணாற்றறுப்பார் நட்பு"

எனப் புகன்றது. இத்தகைய துன்மார்க்கர்களோடு சிநேகிப்பதைப் பார்க்கிலும் ஒரு நாயோடு சிநேகிப்பது நன்று. ஏனெனில், அது பகுத்தறிவில்லாத பாமர ஜந்துவானாலும் நன்றி மறவாது நம்மைப் பாதுகாக்கிறது. இஃதுணர்த்தவே பெருநாவலரும்,

"மருவுக மாசற்றார் கேண்மை
யொன்றீத்து
மொருவுக வொப்பிலார் நட்பு"

என் வழுத்தினா ராயினர். நிற்க.

சந்திரனிடத்துற்ற களங்கமானது அச்சந்திரன் வளரும் போது வளர்வதும், தேயும்போது மறைவதும் பிரத்தியக்ஷம்; குளத்திலுள்ள அல்லிக்கொடி முதலியன குளத்தில் நீர் நிறையும் போது உயர்ந்து, குறையும்போது குன்றுகின்றன. தாமரை சூரி யோதயமாகும்போது மலர்ந்து, அது மறையும்போது வாடுகின்றது. அதுபோல, தன் நண்பனுக்குத் துன்பம் வந்த காலத்தில் தானும் அத்துன்பத்தை அநுபவித்து, இன்ப காலத்தில் தானும் உடனிருந்து அவ்வின்பத்தை அநுபவிப்பவரெவரோ, அவரே உண்மையான நண்பராவர். அத்தகைய நண்பர் நமக்கு ஒவ்வாத ஒரு காரியத்தைச் செய்கிறார் என்று

வைத்துக்கொள்வோம். அப்போது, யாது காரணம்பற்றி அங்ஙனம் செய்தாரென்று நாம் தீர ஆலோசிப்போ மாயின், அதன் உண்மை புலப்படும். சாதாரணமாக எவரும் தவ றிழைத்தல் இயல்பன்றோ ? அவ்வாறிருக்க, அவர் உரிமையால் செய்த குற்றத்திற்கு நாம் உடன்படாதிருப்பது உலகிற்கு ஒவ்வாத காரியமல்லவா ? இவைகருதியே,

" பழகிய நட்பெவன் செய்யுங் கெழுதகைமை
செய்தாங் கமையாக் கடை "

என ஆன்றோரும் அறிவித்த துணர்க.

நண்பர்கள் செய்த பிழைகட்கு நாம் துன்புறுதல் நன்றாகாது. கண்ணைக் குத்திவிட்டதென்ற காரணத்தால், கையை எவரேனும் வெட்டி யொழிப்பார்களோ ?

அதுபோலவே நண்பர் உரிமை யால் செய்த துன்பங்களுக்கு உவப்பதே சிறப்பாம். ஆகையா லன்றோ, 'ஒருவர் பொறை யிருவர் நட்பு' என ஆன்றோரும் அறியக் கூறுவாராயினர்? இஃதுணர்த்தவே,

" பேதைமை யொன் றோ பெருங்கிழமை யென்றுணர்க
நோதக்க நட்டார் செயின் "

எனச் செந்நாப்போதாரும் திருவாய் மலர்ந்துள்ளார்.

பூர்வம், சேரநாட்டையாண்ட மஹா வீரனும், கொடை [illegible]யுமான பெருஞ்சேரலிரும்பொறை எனப் பெயர் பெற்ற பெருமான், திருவாலவா யென்னும் திவ்ய க்ஷேத்திரமாகிய மதுரை யின்கண் மாட்சிமை பெற்ற புலவராகிய நக்கீரர் தமது வீரமுரசம் வைக்கும் பெரும் ஆசனமாயுள்ள முரசுக் கட்டிலில்

யுணர்ந்தும், அவருக்கு உபசாரம் செய்ததே இங்கு உதாரணமாகக் கூறலாம். அஃதன்றோ நட்பின் வனப்பு? ஆகையாலன்றோ நந்தமிழ் மறையும்,

"கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை
விடாஅர் விழையு முலகு"

"விழையார் விழையப் படுப பழையார்கட்
பண்பிற் றலைப்பிரியா தார்"

எனப் பலவாறு வலியுறுத்திக் கூறியது.

ஆகவே, எவரும் அத்தகைய தன்மையை அறிந்தொழுகுதல் அத்தியாவசியமானது. பெரும்பாலும் இத்தகைய அரிய தன்மை பட்ச

பாதமின்றி நடு நிலைமையாக நின்று நோக்கும் கனவான்களிடத்தே காணப்படுகிறது. பூர்வம், குசேலர் வறுமையால் பிடிக்கப்பட்டு மனைவியாரது வேண்டுகோளுக்கிரங்கித் துவாரகை சென்று, ஆண்டு வாயிற்காவலர் மூலமாக ஸ்ரீகிருஷ்ண பகவானுக்குத் தம் வரவைத் தெரிவித்தபோது, அம் மாயோன் அவருடன் இளமையிற்கொண்ட நட்பால், 'தாயது வரவைக் கேட்ட தனியிளங் குழவிபோன்று, நேயமிக் குடையோனாகி நெஞ்சினுளுவகை பூப்பப், போய் அழைத்திடுமி னின்னே போயழைத்திடுமி னின்னே' எனப் புகன்றுகொண்டே விரைந்து வந்தனரன்றோ! ஆகவே, நட்பின் சுவையை நம்மா லியம்ப வியலுமோ! ஆகையா லன்றோ நாலடியாரும்,

"நுண்ணுணர்வி னாரொடு கூடி நுகர்வுடைமை
விண்ணுலகே யொக்கும் விழைவிற்று—நுண்ணூ

லுணர்வில ராகிய ஆதிய மில்லார்ப்
புணர்த னிரயத்து ளொன்று"

எனக் கூறுகின்றது. ஆகவே, அறிவாளிகளின் நட்பு அளவிலடங்காதது.

இனி, அறிவிலிகளின் நட்பைப்பற்றிச் சிறிது ஆராய்வாம். அவர்களுடைய நட்பையே தீ நட்பெனத் திருவள்ளுவரும் தெரிவித்துள்ளார். அத்தகையாரைப் பொருந்துவது புத்தியீன மன்றோ? பயனை நோக்கிச் சிநேகஞ் செய்வாருடன் சிநேகிப்பது நமக்குத் தீமையைப் பயப்பதாகும். அவர்கள் கள்ளரைப் போலவும்,



வேசியரைப் போலவும் நம்மிடத்துள்ள பொருள்களை யெல்லாம் கொள்ளை கொண்டு, நம்மையும் விட்டொழிக்கும் தன்மையுள்ளவ ராவர். ஆகவே, அவர் நட்பை அவசியம்

ஒழிக்கவேண்டும். இவை கருதியே செகாப்போதாரும்,

" பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை

பெருகலிற் குன்ற லினிது"

எனச் செப்புவா ராயினர்.

தீக்குண மமைந்தவர்களுக்கு அறிவுடையோர் நல்ல ஞானங் களை வற்புறுத்திக் கூறினும், அவர்கள் நல்வழிக்குத் திரும்ப மாட்டார்கள். தங்கள் இயற்கைப்படியே தீக்குணங்களி லீடுபடுபட்டு என்றும் மீளாத நரகத்திற் காளாவார்கள். அவர்களை நல்வழிக்குத் திருப்புதல் ஒருவராலு மியலாது. அன்றியும், அவர்கட்கு அறிவு புகட்டச் சென்றவர்களுடைய அறிவும் கெடும். ஆகவே, அத்தகைய அறிவிலிகளுடைய கூட்டுறவை அடையாதிருத்தல் நன்று. இஃ துணர்த்தவே முதற்பாவலர் கூறிய

முதுமொழியும்,

" செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை

யெய்தலி னெய்தாமை நன்று"

என மொழிந்தது போலும்.

அறிவுடையார் தீயோரது நேசத்தைக் கொள்வதைவிட அறிவுடையார் பகையைக் கொள்வதே இனிதெனக் கருதுகிறார்கள். பூர்வம், இலங்கேஸ்வரனாகிய இராவணன் உலக மாதாவாகிய சீதா பிராட்டியாரைச் சிறை எடுக்கக்கருதி மாரீசனென்னும் அரக்கனிடம் மர்மத்தை உரைத்தபோது, அவ்வுத்தமன் அப்பாவியின் நேசத் தைப் பார்க்கிலும் பரம கருணா நிதியாகிய பகவானுடைய பகையே மேலென்று பகர்ந்து சென்றதே தக்க சான்றாகக் கூறலாம். அன்றி யும், உலகில் அத்தகையாருடைய சிநேகத்தினாலேயே மக்கள் சீர்மை யிழந்து , தீயகுணங்களுக் குட்பட்டுத்

இயங்குகிறார்கள். ஆகையால், அவர்களுடைய சிநேகத்தை அவாறியச் சொல்லாது தளரவிடுதலே அறிவுடையோர்கட் கழகாகும். தெய்வநூலும்,

" ஒல்லுங் கரும முடற்று பவர்கேண்மை
சொல்லாடார் சோர விடல் "

எனத் தெரிவித்தது. இன்னும், தீயோர் தம்மை நட்டாரையும் நல் நீக்கி

திருக்குறள் தீபாலங்காரம்

[போர்நட்போர்]

வழியிற் செல்லவிடார். அந்தோ ! அவர்கள் கபடமாக நேசித் துக் காரியத்தை முடிப்பர். ஆகவே, அத்தகையோர் நட்பிற்கு நாம்அஞ்சுதல் அவசியமாம். இதனை,

" முகத்தி னினிய நகாஅ வகத்தின்னா

வஞ்சரை யஞ்சப் படும்"

என்ற ஆன்றோர் வாக்கே அறிவிக்கிற தல்லவா ?

ஆகையால், அக்கொடியார் தாமாகவே நம்மிடத்து நட்புரிமை பாராட்டினும் நாம் உண்மையென் றுணருதல் கூடாது. இவ்வுலகின் கண் இஃதுணராது இடருற் றழிந்தோர் எண்ணிறந்தவராவர். ஆத லால், அக்கொடியோரிடத்து யாதாலுமோர் காரணத்தால் கலக்க நேரிட்டாலும், அன்புடன் நேசிப்பதுபோல அவர்களிடத்துக் காட்டி அகத்தில் பகையையே பாராட்ட வேண்டும். அரசர் களிடத்து இத்தகைய தன்மை அவசியம் இருக்கவேண்டும் ; இன் றேல், எத்தகைய பெருமையையு மிழந்து இடருறுவது திண்ணம். இவைகருதியே,

" மிகச்செய்து தம்மெள்ளு வாரை நகச்செய்து

கட்பினுட் சாப்புல்லற் பாற்று"
என ஆன்றோரும் ஆஞ்ஞாபித்துள்ளார்.

ஆகவே, இவைகளை யெல்லாம் நன்குணரவல்ல மக்களாகிய நாம், உலகம் உவக்கத்தக்க உத்தமர்களையே உறவாகக்கொண்டு, நாம் அநுபவிக்கவேண்டிய இன்ப துன்பங்களுக்கான செல்வமும் வறுமையும் நமது வினைக்குத் தக்கவாறு அறக்கடவுளாகிய நம் ஆண்டவனால் அமைக்கப்பட்ட தென்றெண்ணி, அரிய காரியங்களை அன்புடனியற்றி, இம்மையிற் புகழையும் மறுமையில் வீட்டையு மடைய சர்வலோக சரண்யனை கடவுளைச் சதாகாலமுந் தியானிப்போமாக.

---

## 69-ஆம் அதிகாரம்
## பேதைமை

---

யாதொன்றையும் அறியாமையாகிய
மை' யெனப்படும்.
மூடத்தன்மை; பேதை அதிகாரம் ௬௧.]
அங்கவியல் ௩௬௧

" பேதைமை யென்பதொன் றியாதெனி
னேதங்கொண்
டூதியம் போக விடல் "

என்றார் நாயனார்.

மக்களை அவமே வருந்தச் செய்வது பேதைமையே. ஆகவே, அதனை அற ஒழிப்பது அவசியம். இவ்வாறிருக்கச் சிலர், தமக்கு ஏற்காத விஷயங்களையே இன்பமுடனியற்றி, எவராலும் வெறுக்கப் பட்டு இழிவடைகிறார்கள். ஆகையாலன்றோ தேவர் திருக் குறளும்,

" பேதைமையு ளெல்லாம் பேதைமை

காதன்மை

கையல்ல தன்கட் செயல் "

என்றறியக் காட்டியுள்ளது ? பொதுவாகக் கூறுமிடத்தும் பேதைமை யுடையோர் தன்மை பொறுக்கத்தக்க தன்றும். இதனை,

" காணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்

பேணாமை பேதை தொழில் "

என்ற பெரியார் வாக்கே பெரிது முணர்த்துகிறது.

பேதைமை யுடையார் எத்தகைய அரிய நூல்களைக் கற்றும் யாது பயன் ? அவர்கள், அறிவாளிகள் அரும்பெரும்பாடுபட்டு அறி வித்த விஷயங்களனைத்தையும், மணல் மேட்டில் பெய்த பால்போல வன்றோ பாழாக்குகிறார்கள் ? அந்தோ ! அருட்பெருங் கடலாகிய நம் ஆண்டவன்

அன்பு கூர்ந்து அளித்த அறிவேனும் அவர்கட் கறிவிக்கவில்லையே !
இவைகருதியே மாதாநுபங்கியார் கூறிய பொதுமறையும்,

" ஒதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்

பேதையிற் பேதையா ரில்"

எனப் புகன்றது போலும்!

பேதைகளிடத்திலேயே பொய்யுரையாடல், புறங்கூறல், கொலை புரிதல், செய்ந்நன்றி கோறல், தீயாரோ டிணங்கல், பிறர்மனை நயத் தல், களவாடல், கள்ளுண்ணல், கவருடல் முதலிய தீக்குணங்க ளிருந்து பிரகாசிக்கின்றன. ஆகவே, அத்தகையோர் அரிய காரிய ங்களை ஆராய்ந்தியற்றுவ தெங்ஙனம் ? லையைப் புசிப்பதாகிய புலிக் குஞ் சுதும்

நெறியைக் கூறிக் கொலை செய்தல்
பாவமென்றால், அதனை அது அங்கீகாரம்
செய்யுமோ ? இஃதுணர்த்தவே
திருவள்ளுவரும்,


" ஒருமைச் செயலாற்றும் பேதை
யெழுமையுந்
தான்புக் கழுந்து மளறு "
எனத் தெரிவிப்பா ராயினர்.
தவளைகள் பெரிய நீர் நிலையிற் பல
காலம் வாழ்ந்தாலும்
தமது உடம்பின் மேலுள்ள மாசைக்
கழுவிக்கொள்ள மாட்டாமை
போல, பேதையர் பெரிய நூல்களைப்
பலகாலம் பயின்றாலும் தமது
அறியாமைக் குற்றத்தை
அகற்றிக்கொள்ள வல்லவ ரல்லர். முற்

காலத்தில் தசாதன் தன் மூத்த மகனாகிய இராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்யத் தீர்மானித்து நகரத்தை அலங்கரிக்குமாறு தம் சிப்பந்திகளுக்குக் கட்டளையிட்டபோது, அதனை யுணர்ந்த மந்தரை யென்பாள் அவ்விராமர்மீது தான் வைத்திருந்த வன்சினத்தால் அத் தசாதனது இளைய மனைவியாகிய கைகேசியின்பாற் சென்று கலகஞ் செய்தாள். கைகேசியும் அறிவீனத்தினால் மனம் புழுங்கினவளாய் மன்னர் மன்னனாகிய தசாதன் தனக் களித்த இரண்டு வரத்தில் ஒன்றால் பரதன் நாடாளவும், மற்றொன்றால் ராமன் பதினான்கு வருடம் காடாளவுங் கேட்டாள். அவ்விராமர் கானகஞ் சென்று ரெனினும் கைகேசியின் கருத்து நிறைவேறிற்றோ? அரசர் பெருமானாகிய தன் நாயகரையு மிழந்து அமங்கலையாயினா ளன்றோ ? ஆகையினால்

உத்தரவேதமும்,

"பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்
பேதை வினைமேற் கொளின்"

என்றுரைத்தது.

ஆராயுமிடத்தும் அவர்கள் 'உண்டதே யுறுதி கண்டதே காட்சி' என்று காலங் கழிப்பரே யன்றிக் கண்ணியமடையக் கருதுபவ ரல்லர். அவர்கள் எத்தகைய செல்வத்தைப் பெற்றிருந்தும் என்ன பயன்? செல்வத்தின் தன்மையையும், அதனுலடையும் சிறப்பையும் செவ்வனே யுணர முடியாதன்றோ! இதனை,

"ஏதிலா ரா ரத் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வ முற்றக் கடை"

என்ற பெரியார் வாக்கே நன்கறிவிக்கிறது.

கள்ள மனமுடையோன் கல்வி கற்பின் கண்டோர் வியப்புறு மாறு

திருடவும், கண்டுபிடிக்கப்படின் பலவித உபாயங்களால் ய்ாவ

ஞ்சிகோம் • ங்க.] அங்கவியல்

ரு கரி ஸையும் எமாற்றித் தப்பித்துக் கொள்ளவுமே அக்கல்வியை உப யோகிப்பானன்றி, தான் அடங்கி நடந்து அழியாப் புகழை அடைய எண்ணுவாளு? ஒருபோதுமில்லை. அவ்வாறே அறிவில்லான் செல் வத்தைப் பெறின், அதனை அனுபவிக்கும் வகை யறியாது அவமே யிழப்பதுயன்றி, அக்கிரமத்திற் செலவிட்டு அழியா நரகத்திற்கே ஆளாவன். இது பேதைமையினும் பேதைமை யென்பது பெரி தும் விளங்கும். இவைகருதியே பெருநாவலர் கூறிய பொருளுரையும்,

" மைய லொருவன் களித்தற்றாற் பேதைதன்

கையோன் றுடைமை பெறின்"
எனப் புகன்றது.

பேதைகள் எப்போதும் தீமை தருவனவற்றைக் கைக் கொண்டு, நன்மை தருவனவற்றைக் கைவிடுவரென்பது திண்ணம். ஆகையால், அத்தகையோர் சகவாசம் எக்காலத்தும் எவருக்கும் துன்பத்தையே விளைவிக்கும். எனவே, இவைகளை யெல்லா முணர வல்லோராகிய நாமெவரும் அவர்களுடைய சகவாசத்தை அறவே ஒழிக்கவேண்டும். இன்றேல், அவர்களுடைய பேதைமைக் குணம் நமக்கும் படிவதோடு, அவர்களைப் போல நாமும் துன்ப முற வேண்டியவர்களாவோ மென்பது உறுதி. ஆகையாலன்றோ பொய் யில் புலவரும்,

" பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட்
பீழை தருவதொன் றில்"

ன்னப் புகழ்வதுபோ லிகழ்ந்துள்ளார்?

ஆகவே, பெரியோர்கள் எவ்வகையாலும் பேதையர் சகவாசத்தை விரும்பார். எவ்வளவு போதித்தாலும் பேதையர்க்குரிய இயற்கைக் குணம் நீங்காது. தவிரவும் அவர்கள் அடக்கமும் அச்சமு மழிந்தோராதலால், அறிஞர்களா ல் நிறைந்த சபைக்கும் அருகராகார். இதனை,

"கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றாற் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல்"

என்ற நான்மூவர் வாக்கும் நன்குணர்த்துகிறது.

௯௦

பேதைகள் இம்மை மறுமைக்குரிய எக்காரியங்களையுமே இழப்பவராக விருக்கிறார்கள். ஆகவே, அவர்கள் எவ்வகைச் செல்வத்தைப் பெற்று மென்ன பயன் ? பெண் தன்மை அமைந் திராத பேடிக்கு எவ்வளவு ஆபரணங்கள் அணிந்தாலும், இயற்கை மகளிர்போல அழகின் சிறப்பும் இன்பப்பயனு முண் டாகுமோ ? உலகில் அரிய பிறவியைப் பெற்றோராகிய நமக்கு ஆண்டவன் அருளிச்செய்த அரிய பொருள்கள் யாவற்றினும் அறிவென்னும் பொருளே முதன்மையானது. ஆராயுமிடத்தும், அஃதே நம்மனைவருக்கும் அவசியமானதும், அருமை பெருமைகளை அளிக்க வல்லதுமா யுளது. அதனை அபிவிர்த்தி செய்யாத அறி விலிகட்கு ஏனைய பொருள்கள் இருந்தும் என்ன பயன் ? இவை கருதியே

திருக்குற ளாசிரியரும்,

"அறிவின்மை யின்மையு ளின்மை பிறிதின்மை
யின்மையா வையா துலகு"

எனத் தெரிவிப்பா ராயினர்.

சிற்றறிவின னொருவனிடத்து ஒரு பொருளை யடைவோமென் பது, வேரோடு தீப்பட்டு வெந்த விருக்ஷமானது மீண்டும் தளிர்த்து வளர்ந்து கனிதர, அதனை உண்ண நினைப்பதொக்கு மெனலாம். ஆகவே, அவன் மன மகிழ்ந்து ஒருவனுக்கு ஒன்று கொடுக்க நேரின், அதற்குக் காரணம் பெறுகின்றவனது தவமென்றே சொல்லவேண்டும். இஃதுணர்த்தவே வாயுறைவாழ்த்தும்,

"அறிவிலா னெஞ்சுவந் தீதல் பிறிதியாது
மில்லை பெறுவான் றவம்"

என வலியுறுத்திக் காட்டியுள்ளது. இன்னும், முற்காலத்தில், அர வக்

கொடியோனுகிய துரியோதனன் தன் தகப்பனுகிய திருதராஷ் டிரன், பாண்டவருள் முதல்வனுகிய தருமனுக்கு இளவரசுப்பட்டம் கட்டியதை யெண்ணிப் புல்லறிவால் பொறாமைகொண்டு பொருந்தாத காரியங்களையே புரிந்து, புகழையும் பொருளையு மிழந்து, பூவுலகைவிட்டுப்போன தன்மையே இங்கு பொருந்துமன்றோ! இவைகருதியே,

" அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்குஞ் செய்த லரிது"

எனப் பெரியாரும் பணித்தார்.



இத்தகைய தன்மைகளை யெல்லாம் ஆழ்ந்து பார்க்கும் அவகாசம் அவர்கட் கில்லையோ? ' தான் சாக

மருந்துண்பா ரிலர்'

என்ற ஆன்றோர் வாக்கையும் அவலமாக்க லாமோ? ஆனால், தாம் அற்ப அறிவினரென் றறி யாத் தோஷத்தால், அவர்கள் அவ்வாறு காரியங்களைச் செய்து அழிகிறார்கள் போலும். இதனை,

"வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை

யுடையம்யா மென்னுஞ் செருக்கு"

என்ற மேலையோர் வாக்கே மெய்ப்பிக்கிறது. இத்தகைய மயக்கத் திற்குட்பட்டோர், எவ்விஷயத்தையும் எல்லையற உணர்வ தெங்ஙனம்? அவர்கள், உண்மையில் எவ்வளவு அறிவுடையரோ அதனை விட அதிக அறிவுடையோரென்று அன்னியர்கள் தங்களை மதிக்கச் செய்ய முயன்று, இயற்கையாயுள்ள சொற்ப மதிப்பையும் போக்கடித் துக்

கொள்ளுகிறார்கள். அந்தோ ! இது பூனையானது புலியின் தொழிலைச்செய்ய நினைத்தது போலிருக்கிறது. இஃதுணர்த்தவே முதற்பாவலர் கூறிய முதுமொழியும்,

" கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற
வல்லதூஉ மையந் தரும்"

எனப் புகனறுள்ளது.

ஒருவரிடம் வெளிப்படையாகக் காணப்படும் அறிவின் தன் மையா லன்றோ, அவர் கௌரவமோ அகௌரவமோ அடைகிறார் ? ஆகவே, இவைகளை யெல்லாம் எளிதிலுணர வல்லோராகிய எவரும் அத்தகைய தன்மைகளை அறிந்தொழுகா திருப்பரோ ? ஆனால், அற்ப அறிவுக் குட்பட்டோர் மட்டும், அதனை அலட்சியம் செய்பவராகவே இருக்கிறார். ஆகையாலன்றே பொருளுரையும்,

" அற்ற மறைத்தலோ புல்லறிவு தம்வயிற்
குற்ற மறையா வழி "

எனப் புகன்றது ?

பூர்வம், இலங்காபுரிக்கு இறைவனாகிய இராவணன் தனது தங்கையாகிய சூர்ப்பநகை சொல்லியபடி சீதையைத் தன்னூருக்குக் கொண்டுவந்து மனைவியாக்கிக் கொள்ள வேண்டுமென்ற எண்ண முடையோனாய், மாரீசன் என்னும் அரக்கனிடம் தன் கருத்தை அறிவித்தபோது, அவன் மிகவும் வருந்தி, " இலங்கேஸ்வரா ! நீக்



தாங்கள் கருதியிருக்கும் கன்னிகையோ மணம் முடியப் பெற்றவள்; அவளுடைய நாயகனோ சாதாரணமானவன் அல்லன்.

அவன் நமது குலத்தவராகிய தாடகை, சுவாகு முதலியவர்களைக் கொன்றதனு லேயே அவனது வீரம் தங்களுக்குத் தெரிந்திருக்கலாம். அவ னைக் கேவல மனிதனென்று எண்ண வேண்டாம். மஹா பரிசுத்த வீரன். தாங்கள் அவனது பாரியாளை அபகரித்தால், அவன் எப்படி யுங் கோபங்கொண்டு நம்மீது படையெடுத்து வருவான். அதுகாலை நமது செல்வமும நாமும் அழியவேண்டிவரும். அன்றியும், பிறர் மனைவியை விரும்புவோனைத் தரும தேவதையே கொல்லுமல்லவா ? ஆதலால், தாங்கள் கொண்ட எண்ணத்தை விட்டு விடுவதே நலம் " என்றறிவித்தும், இராவணன் அதனை ஏற்றுக்கொள்ளாது, அவமே யழிந்தது யாவரும் அறிந்த விஷயமன்றோ ? இஃதுணர்த்தவே,

" அருமறை சோரு மறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு "

எனத் திருவள்ளுவப்பயனுர் திருவாய்மலர்ந்தது போலும்!

இவற்றைப் பேதைகள் அறிவாலும் வென்றிப் பாரார்; ஆன்றோர் வார்த்தைகளையும் அனுசரியார். ஆதலால் அவர்கட்கு அறிவு கூறுவதால் யாது பயன்? ஒருகால் முயன்றாலும் சிங்கேற்றின் வாயிலகப்பட்ட யானையைக் குறுநரிகள் கூடி விலக்க முயன்றதொக்கும். திருதராஷ்டிரன் குமாரனாகிய துரியோதனன் ஐவருடைய ராச்சிய முதலானவைகளை அபகரித்ததுமன்றி, அவர்களையும் அடிமையாக்கிக் கொண்டு, அவர்கள் மனைவியாகிய பாஞ்சாலியைப் பலர் முன் அழைத்து வரக் கட்டளை யிட்டபோது, விதுரர் முதலானோர் அவனுக்கு அறிவித்த நீதிகளால் நேர்ந்த பயன் யாது? அற்ப அறிவாலன்றோ அவ்வரிய நீதிகளையும் அவலமாக்கி அடுக்காத காரியங்களையும்

அஞ்சாதியற்றத் துணிந்தான்.
இஃதுணர்ந்தவே,

"எவவுஞ் செய்கலான் றான்றேறா
னவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய்"

எனத் தேவரும் பணித்தமை காண்க.

அநுபவமாகப் பார்க்குமிடத்தும், அவர்கள் அருமையான அமிர்தத்தைக் கொடுத்தவர்க்கும் விஷத்தையே தருகின்ற பாம்பு போன்ற கொடிய குணத்தை யுடையோர்களன்றோ? இவை

அதிகாரம் - ௬௦.] அங்கவியல்

ந்கள்

பின்னர் தமக்கறிவுகூற வந்த அறிஞர்களை அவமதித்து அவர் கட்கு அழிவையும் தேட ஆலோசிக்கிறார்கள். இத்தகைய தன்மை

களை யெல்லாம் ஆலோசிக்குங்கால்,
அவர்கள் அரிதாகிய மக்கட்
பிறவியை அடைந்தோரென்று கூறவு
மியலுமோ? ஆகையாலன்றோ நம்
திருவள்ளுவ நாயனாரும்,

"உலகத்தா ருண்டென்ப தில்லென்பான்
வையத்
தலகையா வைக்கப் படும்"

எனத் திருவாய்மலர்ந் தருளினார்?
ஆகவே, நாம் நமக்குள்ள பேதைத்
தன்மையைப் போக்கி அருள் புரியுமாறு,
ஆண்டவனை அல்லும் பகலும்
தியானிப்போமாக.

---

## 70 - ஆம் அதிகாரம்
## இகல்

---

ஒருவரோ டொருவர் பகை

பாராட்டிக்கொள்ளு மியல்பே, ' இகல் ' எனப்படும்.

" இகலென்ப வெல்லா வுயிர்க்கும்
பகலென்னும்
பண்பின்மை பாரிக்கு நோய் "

என்றார் திருவள்ளுவர்.

மக்களாய்ப் பிறந்த ஒவ்வொருவருக்கும் பகவான் பகுத்தறியும் சத்தியை ஏற்கனவே யளித்திருக்கிறார். அப்பகுத்தறிவைக் கொண்டு, எது நன்மையோ அதைச் செய்யவும், எது தீமையோ அதை ஒழிக்கவும் முயல வேண்டியது ஒவ்வொருவருக்கும் உரிய கடமையாம். இவ்வாறிருக்கச் சிலர் அவ்வறிவையும் அவலமாக்கி, மனதிற் கப்பால் ஒன்றுமில்லை என்ற கொள்கை யுடையோராய், உலக போகங்களைத்

தாமடையத்தக்க முடிவான ஆனந்தமென்ற அஞ்ஞானத்தோடு, மனம்போன போக்கெல்லாம் போய், அதற்கடிமையாகி, அதனுல் அலைப்புண்டு, மாலைக் கண்ணனுக்கு எல்லாம் மஞ்சள் நிறமாகத் தோன்றுவதுபோல், யாவற்றையுமே நன்மையான காரியமெனக் கருதி நடத்துகிறார்கள். அந்தோ! எவ்வுலகைப் பிறவியினும் சிறப்புற்ற இம்மக்கட் பிறவிக்கு இஃது

ருசுஅ திருக்குறள்

தீபாலங்காரம் [போதுப்பால் ஏற்குமோ

? இவைகளை யெல்லா முணரவல்ல எவ்வேவர்தரும் அத் தகைய தன்மைகளை அறவே ஒழித்து அனைவரோடும் ஒற்றுமை யாக வாழவேண்டும். இஃதுணர்த்தவே உத்தரவேதமும்,

" பகல்கருதிப் பற்ரு செயினு மிகல்கருதி
யின்ருசெய் யாமை தலை"

என்றுணர்த்தியது.

பகைபாராட்டா திருப்போரே யாவராலும் விரும்பப்பட்டு அழியாப்புகழையும் அடைவர். ஆகவே, நாமும் அவ்வாறு ஒழுகுதல் அத்தியாவசியமல்லவா? இவைகருதியே திருவள்ளுவ நாயனுரும்,

" இகலென்னு மெவ்வநோய் நீக்கிற் றவலில்லாத்
தாவில் விளக்கந் தரும்"

எனத் திருவாய்மலர்ந் துள்ளார்.

பகையை அற ஒழித்தோரே யாவையும் அடைந்தவ ராவர். அல்லாதார் எவரேனும் அவர் மேன்மையையும் மதிப்பையும் இழப்ப ரென்ப துறுதி. முன்னொரு காலத்தில், தேவ கருட கந்தர்வ

சித்த வித்யாதரர் முனிவர் முதலானோர் புடைசூழத் தெய்வலோகத்தை யாண்ட தேவேந்திரன் அகஸ்திய முனிவருடைய ஆஞ்ஞையின் படி தம்மை யடைந்த தமிழ்நாட்டு அரசர்களுள் ஒருவராகிய உக்கிர பாண்டியன் தன்னோடு ஒப்ப அமர்ந்த காரணமாக அவரிடத்துப் பகையை வளர்த்துப் பட்டபாடு பகரவும் வேண்டுமோ ? பகையை ஒழித்தலா லுண்டாகும் இன்பத்தை உணர்த்தவே பெருநாவலரும்,

" இன்பத்து ளின்பம் பயக்கு மிகலென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின் "

எனப் புகன்றார்.

ஆகவே, பகையைக் கெடுப்பதைவிட அரிய காரியம் இவ்வவனி யில் இல்லை. அஃதுணர்ந்தே திரிசங்குவின்

திருக்குமாரனும், தன் னுயிரைப் போல மன்னுயிரையுங் காத்து சத்தியம் தவறாது அர

ஙியற்றிய அயோத்தியாபுரி அரசனுமாகிய அரிச்சந்திரன், அகாரண

மாகத் தன்னைத் துன்புறுத்திய விஸ்வாமித்திர முனிவரிடத்து விரோதம் செய்தலை விடுத்தனர் போலும்.

ஆகையாலன்றோ முதற் பூாவலர் கூறிய முதுமொழியும்,

அதிகாரம் ௫0.] அங்கவியல்

௩௧௧

" இகலெதிர் சாய்த்தொழுக வல்லாரை யாரே

மிகலூக்குந் தன்மை யவர்"

என மொழியலாயிற்று?

கௌரவர் திலகனை துரியோதனன் பாண்டுவின் குமாரர்க ளாகிய பஞ்சவர்களிடத்துத் தீராப் பகைமை

கொண்டு, மன மொழி மெய்யென்னும் திரிகாரணங்களாலும் அவர்கட்குப் பலபல தீங்குகளையே செய்து வந்தான். ஆனால், முடிவில் அவன் எண்ணம் முடிந்ததோ? தன் அருமை பெருமையு மிழந்து, அளவில்லாத சேனை யும் சுற்றமும் படைக்கலமும் பாழாகப் பழிபாவங்களுக்கு முள்ளாகி, அவமான மரணத்திற்கு மன்றோ ஆளாயினன்? இவை கருதியே நான் முகரும்,

"இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை
தவலுங் கெடலு நணித்து"

என்று நவின்றார்.

ஆகவே, பகையை இனிதெனக் கருதுவோர்க்கு எத்தகைய நீதிகளை எடுத்துக்காட்டியும் என்ன பயன்? அந்தோ பாவம்! அருட் கடலாகிய நம் ஆண்டவன் அன்புகூர்ந்து அருளிச்செய்த அறிவென்னும் பொருளே அவர்களிடத்து அலக்கண் படும்போது, அரிய நீதிகளின்

பயனை ஆராய்ந்து பார்ப்ப தெங்ஙனம் ? இதனைச் செந்நாப்போதாரும்,

" மிகன்மேவன் மெய்ப்பொருள் காணு
ரிகன்மேவ
லின்னு வறிவி னவர் "

என்று நன்கு தெரிவித்தார்.

ஆகவே, இஃது எத்தகைய அரீதியான காரியமாக விருக் கிறது. அன்றியும், அதனுலடையுங் கேட்டிற்கு அளவுண்டோ ? இவைகளை யெல்லா முணர வல்லோராகிய நமக்கு ஒருவர் கெடுதி செய்தவிடத்தும், நாம் பகை பாராட்டாதிருக்க வேண்டும். பாராட்டின், எல்லையில்லாத் துன்பங்கட்கு இலக்காவோ மென்பது திண்ணம். பாண்டவருள் முதல்வராகிய தருமர் ஆதி தொடங்கி அந்தம் வரையில் அத் துரியோதனுதியரோடு ஒற்றுமையாக வாழ

வேண்டுமென்ற எண்ணமுடையவராய்ப் பகைமைக் கிடங் கொடா திருந்தமையாலன்றோ, எல்லாச் செல்வங்களையும் அடையப்பெற்று நீடித் திருக்குறள் திபாலங்காரம் [போற்றப்] இறையில்லாப் பதவியையும் பெற்றார்? நாமும் அத்தகைய தன்மை கடைப் அவசியம் அடைய வேண்டும். இன்றேல் அவ்வவ்வரைத் தான் புறத்திய அரவக்கொடியோன் அடைந்த பயனை அடைவோ மென்பதற் கையமில்லை. இதனை,

"இகலிற் கெதிர்சாய்த லாக்க மதனை
மிகலூக்கி னூக்குமாங் கேடு"

என்ற ஆன்றோர் வாக்கானு மறிக. ஆனால், உலக அனுபவத்தை உற்று நோக்கின் பெரும்பாலோர் அத்தகைய தன்மையை அறிந் தொழுகுவதாகத் தோன்றவில்லை. அஃது அவர்கள் குற்றமன்றும். அவர்கள்

முன் செய்த தவத்தின் பயனென்றே செ
ால்லவேண்டும். இஃதுணர்த்தவே
பொதுமறையும்,

" இகல்காணு னுக்கம் வருங்கா லதனை
மிகல்காணுங் கேடு தாற்கு "

எனப் புகன்றது போலும்.

ஆகவே, இவைகளை யெல்லாம் எளிதிலுணரவல்ல எவ்வேந்தரும் நாமும் அத்தகைய மாறுபாட்டை அறஒழித்து, அனைவரோடும் சமாதானமாய் வாழ்ந்து, அரிய காரியங்களையே ஆராய்ந்தியற்றி, ஆன்றோர்களுடைய ஆசிர்வாதங்களையும் பெற அண்டசராசரங்கட் கெல்லாம் அரசனுய் விளங்காநின்ற அருட்பெருஞ் சோதியை அல்லும் பகலும் தியானிப்போமாக.

---

## 71 - ஆம் அதிகாரம்
## பகை மாட்சி

கவனியாம லிருத்தலால், அவர்கள் அடையும் பயன் யாதோ ? இத்தகைய தன்மைகளை யெல்லாம் எளிதிலுணர்த்தவே தமிழ் மறையும்,

" அன்பில னான்ற துணையிலன் றான்றுவ்வா
னென்பரியு மேதிலான் றுப்பு "

என்றுண ர்த்தியது .

ஆகவே , எவரும் அத்தகைய தன்மைகளை யெல்லாம் அறிந் தொழுகுவதுமன்றி, அஞ்சத்தக்க காரியங்களில் அருவருப்புடையவ ராயும், அறிய வேண்டியவைகளை யறிந்து யாவரோடும் ஒற்றுமை புடையவராயும், உலோப குணமென்பது சிறிது மில்லாதவராயு மிருக்க வேண்டுவ தவசியம். அங்ஙனம் அறிந்தொழுகும் அறி வாளிக ளன்றோ யாதும் இலராயினும் செல்வம் முதலிய எல்லா வற்றையும்

உடையவ ரெனப்படுவர் ? இன்றேல், எத்தகைய வலி யுடையாரேனும் இறுதியில் எளியவ ராவரென்ப துறுதி. இதனை,

" அஞ்சு மறியா னமைவில னீகலான்
றஞ்ச மெளியன் பகைக்கு "

என்ற ஆன்றோர் வாக்கே அறிவிக்கிறது.

எவரும் அச்சம் அறியாமை முதலிய குற்றங்களை யெல் லாம் அவசியம் விலக்க வேண்டும். இன்னும், அகங்காரம் கொள்ளுத லும், அதி ரகசியத்தை வெளிப்படுத்தலுமாகிய அற்ப குணங் களையும் அவசியம் அகற்ற வேண்டும். இன்றேல், அவர்கள் தம் பகைவரை வெல்லும் உபாயத்தை யுணர்வ தெங்ஙனம் ? அவர் கள் தம் பகைவருக்குத் தோற்றொழிவா ரென்பது சொல்லவும் வேண்டுமோ ? அந்தோ ! அவர்கள் ஆபத்துக்காலத்தில் உதவி பெறு வதற்கேனும் யாரையாவது நட்பாகக்

கொள்ளுகிறார்களா? அதுவுமில்லை; ஆனால், அஃது அவர்கள் குற்றமன்று. நட்புக்குணமே அவர்களிடம் இல்லாதபோது, நட்பினரை யடைவதெங்ஙனம்? அவர்கள் பல வழிகளாலும் இளைத்துப் பகைவர் முன் பங்கமுறுவது இன்னாமை. இஃதுணர்ந்தவே முதற்பாவலர் கூறிய முதுமொழியும்,



" நீங்கான் வெகுளி நிறையில

னெஞ்ஞான்றும்

யாங்கணும் யார்க்கு மெளிது"

" வழிநோக்கான் வாய்ப்பன செய்யான்

பழிநோக்கான்

பண்பிலன் பற்றார்க் கினிது"

எனப் பலவாறு மொழிந் துள்ளது.

பூர்வம், துரியோதன னென்பான் சொல்லொணுக் கோபத்தையும் துராசையையும் உடையவனு யிருந்தான். அவன் பஞ்சபாண்டவர்களைப் பலவகையாலும் துன்புறுத்தியதுமன்றிப் பாஞ்சாலியையும் தம் பாரியாளாக்கக் கருதினுன். இவ்வறிவீனமான செய்கையாலன்றோ அவன் அளவிறந்த படைகளையும் அவலமாக்கி அவமேமாள விருந்தது? இதனைவிட வேறு திருஷ்டாந்தம் வேண்டுமோ? ஆகையாலன்றோ பொய்யாமொழியாரும்,

"காணுச் சினத்தான் கழிபெருங் காமத்தான்
பேணுமை பேணப் படும்".

எனப் புகன்றூர்?

ஆகவே, வெற்றியை யடைய விரும்புவோராகிய எவரும் அத்தகைய அறிவீனர்களுடைய பகையையே அவசியம்

விரும்பவேண் டும். இவை கருதியே
ஸ்ரீராமரும் தம் தேவியைச் சிறையெடுக்கச்
செய்தேனும் தென்னிலங்கை மன்னனுகிய
இராவணன் பகையைத் தேடிக்கொண்டார்
போலும்! அவ்வா றெழுகுந் தன்மையே
அரசர்கட் கழகாம். அரும் பெரும்
நூல்களின் துணிபு மஃதே. இதனை,

"கொடுத்துங் கொளல்வேண்டு மன்ற
வடுத்திருந்து
மாணுத செய்வான் பகை"

என்ற ஆன்றோர் வாக்கானும் நன்குணர்க.
இவ்வாறுன தன்மைகளை
யெல்லாம் எவ்வேந்தர்களும்
எளிதிலுணர்ந் தொழுகவேண்டும்.
இன்றேல், மேற்கூறிய குற்றங் களுக்
குரியவர்க ளாவதுமன்றி, அரசாட்சி
யென்னும் இயந்திரத்தை நடாத்துதற்கும்
அருக ராகாரென்பது திண்ணம்.
அம்மட்டோ! தம் பகைவர்கட்கும் அவர்கள்

உதவுந் தன்மை யுடையவ ராகினர்.
கள். இதனை;
அதிகாரம் - எஉ.] அங்கவியல்

௩௨௩:

" குணனிலனாய்க் குற்றம் பலவாயின்
மாற்றார்க்
கினனிலனா மேமாப் புடைத்து"
என்ற செந்நாப் போதார் கூற்றே நன்கு
தெரிவிக்கிறது.

இவைகளை யெல்லாம் ஆழ்ந்துணர
வல்லோர்களாகிய எவ்
வேந்தரும் அத்தகைய தன்மைகளை
யெல்லாம் அவசியம் கைக் கொள்வர்
என்பதற் கையமில்லை. அவ்வாறொழுகுந்
தன்மையே அவர்கட்கு அழியாப் புகழையும்
அளிக்க வல்லதாயுளது. ஆகையா லன்றோ
உத்தரவேதமும்,

" கல்லான் வெகுளுஞ் சிறுபொரு ளெஞ்ஞான்று
மொல்லானை யொல்லா தொளி "

என வலியுறுத்தியது?

ஆகவே, அரசர்களும் நாமும் இத்தகைய விஷயங்களை யெல்லாம் எள்ளளவேனு மசட்டை செய்யாது, இம்மை மறுமைக்கான காரியங்களையே இனிதெனக்கொண்டு, எக்காலத்தும் மாறாப் புகழை யடைவதற்குரிய வழிகளிலேயே சென்று, அடைதற் கரிய அருமை பெருமைகளை அடைய அல்லும் பகலும் ஆண்டவனைப் பிரார்த்திப்போமாக.

---

## 72-ஆம் அதிகாரம்
## பகைத்திறந் தெரிதல்

ஒன்னார்களது வலிமையை யுணர்தலே, 'பகைத்திறந் தெரிதல்' எனப்படும்.

"பகையென்னும் பண்பி லதனை யொருவ
னகையேயும் வேண்டற்பாற் றன்று".

என்றது குறள்.

உலகில் விலக்க வேண்டியவற்றை விலக்கிச் செய்யவேண்டியவற்றைச் செய்வதற்குப் பகுத்தறிவே துணைக் காரணமாகையால், அவ்வாதனை விலக்கி, உகந்ததைச் செய்வதே மக்கள் கடமை. ஆனால், அநேகர் அத்தகைய செவ்விய இயற்கையான தன்மை யொன் றுளதென்பதைச் சிறிது முணராது, மனஞ்சென்ற வழிகளி னின்று

திருக்குறள் பொருளலங்காரம்

[பொருள்களை]லெல்லா மீடுபட்டு, மக்கட் பிறவிக்குரிய அரிய நேர்மைகளை யிழப்

பதுமன்றிப் பலரையும் பகைக்கும் பண்புடையவர்களாகவு மிருக்கி ருர்கள். இன்னும், அவர்கள் உலகில் பகையிலாது வாழுஞ் சிறப் புற்றவ ராயினும், சமயம் நேர்ந்துழி அப்பகைவர்களை நட்பினராகக் கொள்ளும் தன்மையையுமன் றே நழுவ விடுகிருர்கள் ? அவர்கள்,

" வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை "

என்ற ஆன்ருேர் வாக்கையும் மதிப்பதில்லை. ஆகவே, அவர்கள் மேலைத்தவப்பயனுல் எத்தகைய பாக்கியங்களைப் பெற்றிருந்தாலு மென்ன பயன் ? ' நடு ஆற்றிற் பஞ்சுபோல ' கவிழ்ந்தழிகிருர்கள். ஆகையால், அவர்கள் தன்மையை யாதென் றியம்புவது ? இவற்றை யெல்லாம் எளிதி லுணர்த்தவே வள்ளுவனரும்,

" ஏழைத் றவரினு மேழை தமியனய்ப்
பல்லார் பகைகொள் பவன் "

என நவின்றார்.

ஆகவே, மேலைத் தவப்பயனால் எல்லாச் செல்வங்களையும் எளிதி லடையப் பெற்ற வேந்தர் முதல் நாமனைவரும் அத்தகைய தன்மைகளை யெல்லாம் அவசியம் கவனிக்கவேண்டும். ஆராயுமிடத் தும் அவ்வாறொழுகுந் தன்மையே அருமையுடைத்தாம். அத் தகைய அறிவுடையார்களே, யாது மிலராயினும் செல்வ முதலிய எல்லாவற்றையும் ஒருங்கே பெற்ற உத்தமர்களாக வாழ்கிறார்கள். ஆகையாலன்றோ,

"பகைகட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
றகைமைக்கட் டங்கிற் றுலகு"

எனப் பெரியாரும் பணித்தார்?

ஆராயுமிடத்து, அத்தகைய தன்மையாளர்கள் தம்மை வருத் தும் இரண்டு பகைகள் ஏற்பட்டகாலத்து,

எற்றபகையாகிய ஒன் றைத் தற்சமயம்
இனிமையாகக் கொள்ளும்
இயல்புடையோர்களாக விருக்கிறார்கள் ;
அரும்பெரும் நூல்களின் துணிபு மஃதே.
ஆசி [illegible], அதனாலும்
அறிந்தொழுகத்தக்க அத்தியாவசியமான
விஷயம் யாதெனின், காலம்
நோக்கிச் செல்லச் சேர்ந்த காலத்தும்,



கூஉ௫ கருத்து வேறாக இருக்கவேண்டு
மென்பதேயாம். இவைகருதியே
திருவள்ளுவ நாயனார் திருவாய் மலர்ந்த
தெய்வ நூலும்,

"தேறினுந் தேறா விடினு மழிவின்கட்
டேறான் பகாஅன் விடல்"

எனத் தெரிவித்தது.

'தோழனோடும் ஏழைமை பேசேல்'

என்ற ஒளவைப் பிராட்டி

யார் வாக்கினை யாவரும் அறிந்தொழுக வேண்டும். அதனை யறி யாது தமக் கெதிரியாகியவர்க ளிடத்துத் தமதெளிமையைக் காட்டு தல் மிக்க அறிவீனம். பெருநாவலரும்,

"கோவற்க கொத்த தறியார்க்கு மேவற்க
மென்மை பகைவ ரகத்து"

எனக் கூறியுள்ளார்.

இவைகளை யெல்லா முணரவல்லோர்கள் எவ்வகையானும் தாழ்வடையார்; சிறியதொரு பகையாயினும், பிறகு அது தமக்கு முன்னே வந்து மூளுமென்பதை அவர்கள் நன்குணர் வார்கள். பகையானது எள்ளில் எட்டிலொரு பங்கினுஞ் சிறியதா யிருப்பினும், அது அற்பமாகிய பகையென்று அலக்ஷியம் செய்யலா காது. முட்களோடு கூடிய வளியமரத்தை முளைக்கு

முன்னே கிள்ளி விட்டால் அது நசித்துப்போகும். அங்ஙனம் செய்யாவிடின், அது தழைத்தோங்கி வளர்ந்து, கோடரிக்கும் அசையாத கொடுமர மாகு மன்றோ ? சிறிய பாம்பினது நஞ்சினால் பெரிய யானைகளும் உயிர் விடுகின்றன வல்லவா ? ஆகையால், எவரும் அற்பமான பகை யென்று ஆலோசியாமல், அதனை வேரறக் களைதற்குரிய முயற்சியை விரைவிற் செய்யவேண்டும். இதனைக் குறித்தே,

" இளைதாக முண்மரங் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து "

எனப் பெரியாரும் பணித்தார்.

ஆகவே, எவரும் அத்தகைய தன்மைகளை யெல்லாம் அவசியம் கைக்கொள்ள வேண்டும். இன்றேல்

எவ்வகையானும் கேடு சம்பவிக்கு மென்பதற் கையமில்லை. அன்றியும், விதைத்தையுடைய பழம்பானது ஒரு மூச்சு விடுதற்கு முன்னே, திரண்டு வர்த பல



எளிகளும் கெடுமல்லவா ? மலைபோலக் குவிந்து கிடக்கின்ற விறகு களும் ஒரு நெருப்புப் பொறியினால் வெந்து நீறுகின்றன. ஆழ்ந்துணருமிடத்தும் இவ்வவனியில் இங்ஙனமாக இழிவடைந் திறந்தோர் எண்ணிறந்தவ ராவர். ஆகையாலன்றோ ஆன்றோரும்,

> "உயிர்ப்ப வுளரல்லர் மன்ற செயிர்ப்பவர்
> செம்மல் சிதைக்கலா தார்"

என்றறிவுறுத்திக் காட்டுவா ராயினர்?

ஆராய்ந்து பார்க்கின் இவ்வவனியின்கண் அநேக வகைகளால் பகை யேற்படுகிறது. ஆகவே, எத்தகைய புத்தி யுடையரேனும் அத்தகைய தன்மைகளை யெல்லாம் அறிந்தொழுகாராயின், அவர்கள் அடையும் பயன் யாதாம்? இவை கருதியே செந்நாப் போதாரும்,

" கிழவிரு மின்னுத வின்னு தமர்நீரு
மின்னுவா மின்னு செயின் "

எனச் செப்பியுள்ளார்.

உள்ளுக் குள்ளாக இருக்கும் சுற்றத்தார் முதலியோரது பகைக்கு ஒவ்வொருவரும் மிகவும் அஞ்சவேண்டும். முன்னே, துரி யோதனனென்பானை, அவனது பங்காளிகளாகிய பண்டவர்கள் மீது பகைகொள்ளச் செய்து, தன்கைப்

பம்பரம் போலாட்டிப் பல விதத் திலும் கெடுத்த பாவியாகிய சகுனியின் கதையே இங்குச்சான்று பகரும். இத்தகைய விஷயங்களை யெல்லாம் எளிதிலுணர்ந்தே முப்பாலும்,

" வாள்போற் பகைவரை யஞ்சற்க வஞ்சுக
கேள்போற் பகைவர் தொடர்பு"

என மொழிந்தது.

ஒரு மனிதனுடைய உடலில் கண்களுக்குப் புலப்படாத அணு விலுஞ் சிறியதொரு விஷக்கிருமி பிரவேசிக்கும்போதும் அது தேகத் திலேயே விருத்தியடையும்போதும் தெரியாமல், கடைசியாக அது ஒரு வியாதியை யுண்டாக்கிச் சில மணி நேரங்களில் கொல்லும் இயல்பை ஒத்திருக்கும்போது தெரியலாம். ஆனால், அப்போது அதற்குத் தப்பமுடியுமா ? ஆகையாலன்றோ

"உட்பகை யஞ்சித்தற் காக்க வுலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும்"

எனப் புகன்றது?

இன்னும், அவ் வுட்பகை சுற்றத்தார்கள் வசப்படாமைக் கேதுவாகிய பல குற்றங்கட்குமன்றோ இலக்காக்குகிறது? துரியோதனன், அறிவானுயர்ந்த மகான்களாகிய ஆசிரியர் பாட்டன் சிற்றப்பன் முதலிய அனைவராலும் வெறுக்கப்பட்டதுமன்றி, அபகீர்த்திக்கும் ஆளாகி அவமே மாண்ட தன்மையே இங்கு அறியத்தக்கதாம். இத்தன்மைகளையெல்லாம் அறிவுறுத்தவே ஆசிரியரும்,

“ உறன்முறையா னுட்பகை தோன்றி
னிறன்முறையா
னேதம் பலவுந் தரும்”
எனத் தெரிவித்தார்.

ஆகவே, இவைகளை யெல்லா
முணருங்கால், உட்பகையானது ஒரு
வருக்குண்டாகுமானால், அவர்
அப்போதே அழிந்தவராவரென்பதற்
கையமில்லை. அநுபவமாகப் பார்க்கு
மிடத்தும், இவ்வவனியில் அங்ஙனம்
அழிந்தவரும் பலரென்க. இதனை,

“ ஒன்றாமை யொன்றியார் கட்படி
னெஞ்ஞான்றும்
பொன்றாமை யொன்ற லரிது”
என்ற ஆன்றோர் கூற்றே அறிவிக்கிறது.
உட்பகையுடையோர் எத் தகைய ஒற்றுமை
யுடையவர்களே யாயினும், உள்ளன்
புடையவ ராகார் என்பதறிவிக்கவே,

" செப்பின் புணர்ச்சிபோற் கூடினுங்
கூடாதே
யுட்பகை யுற்ற குடி "
என்றார் நாயனாரும். ஆகவே, அப்பகைவர்களிடத்து மிகுந்த எச்சரிக்கையாக விருக்கவேண்டும். முன்னே, ஸ்ரீராமர் சிறு பிராயத்தில், ஒரு தடாகக் கரையில், தம் வில் வலிமையை யுணர விளையாட்டாகச் செய்த வேடிக்கையின் காரணமாக அவருக்கு விளைந்த துன்பங்களும் உட்பகையா லுண்டாகுந் தீமையி னளவை அறிவிக்கும். இவை கருதியே முதற் பாவலரும்,

" எட்பக வன்ன சிறுமைத்தே யாயினு
முட்பகை யுள்ள தாங் கேடு "

என மொழிவா ராயினர்.

௲௨அ திருக்குறள்

தீபாலங்காரம் : {பொதுப்பகை

உட்பகையா லுண்டாங் கேடு

அம்மட்டோ ! அது தம்மை யாதரித்து வந்தவர்கட்கு மன்றே, அளவிறந்த துன்பங்களை அளிக்க வல்லதாயுளது. ஆகையாலன்றோ, ஸ்ரீ ராமரைப் பல துன்பங்கட்கும் ஆளாக்கிய பாவியாகிய மந்தரை யென்பாள் இம் மண்ணுலக முள்ளளவும் மங்கா அபகீர்த்தியை அடைய விருக் தது ? அத்தகைய விஷயங்களை யெல்லாம் ஆழ்ந்துணர்ந்தே பெரியாரும்,

" அரம்பொருத பொன்போலத் தேயு முரம்பொரு
 துட்பகை யுற்ற குடி "

எனப் பணிப்பா ராயினர்.

ஆகவே, இவைகளை யெல்லாம் ஐயந்திரிபற ஆராய்ந்துணர வல்லோர்களாகிய அரசர் முதல் நாமனைவரும், அவ்வரிய விஷயங் களை யெல்லாம் அவசியம் கைக்கொண்டு,

அருட்பெருஞ் சோதி யாகிய நம் ஆண்டவன் அன்பு கூர்ந்து அருளிச் செய்த அறி வென்னும் அபாரமான பொருளையும் அபிவிர்த்திசெய்து, அடைதற்கரிய பயன்கள் யாவையும் எளிதிலடையப் பெற்று, எல்லாம் வல்ல அவ்விறைவ னடிசேர என்றும் பிரார்த்திப்போமாக.

---

## 73-ஆம் அதிகாரம்
## பெரியாரைப் பிழையாமை

---

அருந்தவத்தா லுயர்ந்தாரை அவமதித்து நடவாமையே, 'பெரியாரைப் பிழையாமை' எனப்படும்.

> " ஆற்றுவா ராற்ற லிகழாமை போற்றுவார்
> போற்றலு ளெல்லாந் தலை "

என்றார் வள்ளுவதேவர்.

இதுபோன்ற உபதேச மொழிகளை

யெவரும் சிறு வயதிலேயே கேட்டிருக்கலாம். ஆனால், அவைகளின் கருத்தையும், அவற்று லடையும் பயனையும் அறிந்து, அவற்றைக் கடைப்பிடித் தொழுகு வோர் மிகச் சிலரே. நிற்க. "பெரியாரை" யென்று இங்குக் கூறியது எவரை ? வயதில் முதிர்ந்தோரையாவெனில், அது மட்டுமன்று ; அதிகாரம் - ஸ்ட.]

அங்கவியல் ௩௨௯

வயதில் முதிர்ந்தோரா யிருப்பதோடு, அறிவு ஒழுக்கம் ஆற்றல் முதலியவைகளிலும் முதிர்ந்தோர்களா யிருப்பவரையே அவ் வார்த்தை குறிக்கிறது. ஆராயுமிடத்தும், இவ்வவனியில் அத் தகைய அருமை பெருமை வாய்ந்தோராலேயே, யாதொரு காரியமும் எளிதில் முடிவதாயுளது. ஆகவே, அப் பெரியாரை அவமதித் தால், யார்க்கும் அளவில்லாத துன்பங்கள்

சம்பவிக்கும். பூர்வம், சுவர்க்க லோகத்திலே, மந்தார நிழலிலே, சுதர்மை யென் னுந் தேவ சபையிலே, முப்பத்து முக்கோடி தேவர்களும்' சேவிப்ப இரத்தின சிங்காதனத்திலே வீற்றிருந்து செங்கோலோச்சிய தேவேந்திரன், அளவிறந்த துன்பங்கட்காளாகி அவமே வருந்திய தும் பெரியாராகிய பிருகஸ்பதியை மதியாமையாலன்றோ ? அவ் விந்திரனே அங்ஙனம் வருந்தினனென்றால் ஏனையோர் கதியென்ன வாகும்? இஃதுணர்த்தவே,

" பெரியாரைப் பேணா தொழுகிற் பெரியாராற்
பேரா விடும்பை தரும் "

எனப் பெரியாரும் பணித்தார்.

அவ்வாறே அருமை பெருமை வாய்ந்த அரசர்களையும் அவமதிக்கலாகாது. அவமதிப்போர் எவ்வகையானும்

துன்புறுவரென் பது திண்ணம். இஃதுணராது இடுக்கணுற்று அழிந்தோர் எண்ணிறந்தவராவர். ஆகையாலன்றோ திருக்குற ளாசிரியரும்,

" கூற்றத்தைக் கையால் விளித்தற்று லாற்றுவார்க்
காற்றாதா ரின்னா செயல் "

எனத் தெரிவிப்பா ராயினர் ?

ஆதலால், இத்தன்மைகளை யெல்லாம் அறிந்தொழுகினாலன்றி நாமடைவதாகிய பயன் ஒன்றுமில்லை. இது சாமான்ய வசனமன்று. மநுஸ்மிருதி 7-வது அத்தியாயம் 12-வது சுலோகத்தில், " அரச னோடு எவன் புத்தியில்லாமையால் துவேஷித்துக் கொள்கிறானோ அவன் தானாகவே அழிந்துபோகிறான் ; அரசனும் அவன் அழி வைக் குறித்து ஆலோசிக்கிறான் " எனவும், 13-வது சுலோகத்தில், " ஆதலால், அவ்வரசன்

எதை அநுஷ்டிக்கும்படியாகவும், எதை நீக்கும்படியாகவும் ஏற்பாடு செய்கிறானோ அதை ஒவ்வொருவரும்

௯௨



இபாலங்காரம்

தடுக்கக்கூடாது ' ' எனவும், 16-வது சுலோகத்தில், " அவ்வரசன் இருவனைக விருந்தபோதிலும் மனிதனென் று அவமானஞ் செய்யக் கூடாது ; ஏனெனில், மேலான தேவர்களின் கூட்டமே அந்த அரச னுருவாக விருக்கிறதல்லவா ? ' ' எனவும், 9-வது சுலோகத்தில், " அக்கினியானது அஜாக்கிரதையாய்த் தன்னருகு வந்தவனை மாத் திரம் தகிக்கும்; அரசனுடைய கோபாக்கினியோ தனம் தானியம் புத்திர மித்திர களத்திராதிகளையும் அழித்துவிடும் ' '

எனவும் கூறப்பட்டிருக்கிறது. ஆகவே, எவ்வகையாலும் அரசர்களை அவமதித்தலாகாதென்பது எளிதில் விளங்குகிறது. இஃதுணர்ந்தவே செந்நாப்போதாரும்,

" யாண்டுச்சென் றியாண்டு முளராகார்
வெந்துப்பின்
வேந்து செறப்பட் டவர்"

என வலியுறுத்திக் கூறியுள்ளார்.

ஆதலால், அத்தகைய வலியுடைய அரசர்களிடத்தும், அருந் தவத்தா லுயர்ந்த முனிவரிடத்தும் யாதொரு பிழையுமியற்றலாகாது. ஆராயுமிடத்து, நான் எனது என்னும் பற்றுக்களை விட்டுக் கடவுள் அடியையே உயர் பொருளாகக் கொண்டிருக்கும் முனிவரே உலகில் உயர்ந்தவராவர். அவர்களே தாம் நினைத்தவற்றை நினைத்த படியே முடிக்கும் ஆற்றல் அமையப் பெற்றவர். அவர்கள்

பெரு மைக்கு அளவே யில்லை. ஆதலால், அவர்களை எக்காரணங் கொண்டும் அவமதித்த லாகாது. அவமதித்தால் நமக்கு அவர்களிடஞ் சாபம் தவ ருது நம்மிடத்திற் பலிக்கும். சிவபெருமான் திருவருளால் சீகாழி யில் உதித்து, சிவஞானப் பாலுண்டு சிறப்புற்று, சிறுவயதிலேயே சிவபெருமானைப் பாடும் திறம்பெற்ற திருஞானசம்பந்த சுவாமிகளை, போதிமங்கை யென்னும் ஊரில் வசித்த பௌத்தர்கட்குத் தலைவ ராகிய புத்தநந்தி யென்பவர் அவமதித்துப் பேசி, அப்பெருமானர் கோபத்திற் குட்பட்டு அவமே மாண்டது யாவரும் மறக்கத்தக் கதோ ? இவை கருதியே தெய்வ நூலும்,

"எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார்"

எனத் தெரிவித்தது.

ஆகவே, அத்தகைய வலியுடையாரால் எக்காரியம் தான் இயலாது? பொதுவாகக் கூறுமிடத்து அவர்களுக்குக் கோபம் உண்டாகாது என்றே கூறலாம். உண்டாலுலோ அவர்களுடைய கோபத்தை ஒருவராலும் அடக்க முடியாது. ஆகவே அத்தகைய தன்மைகளை அறிந்தொழுகுதல் யாவர்க்கும் அத்தியாவசியமாக வேண்டற்பாலது. இன்றேல், அளவற்ற செல்வங்கள் யாவையும் அடையப்பெற்ற அரசர்களாயினும், அக்கணமே யாவையுமிழந்து அழிவ ரென்பது திண்ணம். இதனை,

"வகைமாண்ட வாழ்க்கையும்
வான்பொருளு மென்னாந்
தகைமாண்ட தக்கார் செறின்"

என்ற ஆன்றோர் வாக்கே மெய்ப்பிக்கும்.

இவைகளை யெல்லா முணர

வல்லோராகிய எவரும் அத் தகைய பெரியாரிடத்து யாதொரு பிழையும் செய்யாதிருக்க வேண் டும். செய்யின், எத்தகைய பதவியையும் செல்வத்தையு மிழப்ப ரென்பதற் கையமில்லை. முற்காலத்திருந்த அரசர்களுள் ஒருவரான நகுட னென்பான், அதிக பிரயாசைப்பட்டு, அரிய யாகங்களைச் செய்து அடைந்த இந்திர பதவியையு மிழந்தனனே. இத்தன்மை களை யுணர்த்தவே முதற்பாவலர் கூறிய முதுமொழியும்,

"ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும்"

என மொழிந்தது.

இவைகளை யெல்லாம் எண்ணிப் பார்க்குங்கால், அவர்களுடைய கோபத்திற் கிலக்கானோர் யாதொரு

வகையாலு மூய்
யார். பயில முனிவருடைய கழுத்தில் பாம்பை அணிந்த காரண
மாகப் பரிக்ஷித்து மகாராஜனைச் சிருங்கி முனிவர் சபித்தபோது,
அப்பயில முனிவர் பல முனிவர்களைக்கொண்டு, பரிக்ஷித்து மகா
ராஜனுக் கறிவித்துப் பட்டபாடு பலித்ததோ! ஆகையாலன்றோ
உத்தரவேதமும்,

" இறந்தமைந்த சார்புடைய ராயினு
மூய்யார்
சிறந்தமைந்த சீரார் செறின் "

என்றுணர்த்தியது?

௯௩௨ திருக்குறள்
தீபாலங்காரம் [பேர்தட்பால்

ஆகவே, இவைகளை யெல்லாம் எளிதிலுணர வல்லோராகிய

லாமெவரும், அருங் குணங்களேயே

அணிகலனுகக் கொண்டு, அறு

வகைக் குற்றங்களாகிய காமம் குரோதம்

மோகம் லோபம் மதம்

மாச்சரியம் என்பவைகளே அறவே அகற்றி,

அறநெறி வழுவாத அர

சர்களிடத்தும் அருந்தவத்தா லுயர்ந்த

முனிவரிடத்தும் அன்பு

கொண்டொழுகி, அரிய காரியங்களேயே

அவாவுடனியற்றி, அருட்

பெருஞ்சோதியாகிய ஆண்டவன் அடிசேர

அல்லும் பகலும் நியா

னிப்போமாக.

---

## 74 - ஆம் அதிகாரம்
## பெண் வழிச் சேறல்

---

மனையாள் சொற்கேட்டு அவ்வழி

நடத்தலே, 'பெண்வழிச் சேறல்' எனப்படும்.

"மனைவிழைவார் மாண்பய னெய்தார் வினைவிழைவார்
வேண்டாப் பொருளு மது"

என்றார் நாயனார்.

இவ்வரிய மொழியை அனுசரிக்காத ஆடவர்கள் அநேகர். அவர்கள் அற்ப சுகத்தையே ஆதாரமாகக் கொண்டு அவலமாகிறார்கள். அவர்கள் பேதைமை யென்னும் பூஷணத்தைப் பூணப் பெண் சொல்லைக் கேட்பின் அங்ஙனம் பெருமை யிழக்க நேருமோ? ஆகவே ஆடவர் தன்னாண்மையை விரும்பாது மனையாளது பெண் தன்மையை விரும்பக் கூடாது. விரும்பின், ஆடவராய்ப் பிறந்தும் தமக்குரிய தொழிலினது பெருமையை யடையாது, வெட்கத்தை யடைந்து முடிவில் நீக்குதற் கருமையான பெருங் கேட்டையுங்

தேடிக்கொள்வர். இஃதுணர்த்தவே திருவள்ளுவ நாயனாரும்,

"பேணாத பெண்விழைவா னாக்கம் பெரியதோர்
நாணாக நாணுத் தரும்"

எனத் திருவாய் மலர்ந்துள்ளார்.

ஆராயுமிடத்தும் இஃது எத்தகைய வெட்கக் கேடான நிலைமை. இச் சீர்கேடான நிலைமையையும் இயல்பென்று கொள்ளலாமோ? அதிகாரம் - ௭௪.]

அங்கவியல் ௩௩௩

பயிர் செழித்து விளையும் பொருட்டு முன்னே நிலத்தை யுழுத எருதேயாயினும், அது அந்தப் பயிரை அழிக்கப் புகுந்தால், மக்கள் அதனைச் சகித்துக்கொண் டிருப்பார்களோ? பயிரழிந்து போமென்று விரைந்து வந்து வலிய கயிற்றால் பிணித்துத் தொழுவத்திற் கட்டிவைப்பார்க ளன்றோ? அவ்வாறே,

அஞ்ஞானிகளால் அதிக சுகமென்று கூறப்பட்ட வின்பத்தை அளிப்பவளாயினும், அறத் திற்கு இடையூறு செய்வாளாயின், அவ்வின்பத்தையும் பொருட் படுத்தாது, அவளுடைய வார்த்தையையும் அகலக் கட்டிவைப்ப தன்றோ ஆடவர்க்கழகு ? இவ்வாறிருக்க, அவ்வற்ப இன்பத்தையே ஆதாரமாகக் கொண்டு அழகலாத காரியங்கட்கு ஆளாவதென்றால், அஃது எவ்வளவு அவமதிப்பான நிலைமையாக விருக்கிறது. இவை கருதியே,

" இல்லாள்கட் டாழ்ந்த வியல்பின்மை யெஞ்ஞான்று
நல்லாரு ணாணுத் தரும்"

என்று செந்நாப்போதாரும் தெரியக் கூறி யுள்ளார்.

ஆகவே, ஆடவர்கள் அத்தகைய தன்மைகளை யெல்லாம் அறிந்

தொழுகினலன்றி, எவ்வுலகத்தும் சிறப்படையாரென் பது திண்ணம். இவைகளை யெல்லாம் உணரவல்ல எவரும் அறிவிலாத மனையாளின் அபிப்பிராயங்களைச் சற்றும் எதிர்பாராது, அரிய காரியங்களில் அவசியம் பிரவேசிக்க வேண்டும். அறிவாளி களின் அபிப்பிரா யமு மஃதே. உற்று நோக்குமிடத்தும் அங்ஙனம் ஒழுகும் ஆடவரே யாதொரு காரியத்தையும் ஆலசியமின்றிமுடித்து, அருமை பெருமைகளை அடைபவராக விருக்கிறார்கள் . ஆகையால், புண்ணியமும் புகழும் பெற விரும்பும் புருஷர்கள், அறிவில்லாத மனைவியின் அபிப்பிராயங்களை அனுசரித்து நடவா திருக்கவேண் டும். நடப்பின், அவர்கள் இல்லறப் பயனுமடையாது இழிவடைவ ரென்பதுறுதி. இஃதுணர்த்தவே உத்தரவேதமும்,

“மனையாளை யஞ்சு மறுமையி லாளன்
வினையாண்மை வீறெய்த லின்று”

என்றுரைத்தது.

அனுபவமாக நாமும் அத்தகையார் தன்மைகளை அறிந்திருக் கின்றோமல்லவா? அவர்கள் பண்புடைய காரிய பின்னடுதன்றுவது ... ...

திருக்குறள் தீபாலங்காரம்

[போந்ட்பால் பகுத்துணருகின்றார்களா? இல்லையே. ஆகையாலன்றோ அவர்கள் மனையாளுக் கடிமையாகி, அரிய தவப்பயனா லடைந்த செல்வத்தையும் அவலமாக்கி, அவசியமான காரியங்களையும் செய்ய ஆற்றலற்றவராக விருக்கின்றார்கள்? ஆஹா! இஃதென்ன அறிவீனம்! பரம பிதாவாகிய பகவான் கொடுத்த பகுத்தறிவைப் பாழாக்குவதுமன்றிப் பாவத்தையு மன்றோ தேடிக்கொள்ளுகின்றார்கள்? இதனை,

" இல்லாளை யஞ்சுவா னஞ்சுமற் றெஞ்ஞான்று
நல்லார்க்கு நல்ல செயல்"

என்ற முதற்பாவலர் கூற்றே முழுது முணர்த்தும்.

அறிவில்லாத மனையாள் சொல்லைக் கேட்போர், ஆடவராய்ப் பிறந்தும் அரிய செல்வத்தை அடைந்தும் யாது பயன்? பிறர் அவர் களைக் கண்டு வருந்துகிறார்களே யன்றி அவர்கள் மட்டும் அதனை அறிவதில்லை. ஆகையாலன்றோ அறிவுடைய மகான்கள் சொல்லையும் அவர்கள் அலட்சியம் செய்கிறார்கள்? இவைகளை யெல்லாம் ஆழ்ந்து பார்க்குங்கால், அவர்கள் மனையாள் அறியாமையால் ஏவுதலை அன்புட னியற்றுகிறார்க ளென்பது அங்கை நெல்லிக்கனி போல் அனைவருக்கும் விளங்குகிறதல்லவா? இஃதோ ஆண்தன்மை?

ஆகையாலன்றோ,

" பெண்ணேவல் செய்தொழுகு மாண்மையி னுணுடைப்
பெண்ணே பெருமை யுடைத்து"

எனப் பெரியாரும் பணித்தார் ?

ஆகவே, ஆடவர்களாகிய எவரும் அத்தகைய இழிவை அவசியம் விலக்கவேண்டும். இன்றேல், இம்மை மறுமையாகிய இரண்டின் பயனையு மிழக்க நேரிடும். இவைகளை யெல்லா முணரவல்ல சதிபதிகளாகிய இருவரும் இதனை யறிந்தொழுகுதலன்றோ மகிமை யுடைத்து ? நிற்க. மாதர்களாலேயே அறம் நிலை பெறுவதாயுளது. ஆதியில் அறம் பிறந்ததே சத்தியிடம். உலக நாயகனாகிய ஈசுவரனுடைய இடப்பாகத்தில் அமர்ந்த பார்வதி தேவியாரே காஞ்சி நகரின்கண்

முப்பத்திரண்டு அறங்களையும் நடத்திக் காட்டி னரென்றும், அதனால் அவ்வம்மையாருக்கு அறம் வளர்த்த



நடரு

தாய் என்று ஒரு நாமமேதேயம் உண்டென்றும் நூல்கள் கூறு கின்றன. ஆகையால், அத்தகைய குணம் மாதர்களிடம் அவசிய மிருக்க வேண்டும். பொதுவாகக் கூறுமிடத்தும் ஆடவர்கள் பொருளை யீட்டினாலும், அறத்தை நிலை நிறுத்துபவர்கள் பெண் மக்களன்றோ? பெண்களிற் பலர் அதனை யுணர்வதில்லை. அத் தகைய மாதர்களின் ஆஞ்ஞைக் குட்பட்டோர் அறத்தையும் புகழை யும் அடைவ தெங்ஙனம்? இதனை,

" நட்டார் குறைமுடியார் நன்றாற்றார்

நன்னுதலாள்

பெட்டாங் கொழுகு பவர்"

என்ற பெரியார் வாக்கே பெரிது முணர்த்துகின்றது.

அறநெறியை புணர்ந்தொழுகாத பெண்களே அறத்தையும் புகழையும் அழிக்கின்றன ரென்பதற் கையமில்லை. உலோபம் என்ற இழிகுணத்தினலே அவர்கள் அங்ஙனம் ஊறு செய்கிருர்கள். தன் கணவன் காசிக்குப்போகும் ஒருவனுக்கு வழிச் செலவுக்குப் பணம் அளிக்கக் கருதினல், 'அவனுக்கு என்ன கேடு, அந்தப் பணத்தை என்னிடம் தாரும்' என்றும், 'ஒரு பரதேசி வந்திருக்கிருர், அவ ருக்கு இன்றைக்கு நமது வீட்டில் அன்னம் அளிக்கக் கருதியிருக் கிறேன்' என்ருல், 'வருகிறவனுக் கெல்லாம் இது மடம் போலிருக் கிறது' என்றும் கூறிவிடுகிருர்கள். அந்தோ ! இஃது

அக்கிரமமான நிலைமையன்றோ ? ஆனால், அப்பெண்கள்பா லடையும் இன்பத்தை அவசியமெனக் கருதும் ஆடவர்கள் அவர்களா லடையும் இழிவை யும் அவமானத்தையும் ஆழ்ந்து பார்ப்பதுண்டோ ? ஆகை யாலன்றோ அவர்கள் அவ் வறத்தையும் பொருட்படுத்தாது அவர் களுடைய ஆஞ்ஞைக் குட்படுகிறார்கள் ? இவைகருதியே,

" அறவினையு மான்ற பொருளும் பிறவினையும்
பெண்ணேவல் செய்வார்க ணில் "

என நான்முகரும் நவின்றார்.

இவைகளையெல்லா முணரவல்ல அறிஞர்கள், அத்தகைய பெண்களின் அபிப்பிராயத்தை அநுசரியார். அவ்வாறொழுகுந் தன்மையே அருமை யுடைத்தாம். வேடத்தளவிலே ஒரு

வரும், உட்கருத் தளவிலே பிறருமா யிருக்கின்ற விவேகிகள் ந். ந்கு திருக்குறள் தீபாலங்காரம் [போருட்பால் அநேக ருளர். விவேகிகள்

மாதருடன் கூடி இன்ப மநுபவிப்பினும், தங்கள் கருத்தை யதில் அழுந்தவிடார். வீதியிலே நீர்க்குட மேந்தி நடமாடும் தாதியின் கருத்தெல்லாம் குடத்தின்மீ திருப்பது இயற்கையன்றோ ? இத்தகைய தன்மைகளை யெல்லா மெளிதி லுணர்ந்தே குறளும்,

" எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்றும்

பெண்சேர்ந்தாம் பேதைமை யில் "

எனக் கூறியுள்ளார்.

ஆதலால், அறத்தையும் புகழையும் அடைய விரும்பும் அரசர் முதல் அனைவரும் மேற்சொன்ன தன்மைகளை

ஆராய்ந்துணர்ந்து, ஆன்றோர்களுடைய அபிப்பிராயங்களையே அன்புடனேற்று, அரிய காரியங்களில் ஈடுபட்டு, அருட் பெருங் கடலாகிய ஆண்டவன் அடிசேர ஆவலுடன் பாடு படுவார்களாக.

---

## 75 - ஆம் அதிகாரம்
## வரைவின் மகளிர்

---

ஒருவர்க்கே வாழ்க்கைப் படாமல், பொருள் கொடுப்போராகிய எவர்க்கும் வாழ்க்கைப்படும் மகளிரே, ' வரைவின் மகளிர் ' எனப் படுவர்.

" அன்பின் விழையார் பொருள்விழையு
மாய்தொடியா
ரின்சொ லிழுக்குத் தரும் "

என்றார் ஆசிரியர்.

இவ்வுலகின்கண் வாழ்வடையக் கூடிய சாதகமான வழி கள் பலவும்

தாழ்வடையக் கூடிய பாதகமான வழிகள் பலவும் இருக்கின்றன. கடவுள் மக்கட்குத் தந்தருளிய சுதந்திரத்தால், அறிவுடையவர்கள் நல்ல முறைகளைக் கைக்கொண்டு வாழ்வு பெற்றோங்கவும், அறிவற்றவர்கள் கெட்ட முறைகளைக் கைக்கொண்டு தாழ்வுபெற்றேங்கவும் காண்கிறோம். மேலும் நன்மையான காரியங்களின்னின்ன வென்றும் தீமையான காரியங்களின்னின்ன வென் றறிவோம் - ஏடு.] அங்கவியல் நடநடள் றும், மனசாட்சி யுள்ளார் ஒவ்வொருவரும் அறிந்தே யிருக்கிறார்கள். ஆயினும், நம்மானிட சிருஷ்டிக்கு ஏற்பட்டிருக்கும் பலவீனத்தினால், மனசாட்சி யுள்ளவர்களுங் கூடச் சன்மார்க்கத்தை விட்டு ஒரோர் வேளைத் துன்மார்க்கத்தில் பிரவேசிக்க நேரிடுகிறது. நேர்ந்தாலும்,

அத் துன்மார்க்கத்தினின்றும் தன்னை அப்புறப்படுத்திக் கொள்ள மனிதன் மனத்திட்ப முடையவனு யிருக்கிறுனென்பது எவரும் மறக்கொணுத விஷயமன்றே? ஆனல், அநேகர் அத்தகைய தன்மை யின்னதென்றே அறியாது அத் துன்மார்க்கத்தையே மேலான இன்பமெனக் கருதி, கானல் நீரை மெய்யான நீர் நிலை யென நம்பிச் செல்பவர் போலத் துன்பத்தையே அநுபவிக்கிருர் கள். அந்தோ ! இஃது எத்தகைய இழிவான நிலைமை. ஆகை யாலன்றே அவர்கள் தமது வஞ்சனையை வெளிக்குக் காட்டாது நல்லவர்போல் நடிக்கும் வேசையரையும் நம்பி மோசம் போகிருர் கள் ? இவை கருதியே,

“ நாவார வேண்டும் விதஞ்சொல்லு
வாருனை நான்பிரிந்தாற்
சாவேனென் றேயிருந் தொக்கவுண்

பார்கள்கை தான்வறண்டாற்
போய்வாரு மென்று நடுத்தலைக்கே
சூட்டும் பூவையருக்
கீவார் தலைவிதி யோவிறை வாகச்சி
யேகம்பனே"

எனப் பட்டினத்தடிகளும் பகர்வாராயினர்.

ஆகவே, இவைகளை யெல்லா முணர்ந்த பின்னராவது மக் கள் வேசையரை அவசியம் வெறுக்க வேண்டுமன்றோ ? அவர் கள் அன்பு என்பது சிறிது மில்லா அற்பர்க ளல்லவா ? ஆகையா லன்றோ தன்னைப் பிடிக்கவரும் பாம்புக்கும் மீனுக்கும் பிடிபடக் கூடு மென்னும் ஆசையைக் காட்டி ஒன்றுக்கும் அகப்படாமல் தப்பித்துக் கொண்டு செல்லும் விலாங்கு மீனைப்போல, வேசையரும் பலர்க் கும் ஆசையைக் காட்டி மயக்கும் பண்புடையவர்களாக விருக்கிறார் கள் ? அவர்களுடைய சொல்லும் செயலும் சூதென்று சொல்ல வும்

வேண்டுமோ ? பூர்வம், பொய்யாமொழிப் புலவர் என்பவர் மதுரையிற் றமிழ்ச் சங்கமொன்று பழையபடியே நிறுவவேண்டு மென்னு மவாமேலீட்டால்; மதுரையையாண்ட பாண்டியனிடஞ் சென்றுலோசித்துத் தக்கது புரிவோமெனக் கருதிக் கால் நடை யாகச் சென்றார். அப்போது அவர், கதிரவன் மறையும் நேரமாகச்

சாட

---

௩௩அ திருக்குறள்

தீபாலங்காரம் [போதும்பால் காளையார் கோவில் என்னும் ஊரை யடைந்து; ஒரு வீட்டின் வாயிற் றிண்ணையி லமர்ந்து அவ்வீட்டுக் காரியான கூத்தாளென்னும் தாசி யைப் பார்த்துப் பசிப்பிணிக்கு ஏதாவது ஆகார மளிக்குமாறு கேட் டார். பிறவிக் குருடியாகிய அத்தாசி அவருடைய பெயர்

முதலிய வற்றை விசாரித்துத் தான் முன்னரே அவரது வரலாறனைத்தை யும், பலர் கூறக் கேட்டிருந்தா ளாதலின், திடீரென்று அவர் பாதத் தில் விழுந்து பலவாறு புகழ்ந்து தனக்குக் கண் தெரியும்படி கருணை புரியுமாறு வேண்டினாள். புலவரும் அவ்வாறே அவளுடைய விழி களை விளங்கச் செய்ததுமன்றி, அவளுடைய அக்காள், ஆத்தாள், ஆத்தாளுக்கு ஆத்தாள் முதலியவர்கட்கும் அருள் புரிந்து சென்று ரென்பது அனைவரும் அறிந்த விஷயமே. அவ்வாறிருந்தும், பின்னர் அப்புலவர் பெருமான் பாண்டி நாட்டினின்றும் திரும்புங்கால், தான் அவர்களிடம் வைத்துப்போன பொன் முடிப்பைப் பெற்றுச்செல் லப் போனபோது, அவர்கள் பார்க்க அவகாச மில்லையென்று பகர்ந் தார்கள். ஆகவே, அவர்கள் தன்மை யாதாகும் ? இஃதுணர்த்தவே செந்

நாப்போதாரும்,

" பயன்றூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்

நயன்றூக்கி நள்ளா விடல்"

எனச் செப்பினுர் போலும்.

அறத்திற் குரியாள் இன்பமும், வேசையர்கள் இன்பமும் அவரவர் மனத்தின் தன்மையால் வேறுபட்டிருக்கும். அறிவுடையார்க் கும் அறிவிலாதார்க்கும் வேற்றுமை யாதெனில், அறிவுடையார் தமக்குப் பிறர் செய்த துன்பத்தைப் பொறுத்தலுமன்றி, அவர்கள் அனுபவிக்கும் துன்பத்தைக் குறித்தும் மனம் வருந்துவர். அறிவி லார் தமது சரீர துன்பத்தைக் குறித்து மனந்தளர்வார். மனமுரு குஞ் செய்கை நல்லார் பொல்லார் என்ற இருவர்க்கு முளதாயினும், நல்லார் ஈஸ்வரனது

அருட்கண் ணேக்கத்தால் உருகுவர் ; பொல் லார் . மார்தாரது மருட்கண்ணேக்கத்தால் உருகுவர். பொன்னும் பித்தளையும் நிறத்தால் ஒத்திருக்குமாயினும் உரைகல் முதலிய பரிசைகளால் வேறுகும். அதுபோலவே வேசையர்களும் அறத்திற்குரிய மாதர்களும் அவயவத்தால் ஒத்திருப்பினும், அவரவர் அதிகாரம் - ௭ரு.]

அங்கவியல் ௩௩௯

செய்கைகளினுலும் குணங்களினுலும்
வேருவார்களன்றே? ஆகவே,
வேசையர்களுடைய இன்பத்தையும்
இன்பமென் றுரைக்கப்படுமோ?
ஆகையாலன்றே ஆன்றேரும்,

"பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க
மிருட்டறையி
லேதில் பிணந்தழீஇ யற்று"

என்றறியக் கூறுவாராயினர் ? ஆராயுமிடத்து, அவர்கள் ஆடவரது பொருளை அபகரிக்க வேண்டி அவர்களிடத்துப் பொய்யன்பு காட்டும் புத்தியுடையவர்கள் ; அம்மட்டோ ! கள்ளவார்த்தை முதலியவற்றால் காளையர் வன் மனதையும் கரைக்கும் கசடர்கள் ; உள்ளன்பென்பது ஒரு சிறிது மில்லாதவர்கள். ஆதலால், அவர்கள் நேசம் எப்போதும் இன்னல்களை விளைவித்து இறுதியில் நீங்காப் பிணியையும் வறுமையையும் உண்டாக்குமென்பது வழுத்தவும் வேண்டுமோ? ஆனால், அநீதிக்குட் பட்டோரும், அக்கிரம வழியில் பொருள் சேர்த்தோருமே அவர்களுடைய இன்பத்திற் கருகராவர். இஃதுணர்த்தவே தேவர் கூறிய திருக்குறளும்,

“ பொருட்பொருளார் புன்னலம் தோயா

ரருட்பொரு

ளாயு மறிவி னவர்"

எனத் தெரிவித்தார்.

அறிஞர்கள் யாது காரணம் பற்றியும் வேசையர் இன்பத்தை விரும்பார். பூர்வம், பாண்டவர்களுள் ஒருவரான பற்குணன் ஆதி முதற் கடவுளும், ' வேண்டுவார் வேண்டுவதே யீவான் கண்டாய் '' என்ற வேதப் பொருளை மெய்ப்பித்தவரும் மெய்ப்பிக்கின்றவரும் மெய்ப்பிப்பவருமாகிய சிவபெருமானை நோக்கி அரிய தவங் கிடந்து, அருமையான பாசுபதாஸ்திரத்தைப் பெற்ற காலத்து, அவருடைய தந்தையாகிய தேவேந்திரன் மகனென்ற வாஞ்சையால் தன் நகருக் கழைத்துச் சென்று பலவாறு சிறப்புக்கள் செய்ததுமன்றி, அன் றிரவு அவர் பள்ளிகொள்ள அழகான அறையொன்று அலங்கரித்துக் கொடுக்க,

அர்ச்சுனனும் அதனுள் பள்ளிகொண்டார். அப்போது அழகிற்சிறந்த ஊர்வசியென்னும் தாசி அவரைத் தனக்கு மணாளனாக்கக் கொள்ளக்கருதி, அவ்வறைக்குட் சென்று தன்னெஞ்



முற்றுவிக்கத் தன்னாலான பாடுபட்டும், அவ்வர்ச்சுனன் அதற்குச் சம்மதித்த துண்டோ ? இல்லை. இவை கருதியே பொய்யா மொழியார் கூறிய பொருளுரையும்,

" பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின்
மாண்ட வறிவி னவர் "

எனப் புகன்றது.

வேசையருடைய பெண்மைக் குணங்கள் அறிவிலாதவரை மயக்குமே யன்றி, அறிவுடையாரை மயக்க வல்லதோ? குறும்பி எழுகின்ற காதை வள்ளையென்றும், புழுக்களாகிய பேன்க ளடர்ந்த தலை மயிரை மேகமென்றும், பீளை யொழுகாநின்ற கண்களைக் குவளை மலர்களென்றும், பல்லாகிய எலும்பை முத்தென்றும், எச்சில் வடிகின்ற வாயின் விளிம்பைப் பவள மென்றும் பலவாறாகப் பிதற்றுகின் றனரே! அந்தோ! இஃதென்ன பாவம்! மாதருடைய கோலாகலங்களை யெல்லாம் ஆராய்ந்து தெளியாத மனமுடையவர்களே அம்மாதரை விரும்புவார்கள் . ஆராய்ந்தவர்கள் அவர்களை அருவருத்து வெறுப் பார்கள். யௌவனப் பருவத்தில் தமது அவயவ சௌந்தரியத்தைக் காட்டி ஆடவரை மயக்குகின்ற மாதர்கள் முதுமைப்

பருவமடைந்து கொக்குபோல் தலைமயிர் வெளுத்துக் கையில் கோல்கொண்டு அதுவே கண்ணாக நடப்பதைக் காண்கிறோமல்லவா ? மேலும், அம் மாதர் உடம்பின் அருவருப்பை நோக்கியன்றோ பட்டாடையால் அவ்வுடம்பு முழுவதும் மூடுகிறார்கள். இன்னும், தம்முடம்பின் துர்க்கந்தம் வெளிப்படா திருத்தற்கே சுகந்தத்தை யுடைய மஞ்சள் குங்குமக் குழம்பு சந்தனம் முதலியவற்றைப் பூசிக்கொள்ளு கிறார்கள். அவர்கள் பல் விளக்கி நாவழித்துப் பன்னீராற் கொப்புளித்துத் தாம்பூலாதிகள் தரிப்பது யாதுக்கு ? தம் வாயைத் திறந்தால் தீ நாற்றம் வெளிப்படுமெனக் கருதி அதனை மறைக் கும்பொருட்டன்றோ ! ஆகையால், இத்தகைய தன்மைகளை யெல் லாம் உயர்ந்தோ ருன்னிப் பார்ப்பார்க

னல்லவா? ஆதிகாலத் தில் வீஷ்மரை ஒரு பெண்ணனவள் வந்து தன்னைக் கூடும்படி முயன் றும் அம்முயற்சி பயன்படவில்லை. அப்போது, அவள் பரசுராம ரைக்கொண்டு சொல்லுவித்தும் போர் செய்வித்தும் . பார்த்தாள். அதினம் - ளரு.]



அவளுடைய எண்ணம் முடிவு பெறவே யில்லை. இதனைக் குறித்தே முதற் பாவலரும்,

“ தங்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்

புன்னலம் பாரிப்பார் தோள் ”

என மொழிந்துள்ளார்.

ஆகவே , இத்தன்மைகளை யெல்லாம் ஆராய்ந்தொழுகுதல் ஆடவராகிய அனைவருக்கும் அவசியமாம். ஆனல், அருட்கடலாகிய ஆண்டவன் அன்பு

கூர்ந்து அருளிச் செய்த அறிவென்னும் பொருளை அபிவிர்த்தி செய்தோர்கட்கே யன்றி அனைவர்க்கும் அதனை அறியும் தன்மை யேது ? ஆகையாலன்றோ வேசையரின் பத்தை விரும்புவோர் அறத்திற்குரிய மனையாளை அருவருத்து, பிணைமானொன்று தன் கலைமானுக்குக் கொம்பு முளைத் தோங்கிய தைக் கண்டு புலிக்கெதிரே சென்று, ' இவ்வன முழுதும் எனது கலைமானுக்கே கொடுத்து நீ காட்டை விட்டு நீங்கக்கடவை ' எனக் கழறியவாறு போல, கடுமொழிகளையும் பகருகிறார்கள் ? அவர்கள் தன்மையும் அவர்க ளனுபவிக்கும் இன்பமும் யாதாகும் ? ஆகையா லன்றோ வள்ளுவனாரும்,

" ஆயு மறிவின ரல்லார்க் கணங்கென்ப
மாய மகளிர் முயக்கு "

எனப் புகல்வாராயினர்.

வேசையர்கள் அழகு பெருமை

முதலிய குணங்கள் வாய்ந்தோ ராயினும், தாமடைதற்குரிய பொருளில்லா தாரைப் போக்குச் சொல்லி அனுப்பும் புத்தியுடையோர்க ளாவார்கள். அவர்களது காம வலையிற் சிக்கியிருக்கும் கசடர்கள் அதனை யறியாமலே அவர்களுடைய மாய முயக்கத்தில் மனதை யூன்றுகிறார்கள். அம்மட்டோ! அவர்கள் அம்மாதர்க ளின்பமே பெரிதெனப் பல காலும் வியந்து கூறுகிறார்கள். ஆனால், அறிவாலூன்றிப் பார்க்கும் மக்கள் அதனை அங்கீகரியார். பெருநாவலரும்,

" வரைவிலா மாணிழையார் மென்றோள் புரைவிலாப்

பூரியர்க ளாழு மளறு "

எனப் பணித்தார்.

௲சூ — திருக்குறள்

தீபாலங்காரம் [பொருட்பால்

வேசையருடைய நேசத்தை

மேன்மேலும் விரும்புவோர் அருளற்றுப் புகழற்று மனத்தடுமாற்றங் கொண்டு மங்குகிறார்கள். ஆனால், அஃது அவர்கள் குற்றமன்று. விதையொன்று போடச் சுரையொன்று காய்க்குமா ? வினை விதைத்தவன் வினையறுப்பான் தினை விதைத்தவன் தினையறுப்பான் என்ற பழமொழிப்படி அது , அவர்தம் வினையென்றே சொல்லவேண்டும். இதனை,

“ இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்
திருநீக்கப் பட்டார் தொடர்பு ”

என்ற திருவள்ளுவர் கூற்றே தெரிவிக்கிறது.

இவைகளையெல்லா முணரவல்ல நாமனைவரும் வேசையர் நேசத்தை அருவருத்துத் தள்ளி ஒழுகினால் மாத்திரம் மனிதனென் னும் மாண்புடைப் பெயர்க்கு அருகராவோம். இன்றேல், மிருகங் களுக்கும் நமக்கும் பேதமில்லாமற் போம். அன்றியும், நாம் வெயில் காலத்தில் குளிர்ந்த நீரை விரும்பியும், மழை காலத்தில் நெருப்பை விரும்பியும் பெறுகின்ற சுகத்தைப் போன்றதே சிற்றின்ப சுகமும் பிற சுகங்களுமாம். ஆகவே, அழிவற்றதும் பரிசுத்தமானதுமான பேரின்ப சுகத்தை விரும்பி, அதற்குத்தக்க அரிய வழிகளை ஆராய்ந்து இயற்ற அகில ரக்ஷகராகிய நம் ஆண்டவனை அல்லும் பகலும் அன்புடன் தியானிப்போமாக.

---

## 76 - ஆம் அதிகாரம்

## கள்ளுண்ணாமை

அறிவை மயக்கி அக்கிரமங்களிற் புகுத்தவல்ல மதுவைப் பருகாமையே, 'கள்ளுண்ணாமை' எனப்படும்.

"உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்றோரா
ளெண்ணப் படவேண்டா தார்"

என்றார் ஆசிரியர்.

பெரும்பாலார் இவ்வமுத வாக்கினை அசட்டை செய்தே வருகிறார்கள். அந்தோ! இஃது எத்தகைய இழிவு. மக்கள் அறிவுச் சுடர்கொளுத்தி அஞ்ஞான இருளகற்ற முயல்வதை விட்டு

அதிகாரம் - ௭௯.] அங்கவியல்

௩௪௩. அறிவைக் கெடுக்கும் நறவை மாந்தி நாசமுற முயல்வ தெவ்வள வறி யாமை. அவர்கள், பஞ்சமாயையிற் கட்டுண் டலமாச் செய்யும் மயக் கத்தை மாய்க்குந் திறமையற்று அல்லலுறுவதை யறியாது,

மது மயக்கத்தையும் அதனுடன் சேர்த்தல் மதியீனமல்லாமல் வேறியா தாம் ? ஆகையாலன்றோ கள்ளுண்போர் தம் பெருமைகளை யிழந்து அழியாப் பகையையும் அடைகிறார்கள். இஃதுணர்த்தவே தேவரும்,

" உட்கப் படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்றுங்
கட்காதல் கொண்டொழுகு வார் "

எனத் தெரிவித்தது.

கள்ளுண்போர் தம் அறிவிழந்து அம்மயக்கத்தின் வயத்த ராய் நன்மை தீமைகளைப் பகுத்துணரும் பண்பின்றிப் பாவகாரியங் களையே செய்வரென்பது பகரவும் வேண்டுமோ ? உற்று நோக்கு மிடத்து, அவர்கட்கு அந்த நோத்தில் தம் நிலைமை தெரியாதா தலால், அவர்கள் எத்தகைய நல்லவர்களாக விருந்தபோதிலும், அம் மதுவின்

மயக்கத்தால் மானமென்பதை அறவே விட்டு விடுவர். அம்மட்டோ ! அவர்கள் அருமையாகச் சம்பாதித்துக் கொண்ட அந்தஸ்தையும் அவலமாக்குகிருர்கள். இதனை அநுபவமாக நாமும் பார்க்கிருேமல்லவா ? ஆஹா ! இஃதென்ன கொடுமை. இன்னும், தாய் தந்தையர்களைத் தடிகொண் டடிக்கும் தடியர்கள் எத்தனை பேர் ! கொண்ட மனைவியரைக் கொடூரமாகப் பேசும் குல நாசகர்க ளெத்தனை பேர் ! அவர்கள் அளவிறந்த பொருளையும் கல்வியையும் ஏனைய மதிப்பையு மடைந்திருந்து மென்ன பயன் ? யானை யுண்ட விளாங்கனிபோ லாவரென்பதற் கையமுண்டோ ? ஆகையாலன்ருே பெரு நாவலரும்,

" ஈன்ருண் முகத்தேயு மின்ஞதா லென்மற்றுச்
சான்ருேர் முகத்துக் களி "

எனப் புகன்றார்?

இவைகளை யெல்லா முணருங்கால், கள்ளுண்போர்க ளிடத்து வஞ்சனை பொறாமை களவு பொய் அனாசாரம் அடைக்கல மடைந் தோரை யகற்றுந் தன்மை இறுமாப்பு முதலிய தீக்குணங்கள் குடி கொண்டிருக்கும். ஆகவே, அவர்களுடன் சகவாசம் செய்தல் யார்க் [illegible]



கும் அடுக்காத காரியமாம். ஆகையினால் அறிஞர்கள் அவர்களைப் பார்ப்பதற்கும் பயப்படுகிறார்கள். இதனை,

" நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளென்னும்
பேணாப் பெருங்குற்றத் தார்க்கு "

என்ற மேலோர் வாக்கே மெய்ப்பிக்கிறது.

கள்ளுண்போர் இத்தன்மைகளை

யெல்லா மெண்ணிப் பார்க் கிறார்களா ? இல்லை. அவர்கள் கண்டோர் கைகொட்டி நகைக்கத் தரையில் விழுந்து புரளும் தன்மையுடையோர்களாகத் தயங்கு கிறார்கள் . இஃது எத்தகைய அவமதிப்பான நிலைமை ! அவர்கள் ஆண்டவன் அன்புகூர்ந்து அருளிச்செய்த அறிவையும் இங்ஙனம் அவலமாக்கலாமா ? இதனை யறிந்த யார் மனந்தான் நாணுறாது. ஆனால், அவர்கள் மட்டும் இதனைச் சிந்திப்பதில்லை. இது குறித்தே,

" கையறி யாமை யுடைத்தே பொருள்கொடுத்து
மெய்யறி யாமை கொளல் "

எனத் திருவள்ளுவப் பயனும் திருவாய் மலர்ந்ததுபோலும்.

கள்ளினால் விளையும் தீங்கிற் களவில்லை. கொல்லும் இயல் புடைய பாஷாணத்தினும் அது கொடியதன்றோ ?

பாஷாணமோ, உண்டவரை மாத்திரம் வருத்தும். மதுவோ, அதனை யுண்டவரை யன்றி உற்றார் பெற்றார் முதலிய யாவரையும் வருத்தும். பாஷாணம் ஓரோர் வேளை இம்மை இன்பத்தை மட்டும் போக் கக் கூடியதா யிருக்கும். மதுவோ மறுமை யின்பத்தையும் கூடப் போக்கக்கூடியதா யிருக்கிறது . ஆகவே , இத்தகைய கொடிய பொருளையும் உட்கொள்ளலாமா ? அன்றியும், பாஷாணம் உண் டோரையேனும் பிறிதோர் ஔஷதத்தினால் மீட்டுக் கொள்ளலாம். மதுவுண்டோரையோ மற்றோர் மருந்தினால் மீட்கமுடியாது. அத் தகைய கொடிய பொருளை உட்கொள்வோரை எந்த வகுப்பில் சேர்ப் பது? விலங்குகள் இனத்தில் சேர்க்கவும் வழியில்லை. இவைகருதியே முதற்பாவலர் கூறிய முதுமொழியும்,

" தஞ்சினார் செத்தாரின் வேறல்ல
ரென்னான் று
கஞ்சுண்பார் கள்ளுண் பவர்"
என்றுணர்த்தியது.

ஆகவே, இத் தன்மைகளை யெல்லாம் அறிந்தொழுகினா லன்றி மானுடம் மாண்புடைத்தாகா. ஆனால், மக்களோ இவற்றை யுன்னிப் பார்ப்பதாகத் தோன்றவில்லை. அவர்கள் யாருமுணராமல் அதி ரகசியமாகவேனும் கள்ளுண்ண அபேக்ஷித்து அரிய செல்வத்தையும் ஆயுளையும் அவமே குறைத்து, அவமானத்திற்கும் ஆளாகிறார்கள். அம்மட்டோ! அதனை அருந்தாதவர் போல அபிநயிக்கவும் அவா வுறுகிறார்கள். எவ்வாறு மறைக்கினும் அதன்குணம் மறைபடாது. ஆகையாலன்றோ,

" களித்தறியே னென்பது கைவிடுக
நெஞ்சத்
தொளித்ததூஉ மாங்கே மிகும் "
என்று ஆன்றோரும் ஆஞ்ஞாபிப்பா ராயினர்
?

ஆகவே, இவைகளையெல்லாம் அறிந்தொழுகுதலே எவர்க்கும் கடப்பாடாகும். ஆனல், கள்ளுண்ணுங் கொடிய பழக்கமுடையோர்க்கு யாது போதித்து மென்ன பயன்? அப்போதனை மணல்மேட்டிற் பெய்த பால்போல வன்றோ பாழாகிறது. இன்றேல், அவர்கள் மீண்டும் அதனை யுண்ணத் துணிவரோ? தீயவை தீய பயக்குமென் றறிந்திருந்தும் களவாடிக் கசையடியுண்டோனை யும், சூதாடிச் சொத்துக்களை யிழந்து பஞ்சையாய்ப் பரிதவிப் போனையும், கண்டோர் கைகொட்டி நகைக்கக் கலங்கிநிற்கும் குடி

யனையும் கண்கூடாகக்கண்டும் அச்செயல்களை அஞ்சாதியற்றுபவரைக் காண்கிறோமல்லவா? இன்று காலே சிறையினின்றும் விடுபட்டவன் இரவுபட்டதும் கன்னக்கோலைக் கைக்கொண்டு களவாடச் செல்கிறான்; கட்குடியால் பலவித துன்பங்களை கேற்றிரவடைந்தோன் காலையிலெழுந்து சென்று கட்கடையின் கதவைத் தட்டுகிறான். ஆகையாலன்றோ அருமைபெருமை வாய்ந்த நம் திருவள்ளுவ நாய னாரும்,

"களித்தானைக் காரணங் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ யற்று"

எனத் திருவாய்மலர்ந் துள்ளார்?

இவைகளை யெல்லா முணருங்கால், அவர்களுடைய அறிவின் விசேடம் அகங்கை நெல்லிக்கனிபோல் அறியக் கிடக்கிறது. அதிக மாகக் குடித்து, அதன் மயக்கத்தால் தட்டித் தள்ளாடித் தரையில்

தீபாலங்காரம் [பொருட்பால் விழுந்து

புரண்டு, முழங்கால் சில்லெடுபட்டும், நெற்றியில் காயம்பட்டும், பற்களுடைந்தும் பாதையில் கிடக்கும் ஒருவனைப் பார்த்தோரெல்லாம் பரிகசித்துச்செல்ல, ஒருவன் மாத்திரம் அவனருகில் உட்கார்ந்து உன்னிப்பாய்ப் பார்த்துக் கொண்டிருந்ததாகவும், அதனைக் கண்ட ஏனையோர், "ஐயா! உமக்குப் பயித்தியம்; இத்துன்பத்தைத் தானே வருவித்துக்கொண்ட தடியனுக்குத் தர்மமும் பார்க்கவேண்டுமோ?" என்றபோது, அவன், "அப்படியல்ல ஐயா! அவர் சாப்பிட்ட சரக்கு நல்ல சரக்கு ; ஆனால், எந்தக் கடைச்சரக்கோ தெரியவில்லை.

அதனை யிருந்து விசாரிக்கவேண்டும்'' என்றியம்பியதாகவும் ஒரு
கதையுண்டு. ஆகவே, அத்தகைய தன்மைக் குட்பட்டோர் எங்ஙனம் அருவருத்துத் தள்ளுவர். இஃதுணர்த்தவே உத்தரவேதமும்,

" கள்ளுண்ணுப் போழ்திற் களித்தானைக் காணுங்கா
லுள்ளான்கொ லுண்டதன் சோர்வு"

என்றுரைத்தது.

இத் தன்மைகளை யெல்லாம் அறிந்தொழுகவல்ல நாமனை வரும் அத்தகைய குணங்கட் கருகராகாது அரிய வழிகளி லீடுபட்டு, ஆன்றோர்க ளொப்பத்தக்க காரியங்களை அன்புடனியற்றி ஆயுளை யும் புகழையும் அதிகப்படுத்தி, அண்ட சராசரங்கட்கெல்லாம் அரசராயும் அகில பாப விமோசகராயு மிராநின்ற நம் ஆண்டவனை

அல்லும் பகலும் இயானிப்போமாக.

---

## 77 - ஆம் அதிகாரம்

### சூது

தாழ்ந்த நிலைக்குக் கொண்டுவரும் தன்மையுடைய பகடை முதலிய ஆட்டங்களை ஆடுதலே, 'சூது' எனப்படும்.

" வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉந்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று "

என்றார் பெருநாவலர்.

பகுத்தறிவைப் பெற்றுள்ள நாம் அவ்வறிவினை அபிவிர்த்தி செய்து, அறம் பொருளின்பங்களை அடைய வேண்டுவ தவசியம். இவ்வாயிருக்கச் சிலர் அவ்வறிவை அனர்த்தமாக்கித் தீநெறிகளிற் அதிகாரம் - எள.]
ஆங்கிலியல் ñ. ச்ள்
செல்வதுடன், ஆசாரங்களைக் கெடுத்து

அளவற்ற செல்வத்தை
யும் அழியச் செய்யும் சூதாட்டத்தைத்
தொடங்குகிறார்கள் . அதனாலடையுங் கேடு
அறிவிப்பதற்கும் அகற்றுவதற்கும் ஒண்
ணாததாயுளது. ஆகையாலன்றோ
தமிழ்மறை ஆசிரியரும்,

"ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு
முண்டாங்கொ
னன்றெய்தி வாழ்வதோ ராறு"

எனச் சாற்றுவாராயினர் ?

சூதைவிடக் கொடியது
இவ்வவனியில் யாதுமில்லை. அது தன்னை
விரும்பினோரை வெறுங் கையராக்கி
விடுகின்றது. அவ் வாட்டத்தையே
முதலாகக் கொண்டு அருமை பெருமை
யாவையு மிழந்து அளவற்ற
செல்வத்தையும் அவமே போக்கி
அவஸ் தைக்குட்பட்டோர் பலர். ஆகவே,

எவரும் அத்தகைய சூதாட் டத்தை அவசியம் ஒழிக்கவேண்டும். இன்றேல், எத்தகைய திறமை யுடையரேனும் இணையில்லாச் செல்வத்தையு மிழந்து எற்பரென்ப தாயுகி. இஃதுணர்த்தவே பொ ய்யில்புலவர் கூறிய பொரு ளுரையும்,

" உருளாய மோவாது கூறிற் பொருளாயம்

போஒய்ப் புறமே படும் "

என் றுணர்த்தியது.

சூதாட்டத்தை அறிந்தோர் அதனை விடுவதில்லை. அஃது எத்தகைய ஆராய்ச்சியற்ற செய்கை. அருட் கடலாகிய ஆண்டவன் அன்பு கூர்ந்து அருளிச் செய்த அறிவை அவர்கள் அவலமாக்கு வது மன்றி, அறிவாளிகள் அரும் பெரும் பாடுபட்டு அறிவித்த விஷயங்களையும் அசட்டை செய்து அழிகிறார்கள். ஆகையால்,

“ சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்
வறுமை தருவதொன் றில்”

என்றார் நாயனாரும்.

பூர்வம், நிடத நாட்டை யாண்ட நளனென்னும் மன்னன் அழகிற் சிறந்த தமயந்தி என்னும் கற்புடைய கன்னிகையை மணந்து, யாவரும் போற்றப் புத்திரப்பேறு பெற்றுப் புகழுடன் வாழுங்கால், புட்கரனோடு சூதாடத் தொடங்கி முதலில் பொன்னையும், பின்பு



ஆடை யாபரணங்களையும் இரத கஜ துரக பதாதிகளையும் பந்தயமாக வைத்துப் பாழாக்கியது மன்றித் தம் மக்களையும் பிரிந்து மனையா

ளுடன் வனத்திற்குச் சென்றானன்றோ ? அம்மட்டோ! மண்டலாதி
பர்கள் மதிக்கத்தக்க அம்மன்னன் மடையனாகவும், அருந்ததியை யொத்த அவன் மனைவி தனிமையாகவும் வருந்தித் தவித்தார்க ளல்லவா ? இஃதுணர்த்தவே திருவள்ளுவரும்,

"கவறுங் கழகமுங் கையுந் தருக்கி
யிவறியா ரில்லாகி யார்"

எனச் செப்பியுள்ளார்.

இவைகளை யெல்லா முணரவல்ல எவரும் அவ்வாட்டத்தை அவசியம் ஒழித்தல் வேண்டும். அவ்வாட்டமானது கள்ளுண்டலைப் போலப் பழகினவரது மனதில் நீங்காதிருந்து அறம்பொருளின் பங்களை அழிப்பதுமன்றி, அவர்களை அழியா நரகத்திலும் ஆழ்த்து கிறது.
ஆராயுமிடத்து, அவ்வாட்டத்தால் வரும்பொருளும் அநர்த் தத்தையே

விளைவிப்பதாயுளது. ஆகையால், எத்தகைய திறமை யுடையவராயினும அவ்வாட்டத்தால் வரும் பொருளை அபேக்ஷிக்கா திருக்க வேண்டும். அவ்வாறொழுகுந் தன்மையே அறிவின் வனப்பு. ஆனல், ஒரு பொருளைப் பெற்றுப் பல பொருள்களை யிழக்கும் பண் புடைய சூதாடிகள் அதனை ஆழ்ந்துணர்வதில்லை. ஆகையாலன்றோ அவர்கள் அருமை பெருமைகளையும் அவமேயிழந்து அள விலாத் துன்பங்கட்கும் ஆளாகிறார்கள் ? இதனை,

" அகடாரா ரல்ல லுழப்பர்சூ தென்னு
முகடியான் மூடப்பட் டார் "

" பழகிய செல்வமும் பண்புங் கெடுக்குங்
கழகத்துக் காலை புகின் "

என நான்முகரும் பலவாறு நவின்றதா லுணர்க.

ஆகவே , சூதாட்டத்தை யாது

காரணம்பற்றியும் எவரும்
அபேக்ஷிக்காதிருக்க வேண்டும்.
அங்ஙனமின்றி ஒருகால் அபே க்ஷிக்கின்,
அது ஆதியிலிருந்த பொருளையும்
அடியோடழிக்கு மென் பதற் கையமில்லை.
இன்னும் அது அக்கிரமங்களையு
மேற்கொள் ளச் செய்து அருளையுங்
கெடுக்கின்றது. ஆகையால், அவ்வாட்டத்



நடூக

திற் பழகினவர்கள் அவ்வுலகத்தும்
இவ்வுலகத்தும் அழியாத் துன்
பத்தை அடைவரென்ப துறுதி.
இஃதுணர்த்தவே செந்நாப்போதார்
கூறிய திருக்குறளும்,

" பொருள்கெடுத்துப் பொ ய்மேற்
கொளீஇ யருள்கெடுத்
தல்ல லுழப்பிக்குஞ் சூது"

எனத் தெரிவித்தது.

சூதாட்டத்திற்கு ஆளானவர்கள் அரியவழிகளிற் சென்று அருமைபெருமைகளை அடையாரென்பதை அகங்கை நெல்லிக்கனி போல் அனைவரும் அறிவர். அநுபவமாகப் பார்க்குமிடத்தும், அவ்வாட்டத்தால் ஆஸ்தியை இழந்து அறிவிழந்து ஆடைக்கும் உணவுக்கும்கூட யாதொரு வழியுமின்றி அவஸ்தைப்பட்டோர் பலர். இதனை வாயுறைவாழ்த்தும்,

" உடைசெல்வ மூணொளி கல்வியென் றைந்து

மடையாவா மாயங் கொளின் "

என்று விளங்கக் கூறியது.

ஆகவே, நாமெவரும் அவ்வாட்டத்தை அற ஒழிக்கவேண்டும். இன்றேல், இவ்வரிய பிறவிக் கணிகலமாகிய மானமும்

போய்விடும். ' மானமழிந்த பின் வாழாமை முன்னினிதே ' என்றபடி, மானம் அழிந்த பின் வாழவும் வேண்டுமோ ? ஆதலால், ஆதிநாயகனுகிய நம் ஆண்டவன் அளித்த வாணுளை வீணுளாக்காமல், கள்ளுண்ணல், சூது, களவு, பொய் முதலியவற்றை விட்டுவிட்டு இம்மை மறுமைக்கு வேண்டிய காரியங்களை யியற்றி, எல்லாம் வல்ல பரம்பொருளை எக்காலத்தும் தியானிப்போமாக.

---

## 78-ஆம் அதிகாரம்
## மருந்து

---

மனிதர்கட்கு வாதபித்த சிலேற்பனங்களா லேற்படும் வியாதி களை விலக்கவல்ல பொருளே, ' மருந்து ' எனப்படும்.

எண்ணரிய பிறவிகளுள்

சிரேஷ்டமானதும், எல்லாம் வல்ல நம் இறைவனை எளிதிலுணரக் கூடிய விசேட அறிவு பெற்றதுமான இம் ந்ரே

திருக்குறள் தீபாலங்காரம்

[பொருட்பால் மானிடப் பிறவிக்குத் தொண்ணூற்றாறு தத்துவங்களாலு மமைந்த இவ்வுடம்பு பேரின்ப முக்தி கிடைக்குமளவும் வேண்டுவ தவசிய மன்றோ ? அத்தகைய பெருங் காரியத்திற்குச் சாதகமான இவ் வுடம்பை எவ்வகையாலும் பேணுதல் அவசியம். அன்றியும், அறம் புரிதற்கும் பொருளீட்டற்கும் இன்பஞ் சுகித்தற்கும் இறுதியில் வீடடைதற்கும் முக்கியமாக வேண்டியது ஆரோக்கியமல்லவா ? பெரும்பான்மையோர் அதனை அறிந்தொழுகுவதாகக் காணப்பட வில்லை. அனுபவமாகப் பார்க்குமிடத்து, அநேகர்

ஆரோக்கியத்திற் குத் தவறான காரியங்களில் ஆசை கொண்டு, அவமான வியாதிகட் காளாகிறார்கள்.

வியாதி, அகம் புறம் ஊழ் உதித்தல் என நால்வகையாலு முண் டாகிறது. மனம் புத்தி சித்தம் அகங்காரமாகிய உட்கரணங்களா லும், உண்ணும் உணவு பருகும் பானம் முதலியவைகளாலும் வரும் ரோகங்களே அகத்தால் வருவன. வெப்பம் குளிர் மிகுதியாலும் குறைதலாலும் வரும் வியாதிகளே புறத்தால் வருவன. முன் செய்த பழவினைகளாலும் பெரியோர்களின் சாபத்தாலு முண்டா கும் வியாதிகளே ஊழால் வருவன. தாய் தந்தையர்களின் புறக் காரணங்களே, நமக்கமையுமாதலால் அவை களைப் பற்றிவரும் அசாத் திய நோய்களே உதித்தலால் வருவனவாம்.

இவைகளை யெல்லா முணருங்கால், ‘

உடம்புதித்த காலையே உடனுதித்தது வியாதி என்பது ஒப்பத்தக்கதேயாகும். இவற்றுள் ஊழால் வருவன அவ்வினை கழியும் போதல்லாது தீராதெனினும், வினையை மாற்றும் பொருட்டுக் கன்மகாண்டமென ஒரு நூலையும் ஆன்றோர் வகுத்துள்ளார். பொதுவாக நோய் வந்தபின் சிகிச்சை புரிவதிலும், வருமுன் காத்தலே சிறந்தது. ஆகையால், அதற்கேதுவாகிய உபாயத்தை யடைதலும், பிரதிகூலமா யுள்ளவற்றை ஒழித்தலுமே நமக்கு முக்கிய கடமையாகும். நிற்க. இவ்வுடம்பாகிய கூட்டைத் தளராது தாங்கிச் சலனத்தால் அழிவுறும் உறுப்புகளைப் போஷிப்பதற்கு உணவு அவசியம் வேண்டும். எனினும், அவ் வுணவில் கவனிக்க வேண்டிய விஷயங்கள் பலவுள.

அவற்றுள் முக்கியமானது காலபேத
வியல்பிற்கும் தேகத்திற்கும் ஏற்ற
வுணவை உய்த்துணர்தல்வேண்டு
மென்பதேயாம். ஆராயுமிடத்தும்



அவ்வாறுணர்ந் துட்கொள்வோர்களே
யாதொரு வியாதியையும் அடையாதவர்க
ளாவர். இதனை,

" மிகினுங் குறையினு நோய்செய்யு
நூலோர்
வளிமுதலா வெண்ணிய மூன்று "

என்ற ஆன்றோர் வாக்கானும் அறியக்
கிடக்கிறது.

இவைகளை யெல்லா முணரவல்ல
நாமெவரும் இவ்வுடம்பிற்கு இன்றியமையாத
உணவை மிகாமலும் குறையாமலும்

அருந்தல் வேண்டும்.

நினைத்தபோதெல்லாம் கிடைத்தவிடத் துண்பது தகாது. அடிக்கடி யுண்பின் முன்னுண்டவை ஜீரணித்தும் பின் னுண்டவை ஜீரணிக்காமலு மிருக்கும். பின்னர், அவை யிரண்டும் கலந்து கிடந்து குடலில் வலியைக் கொடுப்பதுமன்றி, அநேக கொடிய வியாதிகளையும் கிளப்பவல்லதா யுளது. ஆகவே, இத்தகைய தன்மைகளை யெல்லாம் அறிந்துண்பதே அருமை யுடைத்து. இஃ துணர்த்தவே பொருளுரையும்,

“ மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய

தற்றது போற்றி யுணின் ”

எனப் புகன்றது. அன்றியும், ஒரு வேளை ஆகாரத்திற்கும் மறு வேளை ஆகாரத்திற்கும் இடையே சில மணி நேரங்கள் செல்லவேண் டும். எனெனில், கை கால்போன்ற பிறவுறுப்புகட்கு அவகாசம்

வேண் டுவதுபோல சீரண வுறுப்புகட்கும் அவகாசம் வேண்டுமெல்லவா ? தவிர, உண்ணுங்கால் நீர்சுருக்கி, மோர்பெருக்கி, பால்சுருக்கி, நெய் யுருக்கி யுண்பதே உத்தமம். போஜனம் அருந்தும்போது இடையில் அதிகதாக மெடுக்கினும் நீரருந்த லாகாது . ஏனெனில், கார சாரப் பொருள்கள் சேர்ந்த உணவை யுண்ணும்போது, உமிழ்நீர் கோளங்களினின்றும் நீரூறுவதனுல் இடையில் நீரருந்தல் அவசியமன்று. சுருங்கச் சொல்லுமிடத்து, காலபேத வியல்பிற்கும் தேகதிடத்திற்கும் தக்கபடி அளவுக்கு மிஞ்சாமலும் குறையாமலும் நல்ல வுணவை யுண்டுவரின், ஒருவித வியாதிக்கு முட்படாமல் உலகில் நெடுங்காலம் இன்புற்று வாழலாம். ஆன்றோர்களின் துணிபு மிஃதே. இதனை,

“ அற்றா லளவறிந் துண்க வஃதுடம்பு
பெற்றா னெடிதுய்க்கு மாறு ”

என்ற திருக்குறளடிகளாலுந் தெளிக.

ௗ௩௨ திருக்குறள்
தீபாலங்காரம் [பொருட்பால்

இத்தன்மைகளையெல்லா முணர்ந்தொழுகுதல் ஒவ்வொருவர்க்குங் கடமையாம். ஆனல், இவ்வவனியில் அங்ஙனம் ஒழுகாதவர்கள் அநேகர். ஆகையாலன்றோ அவர்கள், 'காய்ந்த மாடு கம்பில் விழுந்தது போல்' கண்டமட்டும் புசித்துக் கணக்கில்லாத நோய்கட்கும் இலக்காகிறார்கள். இதனையறிந்தே நம்முன்னோர்களும் மாதமொரு முறையேனும் நோன்பு நோற்றல் வேண்டுமென ஒரு கொள்கையை ஏற்படுத்தியிருக்கிறார்கள் .

எனினும், அன்னாட்களிலுமன்றோ மிதபோஜனமென்பதைத் தவிர்த்து, காலை மாலைகளாகிய இரு வேளைகளிலும் பலவேறு

பக்ஷணங்களை வயிறாரவுண்டு, எஞ்சிய ஒரு வேளையிலும் நானாவித கறிவகைகளுடன் கண்டமட்டு முண்கிறார்கள் .
அவ்வாறுண்பதால் அவர்கள் அடையும் பயன் யாது ? அவிழ்க்கப் போய் முடிபோட்டுக் கொண்ட கதைபோலன்றோ முடிகிறது . இத் தகைய தன்மைகளையெ ல்லாம் எளிதிலுணர்த்தவே செந்நாப் போதாரும்,

“ அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து ”

என வற்புறுத்திக் கூறுவாராயினர்.

ஆசிரியர் பரிமேலழகர், உடம்பு சிறுகி யிருத்தல், பார்வை பரிசுத்தமா யிருத்தல், காசரணாதி கரணங்கள் தொழிற்குரிய வாதல், பசி மிகுதல் முதலாயின உண்ட வுணவு ஜீரணித்ததை அறிதற் குறிகள். இக்குறிகள் உண்டான பின்பே புசிக்க

வேண்டுமெனக் கழறியிருத்தலையுங் காண்க. ஆராயுமிடத்தும், இவ் வரிய வுடம்பிற்கு அஃதே எற்ற மருந்து. ஆகையால், எவரும் அங் ஙனம் ஒழுகவேண்டுத லவசியம். நந்தமிழ் மறையும்,

" மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணி
னூறுபா டில்லை யுயிர்க்கு "

என நவின் றுள்ளது.

இவைகளை யெ ல்லா முணர வல்லார்க்குக் குறைந்த வுண வையே உட்கொள்ள வேண்டுமென்பது கூறவேண்டியதில்லை. ஆனால், அதிகக் குறைவும் அனர்த்தத்தையே விளைவிக்குமென் பதும் அறியத்தக்க விஷயமேயாகும். இதனை,

அசீரணம் • எஅ.] அங்கவியல்

ந௫ந.

" இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்கு

கழிபே ரிரையான்க ணேய்"
என்ற மாதாநுபங்கியார் வாக்கே வழுத்தும்.
'மீதூண் விரும்பேல்'
என்ற நம்மூதாட்டியார் வாக்கும் இங்கு கவனிக்கத்தக்கது. ஆகையால், எவ்வகையாலும் மாறுதலில்லாததும், இவ்வுடம்பிற்கு ஏற்றதுமான ஆகாரத்தையே எவரும் விரும்பவேண்டும். அவ்வாறு உடம்பிற்கும் காலத்திற்கும் ஒத்த ஆகாரமேனும், அதனையும் அளவறிந்தே உண்ணவேண்டுமென்பது அறியக்கிடக்கிறது. அவ்வாறொழுகுந் தன்மையே அருமை யுடைத்து. இன்றேல், எல்லையில்லா நோய்கட்கிலக்காக வேண்டிவரும். இதனைக் குறித்தே தேவரும்,

"தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணி
னோயள வின்றிப் படும்"

எனத் தெரிவித்தார்.

நாம் இத் தன்மைகளை யெல்லாம்

அறிந்தொழுகின் ஆயுர்வேத பண்டிதர்களை அணுகாது ஆரோக்கியமாக வாழலாம். உலக அனுபவத்தை உற்று நோக்கின், இத் தன்மைகளை யெல்லாம் அறிந்தோ அறியாமலோ அவஸ்தைக்குட் படுவோர்களே அநந்தமாவர். ஆகை யாலன்றோ உலகோபகாரமாக வுதித்த உத்தமர்களும் அவ்வவ் வியாதிகளுக் குகந்த மருந்துகளையும் ஆராய்ந்துணர்ந் தறிவித்துள் ளார்கள் ? மருத்துவர்கள் உடலின் கூறுபாடுகளையும் அடைந்த வியாதியின் அமைப்பையு மறிந்து மருந்தளிப்பதே அருமை யுடைத்து. நோயொன்றிருக்க மருந்தொன்றளிப்பின், மேலுமந்நோய் பெருகுவதுமன்றிப் பிணியாளனையும் விண்ணுலகிற் கனுப்பும். இவை கருதியே பெருநாவலரும்,

"நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்

வாய்நாடி வாய்ப்பச் செயல்"

எனப் புகல்வாராயினர்.

எவ் வயித்தியர்களும் நோயாளியின் நோயறிந்து, அந் நோய் வந்த காரணத்தையு மாராய்ந்து, காலத்திற்கேற்ற மருந் தையே கவனித்தளிக்கவேண்டும். இன்றேல், அவர்கட்கு இவ்வவனி யில் அவமானமும் பெருங் கேடு முண்டாகு மென்பதற் கையமில்லை.

சரு

நடுச் திருக்குறள்

தீபாலங்காரம் [பொருட்பால்

ஆகையால், நாடிப்பரிக்ஷை வசனப்பரிக்ஷை

முதலிய பரிக்ஷைகளால்

பகுத்துணர்ந்தே மருந்தளிக்க வேண்டும்.

"உற்றா னளவும் பிணியளவுங் காலமுங்

கற்றூன் கருதிச் செயல்"
என மொழிந்த துணர்க.

இத் தன்மைகளை யெல்லா மறிந்

முதுமொழியும்,

தொழுகிலன்றி, எவ்

வகையாலும் வியாதி தீராது. இன்னும், வியாதியைத் தீர்ப்பதற்கு வேண்டிய விதிகள் பலவுள. நாமனைவரும் இவ்வநித்தியமான வுடம்பு யாதொரு வியாதிக்கும் உட்படாவண்ணம் அறிந்தொழுகி, அநேக காலம் இவ்வவனியிலிருந்து அறம்பொரு ளின்பங்களை அடைந்து, நித்தியமான

அத்துவித பதவியை யடைய அண்ட சரா சரங்கட்கெல்லா மரசனும் அடியார்க் கெளியனுமாகிய நம் ஆண்ட வனை எக்காலத்தும் பிரார்த்திப்போமாக.

அங்கவியல் முற்றிற்று.



## மூன்றுவது ஒழிபியல்



79-ஆம்

அதிகாரம்

### குடிமை



உயர்குலத்தி லுதித்தாரது இயல்பு கூறுதலே, 'குடிமை' எனப்படும்.

" இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை

யியல்பாகச்

செப்பமு டைனு மொருங்கு"

என்றது தமிழ் வேதம்.

பகுத்தறிவைப் பெற்ற மக்கள் அரிய குணங்களேயே ஆபரண மாகக் கொள்ளவேண்டுவ தவசியம். இவ்வாறிருக்க இதனை முற்று முணராத மக்களு முளர். ஆனல், அஃது அவர்களுடைய குற்ற மன்று. அவர்கள் பிறந்த குலத்தின் குற்றமாம். நல்லிசைப் புலவ ராகிய நம்மூதாட்டியாரும், 'குலத்தளவே யாகுங் குணம்' எனக் கூறியதாலும் இஃதுணரக் கிடக்கிறது. அரிய குணங்களை யடை யப் பெருதவர்கட்கு, எத்தகைய பாடுபட்டு மென்ன பயன்? அஃது ஆற்றிற் கரைத்த புளிபோ லாகுமென்பதற் கையமில்லை. அன்றியும், அவர்களைப் பற்றி இங்கு

அறிவிப்பதும் அனுவசியமே யாகும். ஈண்டு எடுத்துக்கொண்ட விஷயம் இயல்பாகவே எல்லா நற்குணங்களு முடையவர்களைப் பற்றியே யாம். உற்றுநோக்கு மிடத்தும், அத் தகைய உத்தமர்க ளன்றோ எக்காலத்தும் மாறாத இயல்புடையோர்க ளாக விருக்கிறார்கள் ? இதனைக் குறித்தே திருக்குற ளாசிரியரும்,

"ஒழுக்கமும் வாய்மையு நாணுமிம் மூன்று
மிழுக்கார் குடிப்பிறந் தார்"

எனத் திருவாய் மலர்ந்தார்.

அவர்கள், தம்முயிர் போவதாயினும் தமது குடிப்பெருமை யைக் கெடுக்கும் காரியங்களைச் செய்யவே செய்யார். அவர்கட்கு மானமே பெரிதல்லாது பொருள் முதலியன பெரிதல்ல. அவர்க ளிடத்தில் செம்மையும் நாணமும் இயல்பான குணங்களாய் நிலை நட்டுக

 பெற்றிருத்தலின், அவர்கள் நல்லொழுக்கத்திற் சிறந்தவராக நடக்கிறார்கள். அன்றியும் நகை, ஈகை, இன்சொல், இகழாமை முதலிய நான்கும் அவர்களுடைய உரிமைக் குணங்களாம். இதனை,

"நகையீகை யின்சொ லிகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு"

என்ற நான்முகர் கூற்றானும் நன்குணரக் கிடக்கிறது.

இவைகளையெல்லா மாராயுங்கால் நற்குடிப் பிறந்தார் கேவலம் அழியும் நிலைமைத்தாய பொருள்களைப் பொருட்படுத்தாது, தமது மானமொன்றையே பெரிதெனக் கருதி, தமது குடிப்பெருமை யையே பேணி நிற்பரென்பது கூறவும் வேண்டுமோ?

பூர்வம், பாண் டவர்களைப்பெற்ற குந்தி யென்பாள் தனது இளமைப் பருவத்தே ஒரு பிள்ளையைப்பெற்று, அதனைப் பிறரறியாதபடி பெட்டியிலிட்டு ஆற்றில் விட்டாள். அந்தப் பெட்டியைத் திருதராஷ்டிரனுடைய தேர்ப்பாகன் கண்டெடுக்க, அதனுள்ளிருந்த பிள்ளையை அவ்வரசன் பெற்றுத் தன் பிள்ளைபோலப் பாராட்டி அவனுக்குக் கர்ணனெனும் பேர்தந்து கண்ணியமுடன் வளர்த்தான். ஆனால், பிறர் அக் கர்ணனை இழிகுலத்தானென் றியம்பியது எவருமுணர்ந்த விஷயமே. அதுகாலை, ஸ்ரீ கிருஷ்ணபகவான் கர்ணனுடைய தாயாகிய குந்தியைக்கொண்டே அவன் குலத்தையு முணர்த்திக் கொடியோனாகிய துரியோதனனுடன் சேர்ந்து பாண் டவர்களைப் பகைப்பாயாயின் பாக்கியங்கள் யாவையுமிழந்து பாழாக நேருமெனப்

பகர்ந்த போதும், அக்கர்ணன் அரவக்கொடியோனுடைய அன்பையே ஆதாரமாகக் கொண்டானன்றி பாண்டவர்களை யடைந்து அரசாட்சி செய்யலாமென்று அணுவளவும் சிந்தித்ததுண்டோ ? இத்தன்மை களையெல்லா மெளிதிலுணர்த்தவே நாயனாரும்,

" அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்த லிலர் "

என மொழிவாராயினர்.

நற்குடிப் பிறந்தார் இரப்போர்க்கு இல்லை யென்னாத குணத்தை இயற்கையிலேயே கொண்டிருக்கிறார்கள். ஆகையாலன்றோ, கர்ணன் ஐவருடைய

பாணத்தால் துன்பப் பட்டுத்
தன்னுருயிரை அதிகாரம் - எக.]
ஒழிபியல் ௩௫௬ள

இழக்கும் தருவாயிலும் யாசிப்போர்க்கு இல்லையென்று சொல்லா தீக்கதுடன், எப்பிறவியிலும் இக்குணம் மாறு திருக்கும்படி எல்லாம் வல்ல இறைவனை இரந்து வேண்டிக்கொண்டான். இது கருதி யன்றோ யாவரும், ' கொடைக்குக் கர்ணன் ' என்று கூறுகிறார்கள். உத்தர வேதமும்,

" வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பிற் றலைப்பிரித லின்று "

என்றுரைத்தது.

ஆராயுமிடத்து, அத்தகைய குணமுடையோரே வறுமை யடைந்த காலத்தும் வசையற்று வாழும்

வனப்புடையவராக விருக்கிறார்கள். யாவரும் அவ்வாறொழுகுதல் அவசியம். இன்றேல், உயர் குடியிற் பிறந்தவராயினும் ஒருவித பயனுமடையா ரென்ப துறுதி. ஆகையாலன்றோ திருவள்ளுவர் பயனும்,

" குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போ லுயர்ந்து "

எனத் தெரிவித்தது ?

இழிவுகட் கிலக்காகா திருப்பதே எவர்க்கும் சிறப்பு. இரக்க மென்பது சிறிதுமில்லாத அற்பர்கள் இயற்கையாயுள்ள அருமை பெருமைகளையும் அவமே யிழந்து, தாம் அவதரித்த குலத்திற்கும் இழுக்கைத் தேடுகிறார்கள். இஃது எத்தகைய அவமதிப்பான நிலைமை. ஆகையினாற்றான் முதற்பாவலரும்,

" நலத்தின்க ணாரின்மை தோன்றி னவனைக்
குலத்தின்க ணையப் படும்"

என மொழிந்தார்.

நற்குடிப் பிறந்தா ரிவரென்பதை எளிதி லுணரலாம். அதனை அவர்களுடைய வாய்ச் சொற்களே வழுத்தும். இஃதுணர்த்தவே நாயனாரும்,

" நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டுங்
குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்"

எனத் தெரிவித்தார்.



இத்தன்மைகளையெல்லாம் எளிதிலுணர வல்லோர் எவ்வகை யானும் இழுக்கமடையார். அவர்கள் யாவரிடத்தும் வணக்க முடை யோராகவும் வாழ்வார்.

அவ்வாறொழுகுந் தன்மையே அறிவுடைமை யெனப்படும். ஆனால், அங்ஙனம் ஒழுகினால் மட்டும் அடைதற்கரிய புகழை யடைந்ததா குமோ? ஊழால் தாழ்வு வந்த விடத்து உயிர் வாழாமையுமன்றோ அக்குடிப் பிறப்பை அழியாமல் நிலை நிறுத்து வதா யுளது? பெருநாவலரும்,

" இன்றி யமையாச் சிறப்பின வாயினுங்
குன்ற வருப விடல்"

எனப் பணித்துள்ளார்.

மானமற்றோர் மக்கட் பிறப்பினரா வரோ? கேவலம் மிருகபட்சி யாதி ஜந்துக்களிலும் தாழ்ந்தவர்களாக வன்றோ கருதப்படுவர். ஆகலின், மானிகள் தமது குடிப்பிறப்பிற்குத் தாழ்வு வருஞ் செயல்களால் பெருஞ் செல்வம் பெறுவதா யிருப்பினும், அவற்றைப் பெரிதெனக் கருதுகின்றார்க ளில்லை. அவர்கள் நோக்கமெல்லாம் புகழுடனே மானத்தை

நிறத்துவதிலேயே நிலைபெற்றிருக்கும். இதனை,

“சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரோடு
பேராண்மை வேண்டு பவர்”

என்ற ஆன்றோர் வாக்கே அறிவிக்கிறது. ஆனால், அவர்களும் அறியத்தக்க விஷயம் ஒன்றுண்டு. அஃதாவது, அதிக செல்வமடைந்த காலத்து யாவரிடத்தும் பணிவும், அது குன்றிய காலத் துப் பணியாமையுமேயாம். அங்ஙனம் ஒழுகுவதனால் அவர்கட்கு அவமதிப் பொன்றுமில்லை. உலகத்தாரும் உவப்பர். ஆகவே, அங் ஙனம் ஒழுகவேண்டுவ தவசியம். இன்றேல் அவர்கள் அருமை பெருமைகளையும் அவமே யிழப்பதுமன்றி யாவராலும் அருவருக்கப் பட்டு அவஸ்தைப்படுவ ரென்பதற் கையமில்லை. இஃதுணர்த்தவே பொய்யில் புலவர் கூறிய பொருளுரையும்,

" தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை."

எனப் புகன்றது.

அதிகாரம் - எகூ.] ஒழிபியல்

நடுகூ

அறிஞர்கள் தீய காரியங்களைச் செய்யாமலிருப்பது அவர் தங் கடமையாம். அன்றியும், நற்குடியிற் பிறந்தார்கட்கு மிக்க நல் லொழுக்கத்தாலும் பெரும் புகழுண்டாவதில்லை ; சிறிய தீ யொழுக் கத்தாலேயே பெரும் பழி யுண்டாகிறது. ஆகவே, அத் தன்மைகளை யெல்லாம் அறிந்தொழுகுதல் அவர்கட்கு அவசியத் தினும் அவசியமாம். இஃதுணர்த்தவே செந்நாப்போதாரும்,

" குன்றி னனையாருங் குன்றுவர் குன்றுவ

குன்றி யனைய செயின்"

எனச் செப்பியுள்ளார்.

குடிப்பிறந்தோர் தம்மை அவமதித்தவரால் அளவிறந்த நன்மை யடைவதா யிருப்பினும் அதனை அபேக்ஷியார். அங்ஙனம் அபேக்ஷித்தால் இருமைப் பயனுங் கெடுவதன்றி எவ்வகை யானும் இழிவடைய நேருமென்பது நிச்சயம். பூர்வம், சேர சோழ பாண்டியர்கள் அதிக பஞ்சத்தால் வருந்தி அகஸ்திய முனிவருடைய ஆஞ்ஞையின்படி இந்திரனிடத்துப் போனார்கள். அப்போது உக்கிர பாண்டியனென்பார், தன்னை ஒப்ப அமர்த்தாது அவமானஞ் செய்த இந்திரனிடத்துத் தாம் அடையக் கருதி வந்த பயனையும் அலட்சியம் செய்தது அறியத்தக்க விஷயமன்றோ? இத்

தன்மைகளை யெல்லாம் அறிவிக்கவே நாயனாரும்,

" புகழின்றாற் புத்தேணாட் டுய்யாதா லென்மற்

றிகழ்வார்பின் சென்று நிலை"

என நவில்கின்றார்.

ஆகவே, இவைகளை யெல்லாம் எண்ணிப் பார்க்குங்கால் எவரும் தம்மை அவமதிப்பாரிடத்துச் சென்று அரிய சுகத்தை அடைவதா யிருப்பினும், மானங்கருதி அச்சுகத்தையும் அருவருக்க வேண்டுமென்பது அகங்கை நெல்லிக்கனிபோ லறியக் கிடக்கிறது. இவை கருதியே அஞ்சா நெஞ்சம் படைத்த அரவக் கொடியோனாகிய துரியோதனனும் அமிர்த சஞ்சீவி யென்னும் மந்திரத்தால் பாரத யுத்தத்தில் மாண்ட தம் படைகளை யெழுப்பி, அப்பாண்டவர்களுடன் பின்னும் படையெடுத்துப் பண்படைய விருந்ததையும் பாழாக்கி, அவமான மரணத்திற்கும் ஆளாயினன் போலும்.

"ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலி னந்நிலையே
கெட்டா னெனப்படுத னன்று"

என்ற ஆன்றோர்களின் அபிப்பிராயமு மஃதே. தாக்ஷாயணி தன் தந்தை செய்த யாகத்திற்குச் சென்று வாடியதும், உலக ரக்ஷகராகிய நம் ஆண்டவனும் அவ்வம்மையார் மணாளனுமாகிய சிவபெருமான் தக்ஷனாகிய மாமனது தலையை வெட்டியதும், வாலியானவன் தன் மனைவியாகிய தாரை யென்பாள் சொல்லையும் தள்ளிச் சென்று ஸ்ரீராமபிரானால் கொல்லப் பட்டதும் மானத்தின் செய்கைக ளன்றோ! அம்மட்டோ! அரிய பிறவியை யடையப் பெறாத மிருகமாகிய கவரிமானுந் தன்

மயிர்க் கற்றையில் ஒரு மயிர் உதிர்ந்தாலும் அல்லது சிக்குப்பட்டாலும் உயிரை விடுகிறது. இவைகளை யெல்லா முணரவல்ல எவரும் அநித்தியமான இவ்வுடம்பையே அவசியமெனக் கருதாது, அத்தன்மைகளை யெல் லாம் அறிந்தொழுகுதல் அத்திய வசியமாக வேண்டற்பா லது. இவை கருதியன்றோ நான்முகரும்,

" மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த விடத்து"

என நவின்றார்.

ஆகவே, அறிஞர்கள் தம்பெருமைக்கு அணுவளவு கேடுண்டா யினும், இவ்வவனியில் இருக்க மனமிசையார். ஆதிகாலத்தில், அர வக் கொடியோனாகிய துரியோதனனுக்குச் சேனாதிபதியாக விருந்த துரோண ரென்பவர், பாரத

யுத்தத்தில் பதினைந்தா நாள் சண்டையில் திருஷ்டத்துய்மன் என்பானுடன் இளைக்காமல் போர் செய் தார். அப்போது, அத்துரோணரைச் சூதாகக் கொல்லக் கருதிய ஸ்ரீ கிருஷ்ண பகவான் கூறியபடியே யுதிஷ்டிரருரைக்க, அதுகேட்டு அவ் வீரரான துரோணரும் வினை மாணத்திற் காளான தன்மையே இங்கு தக்க சான்றாக விருக்கிறது. இஃதுணர்த்தவே பொதுமறையும்,

> " மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்ன
> வுயிர்நீப்பர் மானம் வரின் "

எனப் புகன்றது.

மானிகள் அநித்தியமான உடம்பை ஒழிக்கிறார்களெனினும், இறுதியில் அளவிறந்த சிறப்பை எளிதில் அடைபவர்களாக விருக்கி அதிகாரம்-௩௦.]

ஒழிபியல் நடக்கை

ரர்கள். ஆகவே, பரம கருணாநிதியாகிய
நம் பகவான் திருவருளால் பகுத்தறி
வென்னும் அரிய பொருளை அடைந்த
எவரும் அத் தகைய தன்மையை
அறிந்தொழுகுதல் அவசியம்.
இஃதுணர்த் தவே குறளாசிரியரும்,

" இளிவரின் வாழாத மான முடையா
ரொளிதொழு தேத்து முலகு "

என அறிவுறுத்தினர். நாமும் நமது
ஆருயிரையும் பொருட்படுத் தாது,
மானத்தையே பெரிதெனக் கருதி வாழ்ந்து,
அண்ட சராசரங்கட்கெல்லாம் அரசனாகிய
நம் ஆண்டவன் அருளையும் அடைய
அல்லும் பகலும் முயற்சிப்போமாக.

---

80 - ஆம் அதிகாரம்

## பெருமை

---

எவ்வழியினுலும் கலக்கமின்றித் தாம் செய்யவேண்டிய காரி யங்களைத் தளரா தியற்றும் பெருந்தன்மையே, 'பெருமை' எனப் படும்.

"ஒளியொருவற் குள்ள வெறுக்கை யிளியொருவற்
கஃதிறந்து வாழ்து மெனல்"

என்றது தமிழ்மறை.

அரிதாகிய இம்மக்கட் பிறவிக் கமைந்த ஆயுளில் ஒட்டிய இளமையால் ஓரைந்தும், யாக்கை இளமையால் ஐம்மூன்றும், இரா வில் துயில்வதால் ஒரு பாதியும், பிணி மூப்புக்களால் எஞ்சியுள்ள தும் செலவாகிறது. எல்லாங் கழிய நிற்பது ஒரு சிறிது. அதுவும் இவ்வளவென்று நிச்சயிக்க முடியாது.

இப்போதோ, பின்னேயோ,
இன்னும் சற்று நேரத்திலோ,
எப்போதோ மறலிவந்து பிடிப்
பது? ஆகவே, நாம் அவ்வுலகிற்கும்
இவ்வுலகிற்கும் இன்றியமையாத
புகழைப் பெறுவதற்குப் பின்வாங்கா
திருக்கவேண்டும். பெரும்
பாலார் இதனைப் பின்பற்றுவ தில்லை.
ஆனல், அஃது அவர்களுடைய
அறிவினத்தினுலும்
ஆற்றலின்மையாலுமே அங்ஙன
மமைகிறது.
அறிவாலுணரவல்ல பெரியோர்கள் அதனை
ஆமோதிப்பரோ? பொன்
சக
ருகூஉ திருக்குறள்
தீபாலங்காரம் [பொருட்பால்
லும் பித்தளையும் நிறத்த ா

லொத்திருப்பினும் உரைகல் முதலிய பரிக்ஷைகளால் வேறுகும். இவை கருதியன்றோ முதற்பாவலரும்,

" பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான் "

என மொழிவாராயினர்?

மக்கள் உயர்குடியையும் ஒப்பற்ற செல்வத்தையும் உடையவரா யிருப்பினு மென்னபயன்? பூர்வம், சிதம்பரத்திலே ஆனந்த தாண்ட வஞ் செய்தருளும் சபாநாதரைப் பூசிக்கும் வேதியரினும் நந்தனு ரென்னும் நாமதேயமுடைய திருநாளைப் போவார் பெற்ற சிறப்புப் பெரிதல்லவா? ஆகவே, யாவரா யிருப்பினு மென்ன? இழிவும் சிறப் பும் அவரவ ரியற்றும் காரியத்தி னளவாகவே காணப்படுகிறது. இத் தகைய தன்மைகளை யெல்லா

முணர்த்தவே பொருளுரையும்,

" மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங்
கீழல்லார் கீழல் லவர் "

எனப் புகன்றது.

எவரும் இத்தன்மைகளை யெல்லாம் அறிந்தொழுக வேண்டுவ தவசியம். அன்றியும், ' பீடு பெறநில் ' என்ற பெரியார் வாக்கும் பெரிது முணரத் தக்கதாம். ஆனல், அநேகர் அத் தன்மையை அடைவது யாவர்க்கும் எளிதல்லவென் றெண்ணுகிறார்கள். அஃது ஆராய்ச்சியற்ற அபிப்பிராயம். அந்தோ பாவம் ! அருட்கடலாகிய நம் ஆண்டவன் அவரவர் செய்த பாவ புண்யங்கட் குத் தக்கவாறு பயன்களை யளித்துளாரெனினும் பகுத்தறிவைப் பாரபக்ஷமாகவோ வகுத்துளார் ? ஆழ்ந்துணருமிடத்து அப்பெரு மையை

அடைவது அவரவர் மன வலிமையன்றி மற்றவைகளல்ல வென்பது மறக்கத்தக்கதோ? இஃதுணர்த்தவே,

"ஒருமை மகளிரே போலப் பெருமையுந்
தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு
"

எனப் பெரியாரும் பணித்தார்.

பாண்டவருடைய பிதா மகனாகிய பீஷ்மர், மூன்றாநாள் பாரத யுத்தத்தில் துரியோதனனது படைத் தலைவனாயிருந்து, அவ்வைவருள் ஒருவனாகிய அர்ச்சுனனுடன் அமர் புரியுங்கால், 

பகவான் அந்த யுத்தத்தில் ஆயுதமெடேன் என்று ஆதியில் அருளிச் செய்த வாக்கை அழிக்கக் கருதி, அளவிறந்த அஸ்திரங்களை அவர்மேலும் அவரைச்

சாரதியாகக் கொண்ட அர்ச்சுனன் மேலும் விடுத்து, அக்கிருஷ்ணனை அவ்வமரில் ஆயுதமெடுக்க வைத்ததே யிங்கு ஆதாரமாக விருக்கிறது . ஆகவே , அத்தகைய ஆற்றலுடை யவர்களா லாகாத காரியம் யாதுளது ? ஆகையாலன்றோ தெய்வப் புலவரும்,

"பெருமை யுடையவ ராற்றுவா ராற்றி
னருமை யுடைய செயல்"

எனத் திருவாய்மலர்வா ராயினர். எனினும், அத்தகைய அருமை பெருமைகளை ஆழ்ந்துணராத அறிவிலிகட்கு அவர்களுடைய ஆற் றல்களை அளந்தறியும் தன்மை ஏது ? ஆகையாலன்றோ துரியோத னனும் அத்தகைய ஆற்றலுடையவர்களைத் தமக்கு ஆப்த நேசர் களாக அடையாததுமன்றி, ஆபத்துக்கிடமாகு மென்றறிவித்த அறிஞர்களையும் அசட்டை

செய்து, இவ்வவனியில் அழியாத அப கீர்த்தியையும் அடைந்தவ னுயினன் ? இத்தன்மைகளை யெல்லாம் எளிதிலுணர்த்தவே செந்நாப்போதாரும்,

" சிறியா ருணர்ச்சியு ளில்லை பெரியாரைப்
பேணிக்கொள் வேமென்னு நோக்கு "

எனத் தெரிவித்தார்போலும்.

பெரியோரைப் பேணத மக்கட்கு எத்தகைய நலன்கள் இருந்து மென்னபயன் ? அவர்கள் அறிவாளிகளிடத் தடங்கி நடத்தலையும் விடுத்து, மமகாரச் செயல்களையு மன்றே மனமார வியற்றுகிருர்கள்? இதனைக் குறித்தன்றே பெரு நாவலர் கூறிய பொதுமறையும்,

" இறப்பே புரிந்த தொழிற்றுஞ் சிறப்புத்தான்
சீரல் லவர்கட் படின் "

எனப் புகன்றது. ஆகவே, பெரியோர் செய்கைகளைப் பற்றி அதிக மாகக் கூறவும்

வேண்டுமோ? அவர்களும், ஏனையோர்களும் அவயவத்தா லொத்திருப்பினும், அவரவர் செய்கைகளே அவரவர் தன்மைகளை அறிவிக்குமன்றோ? பொன்னுக்கும் இரும்புக்கும் பொன்னெனப் பொதுப்பெயர் கூறினும், அஃது பொருந்தத் தக்க தாகுமோ? அன்றியும், பெரியோர் அநேக மடமாதருடன் கூடி



தீபாலங்காரம்

விளையாடினு மென்னை? தாழ்ந்தோர் தவவேடந் தரித்திருப்பினு மென்னை? அறிவாலன்றி நோக்கவல்ல பெரியோர்களுக்கு அதிக மாகக் கூறுவதும் அனுசிதமாம். ஆகையால்,

“ பணியுமா மென்றும் பெருமை சிறுமை

யணியுமாக் தன்னை வியந்து"

என்ற ஆன்றோர் வாக்கையே இங்கு ஆதாரமாகக் கூறலாம். பெருமிதமின்றி யிருத்தல் பெரியோரிடத்தே யன்றிப் பின்னையோரிடம் பிரகாசியாது. இன்னும், பிற ரவமானத்தைப் பேணிப் பார்க்கும் பெருமைக் குணங்களும் அத்தகைய பெரியாரிடத்தன்றிப் பிறரிடத் துப் பிரகாசிக்காது. இதனை,

"அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும்"

என்ற மீதவர் வாக்கும் நன்கு தெரிவிக்கிறது.

ஆகவே, இவ்விஷயங்களை யெல்லாம் உணரவல்ல நாமெவரும் இவ்வரிய பிறவியா லடையத் தக்க அரும் பெரும் பயன்களையே யாராய்ந் துணர்ந்து, அவ்வுலகத்திற்கும் இவ்வுலகத்திற்கும் இன்றியமையாத புகழையே பூஷணமாகப் பூண எவ்வகையானு முயன்று, எல்லாம்வல்ல பரம் பொருளாகிய நம்

இறைவனடி சேர என்றும்
பிரார்த்திப்போமாக.

---

## 81 - ஆம் அதிகாரம்
## சான்றாண்மை

---

பிறருடைய சிறெல்லா
மெடுத்துரைத்துச் சிறுமை புறங்காத்து
யாவர்க்கும் நல்லவராய் வாழுந் தன்மையே,
'சான்றாண்மை' எனப் படும்.

" கடனென்ப நல்லவை யெல்லாங்
கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு "
என்றார் குறளாசிரியர்.

மக்கள் நற்குணங்கள் யாவையு
மடையப்பெற்று, அவைகளை ஆளும்
தன்மையையும் அவசியம் விரும்பவேண்டும்.

ங௬௯

பகுத்தறிவைப் பெற்றதனாலாய பயனு மஃதே. ஆனால், இவ்வவனி
யில் அநேகர் அதற்கு மாறான
தன்மைகளையே அடைந்துள்ளார்கள்.
அஃது அக்கிரமமான நிலைமையாம். கல்வி
யறிவில்லாப் பாமரர்கள்
தான் அதனைக் கவனிக்கின்றார்களில்லை
யெனின், கற்றோர்களிலும்
கூடப் பெரும்பாலார் கவனிப்பதாகத்
தோன்றவில்லை. ஆகவே,
அவர்களை யாதென் றியம்புவது ? கேவலம்
மிருக பட்சியாதி வகை
களிலும் சேர்க்க வகையில்லையே.
அவர்கள் எத்தகைய அழகு

வாய்ந்தவர்களா யிருந்து மென்ன பயன்? இத்தன்மைகளை யெல்லா முணர்த்தவே வாயுறைவாழ்த்தும்,

“குணநலஞ் சான்றோர் நலனே பிறநல
மெந்நலத் துள்ளதூஉ மன்று”

என வலியுறுத்திக் கூறியது.

இவைகளையெல்லா முணரவல்ல எவரும் அத்தகைய நலன் களையெல்லாம் அடையப் பெறுவதுமன்றி, அன்பு, கண்ணோட்டம், யாவரிடத்தும் இரக்கம், அழகலாத காரியங்களில் அருவருப்பு, பொய் புகலாமை முதலிய அருமைக் குணங்களையே ஆபரணங் களாகக் கொள்ளவேண்டும். அவ்வாறொழுகுந் தன்மையே அருமை யுடைத்தாம். இதனை,

“ அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ
டைந்துசால் பூன்றிய தூண்”

என்ற உத்தரவேதக் கூற்றே

நன்குணர்த்துகிற தல்லவா ? இன் னும், அவர்கள் பிறர் குற்றங்களையும் எடுத்துப் பேசாமலிருக்க வேண்டுவது அவசியம். ஆகையாலன்றோ செந்நாப்போதாரும்,

"கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு"

என வலியுறுத்திக் காட்டுவா ராயினர் ?

ஒரு தொழிலைச் செய்ய முயற்சிக்குங்கால் அதற்குத் துணை நிற்பாரையும் தமக்குரிமையாக்கிக் கொள்ளல் வேண்டும். ஆனால், ஒவ்வொருவரிடமும் அத்தகைய உத்தம குணங்களெல்லாம் ஒருங்கு விளங்குவ தரிதா யுளது. அவ்வுயர் குணங்களெல்லா மொருங்கமைந்த உத்தமர்கள் எத்தகைய ஆற்ற லுடையவர்களாக விருப்பினும் இழிந்தவர்களை எதிர்க்க

மாட்டார்கள். முன்னே, நீங்கள்

திருக்குறள் தீபாலங்காரம்

[பொருட்பால் பாண்டுவின் குமாரர்களான பஞ்சவர்கள் தங்களைப் பஞ்சைகளாக் கிப் பலர் முன்னும் பங்கப்படுத்திய பகைவனாகிய துரியோதனனைத் தோல்வி யடையச்செய்யும் சுத்த வீரர்களாயிருந்தும், அதுசமயம் அவனுக் காற்றாதவர்போல அடங்கியிருந்த தன்மையே இதனை யறிவிக்குமன்றோ ? இவைகருதியே பொருளுரையும்,

"சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி
துலையல்லார் கண்ணுங் கொளல்"

எனப் புகன்றது.

இவ்வவனியில் அத்தகைய ஆற்றலுடையவர்களே யாவர்க்கும் நன்மையைச் செய்பவர்களாக விளங்குகிறார்கள். ஆகையால், அவர் கள்

பிறர் அநுபவிக்கும் இன்பத்தைத் தாமனுபவிக்கும் இன்பமே யென்றெண்ணுவார்களெனக் கூறவும் வேண்டுமோ ? அவர்கள் தங்கட்குத் துன்பஞ்செய்தவர்கட்கு இன்பத்தினையே செய்பவர்களாகவு மன்றோ விருக்கிறார்கள் ? பாண்டவர்களை துன்புறுத்தக் கருதிய துரியோதனன் தன் பரிவாரங்களுடன் அவர்களிருந்த வனத்திற்குச் சென்று அங்கே சித்திர சேனனென்னும் கந்தர்வனால் களைப்புற்றுத் தலை கவிழ நின்றானென்பதை எவருமறிந்தே யிருக்கலாம். அதுகாலை, அவ் வைவருள் மூத்தோராகிய தருமர் துரியோதனன் தமக்குத் துன்பமியற்ற வந்தானென்பதை உள்ளங் கை நெல்லிக்கனி போலுணர்ந்தாரெனினும், அவன் துன்புற அவர் மனமிசைந்ததா ? இல்லையாலன்றோ அவர் தமது தம்பியரை யனுப்பி அவனுக்குற்ற

துன்பத்தையும் அகற்றுவாராயினர் ? இதனை விட வேறு திருஷ்டாந்தம் வேண்டுமோ ? இத்தன்மைகளை யெல்லாம் அறிந்தொழுகுவதே சான்றோர்க் கழகாம். இதனை,

" இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா
வென்ன பயத்ததோ சால்பு "

என்ற திருக்குற ளடிகளே நன்கு தெரிவிக்கிறது. இவைகளை யெல்லாம் ஆழ்ந்துணரவல்ல அறிவாளிகள் துன்பத்திற் குட்பட மாட்டார்கள். இதனை,

" இன்மை யொருவற் கிளிவன்று சால்பென்னும்
திண்மையுண் டாகப் பெறின் "

என்ற பெரியோர் வாக்கே பெரிது முணர்த்தும். அவர்கள் பிராரத்வ அதிகாரம் - அஉ.] ஒழிபியல்

௩ ஊழ தோஷத்தால் ஒருகால் துன்புற நேரிடினும், அதனையும் அவர்கள் அணுவளவும் பொருட்படுத்துவதில்லை. இத்தகைய அருமை பெருமைகளை யெல்லாம் அறிவிக்கவே தேவரும்,

" சான்றவர் சான்ருண்மை குன்றி னிருநிலந்தான்

ருங்காது மன்னோ பொறை"

எனப் பணித்தார்.

பெரியோர்கள் உலகத்தாருடைய இயல்புகளை யறிந்து அவற் றிற் கொத்தவாறு நடக்கு மாற்றலையும் அடையப் பெற்றவர்களாக விருக்கிருர்கள். ஆகவே, அவர்கள் அடையும் அருமை பெருமைகட் களவுண்டோ ? இவைகளை யெல்லாம்

ஐயந்திரிபற ஆழ்ந்துணரும் நாமனைவரும் அத்தகைய தன்மைகளை யெல்லாம் அணுவளவேனும் அசட்டை செய்யாது, ஆன்றோர்கள் ஒப்பத்தக்க அரிய வழிகளி லேயே நம்மாயுளையும் செலவிட்டு, அண்ட சராசரங்கட்கெல்லா மரச னும் ஆதிநாயகனுமாகிய நம் ஆண்டவன் அடிசேர அல்லும் பகலும் பிரார்த்திப்போமாக.

---

## 82 - ஆம் அதிகாரம்
## பண்புடைமை

---

அரிதாகிய குணங்கள் யாவையு மடையப் பெறுவதுமன்றி, மக்களுடைய இயல்புகளையு மறிந்தொழுகுந் தன்மையே, 'பண் புடைமை' எனப்படும்.

" எண்பதத்தா லெய்த லெளிதென்ப யார்மாட்டும்

பண்புடைமை யென்னும் வழக்கு "

என்றூர் வள்ளுவர்.

மானிடராய்ப் பிறந்த ஒவ்வொருவரும் அத்தகைய தன்மையை அபிவிர்த்தி செய்வதோடு அனைவரிடத்தும் அன்புடையவரா யிருக்க வேண்டுவ தவசிய மல்லவா ? அவ்வாறொழுகுந் தன்மையன்றோ இவ்வவனியில் யாவராலுங் கொண்டாடப்படுவதாயுளது ? அநேகர் இத்தன்மைகளை யெல்லாம் ஆழ்ந்துணர்வதாகத் தோன்றவில்லை. ஆகையினூற்றான் அவர்கள் இயல்பலாத. காரியங்களி லீடுபட்டு ௩௲௮

திருக்குறள் தீபாலங்காரம்

[பொருட்பால் இருமைப் பயன்களையு மிழப்பதன்றி, எவர்களிடத்தும் சிறிது மிரக்க மில்லாத ஈனர்களாகவு மிருக்கிறூர்கள். இவற்றை யுணர்ந்தே பொய்யாமொழியார் கூறிய பொருளுரையும்,

" அன்புடைமை யான்ற குடிப்பிறத்த லிவ்விரண்டும்

பண்புடைமை யென்னும் வழக்கு "

என வலியுறுத்திக் காட்டியது.

ஆகவே, அத்தகையோர்கள் அரிதாகிய பிறவியை அடைந்த தனலாய பயன் யாது? ஆண்டவன் அன்பு கூர்ந்து அருளிச் செய்த அறிவை அபிவிர்த்தி செய்யாத் தோஷத்தாலன்றோ, அங்ஙனம் அவர்கள் அவமதிக்கப்படுகிறார்கள்? ஆதலால், எவரும் அத்தன்மை களை யெல்லாம் அணுவளவும் அசட்டை செய்யாதிருக்க வேண்டுவ தவசியம். இவைகருதியே,

" உறுப்பொத்தல் மக்களொப் பன்றால் வெறுத்தக்க

பண்பொத்த லொப்பதா மொப்பு "

எனச் செந்நாப்போதாரும் தெரிவிப்பாராயினர்.

இவைகளையெல்லா முணரவல்லோர்களாகிய எவரும் அத் தகைய உயர்ச்சிகளையே உடையவர்களாக விரும்புவார்க ளென் பதற் கையமில்லை. அவர்கள் யார்க்கும் பயன் படுபவர்களாவது மன்றி அறத்தையே தமக் கவசியமான அணிகலனுக அடைந்தவர் களாகவும் அவனியில் பிரகாசிப்பர் . ஆகையாலன்றோ நம் திருக் குற ளாசிரியரும்,

“ நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டு முலகு”

எனச் சிறப்பித்துக் கூறினர் ?

அவர்கள் தம்மை யாவரேனும் அல்லற்படுத்திய காலத்தும், அவர்களிடத்து அணுவளவு துவேஷமும் அடையார். துரியோ தனன் பஞ்ச பாண்டவர்களிடத்துப் பகைமை பாராட்டி அவர் களைப் பலவிதத்திலும்

துன்புறுத்தினான். எனினும், அப்பாண்டவர்களுள் மூத்தோராகிய தருமர் அதனைப் பாராட்டிக் கொண்டதுண்டோ? இல்லை. அம்மட்டோ! அத்தருமர் தம்மைத் துன் புறுத்தியவனாகிய துரியோதனன் தொலையா நரகத்திற் கிரையாக விருந்த காலத்தும், அவனைத் தூயவனாக்க முயன்றார். ஆகவே,



அவர்கள் அறிவின் வனப்பிற் களவுண்டோ? இவைகருதியே பெரியாரும்,

“ நகையுள்ளு மின்னா திகழ்ச்சி
பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு”

எனப் பணித்தார்.

உலகியலை அத்தகைய உத்தமர்களேயன்றி, ஏனையோர்கள் எளிதி லுணர்வ தரிது. துரியோதனன் ஆன்றோர்களால் சூழப்பட்ட அவையை

அடைந்திருந்தவனு யிருந்தும் அணுவளவேனும் அறி வுடையவனாக இருந்ததுண்டோ ? இல்லை. அப்பாண்டவர்கள் அற்ப ஜெந்துக்களால் சூழப்பட்ட அடவியின்கண் அநேக காலம் வசிக்க நேர்ந்தும், அவர்கள் தங்களுடைய அறிவை அவலமாக்கிய துண்டோ? ஆகவே, இவைகளையெல்லா மாராயுங்கால், அத்தகைய அரும் பெரும் தன்மைகளெல்லாம் பண்புடையவர்க ளிடத்தன்றி ஏனை யோரிடத்து எவ்வகையானு மமையாதென்ப துறுதி. இஃ துணர்த்தவே பொருளுரையும்,

" பண்புடையார்ப் பட்டுண் டுலக மதுவின்றேல்
மண்புக்கு மாய்வது மன் "

எனப் புகன்றது.

ஆகவே, அத்தகையோரை யாதென் றியம்புவது ? அந்தோ பாவம் ! அவர்கள் அத்தகைய அவமதிப்பையேனும்

ஆழ்ந்துணர் கிறார்களா ? இல்லையே. அவர்கள் குயுக்தியான தன்மைகளையே குணமெனக் கொள்கிறார்கள். ஆகையாலன்றோ நம்மாதானுபங்கி யாரும்,

" அரம்போலுங் கூர்மைய ரேனு
மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்"

எனக் கூறியுள்ளார் ?

எவரும் மேற்சொன்ன தன்மைகளை யெல்லாம் கவனித்து யாவரிடத்தும் அன்புடையவரா யொழுகுந் தன்மையை அவசியம் அடையவேண்டும். இன்றேல், அவர் பண்புடைமை யாதாகும் ? அன்றியும், ஆதிகாலத்தில் சேதிநாட்டிலுள்ள மலையமான் என்னு மோர் அரசன் தன்னுயிர்போல மன்னுயிரையுங் காத்து அறநெறி

சுஉ

அரசியற்றுங்கால், அயல் நாட்டு அரசனுகிய கௌசிக னென்பான் மலையமானிடத்து எக்காலத்தும் பகைமை பாராட்டி யது மன்றி, அவனை எவ்வகையாலும் கொல்லக் கருதினுன். அவ் வாறே அக்கௌசிகன் எவரு முணராவண்ணம் மலையமானது சயன அறையுட் சென்று தன் கருத்தை முடிக்க விருந்த காலத்தும், மலைய மான் அவனை மன்னித்து அறிவு புகட்டியதுமன்றி, அவனையே தம தாருயிர்த் தோழனுகவு மடையவில்லையா ? ஆகவே, இதனைவிட வேறு திருஷ்டாந்தம் வேண்டுமோ ? இவை கருதியே நந்தமிழ் மறையும்,

> " நண்பாற்று ராகி நயமில செய்வார்க்கும்
> பண்பாற்று ராதல் கடை "

என நவின்றது.

ஆனல், அணுவளவேனும் நற்குணங்களில்லாத அற்பர்கள் இதனை

அறிந்தொழுகுவ தெங்ஙனம் ?
ஆகையாலன்றோ அவர்கள் யாவராலு
மிகழப்படுவதா மன்றி அநித்தியமான
செல்வத்தையும் அரிய வழிகளி
லீடுபடுத்தாது அவலமாக்கும்
அறிவிலிகளாக அவ னியில்
பிரகாசிக்கிறார்கள் ? இதனை,

" பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வ
நன்பால்

கலந்தீமை யாற்றிரிந் தற்று "

என்ற ஆன்றோர் வாக்கே நன்கறிவிக்கும்.

ஆகவே, இவைகளை யெல்லா
முணரவல்லோர்களாகிய நாமனை வரும்
அவ்விஷயங்களை யெல்லாம்
அறிந்தொழுகி, ஆன்றோர்க ளொப்பத்தக்க
அரிய காரியங்களி லீடுபட்டு, அடைதற்கரிய
பதவி யாகிய அத்துவித நிலையை
யடையுமாறு அருட்பெருஞ் சோதி யாகிய
நம் ஆண்டவனை அந்தக்கரண சுத்தியுடன்

அனவரதமும் பிரார்த்திப்போமாக.

## 83 - ஆம் அதிகாரம்
## நன்றியில் செல்வம்

ஈட்டினோர்க்கும் ஏனையோர்க்கும் பயன்படாத செல்வமே 'நன்றியில் செல்வம்' எனப்படும்.

அதிகாரம் - அ௩.] ஒழிபியல்

௩எக

" வைத்தான்வாய் சான்ற பெரும்பொரு ளஃதுண்ணான்
செத்தான் செயக்கிடந்த தில் "

என்றார் நாயனார்.

சிலர் தமக்கும் பிறர்க்கும் உபயோகமான செல்வத்தைப் பெற்றும் அதனாலடைய வேண்டிய பயனை

யடைவதில்லை. அவர்கள் இம்மை மறுமைப் பயன்களைப் பெறுதற்குரிய காரியங்களை யியற்றுவதை விட்டு இழிவடைகிறார்கள். ஆசைப்பேய் பிடித்த அற்பர்கள் அதனை அறிவதெங்ஙனம்! ஆகையாலன்றோ அவர்கள் இவ்வவனி யிலும் அவமதிக்கப்பட்டு அழியா நரகத்திற்கு ஆளாகிறார்கள்? அம் மட்டோ! அவர்கள் பொன் காத்த பூதமாகவும் பிறப்பார்களென்பது புகலவேண்டியதில்லை. இதனை,

"பொருளானு மெல்லாமென் றீயா திவறு
மருளானு மாணாப் பிறப்பு"

என்ற ஆன்றோர் வாக்கானும் அறியக்கிடக்கிறது.

ஆகவே, அவர்கள் இவ்வவனியில் வாழ்வதால் யாது பயன்? பொதுவாகப் புண்ணியவான் என்று பெயர் வாங்குவதில் எவர்க்கும் இஷ்டம். பாவி என்று பெயர்

வாங்குவதில் எவர்க்கும் மனக் கஷ்டம். எனினும், எல்லாரும் புண்ணியவான்களென்றிருத்தலாவது, எல்லாரும் பாவிகளென்றிருத்தலாவது உலக இயற்கைக்கு மாறுகக் காணப்படுகிறது. அப்படி இருந்தால் உடனே உலகம் மாறு பாடடைந்து விடுமன்றோ? எவ்வாறெனில், அனைவரும் புண்ணியவான்களாக விருப்பின், இம்மண்ணுலகம் பொன்னுலகமாக வாவது அல்லது அதற்கு மேற்பட்ட எந்த உலகமாகவாவது மாறவேண்டும்; அனைவரும் பாவிகளாயிருப்பின் நரகலோகமாக வேண்டும், அல்லது நாச முறவேண்டும். அவ்விரண்டு மில்லாததினுல், இவ்வுலகம் புண்ணியவான்களையும் பாவிகளையும் கலந்தே தாங்கி யிருக்கின்றதென்பதிற் சந்தேகமில்லை. ஈண்டுக் கூறுவது யாதெனில், 'புண்ணிய வான் என்று பிறர் சொல்வதனுல்

எனக்கு என்ன லாபம் வந்து விடு கிறது? பாவியென் று சொல்வதால் என்ன நஷ்டம் வந்துவிடுகிறது ?' என் று வாதிப்போர் இவ்வவனியில் இருப்பதை விட இறப்பது மேல் என்பதேயாம். இவை கருதியே உத்தரவேதமும்,

ங்எஉ திருக்குறள்
தீபாலங்காரம் [பேர்நட்பால்

" ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர்
. . .

தோற்ற மிலக்குப் பொறை "
என் றுரைக்கிறது போலும்.

இங்ஙனம் கூறுவதற்குக் காரணம் என்னவெனில், மக்கள் இம்மை மறுமைப் பயன்களை எளிதி லீயவல்ல எவ்வகைச் செல் வத்தினும் முதன்மையான பொருட் செல்வத்தைத் தக்க வழிகளிற்

செலவிடாமலுந் தாமும் அநுபவியாமலுமிருக்கும் இழிநிலையே யாம். அந்தோ பாவம் ! அத்தகையோர்கள் அதற்காக விசனிக்க வேண்டிய காலமும் வரும். ஆனல், அப்போது செய்யத் தக்கது யாதுளது ? மீளாத் துன்பத்தில் மூழ்க வேண்டியதே. ஆசைப் பெருக்குடையோர் அதனை அசட்டை செய்கிறார்களெனினும், அறிஞர்கள் அதனை ஆழ்ந்துணரா திருப்பரோ ? ஆகையா லன்றோ,

" எச்சமென் றென்னெண்ணுங் கொல்லோ வொருவரா னச்சப் படாஅ தவன் "

எனப் பெரியாரும் பணித்தார்.

உலோபிகள் இவ்வவனியை யாளும் அந்தஸ்துடையவராக அமைந்தும் யாது பயன் ? சாதாரணமாக உலக வழக்கின்படி ஒருவன் தனது வருவாயில் ஒரு பாகத்தைத்

தருமவழியில் உபயோகிக்க வேண்டுமென்பது ஒரு விதி. அம்மட்டோடின்றி அளவு பாராமல் ' தேகி ' என்று யார் எதைக் கேட்டபோதிலும் பூரண மனதிருப்தி யுடனளிக்கும் புண்ணிய சீலர்களும் இப்பூமியில் இருக்கிறார்கள். எனினும், அன்னமுண்ட கையையுங்கூட அசைக்க மனமில்லா அறிவிலிகளே அநந்தமாவர். அநுபவமாகப் பார்க்குமிடத்து, அவ்வறிவிலிகளே தாம் உள்ள காலமெல்லாஞ் செல்வத்தையே விரும்பி மேன்மேலும் சம்பாதித்து வைத்துச் சிறிதும் தருமம் செய்யாது காலங்கழிக்கும் கண்ணியமுடையவர். இதனைக் குறித்தே பொருளுரையும்,

" கொடுப்பதூஉந் துய்ப்பதூஉ மில்லார்க் கடுக்கிய

கோடியுண் டாயினு மில் "

எனப் புகன்றது.

ஆகவே, அஃது எத்தகைய அக்கிரமமாகா நிலைமை. அன்றியும், இவைகளையெல்லாம் எண்ணிப் பார்க்குங்கால், அடைதற்கரிய அதிகாரம் .

அக.] ஒழிபியல்

ங்ஙனம் அப்பொருளை யடைந்தும் அதனை யனுபவியாமலும் தக்கார்க்குக் கொடாமலு மிருப்போர் அவ்விரண்டுஞ் செய்தற்கிடமுடையதாகிய செல்வத்திற்கே ஒரு நோய் போன்றவராகிறார். இதனை,

" ஏதம் பெருஞ்செல்வந் தான்றுவ்வான் றக்கார்க்கொன்

றீத லியல்பிலா தான் "

என்ற மேலோர் வாக்கே மெய்ப்பிக்கும்.

ஆகவே , இஃது எத்தகைய கொடுமை. ஆராயுமிடத்தும், யாசிப்போர்க்கு உதவாத செல்வமும் ஒரு செல்வமாகுமா ? ஒருவன் பொருளைச் சம்பாதித்தல், தானும் ஏழைகளும்

செழிப்படை தற் பொருட்டன்றோ ? இஃதுணராது அதனைப் புதைத்து வைப்பானாகின், அவன் அப்பொருளால் அடையும் பயன் என்ன ? ஆகையாலன்றோ அறிவிற்சிறந்த சிகாமணிகளும் உலோபிகள் உயிரோடிருந்தும், செத்தவருக்குச் சமானமாவரெனச் செப்பியுள்ளார்கள். அடைதற்கரிய பொருளைச் சம்பாதித்தும் அரிய வழிகளிற் செலவிட்டு அழியாப் புகழை அடைவதைவிட்டு இங்ஙனம் அவலமாகலாமா ? பொதுமறையும்,

"அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வ மிகநலம்

பெற்றா டமியண்மூத் தற்று"

என வலியுறுத்திக் காட்டியது.

நடு ஊரில் வளர்ந்து பழுத்த எட்டிமரம் எங்ஙனம் ஒருவர்க்கும் பயன்படாது போகிறதோ, அங்ஙனமே

உலோபிகள் செல்வமும் அவலமாகுமன்றோ ? அன்றியும், ' உண்ணுமற் சேர்க்கும் பொருள் உதவாமற் போகும் ' என்ற உலக வழக்கையும் உற்று நோக்கவேண் டுவதவசியம். ஆகையால், இவைகளை யெல்லாம் உணரவல்ல எவரும் அத்தகைய தன்மைகளை யெல்லாம் அறிந்தொழுகுதல் அத்தியா வசியமாக வேண்டற்பாலது. இன்றேல், அப்பொருள் அவர்கட்கு மாத்திரம் கேட்டை விளைவிப்பதோடு நில்லாமல் அதனை அனுபவிக் கும் சந்ததியாருக்கும் கேட்டை யுண்டுபண்ணு மென்ப தூறுதி. இஃதுணர்த்தவே திருவள்ளுவநாயனாரும்,

" அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா தீட்டிய
வொண்பொருள் கொள்வார் பிறர் "

எனத் திருவாய்மலர்ந் துள்ளார்.

இவைகளை யெல்லா முணருங்கால், அவர்களும் அவர்களைச் சார்ந்தோரும் அவமான தரித்திரத்திற்கே ஆளாவரென்பது அகங் கை நெல்லிக்கனிபோல அறியப்படுகிறது. ஆதலால், நாமனைவரும் அத்தகைய காரணத்திற் காளாகாமல் இருப்பதே அருமையுடைத்து. இவ்வாறிருக்கச் சிலர் ஏனையோர்கட்கும் அம்மாதிரியான நிலைமை யேற்படுகிறதே என்று எதிர்வாதம் பேசுகிறார்கள். ஆனால், அஃது ஆராய்ச்சியற்ற வார்த்தையாக விருக்கிறது. ஆழ்ந்து பார்க்கும் தன்மையுடையோர் அங்ஙனம் கூறுவரோ ? பொதுவாகக் கூறு மிடத்து, அவர்கள் பூர்வத்தில் செய்த புண்ணியக் குறைவாலேயே அங்ஙன

மிருக்கிருர்களெனினும் புகழை யிழந்தவர்களென்று புகல வகையில்லே. அதிசீக்கிரம் அக்குறையிலிருந்து அகலுவாரென்பதற்கும் ஐயமில்லே. இதனே,

"சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனைய துடைத்து"

என்ற நான்முகர் கூற்றே நன்கு தெளிவிக்குமன்றே?

ஆகவே, நாம் ஈட்டிய பொருள்களே இயல்பான காரியங்களி லீடுபடுத்த வேண்டுவ தவசியம். இன்றேல், அடைதற்கரிய இப்பிறவி யும் புருஷனில்லா மனேயாளும் வித்தையில்லாப் பக்தியும் பக்தியில் லாப் பூசையும் விரக்தியில்லா யோகமும் போல வியர்த்தமாகும். நாம் பிறர்க்கு ஈந்தால் இறைவன் நமக்கு ஈவாணுகலின், நாமும் பிறர்க் குக் கொடுத்து அதனுல் இறைவனுடைய தண்ணருட் செல்வத்தை யும் பெற அவனே அநுதினமும்

பிரார்த்திப்போமாக.

## 84 - ஆம் அதிகாரம்
## நாணுடைமை

இழிந்த தொழில் காரணமாக ஏற்படும் நிந்தைக் கிலக்காகா மையே, 'நாணுடைமை' எனப்படும்.

"கருமத்தா னாணுத னாணுந் திருநுத
னல்லவர் நாணுப் பிற"

என்றார் திருவள்ளுவர்.



௩எ௫

மக்கட் பிறவிக்கு இயற்கையாக வமைந்துள்ள எக்குணங்களி லும் முக்கியமானது நாணுடைமையே. இஃதில்லாவிடின் இவ்வரிய பிறவியானது நிந்திக்கப்படும். எனினும், இக்குணம்

எல்லோரிடமும் இருப்பது தான் துர்ப்பலமாகத் தோன்றுகிறது. இதனை,

"ஊனுடை யெச்ச முயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு"

என்ற மேலையோர் வாக்கே மெய்ப்பிக்குமன்றோ ? ஆகையால், அரிய குணங்கள் யாவும் அமையப் பெற்றோரிடத் தன்றி ஏனையோர்களிட மிக்குண மிரா தென்பது எடுத்துக் காட்டவேண்டியதில்லை. திருவள்ளுவனாரும்,

"ஊனைக் குறித்த வுயிரெல்லா நாணென்னு
நன்மை குறித்தது சால்பு"

எனத் தெரிவிப்பா ராயினர்.

அரிய பிறவியைப் பெற்றோராகிய அனைவருக்கும் அவசியமான ஆபரணம் நாணமே. அன்றியும், யாரொருவர் தமக்கு வரும்பழியைக் கருதி நாணுடையவராவரோ

அவரே இவ்வவனியில் அரிய பிற வியை அடைந்தவரென்று அனைவராலும் புகழப்படுவர். இவைகளை யெல்லா முணரவல்ல எவரும் அத்தன்மையை அவசியம் கைக் கொள்ளவேண்டும். இன்றேல், எத்தகைய சிறப்பும் நீரில் விழுந்த நெய்யைப்போல் அழுந்திவிடும். இஃதுணர்த்தவே உத்தரவேதமும்,

“ அணியன்றோ நாணுடைமை சான்றோர்க் கஃதின்றேற்

பிணியன்றோ பீடு நடை”

என்றுரைத்தது.

ஆகவே, அறிஞர்கள் இதனைக் கைக்கொண்டு நடப்பதோடு பிறரும் இழிவான காரியங்களை யியற்றுவண்ணம் இடித்துக்கூறும் இயல்புடையோர்களாகவும் பிரகாசிக்கிறார்கள். பூர்வம், துரியோதனன் பாண்டவர்களுடன் சூதாடி அவர்களுடைய இராஜ்ய முதலானவைகளை

அபகரித்ததுமன்றி, அவர்களையும் அவர்கள் பாரியாளான பாஞ்சாலியையும் அடிமையாக்கிக் கொண்டோமென்ற அகங்காரத் தால் அப்பாஞ்சாலியைப்பலர் முன் இழுத்துவரும்படி பகர்ந்தபோது, விதுரர் முதலானோர் பல நீதிகளை எடுத்துக் கூறி விலக்க முயன் றனரு



றதே தக்க சான்றாகக் கூறலாம். இவை கருதியே, தன் பழியையும் பிறர் பழியையும் ஒருங்கே வியக்கும் பெரியோர்களே நாணுக்கிருப் பிடமென்று சொல்லப்படுகிறது. இதனை,

“பிறர்பழியுந் தம்பழியு நாணுவார் நாணுக்
குறைபதி யென்னு முலகு”

என்ற திருக்குறளடிகளே விளக்குகிறது.

இவைகளை யெல்லா முணரவல்லார்க்கு நாண முடையோர் செயல்களை அறிவிக்கவும் வேண்டுமோ? அற்ப

ஜெந்துக்களிடத்து மன்றோ அக்குணத்தின் செயல் அமைந்துளதாக அறியக் கிடக்கிறது ? வளைகளிலுள்ள பெட்டை நண்டு எதிர் சென்றழையாதாயின், அந்நாணத்தால் ஆண் நண்டு அவமே உயிரிழப்பதாகவும் சொல்லப்படுகிறது. அன்றியும், அடுக்காத காரியங்களைத் தும் அஞ்சாதியற்றிய துரியோதனன் பாரதயுத்தத்தில் தன் துணை வர் முதலானவர்களைத் தோற்றபோது, பாண்டவர்களுடன் தான் மட்டும் போர் செய்யத் தயங்கினவனாய், இறந்த தன் துணைவர்களையும் எழுப்பி, இன்னும் போர் செய்து வெற்றி கொள்ள எண்ணி, எவரு முணரா வண்ணம் ஒரு மடுவிற் சென்று அமிர்த சஞ்சீவி மந்திரத்தைச் செபித்துக் கொண்டிருந்தானென்பது எவருக்கும் தெரிந்த விஷயமே. அது காலை அதனையறிந்த ஸ்ரீ கிருஷ்ணபகவான்,

பாண்டவர்களுள் ஒருவராகிய வீமசேனனிடம் அதனை வெளியிட்டபோது, அவ்வீமன் மடுக்கரையை யடைந்து துரியோ தனனை இழிவாகப் பேசினன். துரியோதனன் அதற்கு நாணமுற்றே தானடைய விருந்த பயனையு மிழந்து பாழாயினன். இஃதுணர்த் தவே திருவள்ளுவப் பயனும்,

" நாண்வேலி கொள்ளாது மன்னோ
வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர்"

எனத் தெரிவித்தது. நிற்க.

இவ்வரிய மொழியை ஆழ்ந்துணரும் சிலர் அவ்வறிவிலி யின் நாணத்தை இங்கு ஆதாரமாகக் காட்டுவது அவ்வளவு அழகல்லவென்று ஆலோசிக்கலாம். அஃதும் உண்மையே யெனினும், அவ்வறிவிலியுங்கூட

அங்காணத்தை அறிந்தொழுகினு னென்றால்,
அறிவுடையோர் செயல்கள்
யாதாகுமென்பதே இங்கு அறியத்

அதிகாரம் - அச.] ஒழிபியல்

கூடிய தக்க விஷயமாகும். ஆராயுமிடத்து,
அறிவுடையோர்களாகிய எவரும் தமது
நாணம் கெடும்படியாக நேரிடின்,
தமதுயிரையேனும் கொடுத்து
அங்காணத்தைக் காத்துப் புகழைப்பெற
விரும்புவார் என்பது புகல வேண்டியதில்லை.

" நாணா லுயிரைத் துறப்ப
ருயிர்ப்பொருட்டா
னாண்டுறவார் நாணுன் பவர்"

என்ற ஆன்றோர் வாக்கையே இங்கு
ஆதாரமாகக் கொள்ளலாம். இதுகாறுங்
கூறியவாற்றால் நாணம் உயிரினும் சிறந்த
தென்பது உள்ளங்கை நெல்லிக்கனியன்றோ
? ஆகவே, நாமெவரும் அக்குணத்தையே
அணிகலனாகக் கொள்ளவேண்டிய தவசியம்.

இன்றேல், எத் தகைய அருமை பெருமையு மிழக்கவேண்டி யிருக்குமென்ப தூறுதி. திருக்குற ளாசிரியரும்,

“ குலஞ்சுடுங் கொள்கை பிழைப்பி னலஞ்சுடு
நாணின்மை நின்றக் கடை ”

என்றறியக் கூறியுள்ளார்.

நாணமில்லாத அறிவிலிகளும் இவ்வவனியில் பலர் உளர். ஆனால், அவர்கள் அரிதாகிய மானிடப் பிறவியை யடைந்தோர்க ளென்று அறிவிப்பதும் அடுக்காத விஷயமே யாகும். அந்தோ பாவம் ! அவர்களை அற்ப அறிவுடைய பக்ஷியாதி மிருக வகைகளி லும் சேர்க்க வழியில்லையே ! ஆகையாலன்றோ பொருளுரையும்,

“ நாணகத் தில்லா ரியக்க மரப்பாவை
நாணா லுயிர்மருட்டி யற்று ”

எனப் புகன்றுளது?

இவைகளை யெல்லா முணரவல்லோர் இனியேனும் அந் நாணைத்தா லுண்டாகும் நன்மை தீமைகளை நன்குணர்ந்து, நற் காரியங்களையே யியற்றி, நல்லார்களுடைய சகவாசத்தைப் பெற்று நலம்பெறுவார்களாக. நாமும் அண்ட சராசரங்கட்கெல்லாம் அரச ரும் அருட்கடலுமாகிய ஆண்டவன் அங்ஙனமே அருள்புரியுமாறு, அவனை அல்லும் பகலும் அன்புடன் பிரார்த்திப்போமாக.

---

உ அ

## 85 - ஆம் அதிகாரம்
## குடி செயல்வகை

---

ஒருவர் தாம் அவதரித்த குலத்தை

யுயரச் செய்தலின் விதமே,
'குடிசெயல் வகை' எனப்படும்.
" கருமஞ் செயவொருவன் கைதூவே னென்னும்
பெருமையிற் பீடுடைய தில்"
என்றது திருவள்ளுவர் கூற்று. இஃது 'ஒருவன் தன் குடியை யுயர்த்தச் செய்யும் விடா முயற்சியைப்போல் பெருமையுடைய தொழில் வேறொன்றும் அவனுக்கு இல்லை' எனப் பகர்கிறது. இவ் வமுத வாக்கினைப் பலர் நினைப்பதுமில்லை, கவனிப்பதுமில்லை. ஆகையாலன்றோ அவர்கள் தாமவதரித்த குடிப்பெருமையைக் கெடுப்பதுமன்றி, அவர்களும் அவமான மடைகிறார்கள்? இதனைக் கல்வியறிவில்லாத பாமரர்கள்தான்

கவனிப்பதில்லையெனின், கற்றவர்களிலும் பெரும்பாலோர் கவனிப்பதாகத் தோன்றவில்லை. ஆனால், இஃது ஆராய்ச்சியற்ற செய்கையே. தங்குடியை உயர்த்த எண்ணுவோர் முயற்சியும் நிறைந்த அறிவுமுடையவர்களாக விருக்க வேண்டிய தவசியம். இதனை,

" ஆள்வினையு மான்ற வறிவு மெனவிரண்டி
னீள்வினையா னீளுங் குடி "

என்ற ஆன்றோர் வாக்கானு மறியக் கிடக்கிறது.

அறிஞர்கள் இத்தன்மைகளை அசட்டை செய்யார். ஆதிகாலத்தில், இராசராச சோழன் அரசாட்சி செய்யுங்கால், அச்சமஸ்தான வித்வானாகிய ஒட்டக்கூத்த

ரென்பார் தாமுதித்த குலத்தை உயர்த்தத் தம்மாபி லுதித்த ஆயிரத்தெட்டுத் தலைப்பிள்ளைகளின் சிரங்களையும் தரித்துக் கொண்டுவரச்செய்து, அவற்றின்மீது வீற்றிருந்து 'ஈட்டி எழுபது' என்னும் நூலைப் பாடி முடித்து, இனி வருவோருங்கூட வியக்க இறந்தவரை யெழுப்பி இணையில்லாக் கீர்த்தியை எங்கும் நாட்டியதே இங்குச் சான்றாக விருக்கிறது. ஆழ்ந்துணருமிடத்து, அஃது அறிவின் வலிமையும் ஆற்றலின் வனப்புமென்பதற் கையமுண்டோ ? ஆன்றோர்க்கு இவ்வவனியில் எக்காரியந்தான் இயலாது. மாதானுபங்கியாரும்,

ங்க

“ குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வ
மடிதற்றுத் தான்முந் துறும்”
எனத் திருவாய்மலர்ந்த துணர்க.

இத்தகைய தன்மைகளையெல்லா மாராயுங்கால், எவரும் தம் குடிக்கேற்ற காரியங்களை எவ்வகையானு முடிக்க முற்பட வேண்டுமெனத் தெரிகிறது. இவ்வாறிருக்கச் சிலர் அறிவீனத்தினுலும், ஆற்றலின்மையாலும் தம் குடிக்கழுக்கைச் சுமத்திக் கொள்கிருர்கள். ஆனல், அஃது யார் குற்றம் ? விளக்கைப் பிடித்துக்கொண்டு கிணற்றில் விழுவார் தன்மைபோலன்ருே யிருக்கிறது ? அவர்கள் ‘ முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்’ என்ற ஆன்ருேர் வாக்கையேனும் அனுசரிக்கிருர்களா ? அவர்கள் அறிவுதான் என்னே ? அற்பமான

சிலந்திப் பூச்சியென்னும் ஒரு சிறு பூச்சியும் முயற்சியைக் கைவிடாது முழுதும் பாடுபடுகிறது. ஆகவே, இவ்வரிய பிற வியைப்பெற்ற மக்கள் தங்கள் காரியத்தில் எவ்வளவு ஆற்றலுடைய வர்களாக விருக்கவேண்டுமென வற்புறுத்திக் கூறல் மிகையேயாம். உற்று நோக்குமிடத்தும் முயற்சி யுடையோரே இவ்வவனியில் எல்லாக் காரியங்களையும் ஆலசியமின்றி முடிப்பவர்களாக விருக்கிறார்கள். குடிசெய்து வாழ்வாருடைய பெருமையைக் குறித்தே முதுமொழியும்,

“சூழாமற் றானே முடிவெய்துந் தங்குடியைத்
தாழா துஞற்று பவர்க்கு”

“குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்று முலகு”

எனப் பலவாறு பகர்ந்தது.

ஆகவே, அத்தகைய அருமை பெருமைகளை யாவரும் அடைய வேண்டியது அவசியமல்லவா? ஆனால், அஃதும் அதிகப் பிரயாசை யான விஷயமன்று. அறிவினாலும் முயற்சியினாலுமே அவற்றை யடையலாம். செந்நாப்போதாரும்,

“நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
வில்லாண்மை யாக்கிக் கொளல்”

எனச் செப்புவாராயினர்.

இத்தகைய விஷயங்களை யெல்லா முணரவல்ல எவரும் தம் மரபினை யுயர்த்த வேண்டிய மார்க்கங்களை மறப்பரோ? அமர்க்குச் [illegible]

திருக்குறள் தீபாலங்காரம்

[பொருட்பால் செல்வோர் அநேகராயினும் அதன் பாரத்தைத் தாங்குதல் ஆண்மை யுடைய வீரர் கடமை யென்பதையும்

அவர்கள் அறிவரன்றோ ? ஆகையால், மக்கள் அத்தகைய தன்மைகளை அவசியம் கைக்கொண்டு தாமவதரித்த குடியை யுயர்த்துதல் அவசியம். பூர்வம், பாண்டுவின் குமாரனாகிய பற்குனனும் பனியென்றும் வெயிலென்றும் மழை யென்றும் பாராது பார்வதி நாதனாகிய பரமசிவனை நோக்கி ஐந்து வருஷம் அரிய தவங்கிடந்து அண்டினோர் குறையகற்றும் அவ்வாண்டவனிடத்து அரிய பாசுபதாஸ்திரத்தைப் பெற்றதே இங்கு அறியத்தக்கதாம். அத்தன்மைகளை யெல்லாம் அறிவிப்பான் கருதியே நான்முகனாரும்,

" குடிசெய்வார்க் கில்லைப் பருவம்
மடிசெய்து
மானங் கருதக் கெடும் "

என நவின்றார்.

ஆகவே, இத்தகைய தன்மைகளை

யெல்லா முணரவல்லார் எவ் வகையானும் சோர்வடைவரோ ? அன்றியும், உடம்பைச் சுமையாக நினைத்து உறுதிப் பொருளையே நோக்கிக் கொண்டிருக்கும் உத்தமர்கள் இது துக்கமென்றும் இது மானமென்றும் இது ஈனமென்றும் கருதி யஞ்சும்வகை யுண்டோ ? புத்தியில் தோன்றுகிற உண்மைப் பொருளைப் பஞ்சேந்திரியங்களாகிய கள்வர்கள் திருடிக்கொண்டு போகாமல் காப்பாற்றித் திடமென்ற களஞ்சியத்தில் பத்திரப் படுத்தி வைப்பவருடைய ஞானச்செல்வத்திற் கொருநாளும் அழி வுண்டோ ? ஐம்புலன்களையும் வென்றவர்கட்கு அளவற்ற ஐஸ்வரியம் அகப்படினும் அகங்காரப் பேய் பிடிக்குமோ ? இவை கருதி யன்றோ பெருநாவலரும்,

“ இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்பத்தைக்

குற்ற மறைப்பா னுடம்பு "
எனப் பணிப்பாராயினர் ?

ஆராயுமிடத்து, யாவரிடத்திலும் இக்குணமிருப்பது எளிதன்று. எனினும், அத்தன்மைகளை அடையப்பெறாத மக்களும் மக்களாவரோ ? ஆகையாலன்றோ அறிவிலிகள் அவமான காரியங் களிலேயே அபேக்ஷைகொண்டு அனைவராலும் நகைக்கப்பட்டுத் தாமவதரித்த குடியையும் அடியோ டழிக்கும் அறிவீனத்தையும்

அதிகாரம் • அஉ.] ஒழிபியல்

ங்கூஅக்

மேற்கொள்ளுகிறார்கள்? பூர்வம் , திருதராஷ்டிர னுடைய மூத்தகுமார னாகிய துரியோதனன் அறிவும் முயற்சியு மற்றவனாயிருந்து, பாண்டு வின் குமாரர்களாகிய பஞ்சவருடன் பகைத்துப் பலரும் நகைக்கத் தம் பாக்கியங்க ளனைத்தையும்

ஒருங்கே அப்பகைவர் வசமாக்கி யதுமன்றித் தாமவதரித்த குடியையும் அடியோடழித்து மீளா நரகத்திற் கிரையானதே இங்கு உதாரணமாகக் காட்டலாம். இதனைக் குறித்தே உத்தரவேதமும்,

"இடுக்கண்கால் கொன்றிட வீழு மடுத்தூன்று

நல்லா ளிலாத குடி"

என்றுணர்த்தியது.

இத்தகைய விஷயங்களையெல்லாம் எளிதிலுணரவல்ல நாமெவ ரும் அக்குற்றங்கட் கருகராகாது, அறிவாளிகளின் அபிப்பிராயங் களையே அவசியமெனக் கருதி, அருட்கடலாகிய ஆண்டவன் அன்பு கூர்ந்து அருளிச்செய்த அறிவென்னும் பொருளையும் அபிவிருத்தி செய்து, யாவரும் புகழத்தக்க அரியகாரியங்களையே அன்புட னியற்றி,

அடைதற்கரிய பதவியையடைய அல்லும்பகலும் பிரார்த்திப்போமாக.

---

## 86-ம் அதிகாரம்
## உழவு

இவ்வுலகிற்கு இன்றியமையாத உணவுப் பொருள்களைப்பெற வல்ல விவசாயத்திற்கே 'உழவு' எனப்படும்.

" சுழன்றுமேர்ப் பின்ன துலக மதனு
லுழந்து முழவே தலை"

என்றார் ஆசிரியர்.

இவ்வுலகின்கண் உதித்த மக்களாகிய நம் முன்னே பல நூறு தொழில்கள் காணப்படினும் அவைகளை ஒன்றன்பின் ஒன்றாய்ச் சீர்தூக்கிப் பார்க்கின் விவசாயமே முதன்மையானதாக முன்னிற் கிறது. இத்தொழிற்கே, இவ்வவனி

முழுதும் ஆதரிக்கும் ஆற்ற லமைந்துளதென்பது அனைவரும் அறியக்கிடக்கிறது. ஆகையால், நீர்அக் திருக்குறள் தீபாலங்காரம் [பொருட்பால் இத்தொழிலைச் சாமான்யமான தொழிலென் றெண்ணக் கூடுமோ? இதன் உயர்வு கருதி,

“உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்
தொழுதுண்டு பின்செல் பவர்”

என்றும்,

“தொழுதூண் சுவையின் உழுதூண் இனிது”

என்றும் வழங்கும் பெரியார் வாக்கியங்கள் பொய்யாகுமா?

இவைகளையெல்லா முணருங்கால், மதிப்பும், கௌரவமும், விவசாயத்தையே தழுவி நிற்கிறதென்பது வெள்ளிடை

மலை போல் விளங்குகிறது. அன்றியும், " சீரைத்தேடின் ஏரைத்தேடு " என்ற தெய்வத் தமிழரசி திருவாக்கானும் விவசாயமே சரியான தொழிலென்று கொள்ளவேண்டு மல்லவா ? இத்தொழிலால் ஒரு விதமான நஷ்ட முமுறுமென்ப துறுதி. அதனை, ' மேழிச் செல் வங் கோழை படாது ' என்ற நம் மூதாட்டியார் வாக்கே உணர்த்து கிறது. இதைப் போலப் பெருலாபத்தைக் கொண்டுவரும் தொழி லில்லை. ' விவசாயமோ ரசவாதமோ ' என்ற பாமரப் பழமொழி யும் பலர் கூறக் கேட்டிருக்கிறோ மல்லவா ? ஆகவே, எவரும் இத் தகைய பெருமைபெற்ற தொழிலைப் பேணுவ தவசியம். இத்தொழிலை மேற் கொண்டோரே இவ்வுலகிற்கு இன்றியமையாதவராக விருக் கிறார்கள். இவை கருதியே முதுமொழியும்,

"உழுவா ருலகத்தார்க் காணியஃ தாற்ரு
தெழுவாரை யெல்லாம் பொறுத்து"

என மொழிந்தது.

இவ்விவசாயமே மற்றெல்லாத் தொழிலிலும் மேலான தென்பதும் மேன்மையையும் சிறப்பையு மீயவல்ல தென்பதும் வெளிப் படையாக விளங்குகிற தல்லவா ? ஆதலால், மேலைத் தவப் பயனுல், எல்லாச் செல்வங்களையு மொருங்கு பெற்ற வேந்தர் முதல் நாமனைவரும் இவ்வேள ாண்மையை மேற் கொண் டொழுகவேண்டுவ தவசியம். ஆராயுமிடத்தும், இவ்வவனியிலுள்ள பசியை நீக்கி, ஆருயிர் மருந்தாய உணவை ஆக்கி, நாட்டையும் அர சாங்கத்தையும் காப்பது அத்தொழிலே யென்பதற் கையமில்லை. இஃதுணர்த்தவே உத்தரவேதமும்,

ந-அந

" பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்ப
ரலகுடை நீழ லவர் "

என்றுரைத்தது. இதனை ஆழ்ந்துணரவல்லார்க்கு அதிகமாகக் கூறுவதும் அநுசிதமே யாகும். சுருங்கச் சொல்லுமிடத்து, இவ்வேளாண்மையை மேற்கொண்டொழுகுவோரே வேந்தரினுஞ் சிறந்தவரெனலாம். அவர்களே, பிறரிடம் குறை கூறி யாதொரு பொருளையும் பெறுதவராவர். அம்மட்டோ! தம்மிடம் வந்திரப்பவர்கட்கு மன்றோ, அவர்கள் வேண்டியதொரு பொருளை ஆலோசியாதளிக்கும் ஆற்றலுடையவராகவும் இவ்வவனியில் பிரகாசிக்கிறார்கள்? இதனை,

" இரவா ரிரப்பார்க்கொன் றீவர் கரவாது

கைசெய்தூண் மாலை யவர் "
என்ற மேலையோர் வாக்கே மெய்ப்பிக்கிறது.

ஆகவே, மக்கள் அனைவரும் இத்தொழிலை ஆதரிக்க வேண்டுவ தவசியம். இவ்வாறிருக்கச் சிலர் இத்தொழிலை இழிதொழிலெனக் கருதி அதமத் தொழிலாகிய சேவகாவிர்த்தியே சிறந்த தொழிலெனக் கொண்டு திரிகிறார்கள். ' ஒருவரிடம் சேவகா விர்த்தியில் அமர்ந்தால், யஜமான னுடைய நிபந்தனைகட் கெல்லாம் உட்பட்டு நடக்கவேண்டுமே. அன்றியும், அஃது அடிமைத்தனமா யிற்றே ' என்றுவது அவர்கள் எண்ணுகிறார்களா ? வேளாண் டொழில் செய்வோ ரில்லையாயின், யாவையும் துறந்தோமென்று சொல்லும் துறவிகளு மிருப்பரோ ? உலகமும்

இருக்குமோ ? இத் தன்மைகளையெல்லாம் உணர்த்தவே செந்நாப்போதாரும்,

" உழவினார் கைம்மடங்கி னில்லை விழைவதூஉம்
விட்டேமென் பார்க்கு நிலை "

எனக் கூறிப்போந்தார்.

உழவுத்தொழில் அபிவிர்த்தி அடைந்தாலன்றி இவ்வுலகம் நிலைபெறுமென்ப துண்மை. அத்தகைய உழவுத் தொழி லியற் றும் வகையைச் சற்றுக் கூறுவாம். உழுவோர் இன்ன நிலத்தில் இன்ன பயிர் செய்தால் பலிக்குமென்பதைப் பகுத்துணர வேண்டும். அங்ஙனமின்றிப் பயிரிடத் துணிந்தால், அது நஷ்டத்



திற்கே ஏதுவாகும். அம்மட்டோ! அப்பயிரின் வேர்கள் ஆழத்திற் சென்று ஆங்காங்குள்ள வுணவை

ஆராய்ந்துட்கொள்ளும் வண்ணம்
அந்நிலத்தைப் புரட்டிப் புரட்டி
உழவேண்டும். அங்ஙனம் உழுவதனால் அந்
நிலத்திலுள்ள புல் வேரறப்பெற்
றழிந்து மட்கி எருவாவதற்கும்
ஏதுவாகிறது. இவைகருதியே நந் தமிழ்
மறையும்,

"தொடிப்புழுதி கஃசா வுணக்கிற்
பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும்"

என நவின்றது.

இன்னும், வேறு எருப்போட
வேண்டுவது மவசியமே. அதுவும்
இன்னபயிருக்கு இன்ன
எருவேண்டுமென்பதை யறிந்து, ஏற்ற எரு
வையே போடவேண்டும். பிறகும்
பயிரினிடத்துண்டாகும் களைகளைக் களைந்து
காவல்செய்து, அதற்குத்தக்கவாறு
தண்ணீரும் பாய்ச்ச வேண்டும். இவற்றை,

" ஏரினு நன்றா லெருவிடுதல் கட்டபி
னீரினு நன்றதன் காப்பு "

என்ற திருவள்ளுவப்பயன் கூற்றே நன்கு தெரிவிக்கிறது.

இன்னும், அந்த நிலத்துக் குரியவர் அனுதினமும் போய்ப்பார்த்து அதற்குறும் வியாதிகளையு மறிந்து தக்க சிகிச்சைகளைச் செய்ய வேண்டும். இன்றேல், அதனாலடையும் பயனனைத்தும் அவலமாகி அதிக நஷ்டத்திற்கே ஆளாகவேண்டிவரும். இஃதுணர்த்தவே பெருநாவலரும்,

" செல்லான் கிழவ னிருப்பி னிலம்புலந்
தில்லாளி னூடி விடும் "

எனத் திருவாய்மலர்ந் துள்ளார்.

இத்தன்மைகளை யெல்லா முணரவல்ல எவரும் அத்தொழிலை விட்டுவிடாது அவசியம் கைக்கொள்ள வேண்டும். அத்தொழிலே நம் வறுமையை யகற்றுவதாயுளது.

ஆகையால், அறிஞர்கள் அத் தொழிலை ஆதரியாம லிருப்பரோ ? முதற்பாவலரும்,

“ இலமென் றசைஇ யிருப்பாரைக் காணி
னிலமென்னு நல்லா ணகும்”

என மொழிவாராயினர்.



அன்றியும், ‘வரப்புயர’ என்று ஆசீர்வதித்த ஔவையார் திரு வாக்கும் அறியத்தக்கது. வரப்புயர நீருயரும்; நீருயர நெல்லுயரும்; நெல்லுயரக் குடியுயரும். இதை அநுசரித்தே நமது கவிச்சக்கர வர்த்தியாகிய கம்பரும், “ வேதநூல் முதலாகி விளங்குகின்ற கலை யனைத்தும் ஓதுவாரெல்லாம் உழுவார் தலைக்கடைக்கே; கோதைவேன் மன்னர் குடைவளமும் கொழுவளமே ; ஆதலால், அவர் பெருமை யாருரைக்க வல்லார்” என்று விசேடித்துக்

கூறியுள்ளார்.

ஆகவே, இவைகளையெல்லா மறியவல்ல நாமனைவரும் அத் தகைய அருமை பெருமைகட் காதாரமாகிய வேளாண்மையை விரும்புவதுடன், அண்டசராசரங்கட் கெல்லாம் அரசனாகிய ஆதி நாயகனையும் அத்தொழில் அபிவிர்த்தி யடையுமாறு அன்புடன் பிரார்த்திப்போமாக.

---

## 87 - ஆம் அதிகாரம்
## நல்குரவு

---

அனுபவிக்கப்படுவன யாவும் இல்லாமையே 'நல்குரவு' எனப்படும்.

" இன்மையி னின்னாத தியாதெனி
னின்மையி
னின்மையே யின்னா தது"

என்றார் வள்ளுவனார்.

இப் பாவில் அப் பெரியார்

அடக்கியுள்ள பொருள் செவ்விய

மிக நுண்ணிய கருத்தினை உலகினருக்கு

அறிவியா நிற்கிறது.

ஆழ்ந்துணருமிடத்தும் வறுமைபோன்று

துன்பஞ் செய்யவல்லது

இவ்வவனியின்கண் எவையுமில்லை

யென்றே கூறவேண்டும். நிற்க.

அது, இம்மனித யாக்கையினைப் பெற்றோர்,

பிறவியின் உண்மைநிலை

கருதியடையும் இருமைப் பயன்களையும்

அவலமாக்கும் இயல்

புடையதாகவு மிருக்கிறது. நான்முகரும்,

"இன்மை யெனவொரு பாவி மறுமையு

மிம்மையு மின்றி வரும்"

என நவின்றார்.

சக

கூ அசூ திருக்குறள்

தீபாலங்காரம் [பொருட்பால்

அநுபவமாகப் பார்க்குமிடத்தும்,

இவ்வவனியில் அநேகர்
தாமவதரித்த குடியின் அருமையையும்
அதற்கேற்ற புகழினையும்
நீக்கி, அற்பத் தொழில்களிலெல்லாம்
அவாவுற்று அவமான மடை
கிறார்க ளல்லவா ? அஃது
அவர்களுடைய குற்றமன்று; தரித்
திரத்தின் செயல்களேயாம். இதனை,
"தொல்வரவுந் தோலுங் கெடுக்குந்
தொகையாக
நல்குர வென்னு நசை"
என்ற ஆன்றோர் வாக்கானும் நன்குணரக்
கிடக்கிறது.
நல்குரவைப்போல அறிவைக்
கெடுக்கவல்லது யாதுமில்லை.
வறிஞர் பலர் துக்க சாகரத்தில் மூழ்கித்
துன்புறுகிறார்களன்றோ ?
அவர்கள் 'ஏற்பதிகழ்ச்சி' என்ற ஔவைப்
பிராட்டியார் வாக்கை

யும் அவலமாக்கிப் பிறரிடத்திற்போய் யாசிக்கும் பேதமைக் குணத்தையுமன்றே பின் பற்றுகிறார்கள்? அஃது எத்தகைய அவமானமான தன்மையாக வமைகிறது? எனினும் அவர்கட்கு அதனை யுணரும் தன்மையேது? இத்தன்மைகளை யெல்லாம் அறிவிக்கவே பெருநாவலரும்,

"இற்பிறந்தார் கண்ணேயு மின்மை
யிளிவந்த
சொற்பிறக்குஞ் சோர்வு தரும்"

எனப் புகன்றார்.

இவைகளை யெல்லா முணருங்கால், எத்தகையாரேனும் வறுமைக்குட்பட்ட காலத்து வழியில்லா வழிகளிற் செல்லுவாரென் பது வலியுறுத்திக் காட்டவும் வேண்டுமோ? அவர்கள் அதனாலடையும் மானக் கேட்டிற்கும் மனவருத்தத்திற்கும் அளவுண்டோ? பொதுவாகக் கூறுமிடத்து அஃது எத்தகைய

பரிதாப மான நிலைமை. இதனை,

"நல்குர வென்னு மிடும்பையுட் பல்குறைத்
துன்பங்கள் சென்று படும்"

என்ற ஆன்றோர் வாக்கே நன்கு அறிவிக்கிறது.

ஆகவே, தரித்திரத்தின் கொடுமையைப்பற்றி விவகரிப்பது மிகையேயாம். அத்தகைய கொடுமைக் குட்படுவார்கட் குண்டாகும் குறைவுகளைப்பற்றிச் சிறிது கூறுவாம். வறிஞர்கள் அரிய நூல்களை ஐயந்திரிபற ஆராய்ந் துணர்ந்த அறிவாளிக

அதிகாரம் ௭.] ஒழிபியல்

ளாயினும், அவர்கள் சொல்லும் பொருள்களை எவரும் அங்கீ கரியார்கள். அவர்கள் செல்வந்தர்களா யிருந்த காலத்தில் அடுத் திருந்த பந்துக்களுமன்றே அலக்ஷியம் செய்பவர்க

ளாகிறார்கள் ?

கல்வியறிவில்லாத பாமரர்கள் தான் அங்ஙனமெனின், கற்றோர்களி லுங்கூடச் சிலரிடம் இக்குணம் குடிகொண்டிருக்கிறது. ஏனெனில், அவர்களிடம் ஞானமென்பதில்லை. பிறர் தான் அங்ஙனமெனின் அவர் களை அன்புடன் பெற்றுவளர்த்த அன்னையுமன்றோ அருவருக்கிறாள்? இதனை,

" அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும்"

என்ற தேவர்கூற்றே நன்கு தெரிவிக்கிறது.

அறவழியால் வறுமை யடைந்தோர் யாதானு மொருகாலத் தில் அருமை பெருமைகளை அடையநேரும். ஆகவே, எவரும் அத்தகைய மர்மங்களையெல்லா மவசியம் மனத்துட் கொள்ள வேண்டும். ஆனால், அநேகர் இதனை அறிந்தோ அறியாமலோ அக்கிரமமான வழிகளிலேயே தம்பொருளைச்

செலவிடுகின்றார். அந்தோ பாவம் ! அதுசமயம் அவர்கள் அதனைக் கவனியா விடினும், இறுதியில் அதனால் ஏற்படும் துன்பத்திற் கெல்லை யுண்டோ ? அருமைபெருமை வாய்ந்த நம் திருக்குறளடிகளும்,

> " இன்றும் வருவது கொல்லோ நெருநலுங்
> கொன்றது போலு நிரப்பு "

எனத் தெரிவித்தது.

ஆகவே , உலகில் நல்குரவினும் துன்பத்தை நல்கவல்லது யாதுமில்லை யென்பது திண்ணம். ஆகையாலன்றோ, அஃதுடை யார் எத்தகைய மேலோராயினும் எவராலும் இழிவடைகின்றவ ராகிறார்கள் ? இஃதுணர்த்தவே செந்நாப்போதாரும்,

> " நெருப்பினுட் டுஞ்சலு மாகு நிரப்பினுள்
> யாதொன் றுங் கண்பா டரிது "

எனச் செப்பினார்.

இவைகளை யெல்லாமுணருங்கால், அநுபவிக்கப்படும்பொருள்க ளுள் யாதானுமொன்று அரிதாகின், அதன் காரணமாக அனைத்தை



யும் துறப்பதே அறிவுடைமை யெனப்படும். தம்மாலே அநுபவிக் கப்படும் பொருள் முதலியன வறுமை காரணமாகத் தாமே தம் மைத் துறந்திருக்கவும் ; உயிர்க்குறுதி பயக்கும் நூல்கள்,

“ எழுத்தறியத் தீரு மிழிதகைமை தீர்ந்தான்
மொழித்திறத்தின் முட்டறுப்பா னாகு—மொழித்திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து

கட்டறுத்து வீடு பெறும்"

என்பது போன்ற அரிய பொருள்களைக் கூறி, வீடடைதலே இப் பிறவியின் முக்கிய நோக்கமெனத் தெரிவிக்கவும்; செல்வந்துறந்துழி அன்னை மனைவி மக்கள் சுற்றம் முதலியோருந் தம்மை விலகி நிற்கவும் ; இவைகளினாலே புறப்பற்றுத் தானே நீங்கியும் அகப்பற்று மாத்திரம் நீங்காராய், மானத்தை யிழந்து அயலார்பாற் சென்று யாசித்து உண்டு நிலையற்ற இவ்வுடம்பினை வளர்த்துக் கொண் டிருப்பதினும், அகப்பற்றை நீக்கி வீடடைதலே மேன்மை யெனத் தெரியவில்லையா ? இவ்வவனியில் அங்ஙனமே அறிந்தொழு கிய பெரியோர்களும் பலராவர். ஆகையாலன்றோ திருவள்ளுவ நாயனாரும்,

"துப்புர வில்லார் துவரத் துறவாமை

யுப்பிற்கும் காடிக்கும் கூற்று "

எனத் தெரிவித்துள்ளார்?

ஆகவே, நாம் யாதொரு துன்பங்கட்கும் அருகாராகாது, ஆன்றோர்களுடைய அபிப்பிராயங்களையே அணிகலனாகக்கொண்டு, அரிய காரியங்களிலேயே ஆயுளையும் ஆஸ்தியையும் செலவிட்டு, அண்ட சரா சரங்கட்கெல்லாம் அரசனாகிய நம் ஆண்டவன் அருளைப் பெற்று,

அழியாப் பதவியாகிய அத்துவித நிலையை அடைய அல்லும் பகலும் முயற்சிப்போமாக.

ஆதி மத்தி அந்தம் இல்லாத அவ்விறைவனும்

அங்ஙனமே அருள் புரிவானாக.

---

# 88 - ஆம் அதிகாரம்
# இ ர வு

---

பிறரிடத்திற் போய் ஒரு பொருளை யாசித்தலே 'இரவு' எனப் படும்.

"இரக்க விரத்தக்கார்க் காணிற் கரப்பி
னவர்பழி தம்பழி யன்று"

என்றார் குறளாசிரியர்.

மக்கள் யாவருமே அரிய செல்வத்தை அடையப்பெறுவது அரி தாம். அஃது அவரவர்களுடைய ஊழ்வினையின் அளவாகவே வரு கிறதெனினும், பெரும்பாலார் முயற்சி யின்மையாலே செல்வத்தை அடையப்பெறாம லிருக்கிறார்கள். செல்வத்தை அடையப்பெறாது வறுமைக்குட்பட்டு வருந்தித் தம்மாருயிரைக் காக்கும் நிமித்தம் யாசிப்போர்,

அதற்கேற்புடையாரைக் கண்டவிடத்தன்றி ஏனையோர் களிடத்து எவ்வகையானும் இரவா திருக்கவேண்டும். அவ்வாறு ஒழுகும் தன்மையே அருமை யுடைத்து. இதனை,

" இன்ப மொருவற் கிரத்த லிரந்தவை
துன்ப முறாஅ வரின் "

என்ற திருக்குறளடிகளே நன்கு தெரிவிக்கிறது.

ஆகையாலன்றோ அறிஞர்கள் ஏற்புத் தொழிலை மேற்கொள்ளும் வறிஞர்களிடத்து அன்பு பாராட்டி, அவர்களுடைய துன்பத்தைக் கண்டு நொந்து அதனைத் தொலைக்கவும் வகை தேடுகிறார்கள் ? இவைகருதியே செந்நாப்போதாரும்,

" இரத்தலு மீதலே போலுங் கரத்தல்
கனவிலுந் தேற்றாதார் மாட்டு "

எனச் சிறப்பித்துக் கூறுவாராயினர்.

ஆதிகாலத்தில், சொர்க்க மத்திய பாதளமென்னும் மூன்று லோகங்களேயும் ஆண்ட அரசனுகிய மகாபலியானவன், 'திருமாலே உன்னேயடக்க இவ்வாறு வந்துளாராகலின், நீர் அவர் கேட்கும் பொருளேத் தானஞ் செய்யற்க' எனத் தன்னுசிரியராகிய சுக்கிரன் சொன்ன காலத்தும், அதனைக் கேளாது, 'தம்முயிரேயாயினும் இரப் ##க்கு



போர்க்கிவதே மிக்க இன்பந்தரும். ஆகையால், நான் அவர் யாசிக் கும் பொருள் யாதாயினும் அதனைக் கொடுத்தே தீருவேன்' எனக் கூறியதே இங்குஎடுத்துக் காட்டத்தக்க சான்ருக வமைகிறது. இத்

தகைய மர்மங்களையெல்லா மாராய்ந்தே நம் மாதா னுடங்கியாரும்,

"கரப்பிலார் வையகத் துண்மையாற் கண்ணின்
நிரப்பவர் மேற்கொள் வது"

எனத் திருவாய் மலர்ந்துளார் போலும்.

இவைகளை யெல்லா முணருங்கால் அத்தகைய உத்தம குணமுடையோர்களாலேயே மானமுடையோர்களும் தம்முயி ரைக் காக்கும் நிமித்தம் யாசகத் தொழிலை மேற்கொள்கிறார்க ளென் பதற் கையமில்லை. இத்தன்மைகளை யெல்லாம் அறிந்தொழுக வல்ல அறிவாளிகள் யாசிப்போர் குறைகளை யகற்ற அணுவளவேனும் அசட்டை செய்வரோ? அவர்கள் தமக் கவசியமான யாதொரு பொருளே யாயினும் யாசிப்போர்கட்கு ஆலசியமின்றி அளிக்கும் அருமை பெருமைகளை அடையப்

பெற்றவர்களாகவே பிரகாசிக்கிறார்கள். அத்தன்மைகளை யெல்லாம் அறிவிக்கவே முதற்பாவலரும்,

" கரப்பிடும்பை யில்லாரைக் காணி னிரப்பிடும்பை

யெல்லா மொருங்கு கெடும்"

என மொழிந்த துணர்க.

ஆகவே, எவரும் அத்தன்மைகளை யெல்லாம் அறிந்தொழுகு தல் அத்தியாவசியமாக வேண்டற்பாலது. ஆழ்ந்துணரு மிடத்தும், இரப்போர்க்குக் கொடுப்பதுபோற் பயனளிக்க வல்லது யாது ? இவை கருதியன்றோ தருமநெறி கண்ட மனுவும், ' ஒருவன் தன்னை யாசித்தவுடன் அருசையின்றிக் கிஞ்சித்தேனும் கொடுத்தே தீர வேண்டும் ' எனக் கூறினர். உற்று நோக்குமிடத்தும் அத்தகைய உறுதிப் பொருள்களையே தமக் குரிமையாகக் கொண்ட உத்தமர் களும்

உலகிற் பலராவர். அவர்களால் யாசகர்கள் அடையும் அக மகிழ்ச்சிக்கும் எல்லையில்லை. இஃதுணர்த்தவே தேவரும்,

" இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ்ந்துள்ள

முன்று ளுவப்ப துடைத்து "

எனத் தெரிவிப்பா ராயினர்.

அதிகாரம் - அஅ.] ஒழிபியல்

ருடகக

இவைகளை யெல்லாம் எண்ணிப் பார்க்குங்கால், இரப்போர்கள் எப்போதுமே யிருக்கிறார்களென்பது எளிதில் விளங்குகிற தல்லவா? அவர்களும் இவ்வுலக வாழ்க்கைக்கு இன்றியமையாதவர்களாகவே இருக்கிறார்களென்பது எவரு முணரத்தக்கது. எத்தகைய அரிதாகிய செல்வத்தை அடைந்தவர்களாக விருப்பினும் யாசகர்கள் இல்லையாயின் அவர்கள் அருமை பெருமைகள்

இவ்வவனியில் பிர காசியாதன்றே ! இவ்வாறிருந்தும், பெரும்பாலார் இதனை அறிந்தோ அறியாமலோ தாம் அளவற்ற ஆஸ்திகளை அடையப் பெற்றும், யாசகர் குறைகளை யகற்றாத அற்பர்களாக விருக்கி றார்கள் . அம்மட்டோ ! அவர்கள் இரப்போரைப் பன்முறை அலையவைத்துத் துன்புறுத்தும் ஈனர்களாகவுமன்றோ விருக்கிறார் கள் ? ஆகவே, அவர்கள் தன்மையை யாதென்றியம்புவது ? அந்தோ பாவம் ! அதனால் தாமடையும் இழிவையேனும் எண்ணிப் பார்க்கி றார்களா ? இல்லையே. ஆகையாலன்றோ அவர்கள் உணவுண்ண உட் காரும்போதுகூடத் தெருக்கதவைத் தாளிட்டுக் கொள்ளும் தன்மை யுடையவர்க ளாகிறார்கள் ? ஆனால், அவர்களைப் பற்றி இங்கு அறிவிக்கப் புகுதல் அவ்வளவு அவசியமன்று. ஈண்டு அறிவிப்ப

தியாகிதனில் இவ்வரிய பிறவியால் அடைய விருக்கும் புகழை யும் புண்ணியத்தையும் அடைய யாசகரை அவசியம் தேடியேனும் பெறவேண்டு மென்பதேயாம். இஃதுணர்த்தவே ஆன்றோரும்,

“ இரப்பாரை யில்லாயி னீர்ங்கண்மா ஞால
மரப்பாவை சென்றுவந் தற்று ”

“ ஈவார்க ணென்னுண்டாந் தோற்ற மிரந்துகோண்
மேவா ரிலாஅக் கடை ”

எனப் பலவாறு அறிவிப்பாராயினர். இவைகளையெல்லா முணர வல்ல சிகாமணிகள் இரப்போர்க்கு என்றும் ஈவார்களென்பதற் கையமில்லை.

இரப்போர் ஒருவர் நமக்கீயவில்லையே என்றெண்ணி எவ்வகை யானும் அவரிடத்துக் கோபங் கொள்ளா திருக்கவேண்டும். இதனை,

" இரப்பான் வெகுளாமை வேண்டு
கிரப்பிடும்பை
தானேயுஞ் சாலுங் கரி "
௩௯௨ திருக்குறள்
தீபாலங்காரம் [பொருட்பால் எனச்
சுருங்கச் சொல்லி விளங்க வைத்தது
உத்தர வேதம். ஆழ்ந்
துணரவல்லோர்கட்கும் இஃது அபாரமான
பொருள்களை யெல்லாம் அறிவிக்கும். ஆகவே
, அத்தகையோர்கள், ' ஏற்ப திகழ்ச்சி '
என்ற ஔவைப் பிராட்டியார் வாக்கையும்
அலட்சியம் செய்யாரென்பது அகங்கை
நெல்லிக்கனிபோ லறியக் கிடக்கிறது.
ஆனால், மேற் கூறிய விஷயங்களைப்பற்றிச்
சிலர் இவ்வவனிக்கு யாசகர்கள் அவ
சியமென்றும், யாசிப்பது இழிவு என்றும்
எடுத்துக் காட்டுவது ஒன்றுக்கொன்று
முரணாக விருக்கிறதே
என்றெண்ணலாம். உலகில் இரப்போரும்

ஈவோரும் எக்காலத்துமே யிருப்பர். ஆயி னும் அறிய வேண்டிய விஷயம் யாதெனில், தாம் இரப்பது இழிவென்றெண்ணித் தம்மால் இயன்றவரை அந்த வழியிற் செல்லாமல் பாபமற்ற எதாவதொரு தொழிலைச் செய்து சீவிக்க முயல வேண்டு மென்பதேயாம். இதனை,

"கரவா துவந்தீயும் கண்ணன்னார் கண்ணு
மிரவாமை கோடி யுறும்"

என்ற திருவள்ளுவப் பயனாலும் நன்கு தெளிக.

இவைகளையெல்லாம் எவ்வகையானும் உணர்ந்தொழுகுதலே எவர்க்கும் சிறப்பு. அவ்வாறொழுகுதல் மக்கட்கு அரிதன்று. கேவலம் பகுத்தறிவில்லாத பாமர ஜெந்துக்களில் ஒன்றாகிய புலியுங்கூடப் பசியால் வருந்தினும், இடப்பக்கத்தில் விழுந்ததை எடுத்துண்ணாது ஏங்கி நிற்பதாக எவரும் கூறக் கேட்டிருக்கிறோமல்லவா?

அவ்வா றிருக்க, அருட்கடலாகிய
ஆண்டவனருளால் அறிவென்னும் பெரிய
பொருளை அடையப்பெற்ற மக்கள்,
க்ஷணத்தில் அழியவல்ல இச் சடலத்தைக்
காக்கும் பொருட்டு மானத்தை விட்டு
இரப்பதென்றால் அஃது எத்தகைய
மதியீனமாக விருக்கிறது !
ஆகையாலன்றே,

“ இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற்றி யான் ”

என்றான்றோரும் அறிவுறுத்திக்
காட்டியுள்ளார் ?

ஆகவே, இரப்பது
எத்தகையோர்கட்கும் ஏலாத விஷயமென்
பது எளிதில் விளங்குகிறது.
இவ்வாறிருக்கச் சிலர், தாம் அடைந்த
வறுமையை யகற்றவல்ல யாதொரு
தொழிலையும் ஆராய்ந்தியற்றும்

தன்மையையும் அவலமாக்கி, யாசிக்கும் தொழிலையே தமக்கணிகல னாகக் கொள்கின்றனரே ? அஃது எத்தகைய அக்கிரமமான நிலைமை, அந்தோ பாவம் ! அவர்கள் தான் அதனை ஆழ்ந்துணரவில்லையெனினும், அறிஞர்கள் அதனை ஆமோதிப்பரோ ? அன்றியும், அவர்கள் வறுமையும் அகலுமோ ? அத்தன்மைகளையெல்லாம் அறிவிக்கவே நான்முகரும்,

" இன்மை யிடும்பை யிரந்துதீர் வாமென்னும்

வன்மையின் வன்பாட்ட தில் "

என நவின்றார்.

இவைகளையெல்லா முணர்ந்த பின்னராவது எவரும் எத்தகைய வறுமைக் குட்பட்ட காலத்தும் பிறரிடத்திற்போய் யாசியா திருக்கும் அரிய தன்மையை அடைய வேண்டும்.

இன்றேல், எவ்வுலகத்தும் பெருமையில்லை யென்ப தறுதி. ஆகையாலன்றோ, அறிவிற் சிறந்தோர் அற்பமான வுணவேயாயினும் தம்முயற்சியால் அடையப்பெறின் அது அமிர்தத்திற்குச் சமானமாகுமென்று அறிவித்துள்ளார்கள். இதனை,

> "தெண்ணீ ரடுபுற்கை யாயினும் தாடந்த
> துண்ணலி னூங்கினிய தில்"

என்ற பொய்யில் புலவர் கூற்றே புகலும். எவரும் இத்தகைய மர் மங்களை யெல்லாம் அவசியம் கைப்பற்றவேண்டும். இன்றேல், அவை எவ்வகையானும் இழிவையே தரும். முன்னே, மாவலியிடம் மூன் றடி மண் தானம் வாங்கச் சென்ற விஷ்ணுமூர்த்தியும், தமது திரு மேனி குன்றினவராய் வாமனவதாரங் கொண்ட தன்மையே வழுத்தா நிற்கிற தல்லவா ? ஆகையால், தருமத்தையும் தம்முயற் சியாலன்றி யாசித்துச் செய்தல் அடுக்காத

விஷயமாம். இஃதுணர்த் தவே,

“ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற்
கிரவி னிளிவந்த தில்”

எனப் பெரியாரும் பணித்தார்.

அங்ஙனம் கருமத்தின் பொருட்டு யாசகம் செய்யும்போதே அத்தகைய இழிவும் மானக்கேடும் உண்டாகிறதென்றால், அற்ப மான தோற்பையை வளர்க்க யாசிப்பது எத்தகைய மானயங்



கத்தை அளிக்கவல்லதா யுளத்? இத்தன்மைகளை யெல்லாம் எளிதி லுணர்த்தவே பொதுமறையும்,

“இரப்ப னிரப்பாரை யெல்லா மிரப்பிற்
கரப்பா ரிரவன்மி னென்று”

எனப் புகன்றது.

ஆகவே, தாமடைந்த வறுமையை முயற்சியா லகற்ற வேண் டுமேயன்றி, யாசித்தலால் அகற்றுவோமென்னும் அவாவைபுங்கூட அடை யா திருக்கவேண்டுவ தவசியம். இன்றேல், எக்காலத்தும் எவ்வகையானும் துன்பமே பயக்குமன்றி இன்பம் பயவாதென் பது திண்ணம். ஆகையால்,

" இரவென்னு மேமாப்பி றோணி கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும் "

என்ற ஆன்றோர் வாக்கையே இங்கு ஆதாரமாகக் காட்டலாம்.

இவைகளையெல்லாம் ஆராயுங்கால், மக்கள் தாம் எத்தகைய வறுமை யடைந்தாலும் பட்டினி கிடந்தாலும் சாதலேயன்றி, ஒருவ ரிடத்திற்போய்ப் பல்லெல்லா ந்தெரியக்காட்டித் துன்பங்களையெல்லா முகத்திற்கூட்டிச்

சொல்லெல்லாஞ் சொல்லித் துணைக்கரம் விரித்து நீட்டி இல்லெல்லாஞ் சென்று இரவாதிருக்க வேண்டுமென்பது வெள்ளிடைமலைபோல் விளங்குகிற தல்லவா ? ஆனால், உலக அனுபவத்தை உற்றுநோக்கின், பெரும்பாலோர் அத்தகைய உறுதிப் பொருளை யுணர்ந் தொழுகுவதாகத் தோன்றவில்லை. அஃது அவர்கள் குற்றமன்று. ஆதிகாலத்தில் அவர்கள் செய்த அறத்தின் தன்மையாலன்றோ அங்ஙன மாகிறார்கள் ? ஆகவே, இவைகளை யெல்லா முணர்ந்தொழுகவல்ல எவரும், 'இரப்போர் சொல்லாடப் போமுயிர்' என்னும் மேலையோர் வாக்கையு மெண்ணிப் பார்த்து, இரப்பவர்கட்குத் தம்மாலியன்ற தருமத்தைத் தவறாமல் செய்ய வேண்டும். இன்றேல், அதனைவிடக் கொடியதன்மை யாதுமில்லை யாகும். இதனை,

" இரவுள்ள வுள்ள முருகுங் காவுள்ள
வுள்ளூடி மின்றிக் கெடும் "

என்ற திருவள்ளுவப்பயனே நன்கு தெரிவிக்கிறது.



ஆதலால், நாமனைவரும் எத்தகைய கஷ்ட நிலைமையை யடைந் தாலும் பிறரிடத்திற்போய் இரவாதிருக்கும் இயல்பையே இனிதெனக் கொள்வதுடன், ' இயல்வது கரவேல் ' என்ற ஔவைப் பிராட்டியார் வாக்கையும் அணிகலனாகக் கொண்டு, ஆன்றோர்களொப்பத்தக்க அரிய வழிகளை ஆவலுடனியற்றி, அருட்பெருங் கடலாகிய நம் ஆண்டவன் அடிசேர அல்லும் பகலும் பாடு படுவோமாக.

---

## 89 - ஆம் அதிகாரம்

### கயமை

—

நற்குண நற்செய்கைகள் யாவுமில்லாத முழு மக்களது தன்மையே, 'கயமை' எனப்படும்.

கயவர் தன்மையை நோக்கியே,

" வாதுக்குச் சண்டைக்குப் போவார் வருவர் வழக்குரைப்பார்

தீதுக் குதவியுஞ் செய்திடு வார்தினந் தேடியொன்று

மாதுக் களித்து மயங்கிடு வார்விதி மாளுமட்டு

மேதுக் கிவர்பிறந் தாரிறை வாகச்சி யேகம்பனே " என்றார் பட்டினத்தடிகள்.

எவ்வகைப் பிறவியினுஞ் சிறப்புற்ற மக்கட்பிறவிக்குக் கயமைக் குணம் ஏற்குமா? அவர்கள் அத்தகைய அவமதிப்பையும் அடைய லாமா? ஆகையாலன்றோ அக்குணமுடையோர் ஆயுள் முழுவதும் அவமான காரியங்களையே அன்புடனியற்றி,

அருமை பெருமைகளையு மிழந்து, அனைவராலும் வெறுக்கப்பட்டு, அழியா நரகத்திற்கு மாளாகிறார்கள் ? அவர்கள் அரிதாகிய மக்கட் பிறவியை அடைந்தோ ரென்று அறிவிப்பதும் அடுக்காத விஷயமன்றோ ? இவை கருதியே பொய்யாமொழியா ரருளிச்செய்த குறட்பாவும்,

" மக்களே போல்வர் கயவ ரவரன்ன
வொப்பாரி யாங்கண்ட தில் "

எனக் கூறியது.

கயவர்கள்

அண்டசராசரங்கட்கெல்லாம் ஆதியாகிய நம் ஆண்ட
வன் அன்புகூர்ந்து அருளிச்செய்த அறிவென்னும் அரிய பொருளையு மன்றோ அவலமாக்கிய அற்பர்களாக வமைகிறார்கள் ! ஆதலால்,

அவர்கள் பாவபுண்ணிய மின்னதென்று பகுத்துணர்வ தெங்ஙனம் ? ஈங்கு

திருக்குறள் தீபாலங்காரம்
(பொருட்பால் அவர்கள் மன்மொழி

மெய்களாலுந் தீமையே புரிந்து மகிழ்கிறார்கள். அவர்கள் பொய்யுரையாடல் புறங்கூறல் கொலைபுரிதல் செய்ந்நன்றிகோறல் தீயாரோடிணங்கல் பிறர்மனை நயத்தல் கள் ளுண்ணல் கவறாடல் முதலிய கடுந்தொழில்களையே இயற்றுகிறார் கள். ஆகையாலன்றோ நந்தமிழ்மறையும்,

"நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர்"

என நவின்றது ?

இவைகளை யெல்லா முணருங்கால், அவர்கள் 'உண்டதேயுறுதி கண்டதே காட்சி' எனக்கருதும் கசடர்களென்பது கரதலாமலக மாம். பித்தருக்குத் தங்குணம்

நூலினுஞ் சிறந்ததல்லவா ? ஊனைத் தின்பதாகிய புலிக்குத் தருமநெறியைக் கூறிக் கொலைசெய்தல் பாவமென்றால் அதனை அது அங்கிகாரம் செய்யுமா ? குற்றமில்லாத தூய மனமுடையவர்கட்கும் மனதில் பரிசுத்த மில்லாதவர்கட்கும் இழிவும் சிறப்புமுண்டோ ? ஆகையாலன்றோ அக்கயவர் தாம் விரும்பிய தாழ்வாகிய தீய காரியங்களை விரும்பியவாறே செய்து முடிக்கிறார் கள் ? இக் கருத்துப் பற்றியே பொதுமறையும்,

"தேவ ரனையர் கயவ ரவருந்தா
மேவன செய்தொழுக லான்"

என விதித்தது.

அனுபவமாகப் பார்க்குமிடத்தும் அவர்கள் அத் தீயகாரியங் களால் துன்புற்ற காலத்தும் வருந்துகிறார்களா ? அங்ஙனம் வருந்து வாராயின் மீண்டும் அக்காரியங்களுக்கும் ஆளாவரா ?

ஒருகால் வருந்தினும் தற்சமயம் அனுபவிக்கும் துன்பத்திற்காக வருந்து வாரே யன்றிக் குற்றத்தின் நிமித்தம் வருந்துவதில்லை. ஆகையா லன்றோ அவர்கள் கீழ் மக்களென்று கூறப்படுகின்றனர்? இஃது எத் தகைய அறிவீனமான தன்மை.

இவைகருதியே குமரகுருபர சுவாமிகளும்,

" கண்கூடாப் பட்டது கேடெனினுங் கீழ்மக்கட்
குண்டோ வுணர்ச்சிமற் றில்லாகும்—மண்டெரி
தான்வரய் மடுப்பினு மாசுணங் கண்டுயில்வ
போா பெருமூச் செறிந்து"

என்னுஞ் செய்யுளால் விளக்கியுள்ளார்.

ங்கள்

ஆகவே , அவர்கட்கு ஆன்றோர்களின் அரியபோதனை களை ஆராய்ந்துணரும் தன்மையேது ? ஒருகா லுணர்ந்தாலும் அங்ஙனம் ஒழுகுவரோ ? அந்தோ ! அவர்கள் அறிவுதான் என்னே ! கொல்லும் சுபாவத்தையுடைய புலிக்குக் கொம்பு வாய்த்தாற் போலன்றே கொடும் வழிகளில் பிரவேசிக்கிறார்கள் . ! ஆகையி னற்றான்,

“ அகப்பட்டி யாவாரைக் காணி னவரின்
மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ் ”

என ஆன்றோரும் அருளிச் செய்தார்.

கயவர்களை உலகம் மிக்க அறிவாளிகளென்று உரைக்குமோ ? ஒருபோதுமில்லை. அவர்கள், சாரத்தையெல்லாம் விட்ட சக்கை போன்றவர்களெனச் சாற்றவும் சந்தேகமோ ? இவைகளையெல்லா

முணாவல்லோராகிய நாம் அவர்களிடத்து யாதானுமொரு நற் காரியமிருப்பினும் நம்பலாமா? ஆராய்ந்து பார்ப்போமாயின் அஃது யாதானுமொரு கார ணத்தைக்கொண்டே காணப்படுவதாகக் காண் போம். இதனைத் திருவள்ளுவ நாயனாரும்,

> "அச்சமே கீழ்கள தாசார மெச்ச
> மவாவுண்டே லுண்டாஞ் சிறிது"

எனத் தெரிவித்திருக்கிறார்.

ஆகவே, கயவர்களை யாது காரணம் பற்றியும் நம்பலாகாது. அவர்கள் அரிய பிறவிக்குரிய நாவடக்கத்தையும் நழுவவிட்டவர்க ளாவார்கள். பன்றிக்குக் கூழின் ருசி தெரியுமேயன்றித் தேன் மாவின் சுவை தெரியுமோ? அதுபோலவே அவர்களும் அடக்கத் தின் பயனை அறியார்கள். ஆகையாலன்றோ, அவர்கள் தாமறிந்த இரகசியச் சொற்களை

எல்லோரிடத்தும் உரைக்கும் ஈனர்களாக விருக்கிறார்கள் ? இவைகருதியே உத்தரவேதமும்,

" அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான் ''

என்றுரைத்துளது.

கயவரை எவ்வளவு மேன்மைப்படுத்தினும் அவர்கள் நற்காரியங்களுக்குத் தக்கவர்கள்கார். இற்றெருதுகளால் தேரை யிழுக்க வியலுமோ ? இயல்பிலேயே பெண் தன்மை அமைந்திராத பேடி எவ்வளவு ஆபரணம் அணிந்திருப்பினும் என்ன

௩௬௬ திருக்குறள்
தீபாலங்காரம் [பொருட்பால் பயன்?

எப்போதும் நீரிற்கிடந்தாலும்
உள்ளீரமில்லாத சடையைப் போலன்றோ

அவர்கள் எவ்வளவு செல்வத்திற்
பழகினாலும் இளகு தலில்லாக்
கன்னெஞ்சராகக் காலங் கழிக்கிறார்கள் ?
அனுபவமாக எவரும் அவர்களுடைய
தன்மைகளை அறிந்தே யிருக்கலாம். துரி
யோதனன், ஐவர் யாசகமாகக்
கேட்டகாலத்தும் யாதொன்றையும் கொடுக்க
அசக்தனாய்ப் பின் அனைத்தையு மிழந்து
அவமானப்பட் டதே அதற்குச் சான்றாம்.
இவை கருதியே தேவரும்,

" ஈர்ங்கை விதிரார் கயவர்
கொடிறுடைக்குங்
கூன்கைய ரல்லா தவர்க்கு"
" சொல்லப் பயன்படுவர் சான்றோர்
கரும்புபோற்
கொல்லப் பயன்படுங் கீழ்"

எனப் பலவாறு தெரிவிப்பா ராயினர்.

இம்மட்டோ! அவர்கள் ஏனையோர்

தன்மைகளைப் பார்த்து மன்றோ பொறாமை யடைகிறார்கள்? அக்குணத்தாலன்றோ அவ் வரவக் கொடியோனும் ஐவரை வனத்திற் கனுப்பிய பின்னும், அவர்கள் வாழும் அடவியிற் சென்று தமது பரிவாரங்களுடன் தங்கினால் அப்பாண்டவர்கள் பார்த்து உயிரிழக்க நேருமென் றுன்னிச் சென்று, எண்ணிய கருத்தும் நிறைவேறாது கண்டோர் நகைக்கக் கந்தர்வனிடம் கட்டுண்டு கலக்க மடைந்தனன்? ஆகவே, அத்தகையோர் தன்மை யாதாகும்? இஃதுணர்த்தவே பெருநாவலரும்,

> "எற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால்
> விற்றற் குரியர் விரைந்து"

எனப் புகன்றார் போலும்.

இவைகளை யெல்லாம் எளிதி லுணரவல்லோராகிய நாமெவரும்

அவர்களுடைய அறிவு பெருமை ஆற்றல் முதலியவைகளை ஐயந் திரிபற அறிகின்றோ மல்லவா? ஆகவே, அவர்களுடைய சகவாசத்தை ஆயுள் பரியந்தம் அடையாது, நமக்கவசியமான நற்சகவாசங் களையே பூஷணமாகக் கொண்டு, நாட்டாரும் நாமும் நலம் பெற்றுய்

யப் பாபநாசகராயும், பிரம விஷ்ணு ருத்திரர்களாலுந் தியானிக்கப் பட்டவராயும், தனக்குத் தியானிக்க வஸ்துவில்லாதவராயும் விளங்கா

நின்ற தனிமுதற் கடவுளைத் தியானிப்போமாக.

மூன்றுவது ஒழிபியல் முற்றிற்று.

இரண்டாவது பொருட்பால் முற்றிற்று.



# மூன்றுவது - காமத்துப்பால்

## களவியல்

---

அறவழியினாலாய பொருளைப் பற்றுக்கோடுடையதான இம்மை இன்பத்தைச் சொல்லலே, 'களவியல்' எனப்படும்.

இன்பமென்றது ஒரே காலத்து ஒரே பொருளால் ஐம்புலன்களினாலேயும் அனுபவித்தற் சிறப்பினையுடையதாகிய காம இன்பத்தினை. இது புணர்ச்சி, பிரிவு என இருவகைப்படும். ஆசிரியர் இவற்றைத் தமிழ் நூல்களோடு பொருந்த களவு கற்பு என வகுத்து, உலக நடையோடு ஒத்தலும் ஒவ்வாமையும் உடையனவாக்கிச் சொல்லுகிறார். களவாவது, பிணி மூப்பு இறப்பு இவைகளின்றி எந்நாளும் ஒரே தன்மையராய், உருவும் திருவும் பருவமும் குலமும் குணமும் அன்பும் பிறவும் தம்முள் ஒத்த தலைவனும் தலைவியும்,

பிறர் கொடுப்பவும் அடுப்பவுமின்றி ஊழ்வகையால் தாமே எதிர்ப்பட்டு இன்பத்தினை அனுபவித்தலாம்.

---

## 90-ஆம் அதிகாரம்
## தகையணங்குறுத்தல்

---

பொழிலிடத்து விளையாட்டின் காரணமாகச் சென்ற தலைவி, மகளிர்கூட்டம் நீங்க அதனிடத்துத் தனித்து நின்றபோது, அவளை, வேட்டை விருப்பால் சென்ற தலைவன் துணைவர் நீங்கத் தனித்து ஊழ்வகையால் எதிர்ப்பட்டு, அவளழகு தனக்கு வருத்த முண்டாக்குதலைக் கூறுதலே, 'தகையணங் குறுத்தல்' எனப்படும். ஓர் அழகிய பொழிலினிடத்தே தலைவியோடு

விளையாட
வந்த தோழியர் மலர்கொய்து மகிழ்ந்தும்,
மயிலாடக் கண்டு களித்
தும், குயில் கூவக்கண்டு
குதூகலமடைந்தும், வாச மலர்க்கொடி யில்
ஊசலாடி விளையாடியும் தலைவியைத்
தனியேவிட்டு வெவ்
வேறிடங்களிற் பிரிந்து சென்றார்கள்.
தனித்துநின்ற தலைவி 300
திருக்குறள் தீபாலங்காரம்
[காமத்துப்பால்

எழிலுற அமைந்த அப் பொழிலின்கண் தம் செம்மலர்ச் சேவடிச் சிலம்புகள் ஆர்ப்ப நடந்துசென்று, விரையுறு நறுமலர்கொய்து விளையாடி மகிழ்ந்து இருமாந் திருந்தனள். அப்போது, அம்மலைச்சாரலில் பல இளைஞரோடு வேட்டைக்கு வந்துற்ற தலைவனும் ஆண்டு எழுந்ததோர் கடுமானின் பின்னோடிக் காவல் இளைஞரைக் கைய கன்று, கடிகமழ் நறுங்கண்ணி மேற்கொண்டு, வண்டு மணமயர, அஞ் சாந்தின் நறுமணம் அகன்ற பொழிலிடை பரந்து வீச, வரி சிலை யொடு கணையேந்தி, வடிவு கொண்ட காமன் போலச் சென்று தலைவி நிற்கும் பொழிலிடத்தே புகுந்தனன். இவ்வாறு தலைவனுந் தலைவி யும் ஊழ் டார்கள்.

வினையால் ஒருவரை ஒருவர் எதிர்ப்பட்டுக் கண்

தலைவி உருவு முதலானவை முன் கண்டறிந்தவையன்றி, மிகச் சிறந்தமை நோக்கித் தலைவன் அதிசயித்து, 'இச்சோலையின் கண் உள்ள ஒரு தெய்வப் பெண்ணோ! அல்லாமல், நிற்றலினால் விசேடித்த மயிலோ! அல்லது யாலே இவ்வுலகப் பெண்ணோ!'

தன்மனஞ் செல்லுகின்றமை

என ஐயுற்றான். பிறகு, அவளு

டைய அழகு பார்வை முதலியவற்றாலே வருந்திப் பாதங்கள் நிலந் தடவுதலினாலும் கண்கள் இமைத்தலினாலும் இவ்வுலகப் பெண் ணென நிச்சயித்து, 'ஆ! இப்படிப்பட்ட வனப்புடையவள் என் பார் வைக்கு எதிர்நோக்குதல், தானே வருத்துவதோர் அணங்கு தாக்கு வதற்குப் படையைக் கொண்டுவந்தாற்போலவன்றோ உளது! ஆத லால், இவளை நூலோர் சொல்லும் கூற்ற மென்றாலும் ஒக்கும். கூற் றத்தை இதுவரை சொல்லக் கேட்டேனே யன்றிக் கண்டறியேன். இப்போதுதான் அதனைக் கண்டறியலானேன். ஆனால், அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என்னும் நாற்குணங்களையும் அணிகலனாகக் கொண்டிருக்கின்றனளே ; அன்றியும், பேதைமைக் குணத்தையும் பின்பற்றுகிறதாகத் தோற்றுகிறதே. ஆதலால், இத்தோற்றம் கூற்

றத்துடன் கூடிப் பின் மாறுபடுகிறது.

வருத்துகின்றதனால் கூற்றமோ என்றும்,

இவள் கண்கள் என்னை

என்மேல் ஓடுகின்றதனால்

கண்தானோ வென்றும், இயல்பாக அஞ்சுதலினால் பெண்மானோ வென்றும் அறியக்கூடாததாக விருக்கிறது. ஆ! இவள் அழகிற்கும் பேதைமைக்கும் இக்கண்கள் தகுமா? ஆயினும், அவற்றின்மீது

குற்றமில்லை. அக் கொடும் புருவங்கள் விலக்கினவாயின் அவற்றைக் கடந்து இவள் கண்கள் எனக்குத் துயரைச் செய்யுமோ ? செய்ய மாட்டா. இவள் கண்களுக்கு ஆருயிர்த் துணையா யிருப்பது அப் புருவங்களே. ஆயினும், என்ன பயன் ? இயல்பிலே குற்றமில்லாத குணத்தைப் பெறுதவர் தமது துணைவருடைய குற்றத்தை அகற்று வதெங்ஙனம் ? இவை தான் இங்ஙனமெனின் காண்போருயிரைக் கவரும் கயமுமன்றோ அக்கன்னிகையிடம் காணப்படுகின்றது! அந்தோ ! வெம்மையும் பெருமையுமுடைய தோள்களன்றோ எனக்குத் துணையாக நிற்கின்றன ! அத்துணைகருதி அருகிற் செல்லலாமென்றாலோ, நேராகப்

போர்க்களத்தே வரும் வீரராகிய பகைவர்கட்கும் அஞ்சாத என் மனமானது இவள் நுதலுக்குத் தோற்று நிற்கின்றதே. இஃதென்ன வியப்பு !' என வருந்தினன். மறுபடியும் அத்தலைவன் தலைவியை நோக்கி, 'ஏனோ இவளுக்குப் பூஷணங்களை யெல்லாம் பூட்டினர் ? புறத்தே அழகிய பெண்மானைப் போன்ற பார்வையும் நாணமுமே இவ்வணங்கிற்கு ஆபரணமாக விருக் கின்றனவே. இவ்வணங்கிற்குப் பாரமாயிருக்கும் ஆபரணங்களை அணிந்தாருடைய அறிவீனத்தை யாதென் றியம்பலாம்?' எனப் பல வாறு எண்ணினன் ; மனநெகிழ்ந்தான் ; ஆனந்தம் நிறைந்து அனங் கன் பாணத்தினல் அங்கங் கரிந்து அணைகடந்த வெள்ளம் போல அவ்வணங்கினிடம் ஆசை கொண்டான்.

அவன் அவ்வாசை மிகுதியால், ' ஆ !

காமம் போலச் சிறந்ததுமுண்டோ? இது காய்ச்சப்படும் மதுவைக் காட்டினுஞ் சிறந்ததன்றோ? மது உண்டார்க்கே களிப்பைத்தரும்; காமம் கண்டார்க் குங் களிப்பை அளிக்கிறதே! இவள் குறிப்பை ஆராய்ந்து தெளிவேன்' எனத் தேரித் தன் காதலையும் சொற்களால் சொல்லாது கண்களின் குறிப்பால் காட்டி நின்றனன்.

---

## 91 - ஆம் அதிகாரம்
## குறிப்பறிதல்

---

தலைவன் தலைவியினது வேட்கையைப் பலவாற்றானு முணர்ந்து கூடுதலே, 'குறிப்பறிதல்' எனப்படும்.

தலைவி சந்திரனைக்கண்ட

குமுதமலர்போல முகமலர்ச்சி யக மகிழ்ச்சியுற்று ஆனந்தக் கடலி லாழ்ந்தவளாய், அற்புத வலங்காரத் துடன் பளிங்குபோல் பளபள வென்று விளங்கும் தேக காந்தி யுடையவளாய், திரண்ட குயங்களின் பாரத்தினால் நுண்ணிய இடை ஒடிந்து விடுமென்று சொல்வனபோலப் பாதச் சிலம்புகள் கல கலவெனச் சப்திக்க, விலை யுயர்ந்த வெண் பட்டாடை யுடுத்து, அன்றலர்ந்த புஷ்பக் கொத்துகளில் பஞ்சவர்ணக் கிளிகள் கொஞ்ச, பூங்கொடிகள் பொற்கொடி மாதர்போல அசைய, குடமல்லிகைகள் வெள்ளிக்காளாஞ்சி எந்துவபோல மலர, அம்மலர்களிலிருந்து மடை திறந்தாற் போலக் குபு குபு வென்று குமிழியிட்டுப் பாயும் இனிய தேனையுண்டு

ஸ்ருதி கூட்டுவபோல வண்டினங்கள் ஒலி செய்ய, தத்தளாங்கென்று மத்தளம்போல அங்குள்ள தடாகத்தின் அலைகள் குமுறிச் சப்திக்க, கீதம் பாடுவதுபோல மாங்குயில் தீங்குரலாற் கூவ, கூத்தியர்கள்போல அழகிய கலாபத்தை விரித்து மயில்கள் ஆட, குளிர்ச்சி பொருந்திய மந்தமாருதம் கமகமவென்று பரிமளிக்கின்ற மிருதுவான மகரந்தப்பொடிகளை வாரிக்கொண்டு வந்து கதம்ப மிறைப்பதுபோல இறைக்கின்றதுமான திவ்விய பொழிலிடத்தே நின்று, தலைவன் கண்களாற் காட்டிய குறிப்பை அறிந்தவளாய், அனலிடைப்பட்ட மெழுகுபோல அகங்கனிந்து தானும் கண்களின் குறிப்பால் விடை பகர்ந்து நின்றனள்.

அப்போது, தலைவன் ஆனந்த

மடைந்தவனுகி, 'ஆ! இவ்வடி வழ கமைந்த அணங்கை என்னுசைதீர எப்போது அணேவேன்?' என்றேங்கி, 'நான் இன்று அடைதற்கரிய சுகத்தை அடையப் பெற்றேன். அதோ வேல்போன்ற விழியினிடத்தே வெளிப் படுகின்ற அவளது இருநோக்கமுமே எனக்கு அதனே அறிவிக்கின் றன. ஒரு நோக்கு தன்னிடத்திலுள்ள காதலே யுணர்த்துகிறது
;
மறு நோக்கு என்மீதிருக்கும் அன்பினே லால், இவையே எனக்கு நோயையும்

அறிவிக்கின்றது. ஆத அதற்கு மருந்தையும் அளிக்கின்றனவென்பது நன்கு விளங்குகிறது. ஆகவே, இனி

இவளை அடைவதற்கு எவ்வகையானுந் தடையில்லை. அன்றியும், அவளிடத்து அன்புடைய மகளிர்க்குரிய அரிய குணங்களெல்லாம் அகங்கை மணிபோ லறியக்கிடக்கிறது: அவள், நான்



௲0௪ நோக்குங்கால் நிலநோக்கியும் நோக்காக்கால் தானோக்கியும் தயங்குகின்றாள். அவ்வழகிய நோக்கம் அன்பில்லையாயின் அமையாதன்றோ ? ஆகையால், அவ்வணங்கைக் கூடுவதும் எவ்வகையானும் உறுதியேயாகும். ஆ ! இதற் கையமு முண்டோ ? நான் நோக்காவிடில் அவள் என்னை அன்போடு நோக்குகின்றாள். அம்மட்டோ ! ஏதோ ஒன்றையெண்ணி நாணமுமன்றோ அடைகின்றனள் ? ஆகை யால், அப்பார்வை எங்கள் இருவரிடத்து முண்டாகிய அன்பென் னும் பயிருக்கு வார்க்கும் நீரென்று மறியலாம். அதனை, அவ

ளுடைய புன்சிரிப்பும், சுறுக்கின பார்வையுமே கூறுகின்றனவே. அன்றியும், அவ்வணங்கின் நோக்கு என் மனதை வலியக் கொள்ளை கொண்டு கட்டியிழுத்துச் செல்லுகிறதே ! ஆ ! ஆ ! ஈசன் செயலை நான் என்னென்று சொல்லுவேன் ? எல்லாவற்றையும் துறந்து வைராக்கியம் பூண்டு தனியாய்க் காலத்தைக் கழிக்கக் கானகம் புகுந்து கந்தமூல மருந்தும் தபோதனருங்கூட இவள் வடிவழகைக் கண்டு வாட்டங் கொள்ளாமலிரா ரென்றால் யான் எம்மாத்திரம் ?" என்றேங்கியவனாய், அதற்குதவியாகும்படி அத்தலைவியின் பாங்கியை வேண்ட விரும்பி, அவளருகிற் சென்று காந்த மொழியால் தன்கருத்தை அறிவிக்கலாயினான்.

உடனே, தோழி அவர்பால் ஐயுற்றதுமன்றி, கடுகடுத்து நோக் கிக் கண்ணோட்டமின்றித் தலைவியையும்

தூரத்தே கொண்டு சென்ருள். அதனையுணர்ந்த தலைவன் ஆற்ருதவனுகிப் பின் ' ஓ ! கடு கடுத்துக்கொண்டு சென்ருளாயினும் அதனுள் ஒரு கருத்துக்காணப் படுகின்றது. புறத்தே மட்டும் அயலார்போலக் கடுஞ்சொற் சொன்ஞலும், அச்சொற்கள் அரிய பயனை அளிக்குமென்பது தறியக்கிடக் கிறது. ஆராயுமிடத்து, இவ்வவனியில் பின்னே இனிதாகி முன்னே இன்ஞததாகும் சொற்களைச் சொல்லுவோரு முளரன்றே ! ஆகவே, இவள் செய்கையும் அவ்வாறே யுளதென்பதற் கையமில்லை. அன்றியும், என் ஆருயிரைக் கொள்ளைகொண்ட அவ்வணங்கும் என்னைப் பார்த்துப் பசந்து உள்ளம் நெகிழ்ந்து உள்ளே சிரிக்கின்ருள். ஆகையால், பாங்கியர் சேட்படுத்திலும் பாதகமன்று ' எனப் பலவாறு சிந்தித்து, பின் அவ்வணங்கைக் கூடுதலே

அவசியமெனத் தெளிந்து அவளை அடுத்துச் சென்றான்.



" கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்க
ளென்ன பயனு மில "

என்றதைப்போல, அத்தலைவியும் அவனை இன்புற நோக்கினாள். உடனே இருவர்க்கும் அன்பு பெருகியது ; ஆனந்தம் பொங்கியது ; காதல் மிகுந்தது.

---

## 92 - ஆம் அதிகாரம்
## புணர்ச்சி மகிழ்தல்

---

தலைவன், தானும் தலைவியும் ஒருமைப்பட் டனுபவித்த இன்பத்தினை உவந்து கூறுதலே, ' புணர்ச்சி மகிழ்தல் '

எனப்படும்.

தன் கண்ணிற் கினிய கருத்திற் கிசைந்த காதலியின்பால் அநுபவித்த இன்பத்தினை அல்லும் பகலும் எண்ணி அகமகிழ்ந்த தலைவன், 'ஆ! ஆ! இஃதென்ன ஆச்சரியம்! என் தேகமுழுதும் ஊடுருவிச் சென்று என்னைப் பரவசப்படுத்தி விட்டதே! கண்டு கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று அறியும் ஐம்புலன்களும் இப்பெண்ணொன்றும் பெருந்தகையா ளிடமன்றோ அமைந்துளது! இவை கருதியே தரும வியல்போடு இல்லறத்தில் வாழ்பவன் ஐம் புலன்களையும் விட்டுத் தவமுயற்சி செய்வோ ரெல்லாருள்ளும் மேற் பட்டவனுவானென ஆன்றோரும் அறியக் கூறுகின்றார் போலும்!' எனக் கூறுவானாகிப் பின்னும் எல்லையில்லாக் காதலுக் குட்பட்டான். பிறகு, தலைவன் இரண்டாந்தரமும் முன் கூடிய இடத்தே

சென்று தன் காதலியைக் கண்டு மகிழ்வெய்திக் கலந்து, ' ஆ ! அவ் வின்பத்தை நான் இன்றும் அடையப் பெற்றேன். அம்மட்டோ ! அடைதற்குரிய மருந்தையுமன்றே ஐயந்திரிபற அறியலானேன்.

இரவெல்லாம் இவ்வணங்கை நினைத்து வருந்திய வெனக்கு அவ் வருத்தம் எந்த மருந்தினாலுந் தீரப்பெறாது இடர்தலைப்பாட்டிலே எள்ளளவுமின்றித் தீர்ந்ததே ! ஆ ! இஃதென்ன வியப்பு ! தன்னா லாகிய காம நோய்க்குத் தானே மருந்துமாகி நிற்கின்றாளே ! இன்னும் அம் மருந்தை எப்போது அடைவேன் ?' எனப் பலவாறு எண்ணி எண்ணிப் பெரிதும் வருந்தி, ஒளி மழுங்கி வனப்பழிந்து நின்றான்.

அப்போது தலைவனை அவனுடைய பாங்கன் உற்று நோக்கி, 'ஆ! என் உயிரனைய நண்பா! உனக்குற்ற தென்னை? திரண்ட புயங்களும் இப்படி மெலிந்தனவே! முகமும் புலர்ந்து உள்ளமும் வாடி வருந்துகின்றனவே!' என வற்புறுத்திக் கேட்டுப் பின் வலிய வுணர்ந்தவனாய், 'ஆஹா! அறிந்தேன். பேரின்பத்திற்குரிய நீ அவமான சிற்றின்பத்தில் ஆழ்ந்தி வருந்துவது சிறிதும் தகாதே!' எனப் பலவாறு எடுத்துரைத்தான். அதற்குச் செவிகொடாதவனாகிய தலைவன், 'என் அன்ப! நான் அறிந்த அரிய இன்பத்தினை நீ அறிந் தாயில்லை போலும்; அறிவாயாயின், இவ்வாறு அலட்சியமாகச் சொல் லாய்'

என்றறிவித்துப் பின்னுங் கூறுவானாகி, 'ஐம்புலன்களையும் அனுபவிப்பவர்கட்குத் தாம் விரும்பிய மகளிரது மெல்லிய தோள்க

ளிடத்தே துயிலுந் துயிலைப்போல, அவைகளைத் துறந்த யோகிகளால் அடையப்படுவதாகிய கமலக் கண்ணனுடைய உலகம் வருந்தாமல் அடையக் கூடியதோ? அன்றியும், இவ்வின்பத்தை இப்பொழுதே அடையலாம். நீ சொல்லுகின்ற செங்கண்மால் உலகத்தை அவ்வாறு அடையவியலாதே' என வியந்து, அத்தோழனையே தமக் கருந்துணையாகக் கொண்டு பின்னும் அவ்வணங்கினைக் கூடி, 'ஆ! அக் கினிக் கொப்பாகிய இக்காதலை இவள் எங்கிருந்து அடையப் பெற்றளோ? இதன் தன்மையை என்னவென் றியம்புவது? அருகி லிருந்தால் குளிருகின்றது; அகன்றல் சுடுகின்றது. ஆதலால், இவை எவ்வுலகத்தி லிருந்ததோ! எவ்வாறு சம்பாதித்தாளோ! தெரியவில்லை. இவைதான் இங்ஙனமெனின் பொன்னலம் புனைந்த இவள் தோள்களின் நலத்தையும்

சொல்லொணுதே! அவற்றின் அருமைக்கும் பெருமைக்கும் அளவுண்டோ! எப்போது பெற் றுத் தழுவினுலும் அவை இன்பத்தையே செய்கின்றன. ஆகை யால், அத்தோள்கள் அமிழ்தத்தினுல் செய்யப்பட்டனவே யென் பதற் கையமில்லை. ஆகையாலன்ருே, அதனைத் தீண் டத்தீண்ட என் உயிர் தளிர்க்கின்றது! அவற்ருல் அழியாப் பேரின்பத்தையு முன்ருே என்னுயிர் அடைய விருக்கின்றது!' எனச் சிறப்பித்துக் கூறி நின்றனன்.

அஃதுணர்ந்த தோழி அத்தலைவனை நோக்கி, 'இவளை நீ மணந்துகொண்டு, உலகோர் தம் வீட்டிலிருந்து தமது ப்ங்குப் பொருளை உண்ணு மில்லறத்தோடு பொருந்தவேண்டு மென்ருள். ௬௦௬

தலைவன் அது கேட்டுப் பின்னும் அக்களவொழுக்கத்தையே விரும்பி ' ஆ ! இவ்வழகிய பெண்ணின் புணர்ச்சியானது உலகோர் தம் முயற்சியால் வந்த பொருளைத் தமக்குரிய மனையிலிருந்து தென் புலத்தார் முதலிய ஐவருக்கும் பகுத்து கொடுத்துத் தமது பாகத்தைத் தாமுண்பதுபோலு மின்பத்தை அளிக்கின்றதே!

ஆகையால், இன்னும் மணக்கவும் வேண்டுமோ ? ஆனால், ஒத்த அன்புடையவர்களாகிய எங்களுக்கு ஒருபோதும் விடாத புணர்ச்சி உத்தமமென் றுரைக்கலாம். அஃதும் உண்மையே. ஆயினும்,

அஃது எங்களுக்கு அவ் வளவு அவசியமன்று'. ஆழ்ந்துணரு மிடத்து, மணந்து கொண்டு காமத்தை இடைவிடாமல் எக்காலும் அனுபவிப்பவர்

அடையும் பயன்கள் யாவை ? புணர்ச்சி இனிதாகும் பொருட்டு வேண்டும் ஊடலும், அவ்வூடலை அளவறிந்து நீக்குதலும், அதன் பின்னுண்டாகின்ற புணர்ச்சியுமாகிய இவைகள் தானேயன்றி வேறுண்டோ ?' எனத் தருக்கமாடித் தாங்கவியலாக் காதலால் பின்னும் தலைவியைக் கூடிய தலைவன், ' ஆ ! இவ் வணங்கினிடம் நான் அனுபவிக்கும் இன்பம் நாளுக்குநாள் நூல்களாலும் நுட்ப அறிவினாலும் பொருள்களை யறிய முன்னைய அறியாமை காணப்படுவனபோலப் புதிது புதிதாக வன்றோ தோன்றுகிறது. இதனைவிட வேறு சுகம் உலகிலுண்டோ ? இல்லை. ஆகவே, இஃதென்ன புதுமை !' எனத் தனக்குள்ளே புகல்வானாகிப் பானுவைக் கண்ட பதுமம்போல அகங்குளிர்ந்து முகமலர்ந்து இருந்தனன்.

---

# 93- ஆம் அதிகாரம்
# நலம்புனைந் துரைத்தல்

---

தலைவன் தலைவியினது நலத்தினை வருணித்துக் கூறுதலே, " நலம்புனைந் துரைத்தல் " எனப்படும்.

தான் அநுபவித்த இன்பத்தால் அகமகிழ்ந்த தலைவன், தலைவி யினது பரிசத்தின் தன்மையைப் பலகாலு மெண்ணி, மோப்பக் குழைவதாய மெல்லிய அனிச்சமலரை நோக்கி, ' ஓ ! அனிச்சப் பூவே ! மென்மையால் உலகில் நீயே மேலானாய் ! உன்னுடைய மென் மைத் தன்மை ஒரு பூவிற்குமில்லை. யாரும் அதனை நன்றாய் அறி அதிகாரம் - கூ.]



வர். ஆயினும் , எம்மால்

விரும்பப்பட்டவளுடைய இயற்கையை இன்னதென்றுணர்வாயா ? ஆ ! நின்னைக் காட்டிலும் மென்மையுடையவ ள் அவளென்பதை நான் அன்றே தீண்டியறிந்தேன். ஆத லால், இனி உலகில் நானே மெல்லியல் என்பதை நீ மறப்பாயாக ' ஏனக் கூறி மகிழ்வானாயினான். நிற்க.

இயற்கைப் புணர்ச்சி நீக்க முதலாகத் தலைவியின் கண்களைக் காணப் பெறுமையின், அவற்றோடு ஒருவாறு உவமிக்கும் மலர்களைக் கண்டுழியெல்லாம் அவற்றின்கண் தம் காதலைச் செய்து போந்த தலைவன், இடந்தலைப்பாட்டிலே இதுபொழுது அக்கண்களின் நல முழுதுந் தானே அநுபவித்தமையின், அம்மலர்களைக்கண்டு மயங்கிய மனதினை நோக்கி, 'ஆ ! நெஞ்சே உனக்கு என்ன பேதைமை ! அம் மலர்களைக் கண்டு மயங்கி நின்றனையே !

என்கருத்திற் கிசைந்த காதலியின் கண்களைக் காணுதபோதுதான் அவற்றைக்கண்டு களித் தாய். இப்போது கண்டறிந்தும் அவற்றைக் கண்களென்று கருத லாமா ? அந்தோ ! என் அரிய காதலியின் கண்களென்று நீ கருதும் பூக்கள் எவராலும் பார்க்கப்படுகின்றனவே ! ஆ ! அவள் கண் களோ நான் ஒருவனே காணப் பெற்றன ; அவை அவள் கண் களுக் கிணையாகுமா ? ' எனக் கூறித் தன்னை மறந்தவனாய், மனதிற் குள், ' ஆ ! ஆ ! அவ் வடிவழ கமைந்த ஆரணங்கை யான் இன்னும் எப்போது கூடுவேன்?' என்றேங்கி வனப்பழிந்து நின்றான்.

அதுகண்ட அவனது பாங்கன், 'என் உயிரனைய நண்பனே ! ஒரு நங்கையை நினைத்து இங்ஙனம் வாடி நிற்றல் நமக் கழகோ ? ' எனப் பலவாறு எடுத்துரைத்தும் சிறிதும் செவிகொடானாய் நின்ற தலைவன்,

'என் அன்ப! நான் காணப்பெற்ற உருவின் மிக்க திருவினை நீ கண்டாயல்லை; காண்பாயாயின் இவ்வாறு சொல்லாய்' என்றான். தலைவன் காதல் வரம்பு கடந்து கஷ்டப்படுவதைக் கண்ட பாங்கன், 'அவ்வாறாயின் அத்தகைய திருவுடையாள் எங்குளாள்? எத்தன்மையாள்? கூறுவாயாயின் உனக்காக நான் கண்டுவருவேன்' எனக் கழறினன். அதுகேட்டு அவளது இயல்பை எடுத்துக்கூற இணங்கிய தலைவன், 'ஆ! என் அருமைத் தோழா! என்னால் விரும்பப்பட்ட அவளது தோள்கள் பசிய மூங்கிலைப் போன்று உருண்டு திரண்டு ஒள்ளியனவாயிருக்கும். மேனியோ மாந்தளிரைப் போன்ற நிறமா யிலங்கும்.



பற்கள் முத்துக்களைப் போல ஒத்திருக்கும். ஆ! ஆ! நறு நாற்றமே அவளுடைய உடலின்

இயல்பாகிய நாற்றம். அம்மட்டோ ! அவள் மையுண்ட கண்களோ! நெய்யுண்டவேல்களே. வேறென்ன சொல்லு வேன் ? ' என வியந்து அவளைக் கண்ட விடத்தையும் அறிவித்துத் தன் ஆருயிர்த் தோழனால் அவளைத் தன் அகங்குளிரப் புணர்ந்தான்.

பிறகு, அவன் அருகிலிருக்கும் குவளை மலர்களை நோக்கி, ' இவை எங்ஙனம் நிமிர்ந்து நிற்கின்றன. அந்தோ பாவம் ! இவை காணும் தொழிலை யுடையனவாயின் என் காதலியின் கண்களைக் கண்டு இவள் கண்ணழகிற்கு நாம் இணையாகோமெனக் கருதி நாணத் தால் தலைகவிழ்ந்து நிலநோக்கும். இவற்றிற்குக் காட்சியுமில்லை ; ஞானமுமில்லை. ஆகையாலன்றோ, இவை செம்மாந்து வானைநோக்கு கின்றன?' என வழுத்தி, பகலிலேயே அடையாளம் வைத்த விடத்தில்

அவ்வணங்கைப் பின்னும் அவனுடன் கூடினன். அப்போது அவன், அவள் சூடிய பூவணி கண்டு அதிசயித்தவனய், 'அந்தோ ! இஃதென்ன பேதைமை! தன் மென்மையைத் தானே அறியாள் போலும். ஆ! கொஞ்சமும் அறியவில்லையே! ஆகையாலன்றே, அனிச்சப் பூவை முகிழ் களையாமல் முடித்திருக்கின்றள். அந்தோ ! இவள் இடை தாங்குமா ? ஆ ! இந்தப் பாரம் பொருமல் இடை இதோ முறிந்து விடப்போகின்றது. முறிந்தால் அதற்கு நல்ல பறைகளொலியா' என அவளுடைய மென்மையை விரித்துரைத்து, மீண்டும் இரவிலே சேரக் கருதி அவள் மனைக்கருகு வருவானயினன். அங்ஙனம் அனங்கன் பாணத்தினல் அலக்கணுற்று அவள் மனைக்கருகிற் சென்ற தலைவன் தம்மாருயிர்த் துணைவியின் அருகிற்சென்று, ' ஆ ! என் அன்பிற் கனியே! வானத்து மீன்கள்

அங்கும் இங்கும் அலைகின்றன பார். அந்தோ பாவம்! அவற்றிற்கு அறிவில்லை. ஆகையாலன்றோ அவைகள் உன் முகத்தைக் கண்டு தங்கள் மதியமென் றாலோசிக்கின்றன ? ஆதலாற்றான் பதியிற்கலங்கி ஓரிடத்திலும் நிலை பெறாது ஓடித்திரி கின்றன. அந்தோ ! இஃதென்ன பேதைமை ! அவற்றின் மதிய மானது, குறைந்த கலை வந்து நிரம்பிப் பின்னும் குறையும் தன்மை யுடையதன்றோ ? ஆ ! என் அருமைக் காதலியே ! உன் முகத்திற்கு மறுவுண்டா ? இவ்வாறிருக்க, அம்மீன்கள் க்றையுடைய் மதியத் தோடு மறுவிலா் உன் முகத்தை யிடுப்படுத்தி அறியாமை கொண்டு அதிகாரம் - கூ.]

களவியல் ௬0கூ

மருண்டு திரிகின்றதைக் கண்டாயா ?' எனக் கழன்று, அம்மதியினை யும் நோக்கி, ' ஓ

! மதியே ! இம்மாதின் முகம் போல
ஒளி வீச உன்னால் முடியுமா ? அம்மட்டோ !
அழகைக் கெடுக்கும் மறுவையு மன்றோ
உடையதானாய். ஆகையால், நீ என்னை
மகிழவும் செய்யாய்; என் காதலையும்
அடையாய். ஆயினும், நான் ஒன்று
உரைக்கின்றேன்; கேள். இம்மலரன்ன
கண்ணாள் முகத்தை நீ
யொத்திருக்கவேண் டுதி யாயின், அங்ஙனம்
ஒத்தற்குப் பலர் காணத் தோன்றாது என்
மாட்டு அவள் போன்று தோன்றுவாயாக'
என்றுரைத்து, உள்ள மகிழ்ந்து தம்
காதலியோடு கலந்து புறப்பட்டான்.

அப்போது பாங்கி, 'தன்
துணைவியாகிய தலைவியை உடன் கூட் டிச்
செல்லென்றாள். அது கேட்ட தலைவன், 'ஆ!
நங்காய் ! அங்ஙனமே அழைத்துச் செல்ல
நானும் ஆவல் கொண்டேன். ஆயினும்
ஒன்று அதனைத் தடைப்படுத்தியது. நான்

போகும் வழியோ பாலை வனம். அன்றியும், முள்ளும் கல்லும் நிறைந்த முரம்பு. நிழலும் இல்லை. நீரும் இல்லை. ஆதலால், உன் தலைவியாகிய என் காதலி யின் மெல்லடி அதைப் பொறுக்குமோ? உலகத்தாரால் மேன்மைக்கு உதாரணமாக எடுத்துச் சொல்லப்பட்ட அனிச்சப்பூவும், அன்னத்தூவியுமே இவ்வணங்கின் அடிக்கு நெருஞ்சி முட்போல வன்றோவிருக்கும்? ஆகவே, இத்தகைய மெல்லடியுடையாள் பரல் நிறைந்த பாலைவனத்தை எங்ஙனம் கடப்பாள்? என்ற ஆலோசனையினாலேயே யான் அஞ்சுகின்றேன்' எனப் புகன்று அவ்வணங்கைப் பிரிந்து அகல்வானாயினன்.

---

## 94-ஆம் அதிகாரம்
## காதற்சிறப் புரைத்தல்

---

தலைவனும் தலைவியும் தத்தம் காதல் மிகுதியைக் கூறுதலே,

காதற்சிறப் புரைத்தல்' எனப்படும்.

தலைவியைக் கூடிச்சென்ற தலைவன் மாரனது மலர்க்கணையால் மயங்கி, அம்மங்கையால் காதல்மிகுந்து கலந்து, அதனாலாய இன்பத் தினைப் பலகாலும் எண்ணி எண்ணி, இதயம் மெழுகா யுருகி, ' ஆ! இம்மெல்லிய மொழியினை யுடையாள்து வாயினின் றூறிய தேறலை

௬உ



யென்னென் றுரைப்பேன்! அதனைப் பால் எனலாமா? அல்லது தேன் எனலாமா? இல்லை. இல்லை. அவையிரண்டும் கலந்த கலவை யென்பதே கண்ணியமுடைத்து. பாலின் சுவை வேறு தேனின் சுவை வேறு எனினும், அந்த இரண்டும் கலந்த

கலவை இன்ன தென் றுணரமுடியாத இன்சுவையாக விருப்பதுபோல, இவள் வாயில் ஊறிய நீரும் இன்னதென் றுணர முடியாத இன்சுவை யுடை யது ' எனப் புகன்றான்.

ஊழ்வலியால் நிகழ்ந்த தெய்வப் புணர்ச்சியாகலான், அது பொழுது ஊழின் வயப்பட்டு உணர்ச்சியில்லாதிருந்த தலைவி பின் னர்த் தெளிந்து, இவன் யாவன்கொ லெனவும் என்கணன்புடை யன்கொ லெனவும் இ வனை இன்னும் தலைப்பெய்தல் கூடுங்கொ லென வும் எண்ணிய எண்ணத்தினைக் குறிப்பானறிந்த தலைவன் தலைவியின் ஐயநீங்குமாறு, 'இந்த மாதினுடைய நட்பினை என்ன சொல்லுவேன். ஆ ! இவளோடு எனக்குண்டாகிய நட்பு உடம்போடு உயிரிடத்துண் டாகிய நட்புதானே ? உடம்பும் உயிரும் எவ்வாறு

ஒன்றை ஒன்று இன்றியமையாததா யுளதோ, அவ்வாறே நாங்களும் இன்றியமை யாதவர்களாக விருக்கின்றோம். ஆகவே, இவளுடைய நட்பை அள விட்டுச் சொல்ல வியலாது' என்றான்.

பிறகு, இடந்தலைப் பாட்டிலே தலைவி நீக்கங் கருதிய அவன், ' ஆ ! என் இருவிழிகளின் கருமணிகளிலு முறையும் பாவாய் ! நீ அவ்விடம் விட்டு அகன்றுவா. இல்லையேல், என்னால் விரும்பப் பட்ட திருநுதலை யுடையாளுக்கு இடமில்லையாகும். அந்தோ ! இவளை நான் காணுமலு மிரேன். அன்றியும், இவள் அப்புறம் போகத்தக்கவளும் அல்லள். ஆகையால் நீங்கள் இருவரும் ஒருங்கு இருக்க வியலுமாயின் இருங்கள். இன்றேல் இவளுக்கு அவ்விடத்தை விட்டு நீ அப்புறம் செல்வாயாக' வெனப்

புகன்று நீங்கினன்.

பிறகு, பகற்குறியிலே தலைவியின் மீது

எல்லையில்லாக் காதல்

கூர்ந்து நான்முறைப்படி அம்மங்கையால் புறத்தொழிலும் அகத் தொழிலும் அவலுடனியற்றி அகங்குளிர்ந்து, 'ஆ! எனதருங்

காதலியுடன் நான் அணையும்போது அனுபவிக்கும் அளவிலாத இன்பத்தை யாதென் றியம்புவேன்! ஆ! ஆ! அதனை யுன்னிப் பார்க்குங்

அதிகாரம்: கூச.] களவியல்

சிக்கி

கால் அவளும் நானும் உடலும் உயிரும் போலவன்றோ விருக்கின்றோம். ஆகையால், நாங்கள் ஒருவரைவிட் டொருவர் பிரிவோமாயின், உய்யும் வகை யில்லையாகும்' எனக் கூறி, ஒருவாறு தெளிந்து செல்லக் கருதினன். அப்போது, அவ்விருவருடைய உள்ளங்களையும் உள்ளங்கை மணிபோ லுணர்ந்த ஒரு தோழி வந்து, 'ஆ! என் அருயிர்த் தலைவியின் அன்ப! இவ்விடம்

விட்டகன்ற காலத்து நீர் எங்களை நினைத்தும் அறிவீரோ?' வென்றாள். அது கேட்ட தலைவன் ஆச்சரியம் அடைந்தவனாய், 'ஆ! ஆ! இஃதென்ன புதுமை. ஒள்ளியவாய் அமரைச்செய்யுங் கண்ணிணையுடையாள் குணங்களை யான் மறந்தேனாயின், நினைப்பேன்; அவள் உயர் குணங்களே என்னை ஒரு நிமிஷமும் நினைப்பற்றிருக்கச் செய்யாதே!' எனப் புகன்று சென்றான்.

அவ்வாறு செல்லவே தலைவி அவன் பிரிவுக் காற்றாதவளாகி அகங்கருத்தா ளெனினும், அன்பின் மிகுதியால் அயலார்க் கிடங் கொடாதவளாய், 'ஆ! என் அருமைக் காதலர் அன்பை யாவரா லும் அளவிட்டுக்கூற வியலாது. அரைநிமிஷமும் அவர் என்பார்வையி லிருந்து அகல்கின்றா ரில்லையே! அவர் அவ்வளவு நுண்ணியவர் என்பது சொல்லவும்

வேண்டுமோ? இவை கருதியே நான் இமைப்பதற்கும் அஞ்சா நிற்கின்றேன். ஏனெனில், இமைப் பதனுல் உண்டாகும் வருத்தத்தை அவர் எங்ஙனம் சகிப்பார்? அவ்வருமை பெருமைகளை அறியாத அறிவிலிகளே அவர் என்னை விட்டு அகன்றுளார் என்றுலோசிக்கலாம். எங்களைப் போல, இருவர் மனதும் ஒரு மனதா புவந்து ஒற்றுமை பெருகிப் புணர்ந்தவர் கட்கேயன்றி, ஏனையோர்கட்கு அவர் தன்மை எவ்வாறு புலப்படும். இப்போது என் அன்பர் எங்கு சென்றிருக்கின்றூர்? ஆகையாற் றூன் யான் அஞ்சன மெழுதுவதையும் அகற்றியுளேன். காதல் இயல்புகளைக் கண்டோர்கட்கு இதன் கருத்தும் கரதலாமலகமே யாகும். ஆகவே, நான் அதிகமாகக் கூறவேண்டியதில்லை. அன்றியும், நேசமிகுந்து பாசமீறிய நாயகர் கண்ணிலன்றி கருத்திலும் காந் துறைவார்

என்பதை யாவரும் அறிந்தே இருக்கலாம். இது கரு

தியே நாணும் வெம்மையாக வுண்பதையும் விட்டிருக்கின்றேன்.

இவ்வாறிருக்க, ஏனையோர் அவரைப் பழிப்பது என்னே? நான் அப் ச்கஉ

திருக்குறள் தீபாலங்காரம்

[காமத்துப்பால் பழிகளைச் செவி

கொடுத்துக் கேட்பேனே? இன்னும், அவருக் கென்னிடத்து அன்பில்லை எனவுமன்றோ இயம்புகிறார்கள்? இஃ தென்ன கொடுமை! ஆழ்ந்து பார்க்கின் அவரா அன்பிலரென் றறை தற் குரியவர்? அவர் என் அன்பைப் பெருக்கி ஆருயிரைக் காக்

கும் அரு கோயை அளித்தவரே யாயினும், அரை நிமிஷமும் மறைந்திருப்பவ ரல்லவே. அவர் அல்லும் பகலும் என் விழிகளி

ஓம் இருதயத்திலும் இருந்தே யென்னை மகிழ்விக்கின்றார்' எனப் பலவாறு பன்னிப் பன்னிப் பகர்ந்ததோடு, பஞ்ச புலன்களும் பரவசப்பட்டிருந்தாள்.

---

## 95 - ஆம் அதிகாரம்
## நாணுத்துற வுரைத்தல்

---

தலைவனும் தலைவியும் தூரத்தே பிரிந்திருக்குங்கால், தம் தம் காதல் மிகுதியால் நாணமிழந்து நிற்றலைக் கூறுதலே, 'நாணுத்துற வுரைத்தல்' எனப்படும்.

தலைவன் தன்னுருயிர்க் காதலிபால் அநுபவித்த இன்பத்தினை அல்லும்பகலும் எண்ணி எண்ணி ஆற்றாதவனாய்ப் பின்னும் அவ்வின்பத்தை அநுபவிக்கக் கருதி அத்தோழியிடம் அடுத் தடுத்து நெருங்கியும் தனது விருப்பம் நிறைவேறப்

பெறுதவனாய்ப் பெருங்காதலால் உழந்தான். ஒருவன், காதலித்த ஒரு பெண் கிடைப்ப தருமை யெனத் தெளிந்தபோது, அத்தகையாள் போன்று ஓர் உருவம் வரைந்து இடக்கரத்திற் பிடித்து, மேனி முழுதும் நீறு பூசி, அரசன் கடை வாயிற் சென்று நிற்பின், அக்கொற்ற வன் ஆணையால் பனங்கருக்கு மட்டையினாலாய ஒரு குதிரையும் சில எலும்பணியும் கொடுக்கப்படும். அவன் அவ்வணியை அணிந்து, அச்சித்திரத்தை இடக்கையிற் பிடித்து உற்று நோக்கிய வண்ணமே அக்குதிரையின் மீது ஆரோகணித்து, வீதியின் கண் வரும் போது அக்கருக்கு மட்டை அறுக்கும் சரீரத்தின் எப்பக்கத்திலும் இரத்த சம்பந்தமின்றி இந்திரியம் வெளிப்படின், அவ்வரசர் மடலேறியவன் காதற்குரியவள் எவர்

படி மணஞ் செய்வித்தல் வேண்டும். இது பழைய கால வழக்கம். இவ்வாறு தலைமகன் மடலேறியாயினும் தம் காதலிபால் இழந்த இன்பத்தை மீண்டும் அடையக் கருதினன்.

அஃதறிந்த தோழி அத் தலைவனை நோக்கி, ' நாணும் நல்லாண் மையு முடைய உம்மால் மடல் ஏறுதல் இயலுமோ ?' எனக் கேட் டாள். தலைவனும் ' ஆம், இப்பொழுது அவளும் நாலும் உட லும் உயிரும்போல ஒற்றுமைப்பட்டு விட்டதனல், அந்நாணும் நல்லாண்மையும் என்னைவிட்டு அகன்று விட்டன. உண்மை யைக் கூறுமிடத்து இப்பொழுது

எனக்குள்ளதெல்லாம் எனதாருயிர்க் காதலிபால் அனுபவிக்கும் இன்பத்தின் நினைவேயன்றி வேறின்று. ஆதலால், நான் காம மிக்கார் எறும் மடலை ஏறுவதில் சிறிதும் பின் வாங்கேன். ஆனால், நாணமும் நல்லாண்மையும் காமவெள்ளத்திற்குப் புணையாயிற்றே ; அவ்விரண்டையும் நீக்குவது எங்ஙனம் இயலுமென்றெண்ணலாம் ? சற்று ஆழ்ந்து பார்க்கின் அதன் உண்மையும் ஆச்சரியத்தை விளைவிக்கும். காம வெள்ளத்தைக் கடத்தற்குக் கொண்ட நாணும் நல்லாண்மையு மாகிய புணைகளை அவ்வெள்ளம் என்னைவிட்டு இழுத்துக்கொண்டு போகா நிற்கின்றது. அன்றியும், அவை வந்த வகையையும் அறிவாயா ? ஆ! ஆ! அவ்வணங்காகிய உன் தலைவியினாலேயே அதனை அடையப்

பெற்றேன். அம்மட்டோ ! மாலைப் பொழுதில் அநுபவிக் கும் துன்பத்தையும், அதற்கு மருந்தாகிய மடலைப் மன்றே நான் அடைய விருக்கின்றது. ஆகவே, இவை யனைத்தையும் இப்பொழுது என்னருங் காதலியே ஈந்தாள் என்பது எடுத்துக் காட்டவும் வேண் டுமோ ? ஆ ! இதன் காரணமாகவன்றோ என் கண்கள் எக்காலமும் உறங்குதலை ஒழித்து நிற்கின் றன. பேயும் கண் ணுறங்கும் நள் ளிருள் யாமத்தும் யான் உறக்கம் கொள்ளாது மடலேற மன மிளை வேன். எனக்கு மடலேறுங் காலம் என்பது ஒன்று வேண்டுவ தில்லை. ஆகலின், கால தாமதமின் றி என் கருத்திற் கிசைவாயாக' எனக் கூறு வானுகிப் பின் னும் ' ஆ ! என் பிறவியைப்போலத் தகுதியான பிறப்பு தாணியில் உண்டோ ? ஆகையாற்றான்

யான் மடலூர்க் தேனும் அம்மங்கை யின்பத்தை அடைய விருக்கின்றேன்' என்றுரைப்பானுகி எல்லையில்லாக் காதலால் ஏங்கியிருந்தான். நிற்க.



தலைவனைப் பிரிந்து தனியளாய் இருந்த தலைவியும் தன்னுள்ளம் வாடி, உடலிளைத்து, ஒன்றிலுஞ் சிந்தை யில்லாதவளாகி, 'ஆ! என் காதலை என்னென் றுரைப்பேன்! அது, கற்புக் குணத்தால் தான் வெல்லக்கூடாதவ ளென்று பயப்படாமலும், மிகவும் காக்கத் தக்கவளென்று இரக்கஞ் செய்யாமலு மிருப்பதன்றி, ஏனையோர் கட்கு வெளிப்படுத்து மியல்பையு முடையதா யிருக்கின்றதே; ஆதலாற்றான், நான் மறைக்க மறைக்கச் சிறிதும் மறைபடாமல்,

ஊரும் நாடும் உணர வெளிப்படுத்துவதாய் விட்டது. ஆனால், அதனுள்ளும் ஓர் உண்மை யுணரக்கிடக்கின்றது . தான் முன் அடங்கியிருந்ததனால் எவரும் தன்னை அறிந்திலரென்று தானே வெளிப்பட்டு அறி விக்க நினைத்தே அங்ஙனம் வெளிப்பட்டது போலும் !' என் றுரைக்கா நின்றதை யுணர்ந்த தன்னுருயிர்த்தோழி நகைக்கக் கண்டு நாணமிழந்தவளாய், ' ஆ ! என் அன்பார்ந்த தோழியுங்கூட யான் படும் அல்லலைக் கண்டு ஆறுதல் கூறாது அலக்கழிக்கின்றனளே ! ஆகவே, இவள் இரக்கமும் அன்பும் என்னே! ' எனத் தனக்குள்ளே வருந்துவாளாய்த் தன் ஆருயிர்க் காதலர்பால் கொண்ட அன்பால் ஆராத்துயரடைந்து ஆற்றுதவளாய் மயங்கி இருந்தனள்.

---

# 96 - ஆம் அதிகாரம்
# அலரறிவுறுத்தல்

---

களவொழுக்கம் வேண்டி நின்ற தலைவன் பிறர் கூறும் அலரால் தமக்காகின்ற விதத்தைத் தோழிக் கறிவித்தலும், மணமாவது உடன் போக்காவது வேண்டி நிற்கும் தலைவியும் தோழியும் அவ் வலரை அவனுக் கறிவித்தலுமே, ' அலரறிவுறுத்தல் ' எனப்படும்.

தலைவன் பின்னும் பலகாலும் வந்து இன்பம் நுகருமிடத்து, அக்களவொழுக்கம் தலைவியின் நற்றாயாலும் சுற்றத்தாராலும் ஏனையோராலும் அறியப்படுமாயின் இழுக்காம் என்று அச்சங் கொண்ட தோழி, ஒரு நாள் இரவுக்குறி தவறி வந்த தலைமகனைக் கண்டு, ' உங்கள் இருவர் களவொழுக்கம் ஊரரால்

அறியப்பட்டு எங்கும் அலராக எழும்பிப் பரவி நிறைந்துள்ளது ' என்றாள். அது கேட்ட தலைமகன் அதிசயித்துப் பின் ஒருவாறு தெளிந்தவனாய், 
' ஆ ! அப்படியா ? அவ்வலர் காரணமாகவன்றோ என்னுயிர் நிலை பெற்றிருக்கின்றது ! அஃதில்லையாயின் நான் அடைதற்குரிய பயன் இவ்வுலகில் யாதுமில்லையாகும். ஆராயுமிடத்தும் அவ்வலரானது எனக்கு அரியபயனை அளிப்பதா யுளதென்பதற் கையமில்லை. ஆனால் என்னைத்தவிர எனையோர்கள் அதனை அறிந்திலர் போலும். அவர்கள் அறிவினத்தைப்பற்றி நான் மிக வருந்துகின்றேன். ஆயினும், அவ்வலரால் உண்டாகு மின்பம் அதனைப் பொருட்படுத்த வில்லை யெனலாம். அது அவள் சேர்க்கையைப் பெறாமலிருந்தே பெற்றது போலும் இன்பத்தை

அளிக்கின்றது. அங்ஙனம் அல ரில்லையாயின் என் காமமும் இங்ஙனம் அலருமா? ஆகையால், அவ் வலரானது நான் அடைதற்கரிய இன்பத்திற்கு அவசியமே யென்பதும் அகங்கை நெல்லிக்கனியன்றோ? ஆராயுமிடத்தும், அவ்வலரா லன்றோ கள்ளுண்பார்க்குக் களிக்குந்தோறும் இனிதாக விருப்பது போல, என் காதலும் இனிதாக விருக்கின்றது? ஆதலால், அதனை நாங்கள் அடைந்ததும் அரிதாகிய தவப் பயனே யாகும்' என்றுனைந்தித்துக் கூறி அகமகிழ்ந் திருந்தான்.

இவ்வாறிருக்க, இடையீடுகளானும் இரவுக் குறியானும் அவனை யெய்தப் பெறுத் தலைவி காதற் பெருக்கால் உண்டாகிய தன் கருத்தை அறிவிக்க வேண்டுமென்ற அவாமிகுதி யுடைய வளாய், அங்கு நின்ற தலைவ னுணருமாறு, 'ஆ! என் அருங்காதலரை நான்

காணப்பெற்றது ஒரு தினமே யாகும். எனினும், அது திங் களை யரவம் தீண்டியதுபோல, இத்தேச முழுதும் வியாபித்து நிற்கின்றது. ஆகையால், அவ்வலரைக் காரணமாகக் கொண்டு, இனிக் களவொழுக்கத்தை வேண்டாது கடிதில் மணஞ்செய்து கொள்ளவேண்டும்' எனக் கூறு நின்றனள். அது கேட்ட தோழி, 'ஊரவ ரலரும் அன்னை சொல்லும் நோக்கியாகிலும் நீ பொறுத்தல் செய்யாது இங்ஙனம் கூறி நிற்பது இழிவல்லவா?' என்றாள். அதற்கு அத்தலைவி, 'ஆ! அவை எனக்கு எவ்வகை யால் இழிவாகும்? அவர்கள் சொல்லும் அலரானது என் அன்பார்ந்த காதலர் மீதிருக்கும் ஆசையாகிய பயிருக்கு ஆக்கத்தை அளிப்பது மன்றி, அதனை வளர்க்கும் அரு நீராகவுமன்றோ வமைகின்றது. ஆதலால், நான் அடங்கி நடப்ப தெங்ஙனம்?

[காமத்துப்பால் காரணத்தாலும் அறிவின் விசேடத்தாலும் அவ்வாசையை அடக்க நினைப்பேனாயின், அவை அடங்காது அனலில் நெய்யைச் சொரிந்தாற் போலவன்றோ ஆக்கங்கொண்டு அதிகரிக்கின்றது. அது யாவரு மறிய விவாகஞ் செய்வதனால் ஒருவாறு தீரு மென்னலாம்' என் றுரைத்து இருந்தாள். அப்போது அவள், தமதருங் காதலன் மண முடிப்பதற்குப் பொருள் சம்பாதிக்கப் போயினனெனச் சொல்லக் கேட்டபடியால், பின்னும் ஆராத் துயரடைந்தவளாய், அருகிலிருந்த தோழிபால் 'அவர் என்னை முதன் முதல் கண்டபோது உன்னை விட்டு நீங்கமாட்டேன். யாது காரணம் பற்றியும் நீ வருந்தாதே' என்று வலியுறுத்திக்

கூறினர். இப்போது அதனையும் மறந்து கண்டவர் பலரும் நகைக்க நம்மை விட்டுச் சென்றது அதிசயப்பே ! அன்றியும் அயலார் தூற்றும் பழிச்சொல்லுக்கும் நம்மை ஆளாக விட்டனரே. ஆகையால் நாம் நாணவேண்டியவரே யாயினும்' என நலிந்துருகி வருந்துவா ளாயினள். அதனை யுணர்ந்த தோழி, பின்னும் அவளை ஆற்றுவாளாகி, 'என் ஆருயிர்த் துணைவியே ! யாதுக்கும் வருந்து வது அறிவினமேயாகும். அன்றியும் அயலார் தூற்றுவதெல்லாம் இதுசமயம் நமக்கவசியமென்பது அறியாய்போலும். ஆராயுமிடத்து, அதனைக் காரணமாக வைத்துக்கொண்டு காதலருடன் செல்லுவ தற்கு அது சிறந்த வழியல்லவா ? உற்று நோக்குமிடத்தும் உலகில் இத்தகைய காதலர்கள் வேண்டி நிற்பதும்

இதுவேயாகும். ஆகை யால், தலைவரும் தப்பாமல் உடன் படுவா ரென்ப துறுதி. இவ்வலர் நமக்கு வாய்த்ததும் நாம் செய்த தவப்பயனே ' எனச் சாற்றினுள். தலைவியும் சர்வ பரிபூரண சச்சிதானந்த பரம்பொருளின் திருவருளை வேண்டி, அவரைச் சதாகாலமும் தியானித்து நின்றனள்.

களவியல் முற்றுப்பெற்றது.



## கற்பியல்



முன்னே, ஊழின்படிக் கலந்த தலைவனும் தலைவியும் முறைப் படி மணம் புரிந்து , இல்லறமாகிய நல்லறத்தை இனிது

நடாத்தி இன்பம் துய்த்தலே கற்பாம்.

---

## 97 - ஆம் அதிகாரம்
## பிரிவாற்றுமை

---

மணம் புரிந்துகொண்ட பின், தலைவன் அறம் பொரு ளின்பங் களின் பொருட்டுத் தூரத்திலும் அவ்விடத்திலும் செல்லுங்கால், அப்பிரிவினை ஆற்றுதவளாகிய தலைவியின் தன்மையைக் கூறுதலே, 'பிரிவாற்றுமை' எனப்படும்.

மேற்கூறியவாறு இன்பம் நுகர்ந்த காதலனும் காதலியும் மண முடித்து மலரும் மணமும் போலவும் மணியும் ஒளியும் போலவும் ஒன்றி வாழுங்கால், தலைவன் பல காரணங்களை முன் னிட்டுச் சிலகாலம் தலைவியை விட்டுப் பிரிய நேர்ந்தது. அக் காரணங்கள் கல்வியின்

பொருட்டும், காவலின் பொருட்டும், சமாதானத்தின் பொருட்டும், பொருள் ஈட்டும் பொருட்டும், இன்பந் துய்த்தற் பொருட்டும் எனப் பலவாம். அவ்வாறு பிரியவெண்ணிய தலைவன் தமதருங் காதலியின் துணைவிபால் தனதபிப்பிராயத்தை அறிவித்தான். அவள் தன்னுருயிர்த் துணைவியின் அன்பையும், அப்பிரிவை அவள் அரை நிமிஷமும் ஆற்றியிராள் என்பதையும் ஐயந் திரிபற அறிவித்து, பின்னும் 'நீர் அகல்வதில்லையாயின் அதை எங்களுக்குச் சொல்லலாம். இன்றேல், நீர் மீண்டு வரும்வரை உயிரோடிருப்பவர்களிடத்து அதனைச் சொல்வீராக' எனப் புகன்றாள். தலைவன் அது கேளாதவனாய்ப் போக விசைந்திருந்தனன். நிற்க.

தலைவனது பிரிவை யுணர்ந்த தலைவி ஆருத் துயருக் குட்பட்டுப் பின் அதிசயித்து, ' தழையும் மாலையும் கொண்டு வந்து என் பின்னே காத்து நின்ற நாளில் அவர் பார்வை

௫௧



புணர்ச்சி குறித்தமையால் எமக்கு இன்பம் உடையதாய் இருந்தது. இன்று, அது பிரிவின் குறிப்பைக் காட்டுகின்றமையால் எமக் குத் துன்பத்தினைச் செய்வதாயிற்று. ஆ ! முன்னே, 'நாம் இருவரும் வேறல்லர் ' என்று சொல்லிப் பின்னே பிரிந்து வேருகிய காதலர் பெரிதும் அருளற்றவரன்ருே ?' என்றெண்ணிளுள் . பிறகு, தன் காதல் நோயைப் பிறரறியாதவாறு மறைக்கவுங்

கூடாமல் பிறர்க் குரைக்கவு மியலாமல் மனந்தடுமாறித் தன்னுயிர்ப் பாங்கியை நோக்கி, 'ஆ! என் அருந்தோழியே! அவருடைய செய்கையை அறிந் தாயா ? பிரிந்தால் நாம் பெரிதும் வருந்துவோம் எனத் தெரிந்திருந் தும், அங்ஙனம் பிரிந்து சென்றவரை அன்புடையவரென்று நாம் கொள்வதும் அடுக்காத விஷயமன்றோ ? அன்றியும், அஃது எத் தகைய கொடுமை! உன்னை ஒருகாலும் பிரியேனென் றுரைத்த வரே அங்ஙனம் உவந்து செல்வாராகில் அக்குற்றம் அவரிடத் தன்றி, அவர் சொல்லை நம்பிய நம்மிடத்தும் உண்டாகுமோ ? ஒருபோதுமில்லை. நிற்க. அவர் தாம் அங்ஙனம் மறந்தாரெனினும் , அதனை அறிந்த நீயேனும் அவர்க்கு அறிவுறுத்தினையில்லையே. ஆதலால், என்னுயிர் நீங்கு மென்பதற்கையமுண்டோ

? ஆயினும் என் செய்வது ? பிரிவைச் சகியாத நமது நிலைமையை யெல்லாம் அறிந்த அத்தலைவரே அங்ஙனம் பிரியும் கொடுமையைச் செய்தாரென்றால், பிறர்மீது குற்றங்கூறுதலும் பேதைமை யன்றோ? அந்தோ ! என்னுயிரைக் கொள்ளை கொண்ட அவ்வருங் காதலரே அங்ஙனம் கொடியவரானபோது, குற்றங் கூறுவதற் கோரிடமு முண்டோ ? இல்லை. ஆகையால், நாம் அறிந்துகொள்ள வேண்டியது யாதெனில், அவர் நம் வருத்தத்தை யறிந்து வந்து மீண்டும் அன்பு செய்வாரென்னும் ஆசையை அடியோடொழிக்க வேண்டுமென்பதேயாம். நிற்க. நான் அணிந்திருக்கும் வளையலின் அருமைகூட. யாரிடத்தும் அமையவில்லையே ? அது, அத் தலைவர். என்னைப் பிரியலுற்றதை வேறொருவர் அறிவிக்கு முன்னமே கையினின்றும் கழன்று

அதனைக் கூறி நிற்கின்றதே! அவ்வாறிருக்க, அவர் அறிவித்தாரென்று நீ அறிவிக்கவும் வேண்டுமோ ? பெண்மக் கட்குத் தம் குறிப்பறிகிற தோழியரில்லாத வேற்றாரின்கண் வாழ்தல் துன்பம் செய்வதாகும். தம் காதலரைப் பிரிதல் அப் படி வாழ்தலைக் காட்டினும் மிகத் துன்பம் செய்வதாகும்.



இஃதுணர்ந்திருந்தும், என் வருத்தத்தை யறியாத தோழியையும் நான் துணையாகக் கொள்ளலாமோ ? காதலர் பிரிவை விலக்காது வந்த தோழியும் தோழி யாவளோ? உற்று நோக்குமிடத்து அவ் வகைப்பட்ட தோழியுடன் கூடிவாழ்தல் கொடிதென்பது கூறவும் வேண்டுமோ ? இதுதான் இங்ஙனமெனின், என் ஆருயிரைக் கொள்ளைகொண்ட அருங்காதலருமன்றே

அவ்வருத்தத்தை அலட் சியம் செய்துவிட்டனர்? ஆகவே, அதனினும் இது கொடியதென் பது வெள்ளிடை மலையன்றோ? ஆ! ஆ! இவைகளையெல்லா முணர்ந்த என் மனமேனும் எவ்வகையானும் தெளிகின்றதா ? இல்லையே. ஆகையாலன்றோ, அளவுகடந்த காதலுக் குட்பட்டு அவஸ்தைப்படுகின்றது ? அன்றியும் அக்காதலின் கொடுமையை நான் யாதென் றுரைப்பேன் ! தீயானது தொட்டாரைச் சுடுமே யன்றி விட்டாரை ஒருபோதும் சுடமாட்டாது. ஆனல், இக் காதலோ காதலன் விட்டு நீங்கிய காலத்தும் சுடும் தன்மையுடை யதா யிருக்கின்றது.' எனக்கூறிப் பெரிதும் வருந்திப் பிரிவாற்றுமை யாகிய துன்பத்தால் நலிந்து மெலிந்தனள்.

அதுகண்ட தோழி தலைவியை

ஆற்றுவாளாகி, 'ஆ! இஃதென்ன வியப்பினும் வியப்பாக வுளதே ! இவ்வவனியின்கண் அறம் நோக்கி ஆடவர் மகளிரைப் பிரிவதும் அனுபவமன்றோ ? ஆயினும், இங்ஙனம் ஆற்றாது வருந்துபவர் யாருமில்லையென்றே அறையலாம் ' என்றறிவித்தாள். அது கேட்ட தலைவி ஆற்றொணாத் துயரத்தி லாழ்ந்தவ ளெனினும், ' ஆம். அவை அனைத்தும் உண்மையே. அனுபவமாகப் பார்க்கின்றதுமன்றி அநேக சாஸ்திர வாயிலாகவும் அறிந்திருக்கின்றோம். பிரிவை அறிவித்தவிடத்து அதற்கு உட்பட்டு, பிரி யும்போது உண்டாகிய துன்பநோயையும் ஒழித்து, பிரிந்தால் அப் பிரிவையும் பொறுத்து, பின்னுமிருந்து உயிர்வாழும் பெண்களும் உலகில் பலராவர். அத்தகைய தன்மை என்னிடத்தமையவில்லை. ஆழ்ந்துணர வல்லோர்கட்கு அதன் உண்மை அகங்கை மணிபோ லறியப்படும்.

ஆகையால், நான் அதிகமாகக் கூறுவதும் அனுசிதமே யாகும்' என்றறிவிப்பாளாகி அதிக வருத்தத்தால் அகங்கறுத்தா ளெனினும், அல்லும் பகலும் தமதருங் காதலரை நினைத்து அல்லற் படுவாளாயினாள்.

---

## 98-ஆம் அதிகாரம்

## படர்மெலிந் திரங்கல்

---

பிரிவாற்றாமையாகிய துன்பத்திற் குட்பட்ட தலைவி தனியளாய் நலிந்து வருந்துதலே, 'படர்மெலிந் திரங்கல்' எனப்படும்.

அவ்வாறிருந்த தலைவியை அவள் தோழிகண்டு ஆற்றாதவளாகிப் பின் அவளை நோக்கி, 'ஆ! இஃதென்ன

அறியாமையி னும் அறியாமையாக விருக்கின்றது. அந்தோ ! நானுடையவளா கிய உனக்கு இது நன்ருகுமோ ? அன்றியும் தம் காதலை இங்ஙனம் காட்டிக் கொள்வாரு முண்டோ ' எனக்கடிந்து கூறினுள். அதுகேட் டுப் பின்னும் துயரதிகரித்தவளாகிய தலைவி, ' என்னருமைத் தோழியே ! யாவையும் துறந்து வைராக்கியம் பூண்ட அறிவாளி களின் அந்தக் கரணங்களையும் தம் வயத்ததாக்கித் தட்டழியச் செய்யும் தன்மையுடைய இக்காமமானது ஏற்கனவே தன் வயப்பட் டிருப்பவளாகிய என்னை எங்ஙனம் தரிக்கச் செய்யும் ? ஆகையா லன்றே, பிறரறியாவாறு மறைப்பினும் அது மேன்மேலும் இறைப் பவர்க்கு ஊற்றில் நீர் சுரப்பதுபோலச்

சுரக்கின்றது ! இன்னும், மறைத்தலும் இயலாமல், பிறர்க்குரைத்தலு மியலாமல் மனம் தடு மாறி மயங்கச் செய்கின்றது ! ஆகவே, நான் அயலார் அறியாவண்ணம் இதனை அடக்குவ தெங்ஙனம் ? இவை தான் இங்ஙனமெனின், இதனைத் தந்த என் காதலர்க்குத் தூது அனுப்பலா மென்றாலும் அவர் கருணை யின்றிச் சென்றமையால் என் கருத் திசையவில்லை. 'ஆசை வெட்க மறி யா' தென்ற பழமொழிப்படி, என் நிலையை அவர்க்கு அறிவித்த போதிலும், அவர் இன்னு மிவள் சாவாதிருக்கின்றாளென் றெண்ணினு மெண்ணுவா ரென்பது என்னறிவிற் புலனாகின்றது . ஆயினும், அவர்பால் அனுபவித்த இன்பமானது அரை நிமிஷமும் என் மனதை விட்டகலாது அதனுடன் வாதித்து நிற்கின்றது. ஆகவே, இவைகளாலாகிய வருத்தத்தை என்னென்

றுரைப் பேன் ! நோயும், அந்நோயைச் செய்தவர்க்குச் சொல்லுதலைத் தடுக் கின்ற நாணமுமாகிய இரண்டும் என்னுயிரைக் காவடித் தண்டாக வைத்து அதன் இருமுனைகளிலும் தொங்குகின்றனவே.

அவை அதிகாரம் - கூஅ.]

கற்பியல் சூஉக களின் பாரம் தாங்கமாட்டாமல் என்னுயி ரிற்றுப்போ மென்பதற் கும் ஐயமில்லை. எனினும், ஏனையோர்கள் யுணர்வதரிதாகவே யுளது. ஆதலாலன்றோ 'இங்ஙனம் காமக்கடலில் அழுந்தி வருந்து வது கன்னியர்க் கழகாகுமோ ? ஒருகால் அன்பின் மிகுதியால் வருந்தினும் அதனை அதற்கேற்ற உபாயத்தால் அகங்கரித் தாள்வ தன்றோ அருமை யுடைத்து' என்றறிவிக்க முன் வருகின்றனர். பொதுவாகக் கூறுமிடத்து அவையும்

பொருந்தத் தக்கதே. ஆனால், எனக்குண்டாகிய காதலோ கடல்போன்றுளது. அதனை நீந்தும் புணையும் எனக்கரிதாக வுளது. தூது செல்வதற்குரியவளாகிய நீயும் துன்பத்தைக் கண்டும் துணை செய்கின்றாயில்லை. ஆ ! இவ்வவனியில் இன்பஞ் செய்தற்குரிய சிநேகிதனிடத்துத் துன்பத்தின் வரவைச் செய்வார், துன்பஞ் செய்தற்குரிய விரோதியினிடத்து என்னதான் செய்வரோ ? அறியேன். ஆனால், அவர்கள் 'காமத்தினாலாகிய இன்பத்தை அடையப் பெற்றவர் அதனாலாய துன்பத்தினையும் அடைவது அநுபவ' மென்னலாம். ஆழ்ந்து பார்க்குமிடத்து, அஃதும் தாம் அநுபவித்த இன்பத்தோடு ஒத்திருந்தாலன்றோ ஒப்பத் தக்கதாகும். அந்தோ! என்னுருயிர்க் காதலரோடு நான் அநுபவித்த இன்பத்திலும் இத்துன்பம்

எத்தனையோ மடங்கு எல்லையற்று நிற்கின்றதே ! ஆகையால், அதனைத் தாங்குவ தரிதே. நான் நிறையைப் புணையாக வைத்து அக்கடலை நீந்தியு மிருக்கின்றேன். ஆயினும், அதன் கரையைக் காணப்பெற்றே னில்லை. ஆதலாலன்றோ, யாவரும் உறங்கா நிற்கின்ற நள்ளிரவிலும், ஒரு துணையுமில்லாமல் தனியளாய்த் தானே வருந்தும் தன்மையையும் அடையப் பெற் றிருக்கின்றேன்! தனித்திருந்தும் இறவா திருக்கின்றேன் ! ஆகவே, அதன் கொடுமையையும், என் வினையின் வலிமையையும் என்னென் றுரைப்பேன்! காதல் நோயால் வருந்தும் நானே இருள்செறிந்த

இரவுக்கு அருந்துணையானேன். ஆ! அவ்விராக் காலத்தின் அறியாமையை யாதென் றுரைப்பது? நிலைத்திருக்கின்ற உயிரினைத் துணையாகத் தேடாது, இப்போ திறக்கப்போகின்ற என்னைத் துணையாகக் கொண்டு துன்புறும் நிலையிலிருக்கின்றது. அவ்வறிவினைத்தாலன்றோ நான் காதலரோடு இன்புற்ற நாட்களிலே சிறியவையாயிருந்து, அவர் பிரிவைப் பொறுக்க மாட்டாத இந்நாட்களிலே பெரியவையாகச் செல்லும் பெருமையையும் அது பெற்றிருக்கின்றது?



ஆகவே, அக்கொடியவராகிய என் காதலர் கொடுமைக்கு மேலே அது கொடுமை செய்கின்றதென்று கூறுவதும் குற்றமாகாது' எனக்கூறிக் கொடுந்துயரத்திலாழ்ந்து நின்றாள். அவ்வாறு நின்றவளைப் பின்னும் அவளுடைய தோழி பலவாறு தேற்றியும் தேறவில்லை. அவள், மனம்போன்று தலைவரிருக்கின்ற நாட்டிற்குச் செல்ல வல்லமையில்லாமையினாலே தன் கண்கள் நீந்தரியா நீரில் நின்று வருந்துகின்றனவென்றும்,

கணவரைச் சேரும்வரைக் கவலை யொழியாதென்றும் கூறிக் கண்ணீரொழுகக் கவலைப்பட்டு நின்றாள்.

---

## 99 - ஆம் அதிகாரம்
## கண் விதுப்பழிதல்

---

காதலரைக் காணவிரும்பும் காதலி, தனது கண்களால் வருந்துதலே, 'கண் விதுப்பழிதல்' எனப்படும்.

தலைவரைக் காணாது அழாநின்ற தலைவியைத் தோழி ஆற்றுவாளாகி, 'ஆ! இஃதென்ன பேதைமையினும் பேதைமையாக விருக்கின்றது. செம்மையும் பெருமையும் பொருந்திய உன் கண்கள் இங்ஙனம் சீரழிந்து தோன்றுகின்றனவே. அவற்றிற்காகவேனும் ஆற்றி யிருத்தல் உனக்கவசியமல்லவா?' என்றறிவித்தாள். அது கேட்ட தலைவி, 'ஆம். அதற்கென்

செய லாம்? இந்த ஆறுத நோயை நாம் அடையவிருந்ததும் அக்கண்களாலன்றோ? அன்று அவரை மிக விரைந்து நோக்கிய கண்கள் இன்று தாமே இருந்து வருந்துகின்றன. அம்மட்டோ! இன்று என்னைக் காட்டச் சொல்லியுமன்றோ கதறுகின்றன. அங்ஙனம் அழுவதும் அவற்றின் அறிவீனமன்றோ? அன்றியும், அவை என்ன பயனைக் கருதி யிங்ஙனம் அழுகின்றனவோ தெரியவில்லை. அந்தோ பாவம்! அன்று அவரைப் பார்த்தபொழுதே ' நாம் இவரைப் பிரியவும் அதனால் வருந்தவும் இருக்குமெனப் பகுத்துணர்ந் தொழுகின் இங்ஙனம் பரிதவிக்க வியலுமா? அவைதான் அங்ஙனமெனின், இவை நம்மால் வந்தது தானே என்றேனும் எண்ணுகின்றனவா? இல்லையே. பின்வருவ தறியாது ஒன்றைச் செய்தார், வந்ததைப்

பொறுக்க மாட்டாமல் வருந்துவது முன்னை அறியாமையினும் பெரிதென்பது யாருமறிர்



திருக்கின்றோமல்லவா? ஆகவே, கண்களின் அறிவினச் செய்கையை நினைத்து யார்தான் நகையார்? அன்று விரைந்து விரைந்து நோக்கிய கண்கள் இன்று இருந்து இருந்து வருந்தட்டும். ஆழ்ந்து கூறுமிடத்தும், இக்கண்கள் இங்ஙனம் வருந்துவதும் முறையேயென லாம். ஏனெனில், அவருடைய தன்மைகளை ஆராய்ந்துணர்ந்து அவரை எனக்குக் காட்டாது அன்றே மறைத்திருப்பின் அவ ரன்பை நான் அடையவிருக்குமா? இருக்காதன்றோ! ஆகவே, எனக்கு அவரிடத்து அன்பைப் பெருக்கியதுமன்றி நான் பிழைக்க மாட்டாமைக் கேதுவாகிய கெடாத நோயையும் என்னிடம்

நிலைபெறச் செய்ததும் அவையென்பது அறிவிக்க வேண்டியதில்லை. ஆனால், அவற்றின் அறியீனத்தை யாதென்றுரைக்கலாம். அந்தோ பாவம்! 'முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்' என்ற ஆன்றோர் வாக்கையேனும் அவை உணர்ந்தொழுகினவா. இல்லை. ஆகையாலன்றோ, இனி அழுவதற்குங் கூட நீரற்று ஏங்கியிருக்கின்றன ? இம்மட்டோ ! ஆதியில் எனக்கு அரிதாகிய இன்பத்தைக் காட்டிப் பின் கடலைக்காட்டினும் மிகப் பெரியதாகிய காமநோயைத் தந்த காரணத்தால், இப்போது தாமும் நித்திரை செய்யாதனவாகித் துன்பத்தையும் அடைகின்றன . ஆகையால், அவைகள் படும் அல்லலைப்பற்றி நாம் வருந்துவானேன் ? உலக அனுபவமும், தமக் குத் துன்பஞ் செய்தார்க்கு ஒரு துன்பம் வந்தால் அதைக் கண்டு களிக்கும் தன்மையா

யிருக்கின்றதன்றே! ஆகவே, இக்கண்கள் இன்னும் அனுபவிக்க வேண்டுமென்பதே எனக்கு ஆசை. ஏனெனில் அது காலை விரும்பி உள்ளங்குழைந்து வேண்டி அவரைப் பார்த்து ஆனந்தித்தனவல்லவா ? ஆதலால், இப்போது அடைதலாகிய துன்பத்தை மேன்மேலும் அடைய அதனிடத்துள்ள நீரெல்லாம் அற்றுப் போவதே யெனக்கு ஆனந்தமாக விருக்கும்' என்றறிவிப்பாளாயினள்.

தோழி, தலைவி கூறியவற்றை ஐயந்திரிபற ஆழ்ந்துணர்ந்து அத்தலைவியை நோக்கி, 'நீயேன் இங்ஙனம் பிதற்ற வேண்டும். அவர் இங்கேயே இருப்பதுமன்றி, எக்காலமும் நம்மைப் பிரியாரென்பது துறுதி' என்றுரைத்தாள். ஆனால், தலைவி அதனையும் அசட்டை செய்து பின்னும் ஆறுத்துயருக்

குட்பட்டவளாய், ' ஆ! சஉச

திருக்குறள் தீபாலங்காரம்

[காமத்துப்பால் நீ உரைப்பதும் ஒருவகையில் உண்மையேயாகும். மனத்தால் விரும் பாது சொல் மாத்திரத்தாலே விரும்பியவர் எப்போதும் என் இருதயத்தே யுள்ளார். ஆயினும் என்ன பயன்? இக்கண்களை ஆற்று விக்க வியலுமா ? ஆனால், தலைவரது அன்பையும் அவர் அறிவித்த வார்த்தைகளையும் அறியாதவர்கள், 'அவர் பிரிவையும் ஆற்றி அல்லற் படும் கண்களையும் தூங்கச் செய்வது உன்னுடைய சொந்த வல் லமையல்லவா ?' வென்று சொல்ல முற்படுவர். ஆழ்ந்து பார்க்கு மிடத்து அவையும் ஆமோதிக்கத்தக்கதே. ஆயினும் என் செய்வது ! என் அநுபவமோ அங்ஙனமில்லை. இவை தான் இங்ஙனமெனின், இக்கொடுங் கண்களும் அக்குணத்தை எக்காலத்தும் கொண்டதாகக்

காணும். அவர் வராத நாட்களில் அவர் வரவைப் பார்த்தும், வந்த நாட்களில் அவர் பிரிவாரோ வென்றேங்கியும் இக்கண்கள் எல்லையில்லாத் துயருக் குட்பட்டிருக்கின்றன. ஆகையால், நான் செய்வதென் ? சற்றும் நாணமில்லாத இக்கண்கள் அவரைக் காண விரைகின்றனவே. அந்தோ ! இஃதென்ன அநீதியான நிலை மையாக விருக்கின்றது. அவர் கொடுமையை நான் மறைத்தாலும் அவை கூசாது வெளிப்படுத்துகின்றனவே . இவ்வகைப் பட்ட கண்களையுடையவளாகிய நான் என் வருத்தத்தை எங்ஙனம் மறைக்க வியலும் ? இதனாலன்றோ என் இரகசியத்தை எவரும் எளிதி லுணரக் கூடியதா க விருக்கின்றது ?" என்று கூறி அளவிலாத் துன் பத்தி லாழ்ந்திருந்தனள்.

---

# 100 - ஆம் அதிகாரம்
## பசப்புறு பருவரல்

---

பிரிவாற்றாமையினால் தலைவிக்கு வருவதோர் நிறவேறுபாட்டினைக் கூறுதலே, 'பசப்புறு பருவரல்' எனப்படும்.

தலைவி பின்னும் பெருந்துயரத்திலாழ்ந்தவளாய், ' ஆ ! இவ்வுலகின் கண் அவதரித்த எவரும் எப்போதும் சும்மாவிருக்க வியலாது. விதி யென்னும் வினையால் ஏதேனும் ஒரு நுட்பமான செய்கைக்குட்பட்டுச் சிறுமையோ பெருமையோ தேடிக்கொள்வதாயுளது. அதுபோல், நாமும் இப்போது அவர் பிரிவுக்குட்பட்டு



ஆராத்துயரத்தை அடையப் பெற்றிருக்கின்றோம். ஆழ்ந்துணர்ந்து

அவர் நட்பை அடையப் பெறுதிருப்பின், இங்ஙனம் ஆறாத் துயரத்திற் குட்படுவோமா ? சப்திக்கா நின்ற சமுத்திரத்திற்கு ஜலக்குறை வுண்டாவதும், திருட்டுத் தொழிலையே தொழி லாகக் கொண்ட மக்கள் உண்மையுரைப்பதும், நரை திரை மூப் புக்களற்று முதுமைப் பருவம் மாறி இளமைப் பருவம் அடைய மருந்துண்பதும், பொருள் கொடுப்போரை நேசிக்கும் வேசையர் களுக்கு ஒருவர்மேல் ஆசையுண்டாவதும், அரசர்கள் ஒருவரிடத்தில் எப்போதும் நீங்காத அன்புடையவர்களாவதும் அரிதன்றோ ? அது போலவே, தாம் விரும்பிய காரியத்தின்மேல் கருத்துக்கொண்ட காதலர் நட்கருத்திற் கிசைவதும் கடுமையன்றோ ? ஆதலாலன்றோ நம்மை இங்ஙனம் இருந்து வருந்தச் செய்து ஏகுவாராயினர் ? ஆயினும், அவர் மீது குற்றமில்லை. அன்று,

நாம் அவர் பிரிவுக்குடன் படாவிடின் அங்ஙனம் எருவாரா ? நாமும் இப்பசலை நோய்க்குப் பாத்தியப்படுவோமா ? இவைகளை யெல்லாம் எண்ணிப் பாராது நாமே எதிர் கொண்டழைத்துக் கொண்டோம். ஆகவே, இதை இனி எவரிடம் கூறிக் கொள்வது?' எனத் தனக்குள்ளே யெண்ணுவாளாகி எல்லையில்லாத் துன்பத்தி லாழ்ந்திருந்தாள்.

தோழி தலைவியின் துயரத்தை யூகித்துணர்ந்து; 'அந்தோ பாவம்! இத்தகைய துயரத்தை இவள் எங்ஙனம் பொறுப்பாள்?' என்று ஏங்கியிருந்தனள். அது கண்ட அத்தலைவி 'ஆ ! என்னுருயிர்ப் பாங்கியே என் பசலையைப் பார்த்து இவள் ஆற்றியிராளென்று ஐயுற வேண்டாம். நான் ஆற்றியே இருக்கின்றேன். ஆயினும், இப் பசலை, தன்னை அத்தலைவர் உண்டாக்கினுமொன்னும் உள்ள மகிழ்ச்சி யால் என் மேல் ஓங்கிப்படர்ந்து

உல்லாசமாயிருக்கின்றது. ஆகவே, அதன் கொடுமையை நான் யாதென்று சொல்லுவேன்! அந்தோ! நாணமென்னும் நற்பொருளால் இதனை நழுவவிடலாமென்றாலும் அன்பற்ற அத்தலைவர் பிரிகின்றபொழுதே காமநோயையும் இக்கொடும் பசலையையும் கொடுத்துவிட்டு, இவ்விரண்டிற்கும் பண்டமாற்றாக என்னுடைய நாணையும் அழகையும் கொண்டுபோய் விட்டாரே. அவர்தான் அங்ஙனம் செய்து விட்டாரெனினும் இவ்வற்பப் பசலைக்கேனும் அறிவுண்டா? அவர் கூறிய சொற்களை மனத்தால்





தீபாலங்காரம் நினைக்கின்றேன். வாயாற் சொல்லப்படுவதும் அவருடைய நற்

குணங்களே. இவ்வாறிருந்தும், இப்பசலை வந்தது எனக்கே ஆச்சரியத்தை விளைவிப்பதாயுளது. இவைகளையெல்லாம் ஆராயின், இதன் தன்மைகளையிங்கு அதிகமாக அறிவுறுத்தவும் வேண்டுமோ ? அவர் சமீபத்திருந்த காலத்தும் இதன் தன்மையை அகங்கை மணி போல நீ அறிவாயன்றோ? இரவும் பகலும் போல என்னை இடைவிடாது நின்றதே. அவர் பிரிந்தால் வருவதும் புணர்ந்தால் அகல்வதுமாயிருந்ததன்றோ ? ஆகையால், அவர் பிரிந்துள்ள இக்காலத்தில் என்னை விட்டகல இசையுமா ? இது விளக்கினது சோர்வு பார்த்து நெருங்கிவருகின்ற இருளைப் போன்றது. இதனைவிட வேறு திருஷ்டாந்தம் கூற இதற்கு மேற்பட்ட கொடியது எவையுமில்லை. அந்தோ ! முன்னொரு நாள் தலைவரைத் தழுவிப் படுத்திருந்த நான்

அவரை விட்டுச் சற்று நேரம் விலகினேன். அது பொருமல் இப் பசலை நிறமானது அள்ளிக்கொள்ளப்படும் பொருள் போல வந்து நிறைந்துவிட்டது. சற்று நேரப் பிரிவிற்கே அத்தகைய தன்மை யுடையதா யிருந்ததென்றால் இப்பெரும் பிரிவிற்கு ஆகும் விதம் யாதாகுமென்பது அறிவிக்கவும் வேண்டுமோ ?' எனக் கூறிப் பின் னும் நினைத்து நினைத்து நெஞ்சம் சோர்வடைந்தாள்.

அப்போது, தலைவியைத் தோழி பார்த்து, 'இப்படி நீ பசலை நிறமடைவது தகாது' என்று சொன்னாள். உடனே, தலைவி தோழி யோடு பிணங்கி, ' என் வினைப் பயனை யென்னென் றியம்புவேன்? 'இவள் பொறுத்திராமல் பசலை நிறமடைந்தாள்' என்று என்மீது ப்ழி கூறுவதல்லது, இப்பெண்ணை அத்தலைவர்

பிரிந்தனரே யென்று பேசுவா ரொருவருமில்லை. எனினும் அதனைப் பற்றி நான் வருந்து வது அநுசிதம். இப்பிரிவை நானே யுடன்படும் வகை சொல்லித் தேற்றிய அத்தலைவர் சொற்றவறு து வருவாராயின், நான் எத் தகைய துன்பத்திற் கிலக்காகினும் பாதகமில்லை. இன்னென்று. 'தலை வர் என்னைப் பிரிந்திருக்கின்றுரே என்று சொல்வதன்றி, அவர் சிறி தும் அருளற்றவர்' என்று யாது காரணம் பற்றியும் எவரும் சொல் லச்சகியேன். ஆகையால், எவரும் அவரையன்றி என்னை எங்ஙனம் தூற்றினுந் தூற்றட்டும்' எனச் சொல்லுவா ளாயினள்.

---

## 101 - ஆம் அதிகாரம்
## தனிப்படர் மிகுதி

அறமும் பொருளும் நோக்கிப் பிரிதலால், தனியாகிய துன்ப மிகுதி தலைவனிடத்தில்லாமல் தன்னிடத் துண்டாதலைத் தலைவி கூறுதலே, "தனிப்படர் மிகுதி" எனப்படும்.

தனித்து வருந்திய தலைவியைத் தோழி உற்றுநோக்கி, 'உன்னை இவ்வாறு வருந்தவிட்டேகிய தலைவருக்கும் இத்தகைய வருத்தம் இருக்குமன்றோ; ஆகையால், அவர் விரைவிலே வருவாரென்பது வெளியிட்டுக் கூறவேண்டியதில்லை. அதுகாலை நீ அளவில்லாத இன்பத்தையும் அடைவாய்' என்றுரைத்தாள்.

தலைவி, அதனைக் கேட்டுப் பின்னும் ஆற்றாதவளாகி, 'அந்தோ! அத்தகைய

பாக்கியத்தையும் நான் அடையப்பெற்றிருக்கின்றேனா? மணாளரை மகளிர் விழையவேண்டும். விழையப் பட்ட மணாளரும் மகளிரை விழையவேண்டும். அங்ஙனம் விழைய முன் செய்த நல்வினையும் இருக்கவேண்டும். ஆழ்ந்து பார்க்கு மிடத்து, இவ்வவனியில் அவைகள் யாவும் அடையப்பெற்ற காத லர்கட்கே அந்த இன்பக்கனி எளிதில் கிடைப்பதாயுளது. இவ்வா றிருக்க, என் காதலர் பிரிதலேயன்றிப் பின் வாராமையு முடைமை யால், அவர் அந்த இன்பத்தை அடைவ தெங்ஙனம்? அந்தோ! யாரும் அறம் பொருளின்பங்களை நோக்கித் தமதருங் காதலியைப் பிரிவது அநுபவமே எனினும், அவர்கள் அம்மாதர்களுக்குச் சமயமறிந்து வந்து அன்பு செலுத்துகின்றார்களன்றோ! நீயும் அதை நோக்கியே அறிவிக்கின்றாய்

போலும். ஆனால், நான் அத்தகைய பாக்கியத்தை அடையப் பெறவில்லை. ஆதலால், பருவத்திலே மழை பெய்யப் பெறாத பயிர்போல இறத்தலே எனக்குள்ளதாகும். தம்மால் விரும்புகின்ற தலைவரால் விரும்பப்படுகின்ற மாதருக்கன்றோ தலைவர் பிரிந்தாலும் விரைவில் வருபவராவர்; அவர் வந்தால் நாம் அடைதற்குரிய இன்பத்தை அடைவோமென்னும் அகமகிழ்ச்சியும் பொருந்தியிருக்கும்' எனப் பகன்று பெரிதும் வருந்துவாளாயினள்.



தலைவி கூறியவைகளைக் கேட்ட தோழி அதிசயித்தவளாய், 'ஆ! இவ்வருமைக்குணம் அமைவது அரிதினும்

அரிதன்றோ! உன் காதலர் தன்மையை நான் கடிந்துரைப்பே னென்றோ இங்ஙனம் கழறுகின்றாய் ? ஆனால், அஃதும் உனக் கவசியமே. ஏனெனில், அப்போதுதான் கற்புடைய மாதரால் நீ கண்ணியப்படுவாய்' என் றறிவித்தாள். அதற்குத் தலைவி, 'அந்தோ ! நான் யாரால் மதிக் கப்பட்டுத்தான் யாதுபயன் ? நான் விரும்புகின்ற காதலரே என்னை விரும்பவில்லை. ஆயினும் என் செய்வது ? நம்மால் காதலிக்கப் பட்ட தலைவர் நம்மைக் காதலிக்காத விடத்து நமக்கு என் ன இன்பத்தைச் செய்வார்? ஆழ்ந்து பார்க்குமிடத்தும், அக்காதல் ஆடவரிடத்தும் மக ளிரிடத்தும் ஒரே அளவாக ஒத்திருந்தாலன்றி ஒருபோதும் இன்பம் செய்யாதென்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோ லுணரக் கிடக்கின்ற தல்லவா ? ஆதலால், அவரிடத்தில்லாது

என்னிடத்து மட்டும் உண்டாகுங் காதல் என்ன பயனுடைத்து ? நிற்க. எனக்கு அதி சயத்தை விளைவிக்கும் அரிய விஷயமொன் றுளது. காமத்தை அனுபவித்தற்குரிய இருவரிடத்தும் ஒத்து நில்லாமல் ஒருவரிடத்து நின்று போர் செய்கின்றவனாகிய மன்மதன், அவரிடத்தும் பசப்பாலாகிய நோயையும் துன்ப மிகுதியையும் செய்யமாட்டானோ ! என்னருங் காதலரைப் பற்றிய யாதொரு சொல்லும் எனக்கு இன்பம் தருகின்றது. அன்றியும், என்னால் விரும்பப்பட்ட அவரிடமிருந்து வருகின்ற எவ்வகைச் சொல்லானாலும் அதைக் கேட்கவே என் மனம் விரும்புகின்றது. ஆனால், அங்ஙனம் பெறுவதுகூட அரிதாக விருக்கின்றதே ! இத்தகைய தன்மைகளை யெல்லாம் எண்ணியேனும் என் னுயிர் பிரிகின்றதா ? இல்லையே. ஆதலால், என்னைப்போன்ற

தைரியசாலி எவருமிராரென் றியம்பலாம். ஆகையா லன்றோ, அவர் எனக்கு அருள் செய்யாரானாலும் அவர் திறத்து உண்டாகும் எந்த வார்த்தையும் என் காதுக்கு இன்பஞ் செய்வதா யுளது? எந்த வார்த்தையு மென்றது அவர் வாராரென்ற கொடிய வார்த்தையுமே யாம். ஆனால், அதுவும் வரவில்லை' எனப் பலவாறு கூறினாள். பிறகு, அவள் தன் நெஞ்சை நோக்கி, 'உன்னோடு பொருந் தாத தலைவருக்கு உனது நோயைச் சொல்ல விரைகின்றாயே! ஆ! இஃதென்ன பேதைமையாக விருக்கின்றது. இனியேனும் அதனை யொழித்து, உனக்குக் காம நோயைச் செய்யும் கடலைத் தூர்க்க முயல்வாயாக' எனக் கூறிப் பெரிதும் வருந்துவாளாயினள்.

---

## 102 - ஆம் அதிகாரம்

## நினைந்தவர் புலம்பல்

---

தலைவனுந் தலைவியும் தத்தம் இடத்திலிருந்து, தாம் முன் அனுபவித்த இன்பத்தினை எண்ணி வருந்துதலே, 'நினைந்தவர் புலம்பல்' எனப்படும்.

தன் மனத்தைத் தேற்றுவாளாகி நின்ற தலைவி, பின்னும் அடங்காக் காதல் கொண்டமை கண்டு, 'இத்துன்பம் இனி வளர்ந்தால், இவள் உயிர் வாழமாட்டாள்' என்று கருதிய தோழி, அதனை அவளுடைய காதலர்க் குறிவிக்குமாறு, அவருடைய தோழனையே தூதாக வனுப்பினுள். தலைவன் அவனை வரவேற்றுத் தம் மாருயிர்க் காதலியின் அந்தரங்கங்களை யெல்லாம் ஐயந்திரிபற அறிந்து, தாமும் அவள்மேல் கொண்ட

ஆசையால் அகங் கறுத்துப் பின் ஒருவாறு தேறித் தன் அன்பனை நோக்கித் தான் முன் அநுபவித்த நாளில் உண்டாகிய இன்பத்தை இப்போது நினைத்தாலும் அஃது அப்போது பெற்றதுபோல அளவிலாத பெரு மகிழ்ச்சியை அளிக்கின்றதென்றும், ஆகவே, அஃது உண்டபோதல்லது மகிழ்ச்சி செய்யாத மதுவைவிடச் சிறந்ததென்றும் பலவாறு சிறப்பித்துக் கூறினன். இன்னும், தம்மால் விரும்பப்படுவாரைப் பிரிவினிடத்து நினைத்தால், நினைத்தவர்க்கு அப்பிரிவால் வருவதோர் துன்பமில்லையென்றும், அத்தகைய காரணத்தாலேயே தாம் நிலை பெற்றிருப்பதாகவும் எடுத்துக்கூறி எல்லையில்லா மகிழ்ச்சியெய்தி யிருந்தான். நிற்க.

தூதனுப்பியவளாகிய தலைவி

சொல்லொணுத் துயரத்தால் துன்பக்கடலி லாழ்ந்து, தன் தோழியை விளித்து, ' ஆ! இஃதென்ன வியப்பு ! தூரத்திலுள்ளாராகிய உறவினர் நினைத்த விடத்து, நினைக் கப்பட்டாருக்குத் தும்மல் தோன்று மென்பது உலக வழக்கன்ருே ? அஃது உண்மையாயின், எனக்கும் தும்மல் தோன்றிக் கெடுகின் றது. ஆதலால், காதலர் என்னை நினைப்பதுபோல நினைத்து உடனே நினையாமல் விட்டனர் என்றே உணரக்கிடக்கின்றது. இன்றேல், இங்ஙனம் தும்மல் தோன்றி மறையுமா ? ஆகவே, அவர் கொடு சாக()



மையை நான் யாதென்றுரைப்பேன் ! எனது நெஞ்சில் எப்போது மிருக்கு மவர் யாதேனும் ஒரு சமயம் அவர் நெஞ்சில் செல்லும்

என்னை யாது காரணம் பற்றி அங்ஙனம்
அகற்றினரோ? அந்தோ!
அவர் இருதயத்தில் நாம் எப்போதுமா
இருக்கின்றோம்? இல்லையே.
அவ்வாறிருந்தும், அவர் அங்ஙனம்
அகற்றுவதென்றால் அஃது எத்
தகைய ஆராய்ச்சி யற்ற செய்கையாக
விருக்கவேண்டும். தமது
மனத்தில் யாம் வராமல் காவல் கொண்டவர்,
எமது மனத்தில் எப்
போதும் நீங்காமலிருப்பதற்கு எள்ளளவும்
வெட்கப்படாதவராகவு
மிருக்கின்றாரே' என வழுத்தினள்.
அதனைத் தோழியும் ஆழ்ந்து
ணர்ந்து அதிசயித்தவளாய், ' ஆ! என
தருந்துணைவியே! நீ அவர் பால்
அனுபவித்த இன்பத்தினை நினைந்து, அதன்
காரணமாக இங்

ஙனம் அல்லற்படுவது அழகன்று ; அதனை நீ அவசியம் மறத்தல் வேண்டும்' என்றறிவித்தாள்.

அது கேட்ட தலைவி ஆற்றாதவளாய், ' அந்தோ ! அதனை நான் எங்ஙனம் அகற்றுவேன் ? அவரோடு புணர்ந்தநாள் இன்பத்தை நினைத்தலாலன்றோ நான் பிரிந்த இந்நாளில் உண்டாகும் துன்பவெள்ளத்தில் மூழ்காதிருக்கின்றேன். இன்றேல், இதுவரை இறந்தொழியாதிருக்கும் வகையேது? அன்றியும், அவர்பால் அனுப வித்த இன்பத்தை மறத்தல் அறியேனாகி இருப்பதனாலன்றோ, இப் பிரிவானது உள்ளத்தை மட்டுஞ் சுட்டு நிற்கின்றது ? மறப்பின் யாது காரணம் பற்றி என்னுயிர் இவ்வவனியில் இருக்கும் ? இவற்றை யெல்லாம் நீ எவ்வகையானு முணரவில்லை

போலும். ஆயினும், அவர் அவைகளை யெல்லாம் ஐயந்திரிபற அறிவாரென்பது திண்ணம். ஆகையாலன்றோ, நான் அவரை எவ்வளவு நினைத்தாலும் அதற்கு வெகுளாதிருக்கும் தன்மையை யவர் வெளிப்படையாகக் காட்டுகின்றார்? இனி அவர் எனக்குச் செய்யும் இன்பம் அதுவே யன்றி வேறில்லை யென்பதும் அங்கை நெல்லிக்கனியாம். ஆத லால், நான் அதிகமாகக் கூற வேண்டியதில்லை. முன்பு இரு வரும் வேறல்லர் என்று சொல்லிய அத்தலைவர் இப்போது என்னை விட்டேகினரே? அது பற்றியும் நான் அதிகமாக வருந்தவில்லை. அங்ஙனம் கூறிய எனதருங் காதலர் இப்போது சற்றும் அன்பில் லாதவரா யிருக்கின்றனரே என்பதே என்னை வருத்துகிறது. ஆயி

சாநக ஜும், என் செய்யலாம் '
என்றறிவித்துப் பின்னும் அடங்காத ஆசை மிகுதியால் ஆகாயத்தைப் பார்ப்பாளாகி, ' ஓ ! மதியே! நான் ஒன்று வேண்டுகிறேன். என் இருதயத்திலேயே எப்போதும் இடை விடாது இருக்கின்ற என் காதலர் என்னை விட்டகன்றுளார். அவர் அங்ஙனம் அகன்றாலும் என் ஆசையோ அணுவளவும் குறைய வில்லை. ஆகவே, நீ சற்றும் களங்கமின்றிக் காய்வாயா யின், அவர் யாதுகாரணம் பற்றியாயினும் நோக்குவர். அப்போது உன்னையே நோக்காநிற்கின்ற என் கண்களும் அவர் கண்களும் கலக்க நேருமன்றோ ! அவ்வாறேனும் எனது காதலரைக் கண்டு களிக்கக் கருணை புரிவாயாக ' எனப் புகன்று, காதல் மிகுதியால் உண்டாகிய துன்பத்தால் கஷ்டப்படுவா ளாயினள்.

# 103 - ஆம் அதிகாரம்
# கனவுநிலை யுரைத்தல்

தலைவி தான் கண்ட கனவினது நிலைமையைக் கூறுதலே, 'கனவுநிலை யுரைத்த'லாம்.

தலைவி தனதாருயிர்க் காதலனது எழிலுருவத்தைத் தன் மனதில் அழகொழுக எழுதிப் பார்த்து, ஆனந்தித் துறங்குவாளாயினள். அப்போது அவள், தலைவனிடமிருந்து தூது வந்ததாகக்கண்டு, கண் விழித்தெழுந்து, கனவெனத் தெளிந்து, 'ஆ! இதன் கருணையிருந்தவா றென்னை? அந்தோ! நான் வருந்துகின்றதை யறிந்து, அவ்வருத்தம் தீர விடுத்த தலைவருடைய தூதைக்கொண்டு என்னிடத்து வந்த அக்கனவை நான் யாதென்று

சொல்லுவேன் ! அன்றியும், அதற்குச் செய்யும் உபசாரமும் யாதென்று விளங்க வில்லையே ' என வருந்திப் பின்னும், ' அந்தோ ! தூங்காது வருந்து கின்ற கயல்போலும் மையுண்ட கண்கள் நான் இரந்து வேண்டிக் கொண்டால் ஒருகால் இன்னும் உறங்குமோ ? அங்ஙனம் உறங்குமாயின், என தருங்காதலர்க்கு அவர் பிரிவால் அல்லற்பட்டு ஆற்றியிருக்கும் எனது தன்மையை அறிவிக்க வியலும். ஆனால், இனி இக்கண்கள் உறங்காவென்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோலுண ரக்கிடக்கின்றது ' என்றுரைத்து உள்ளங் கலங்கினாள். அது கண்ட தோழியும் ஆற்றொணாத் துயரத்திற் குட்பட்டவளாயினாள்.





அப்போது, தலைவி தோழியை

ஆற்றுவாளாகி, ' அந்தோ! நீ ஏன் வருந்துகின்றாய் ? கனவு என்னை வருத்துகின்றதென்று ? உற்று நோக்குமிடத்து, அக்கனவே என்னுருயிரைக் காக்கின்றது ' என்றறிவாயாக. விழித்திருக்குங் காலத்தில் வந்து அருள் செய்யாத அத்தலைவரைக் கனவினிடத்திலேனுங் காணுதலாலன்றோ, என் னுயிர் நிலைத்திருக்கின்றது! இன்னும், எல்லையில்லாத இன்பத்தையு மன்றோ அஃது என்னுயிர்க் கீவதாயுளது ! அக்கனவு அவர் சென்ற இடத்தை அறிந்து சென்று அவரைக் கொண்டுவந்து தருகின்றதல் லவா ? ஆகையால், இக்கனவால் நமக்கு இன்பமேயன்றித் துன்ப மில்லை. அன்றியும், விழித்திருக்கிறபோது அத்தலைவரைக் கண்டு அனுபவித்த இன்பத்தைப் போலவே இக்கனவினிடத்தும் கண்டனு பவித்துக் களிப்பதாயுளது.

இக்கனவால் நாம் எல்லையில்லா ஆனந் தத்திலாழ்ந்த வேண்டியவர்க ளாகின்றோமேயன்றி, எள்ளளவும் வருந்த வேண்டியவர்க ளாகோம். ஆனால், விழிப்பென்னும் ஒரு பாவி நின்று நமக்கிடர் செய்யவில்லையானால், அத்தலைவர் எனக்குக் கொடுமை செய்யும் வகையேது ? அவர் என்னை விட்டுப் பிரியார் ' எனக்கூறி, அப்பிரிவைப் பொறாது பின்னும் பிதற்றுவாளாகி, 'அவை தான் அங்ஙனமெனின், என் ஆசை நாய கர் கொடுமையும் அதற்கு மேம்பட்டு நிற்கிறதே ! நான் விழித்திருக்கின்றபோது, ஒரு நாளா வது வந்து இன்பம் செய்கின்றாரா ? இல்லையே. அவ்வாறிருந்தும் நாள்தோறும் என் கனவில் வந்து நலியச் செய்கின்றது என்ன கார ணம் பற்றியோ தெரியவில்லை. இவைகளை யெல்லா மெண்ணிப் பார்க் கின், எனக் கதிசயத்தை விளைவிக்கின்றது.

ஏனெனில், நனவில் இல்லாதது கனவிலும் இல்லையெனக் கற்றோர் பலரும் கூறக்கேட்டிருக் கின்றோமல்லவா ? அஃது என் விஷயத்தில் இல்லை ' என்று சொல்லி வருந்தினாள். அதுகண்ட தோழி பின்னும் அவளைத் தேற்று வாளாகி, அத்தலைவர் தன்மையைப் பழித்துக் கூறினாள். அது கேட் கச் சகியாதவளாகிய அவ்வணங்கு தமதருங் காதலனது அரிய தன்மையை எடுத்துரைக்க வெண்ணி, ' ஆ ! என் அரிய தோழியே ! என் நெஞ்சை விட்டு என்றும் விலகாதிருக்கின்ற என் காதலர், நான் உறங்கும்போது வந்து என் தோள்மேல் உள்ளவராய் நான் விழிக்குங்கால் முன்போல விரைவுற்று என் நெஞ்சி னுள்ளவராவர். **அதிகாரம் கஉ௬.]**

**கற்பியல்** **௬ருரு**

இஃதறியாது, தமக்கொரு

காதலரின்மையால் அவரைக் கனவிலே காண அறியாத மகளிர், தாமறிய விழித்திருக்கும்போது வந்து அருள் புரியாத என் காதலரை நொந்து கொள்வர். காதலரில்லாத அவர்கள் எங்ஙனம் அறிதல் கூடும் ? அவர்கள் அறியாமைகொண்டு புகல்கின்றனர். கனவினிடத்துத் தம் காதலர் நீங்காமல் வருதலைக் கண்டறியாத தன்மையினலேயே அவர்கள் அவ்வாறு கூறுகிருர்கள் போலும்!' என்றுரைத்தாள்.

---

## 104 - ஆம் அதிகாரம்
## பொழுதுகண் டிரங்கல்

---

மாலைப்பொழுது வந்தவிடத்து அதனைக் கண்டு தலைவி இரங்குதலே, 'பொழுதுகண் டிரங்கல்' எனப்படும்.

தன் தலைவனது அரிய தன்மைகளை அறிவித்து நின்றவளாகிய தலைவி, பின்னும் மாலைப்பொழுது வந்துழி மாரனது

மலர்க்கணை களால் நலிவுற்றுப் பொழுதொடு புலந்தவளாய், 'பொழுதே! நீ என் காதலரும் நானும் கூடியிருந்த காலத்தே வந்த மாலைபோலன்றி எனக்கு மனவருத்தத்தைப் பெருக்குகின்றனையே. அவர் என்னைக் கூடியிருந்த காலத்து வந்த பொழுதென்று உன்னைக் கூற இப்போது வகையில்லை. தலைவரைக் கூடியிருந்து பின் பிரிந்தாரது உயிரை உண்ணும் இறுதிக் காலமென்றே உன்னை புணராக்கிடக்கிறது. ஆகவே, இத் தகைய கொடுமையைச் செய்த உன்னை யென்னென் றியம்புவேன்!' எனக் கூறி மனவருத்த முற்றவளாய்ப் பின்னும் அவ்வருத்தத்தை அதன் மேலேற்றிப் 'பகலும் இரவும் கலந்திருந்த மாலையே! எனக் குத் துன்பம் செய்ததனால் நீயும் இன்பம் அடைந்தாய் இல்லை. என்னைப்போல நீயும் ஒளியிழந்தே யிருக்கின்றாய். ஆதலால், என் துணைவரைப்போல உன் துணைவரும்

கொடியவர் தானோ? கூறுவாயாக' எனப் பலவாறு புலம்பினாள். அதுகண்ட தோழி அதிசயித்தவளாய், 'ஆ! இஃதென்ன அறியாமையாக விருக்கின்றது, காதலுற்றார்க்கு இம்மாலைப்பொழுது கலக்கமே தரும் எனக் கழறுவதுண்டு. ஆயினும், நீ பொறுத்திருத்தல் அவசியமல்லவா?' என்றறிவித்தாள்.





தலைவி பின்னும் பெருந்துயருக்குட்பட்டவளாய், 'ஆ! இப்பொழுதினுடைய கொடுமையை என்னென்றுரைப்பேன்! என் மணாளரைக் கூடியிருந்த காலத்தெல்லாம் குளிர்ந்திருந்ததுமன்றி, என் முன் வருவதற்கும் நடுக்கம் கொண்டதுபோல் நடித்திருந்தது. அந்தோ! அவ்வாறிருந்த

இக்காலம், இப்போது எனக்கு வருத்தத்தை யுண்டாக்கியதுமன்றி, உயிர் வாழ்தலினும் எனக்கு வெறுப்பை யுண்டாக்கிப் பின்னும் அவ்வருத்தத்தை மேன்மேலும் பெருக்குகின்றதே. இம்மட்டோ ! தலைவர் உள்ள பொழுதெல்லாம் என்னுயிர் தளிர்க்க வந்த இம்மாலைக் காலமானது அவரில்லாத இப்பொழுது கொலை செய்கின்ற இடத்துக் கொலையாளிகள் போல என்னுயிரைக் கொள்ளுதற்கும் வருகின்றதே. நான் இதனை எங்ஙனம் பொறுக்க வியலும் ? அன்றியும், நான் அதற்குச் செய்த அபசாரம் யாதோ தெரியவில்லை. ஆ ! என்காதலர் கூடியிருந்த நாள் போல இன்றும் வேறுபடாமல் வருகிற காலைப் பொழுதினுடைய கருணை யென்னே ? அங்ஙனம் செய்வதற்கு நான் அதற்கு யாதொரு உபசாரமும் செய்தவ

ளல்லளே ' எனப் புகன்று துயரக்கடலிலாழ்ந்தவளாய், ' அந்தோ ! என் துயரத்திற்கு எல்லையுண்டோ ? அயலவர் இதனை யுணர்கின்றார்களில்லை. ஆகையா லன்றோ, ' அன்று அவர் பிரிவுக்கு எப்படிச் சம்மதித்தாய் ' என்று கேட்கவும் முற்படுகின்றனர் ! ஆனால், முன்னே நட்பாயிருந்து எனக்கு இன்பஞ் செய்து வந்த இம்மாலைக் காலமானது இன்று பகையாய்த் துன்பஞ் செய்தலைத் தலைவர் பிரிவதற்கு முன்னே சற்று மறிந்திலேன். அறிந்திருப்பேனாயின் இங்ஙனம் அல்லற் படுவனோ ?' என்றறிவித்ததுமன்றி அளவிலாத் துன்பத்தால் அகங்கரைந்து நின்றனள். அது கண்ட தோழி அச்சமும் ஆச் சரியமுமுடையவளாய் ' எனதருந் துணைவியே, நீ இம்மாலைப்பொழு திலே மட்டும் இங்ஙனம் மயங்குகின்றனையே, அதன் காரணத்தை

அறிவிப்பாயாக' வென்று கேட்க, தலைவி பின்னும் பெருந்துய ருக்குட்பட்டவளாய், 'அந்தோ ! இக்காம நோயாகிய மலர் காலைப் பொழுதிலே காயரும்பாகி, பகற்பொழுதெல்லாம் மலரும் பருவத்த தாய பெரிய அரும்பாகி, மாலைப்பொழுதிலே மலரும் தன்மையுடைய தாகின்றது. ஆகையினாலேயே இம்மாலை எனக்கதிக துன்பத் தைச் செய்வதாயுளது. இஃதொன்றோ ? முன்னெல்லாம் இன்பஞ்



செய்யா நின்ற இடையன் வேய்ங் குழலோசையுமன்றோ இப்போது நெருப்பைப் போன்று துன்ப மியற்றுவதா யுளது. ஆகையால், என்னைத் துன்புறுத்துவதாகிய இம்மாலைக் காலத்துக்கு அது தூதான தூ மன்றி, என்னைக் கொல்லுதற்குரிய ஆயுதமாகவு மிருக்கின்றது. ஆகவே,

இத்தகைய கொடுமைகளை யெல்லாம் நான் எங்ஙனம் சகிப்பேன்? அன்றியும், இதற்கு முன்னெல்லாம் நான் ஒருத்தியே மதிமயங்கித் துன்புற விருந்தது. இனிமேல் இதனைக் கண்ட எவருமே மதிமயங்கித் துன்புறுவார்களென்பது சொல்லவேண்டிய தில்லை. இதன் கொடுமையால் நான் இறந்து படுவது நிச்சயம். எனி னும், இதனைப் பற்றி நான் வருந்தவில்லை. 'பொருள் இயல்பே முக் கியமாகவுடைய காதலர் என்னை நினைத்துக் குறித்த காலத்தில் வர வில்லையே' என்னும் எண்ணத்தினாலேயே நான் மிகவும் வருந்து கிறேன்' என்றியம்புவாளாயினள்.

---

## 105 - ஆம் அதிகாரம்
## உறுப்புநல னழிதல்

---

தலைவியினுடைய கண் தோள்

நெற்றி முதலாகிய அவயவங் களின் அழகழிதலே 'உறுப்புநல னழிதல்' எனப்படும்.

தலைவனுடைய பிரிவை யாற்றாது வருந்திய தலைவியின் கண்கள் தலைவனை நினைந்து நினைந்து அழுதலால் ஒளிமழுங்கின; அவள் மணந்த நாளில் அழகொடு திகழ்ந்த தோள்கள் மெலிந்தன; நுதல் பசந்தன; வளை கழன்றன; மேனியின் அழகும் நலமும் அழிந்தன. அதுகண்ட தோழி அவளை ஆற்றுவாளாகி, 'அந்தோ! இஃதென்ன பேதைமை. நெடுந்தூரத்திலே சென்ற தலைவரை நினைந்தழுதலால் உன் கண்கள் ஒளியிழந்தன. அன்றியும், நமக்கு நாணின நல்ல மலர் கட்கும் அவை நாணி நிற்கின்றன. ஆகவே, இவைகளைக் கண்டாராகிய எவரும் உன் காதலரை யன்றோ கொடியவரென்று

கூறவிருக்கின்றது. மேலும், பசந்து விட்டது மன்றி நீரொழுகுகின்ற நின் கண்கள் நம்மால் விரும் பப்பட்ட தலைவரது அருளாமையைப் பிறருக்குச் சொல்லு வனபோலவு மிருக்கின்றன. இவை தான் இங்ஙனமெனின், ௬௩௯

திருக்குறள் தீபாலங்காரம்

[காமத்துப்பால் தலைவரோடு கூடிய நாளில் இன்ப மிகுதியால் பூரித்த உன்னுடைய தோள்களு மன்றோ இன்று அவர் பிரிந்திருத்தலை மிக அறிவிப் பவைபோல வாடியிருக்கின்றன. அவை தலைவர் நீங்குதலால் அவராற் பெற்ற செயற்கையழகு மாத்திரமல்லாமல் இயற்கை யழகையு மன்றோ இழந்தன. ஆதலாலன்றோ அவை, இப்போது பெருமை யிழந்து மெலிந்ததுமன்றிப் பசும்பொன் வளையல் களையும் கழலச்செய்கின்றன. இன்னும் அத்தோள்கள், அவர் சொல்லிப் போன

பருவத் தில் திரும்பி வாராத பொய்யரென்றுமன்றோ புகன்று நிற்கின் றன. ஆதலால், உன் தோள்கள் மிகக் கொடியனவென்று கூறவும் வேண்டுமோ ? தழுவின கை தளர்ந்தாலும் தரியாத இவள் நெடுங் காலம் நீங்கினால் கலங்குவாள் என்று நினையாத கொடியவரென்று அத் தோள்கள் அவர்க்கே உரைக்க நிற்கின்றனவே. அந்தோ ! அவரோடு கலந்த இத்தோள்களே அவரைப் பழிக்கின்றன வென்றால், அய லார் பழிப்பரென்பதற் கையமுண்டோ ?' எனக் கூறிப் பின்னும் தலைவனுடைய உயர் குணங்களைப் பழித்துப் பேசினாள். அது கேட்ட தலைவி சிறிதும் பொறாதவளாய், ' அந்தோ பாவம் ! அவர் வரவில்லை யென்று நான் வருந்துகின்றேன். ஆற்றியிருந்தாலும் எவ்வாறாகவோ என் தோள்கள் மெலிந்து வளையல்களும் கழல்கின் றன.

அஃதுணராது, நீயும் அவரைக் கொடியரென்றறிவிக்க முற்படு கின்றாய். ஆழ்ந்து கூறுமிடத்து, அவை பொருமலே என்னுள்ளம் நோகின்றன' எனக் கூறிப் பின்னும் தம்மனதை நோக்கி, 'மனமே! கொடியவரென்று அயலாரால் சொல்லப்பட்ட அத்தலைவருக்கு என் வாடுகின்ற தோள்களால் விளைகின்ற துன்பமிகுதியைச் சொல்லி ஒரு மேம்பாட்டை யடைய வல்லமை யுடையாயோ? அங்ஙனம் வல்லமையுடையாயானால், இதை ஒன்றும் விடாமல் அவருக்குச் சொல்வாயாக. எனக்கு இதனைப் போல நன்றி வேறெவையுமில்லை. நீ. தக்க காலத்திற் செய்யும் நன்றியை நான் எக்காலத்தும் மறவேன். அன்றியும், நீயும் அடைதற்குரிய இன்பத்தை ஆலசிய மின்றி அவசியம் அடைவாய்' எனப்

பலவாறு பன்னிப் பன்னிக் கூறிப் பரிதவிப்பாளாயினள் . நிற்க.

வினை முடித்துத் திரும்பி வருகின்ற தலைவன் முன்னொரு கால் தலைவியிடம் நிகழ்ந்ததை நினைத்துத் தன்னுள்ளே சொல்வானாகி, அதிகாரம் - ௧௦௯.]

கற்பியல் சாஉள 'ஆ! ஆ! என்ன வியப்பு! முன்னொரு நாள் என் காதலியை உடலிரண்டும் ஒன்றாகும்படி இறுகத்தழுவிப் பின் அவளுக்கு நோகுமென்றெண்ணித் தழுவிய கையைச் சற்றே விலக்க, அவ்வளவு நெகிழ்ச்சியும் அவள் பொறுக்கவில்லையே. ஆதலாலன்றோ பசிய வளையல்களை அணிந்தவளாகிய என தருங் காதலியின் நெற்றியானது பசந்து விட்டது. அந்தோ பாவம்! அத் தகைய நெற்றியானது இப் பிரிவுக்கு

எத்தன்மையாகியதோ ! அன்று, அவ்வாறு தழுவிய என் கை சிறிது வழுவியபோது இருவர் உடலும் சிறிதுதானே விலகியிருக்கும். அவ்வளவு இடையிட்ட தூரத்தையும் பொறுமல் அவளது குளிர்ந்த கண்கள் பசந்தனவே ! அப்படிப்பட்ட அரிய கண்கள் காடுகளும் மலைகளுமாகிய இவ்வளவு இடையிட்ட தூரத்தை எங்ஙனம் பொறுத்திருக்கின்றனவோ ?' என்றுலோசித்துப் பின்னும் அன்று கைகளைத் தளர்த்திய காலத்துப் பசலை நிறமடைந்த கண்களின் வன்மையையும் ஒளிபொருந்திய நெற்றியின் மென்மையையும் எண்ணி, பிரிந்த இன்று அவை ஒன்றேடொன்று முந்தி நலனழியுமெனத் தேர்ந்து நலிவானுகி, நாயகி மேற்கொண்ட காதலால் கடிதிற்செல்லக் கருதுவானுயினுன்.

# 106-ம் அதிகாரம்
# நெஞ்சொடு கிளத்தல்

---

பிரிவினை அதிகரிக்கத் தனக்கு ஒரு பற்றுக்கோடு காணாத தலைவி தன்னெஞ்சோடு செய்திறன் அறியாது கூறுதலே, ‘ நெஞ் சொடு கிளத்தல் ’ எனப்படும்.

தலைவன் கடிதில் வரக் கருதியிருக்கவும், தன் அவயவங்களின் அழகையுமிழந்து அதிவருத்தத்திற் குட்பட்டவளாகிய தலைவி தனக்குப் பற்றுக்கோடாகிய நெஞ்சோடு தன் ஆற்றுமை தீரும் வகைநாடி, ‘ மனமே ! ஒன்றுலும் தீராத மிக்க நோயைத் தீர்க்கும் மருந்தாவதொன்றை நா ன் அறியும்படியாக அறிவிப்பாயாக. அஃது உயிரினுஞ் சிறந்த நாணத்தைவிட்டுச் செய்வதேயாயினும் செய்யச் சித்தமாக

விருக்கின்றேன்' எனக் கூறினாள். பின்னும் அத் தலைவி தம் காதலரைக் காணும் ஆசை மிகுதியால், ' அந்தோ ! என் சாகூஅ



மனமே ! உன் அறியாமையை யாதென்றியம்புவேன் ? அவரிடம் நீ சொல்லவு மாட்டாய். அவர் நம்மேல் அன்பிலரென்று அறி யவுமாட்டாய் போலும். ஆதலாலன்றோ அத்தலைவர் நம்மேல் ஆசையிலராக விருந்தும் நீ அவர் வரவு பார்த்து வருந்துகின்றாய். அந்தோ பாவம் ! அவரிடத்திற்குப் போகாமலும் இங்கே இறவாமலுமிருந்து இங்ஙனம் வருந்துகின்றதனால் என்ன பயன் ? இங் ஙனம் வருந்தச் செய்த தலைவர் இனிமேலும் நம்பிடத்து இரக்கம் வைத்து வருவாரென்று எண்ணவும் வகையில்லையே !

நீ அத்தலைவ ரிடத்துச் செல்லலுற்றாயானால் இக்கண்களையும் உடன் கூட்டிக் கொண்டு செல்வாயாக. அவ்வாறின்றி நீ மாத்திரம் சென்றால் இக்கண்கள் அவரைக் காணவேண்டி என்னைத் துன்பப்படுத்தும். அன்றியும், தம்மை விரும்பினாலும் நம்மை விரும்பாத் தலைவர் வெறுத்தாரென்று நினைத்துப் பிணங்கி அவரைக் கைவிட்டிருக்கும் வலிமையும் நமக்கில்லையே. ஆகவே, நாம் அவரிடம் செல்வதே அவ சியமான காரியமாகும் ' என்றறிவித்தாள். அதற்கும் உடன்படாது தலைவனுடைய கொடுமையை நினைந்து வருந்துகின்ற மனதைப் பின்னும் நோக்கிய தலைவி, ' அந்தோ ! இஃதென்ன வியப்பு ! அவரை நீ ஏன் பொய்யாகக் காய்ந்து வெறுக்கின்றாய். இந்த வெறுப்பினால் என்ன பயன் ? உன் தன்மையை நான் அவரோடு புணர்ந்த நாளி லிருந்து ஐயக்திரிபற

அறிந்திருக்கின்றே னன்றோ ? நான் முன்னொரு நாள் அவரோடு பிணங்கியபோது, அஃதுணர்ந்த அவர் கலவி யின்பத்தைக் காட்ட, அதனால் நீ மயங்கி என் புலவிக் குறிப்பையும் அழித்து அவரோடு புணர்ச்சிக்கு விரைந்தாயல்லவா ? அத்தகைய தன்மையுடைய நீ இப்போது அவரைக் கொடியவரென்று பொய்க் கோபம் கொள்வதால் என்ன பயன் ? ஆதலால், கண்டால் வெறுக்க மாட்டாத நீ அவரைக் காணாத இடத்து என் வெறுக்கின்றாய் ? ஆராயுமிடத்தும் இதனால் யாதொரு பயனுமில்லை. ஆகவே, இனி இதனை ஒழித்து அவரிடம் விரைந்து செல்வாயாக. ஒருகால், நாணம் தடுத்தலால் நீ இங்ஙனம் நலிந்து வருந்தலாம். அங்ஙன மாயின் அதற்கோர் உபாயம் செய். அவர்மேல் இருக்கும் வேட் கையை விட்டுவிடு. அப்பொழுதுதான் உனக்கு

ஆற்றியிருக்கும் தன்மையுண்டு. அஃதியலாதாயின், அந்நாணத்தலைதயேனும் ஒழித்து அதிகாரம் - கஉஎ.]



விடு. அவ்வாறின்றி, ஒன்றுக்கொன்று பகையாகிய அவ்விரண்டையும் வைத்திருப்பாயாகில் என்றால் அவற்றைத் தாங்கவியலாது. அன்றியும், நீயும் நம்முடைய ஆற்றாமையைக் கண்டிருந்தும் இரக்கப் படாமல் பிரிந்துபோயின அத்தலைவர் பின்னே ஏங்கிச் செல்லும் தன்மையோ டிருக்கின்றாய். ஆனால், அக்கொடியவர் நீ சென்ற அளவிலே இரக்கப்பட்டுத் திரும்பி விடுவரோ? இல்லை. ஆகவே, உன்னுடைய அறிவுதான் என்னே! முன்னெல்லாம் அத்தலைவர் உள்ளிருப்பவராகவே கண்டிருந்தும் இப்போது புறத்தே தேடிச்

செல்லுகின்றாயே! உன் செய்கை எனக்கு ஆச்சரியமாக வன்றோ விருக்கின்றது. நம்மைக் கூடாவண்ணம் துறந்து போயின தலைவரை நாம் நினைத்தல் சுத்த அறிவீனமல்லவா? அன்றியும், நாம் அவரை நினைப்பதனால் அடையும் பயன் யாது? முன்னிழந்த புறத்தழகாகிய மேனியின் நலன்களை யிழந்ததுமன்றி, இன்னமும் அகத்தழகாகிய நிறையழகையுமன்றோ இழக்கவேண்டி யிருக்கும். ஆகையால், நீ அவரை மறந்திருப்பாயாக. ஆராயுமிடத்து, அவ்வாறொழுகுந் தன்மையே அருமை யுடைத்து' என்றறிவிப்பாளாயினள்.

---

## 107 - ஆம் அதிகாரம்
## நிறையழிதல்

---

தலைவி மனதின்கண் அடக்கப்படுவனவற்றை ஆசை மிகுதியால்

அடக்க மாட்டாமல் வாய்விட்டுச் சொல்லுதலே 'நிறையழி தல்' எனப்படும்.

மனத்திற்கு அறிவிக்கா நின்ற தலைவியைத் தோழிகண்டு அதி சயித்தவளாய், 'அந்தோ! இஃதென்ன பேதைமையினும் பேதை மையாக விருக்கின்றது. அல்லும் பகலும் இதுவே தொழிலாக விருக்கலாமா? அன்றியும், 'நாணம் அழிந்தால் நிறை அழியும்' என்பதையும் நாம் நன்குணர்வோமல்லவா? ஆகையால், நாணும் நிறையும் அழியாமல் நாம் பொறுப்பதன்றோ புகழுடைத்து' எனப் புகன்றாள். அது கேட்ட தலைவி பின்னும் ஆற்றாதவளாய், 'ஆ! எனதருந் தோழியே! நான் எங்ஙனம் ஆற்றியிருப்பேன்! நாணமாகிய தாழ்க்கோலினைக் கோத்த நிறையென்று சொல்லப்படுகிற கதவைக்

மாகிய உளி முறிக்கின்றதே. ஆனால், நீ காமவேட்கை அத்தகைய வலி யுடையதா வென் றையுறலாம். அன்றியும், அஃது நெஞ்சிலே தோன்றியதுதானே, அதனை நீ அடக்கமுடியாதா வென்றும் அறி விக்க முன்வருவாய். அவையும் உண்மையே. ஆயினும், என்னால் அஃது அடக்கத் தக்கதன்று. ஆதலாலன்றோ, எல்லாரும் தொழில் நீங்குகின்ற நடுராத்திரியிலும் அஃது என் மனத்தைத் தண்டித்துத் தொழிலிலே ஆளுகின்றது. ஆதலால், காமமென்று சொல்லப் பட்ட ஒன்றுக்குக் கண்ணோட்டமென்பது சிறிதுமில்லை. ஆனால், மகளிர் காமம் மறைத்தற்குக் கூடும் என்று நீ சொல்லலாம். ஆராயு மிடத்தும், அத்தகைய தன்மையாலன்றோ

இக்காமமானது என் கருத்தின் வழி வராமல் தும்மல்போலத் தோன்றிவிடுகின்றது. இம்மட்டோ ! நான் இதுவரை என்னை நிறையுடையே னென்று நினைத்திருந்த நினைப்பையு மாற்றிப் பலரும் அறிய வெளிப்பட்டு மன்றே நிற்கின்றது. ஆகவே, காமமானது ஒருவருக்கும் அடங்கினதன் றென்பது அறிவுறுத்தவும் வேண்டுமோ ?' என்றறிவித்து நின்றாள்.

தோழி, பின்னும் தலைவியை ஆற்றுவாளாகி, ' ஆ ! என்னுருயிர்த் துணைவியே ! காமத்தை அடக்குவதற்கும் ஓர் அரிய வழி யுண்டு. அஃதியாதெனில், நம்மை மறந்தவரை நாமும் மறத்தலே யாம். ஆராயுமிடத்து, நாம் அதனல் அடையும் நன்மைகள் பல வாம். அப்போது இந்நோயும் இராது ; நிறையும் அழியாது ' என்று சொன்னாள். அதுகேட்ட

தலைவி, ' ஆம். நீ சொல்லுவதும் உண்மையே. எனினும், என் அனுபவமோ அங்ஙனமன்று. ஆகையாலன்றோ, ' இன்பத்தோடு கழியும் காலத்தைத் துன்பத் தோடு கழியும்படி செய்துவிட் டேகினரோ ' என்றெண்ணாது, அவரையே நினைந்து வருந்துவதா யுளது. அன்றியும், காதல் நோய் அடையாதவர்களே அத்தகைய கண்ணியத்தை அடைந்தவராவ ரென்பதும் நாம் கண்டு கொள்ளத்தக்க விஷயமாக விருக்கின்றது ' எனக் கூறி, பின்னும், ' ஆ! ஆ! இக்காதல் நோயானது நிரம்பக் கொடியது. ஏனெனில் ' இவளைப் பிரியலாகாது, பிரிந்தால் அதனைப் பொறாது துன்பப் படுவாள் ' என்று சிறிதும் எண்ணாது, என்னைத் துன்பத்திலே விட்டேகிய அக்கொடியவர் பின்னே கூசா

சாசாக மல் செல்லச் செய்கின்றதே ! ஆகவே, இதன் கொடுமையை என் னென் றுரைப்பேன் !' எனக் கூறி எல்லையில்லாத் துன்பத்தால் ஏங்கி யிருந்தனள். அவ்வாறிருந்த தலைவியோடு தோழி பின்னும் பேசுவாளாகி, ' ஆ ! என்னுருயிர்த் துணைவியே! அங்ஙனமாயின், பரத்தையரிடத்துப் பிரிந்து வந்த அத்தலைவரோடு அன்று பிணங் காது கூடினையே அதன் காரணம் யாது ?' என, தலைவி புன்னகை செய்தவளாய், ' நம்மால் விரும்பப்பட்ட தலைவர் வந்து காமத் தினாலே நாம் விரும்பியவைகளைச் செய்புமளவில் நாணென்று சொல்லப்பட்ட அச்சிறியதையும் நாம் அறியமாட்டோம். அன்றியும் நமது நிறையாகிய கோட்டையை அழிக்கின்ற ஆயுதம், பல பொய்கள் பேசவல்ல

திருடாகிய அத்தலைவருடைய தாழ்ந்த சொற்களன்றோ ! ஆகையால், நிறையும் ஊடலும் நிற்ப தெங்ஙனம் ? எனினும், அன்று அத்தலைவரோடு பிணங்க வெண்ணி அவரெதிரே நில்லாமல் வேறிடத்தே போயிருந்தேன். ஆயினும், என் மனமானது கலங்காநிலையில் நில்லாது கெட்டு, அவரோடு கலக்கவே நினைத்தது. ஆதலால், அவரோடு ஊடவிருந்த நான் புணர்ச்சிக் கிசைய லானேன். ஆராயுமிடத்தும், வெண்ணெயைத் தீயிலிட்டால் அது உருகுமாறு போலத் தலைவரைக் கண்டால் நிறையழிந்துருகும் மன முடைய மாதருக்கு 'நாம் ஊடல் செய்து, பின் புணர்ந்து, அந்நிலை யிலே நிற்போ'மென்று நினைத்தலும் உண்டோ ? இல்லை. ஆகவே, அத்தகைய தன்மைகளைப்பற்றி விவகரிப்பதெனின் மிகப் பெருகும்' எனப் புகலா நின்றனள்.

---

## 108 - ஆம் அதிகாரம்
## அவர்வயின்
## விதும்பல்

---

தூரதேசப் பிரிவின்கண் தலைவனும் தலைவியும் ஆசை மிகுதி யால் ஒருவரை யொருவர் காணுதற்கு விரைதலே, 'அவர்வயின் விதும்பல்' எனப்படும்.

தனது இயல்பாகிய நாணத்தால் அடக்கற்பாலனவாய குறிப் புக்களைக் காதல் மிகுதியால் நிறையழிந்து வெளியிட்டவளாகிய

ருக



தீபாலங்காரம் [காமத்துப்பால் தலைவி, தனது காதலர் சென்ற நாளிலிருந்து தான் சுவரிற் கீறியுள்ள குறிக்கோடுகளைக் கூட்டிப் பார்த்தவளாய், 'அந்தோ ! எனதருங் காதலர் பிரிந்து அநேக நாட்களாகின்றனவே.

இக்கோடுகளை எண்ணி எண்ணி என் விரல்களும் தேய்ந்து விட்டன. அம்மட்டோ ! அவர் வரும் வழியைப் பார்த்துப் பார்த்துக் கண்களுமன்றோ ஒளியிழந்து புல்லியவாயின. இன்னும், அவர் வரவைக் காணேன். ஆகவே, நான் செய்யும் வகை யாது ?' எனச் சொல்லித் துயரமுற்றாள்.

அப்போது, அவளுடைய தோழி அவளை ஆற்றுவாளாகி, 'அல்லும் பகலும் அவரையே நினைந்து இங்ஙனம் அல்லற்படுவது உனக் கழகாகுமோ ? ஆதலால், நீ அவரை நினையாது அவசியம் மறத்தல் வேண்டும். இன்றேல் உனக்கெவ்வகையானும் துன்பமே பெருகும் ' என்றாள். அதுகேட்ட தலைவி பின்னும் பெருந் துயருக் குட்பட்டவளாய், 'அரிய ஆபரணங்களை அணியப் பெற்றவளாகிய எனதருந் தோழியே! இறந்து படுகின்ற

இந்நாளிலா எண்ணரும் காதலரை மறக்கச் சொல்லுகின்றாய். அந்தோ! அங்ஙனம் மறப்பேனாகில் மறு பிறப்பிலும் அழகானது என்னைவிட்டு நீங்க, எனது தோள்களும் மெலிந்து வளையல்களைக் கழலச் செய்ய, நானும் ஆற்றொணாத்துயருக் கன்றோ ஆளாக வேண்டிவரும்? மரண சமயத்தில் எதை நினைத் தாலும் அது மறு பிறப்பிலே கைகூடு மென்பதை நீ மறந்தாய் போலும். நான் இச்சமயம் அவரை எவ்வகையானும் மறக்க நினை யேன். அன்றியும், இன்பத்தை விரும்பாமல் வெற்றியை விரும்பி, நாம் துணையாதலை யிழந்து, தமது மனவூக்கமே துணையாகப் போன அத்தலைவர் அவ்வெற்றியையும் ஊக்கத்தையும் இழ ந்து இங்கு வரு தலை விரும்புவாரென்பது எனக்கு வெளிப்படையாகத் தோற்று கிறது. ஆதலினாற்றான் என்னுயிரும் அளவிறந்த துன்பத்திற்காளா யும் அழிவிற் குட்படா திருக்கின்றது. இஃதொன்றோ !

என்மனதும் வருத்த மொழிந்து மேன் மேலும் பருத்தெழுகின்றது. எனெனில், காமத்தை நீங்கினவராகி நம்மைப் பிரிந்து போன தலைவர் காமத்தைக் கூடினவராகி நம்மிடம் வருதலை நினைப்பார் என்ற நினைவால். ஆழ்ந்துபார்க்கு மிடத்தும் அத்தகைய நினைவில்லர் விடின் நான் இறந்துபடுவேன் என்பது எடுத்துக்காட்டவும் வேண்டுமோ? ஆனால், 'அத்தகைய உண்மைகளை யெல்லா முணர்ந்தவளா அதிகாரம் - ௧0அ.]

கற்பியல் ௬௬௯ கிய நீ,

இங்ஙனம் உடம்பெல்லாம் பசலைபடரப் பரிதவிப்பானேன்?' எனின், இப்பசப்பு அவர் வருவாரென்ற எண்ணத்தினால் நீங்கத் தக்கதன்று. என் கருத்திற்கிசைந்த காதலரைக் கண்ணாரக் கண்ட பின்பே என்மெல்லிய தோள்களிலுள்ள பசலை நிறம் பறந்தோடும். அஃதொன்றோ? அப்போது,

என்னைத் துன்பஞ் செய்கின்ற காமநோயுந் தொலையும். அப்போது, நானும் அவரிடத்துள்ள இன்பமாகிய அமிர்தத்தை ஐம் பொறிகளாலும் ஆசைதீர உண்பேன். ஆனால், அதிரகசியமான விஷயம் ஒன்றுண்டு. அஃதியாதெனில், என் கண் போன்ற சிறந்த காதலர் வருவாரானால், அவர் வரா
மல் தாமதம் செய்ததற்காகப் பிணங்குவேனோ? அல்லது சகிக்க மாட்டாமல் தழுவுவேனோ? அல்லது, இரண்டும் வேண்டுதலால் இவ் விரு செய்கைகளையும் கலப்பேனோ? தெரியவில்லை யென்பதேயாம்' எனக் கூறி ஆசை மிகுதியால் அறிவு கலங்கி நின்றனள். நிற்க.

அரசனுக்குத் துணையாகப் பிரிந்து போன தலைவன் போர்

முடிவு தாமதிப்பது கண்டு, தன்
தலைவியை நினைத்துத் தன்
னுள்ளே வருந்துவானாகி, ' அரசன்
போரிலே வெல்வானாக. நாமும்
சென்று நம்மனைவியைக்கூடி அவ்விடத்து
மாலைக் காலத்துப் புதுமை
செய்வோமாக. ஆனால், என்னருங் காதலி
எங்ஙனம் வருந்துகின்
றாளோ? அந்தோ பாவம்! அவள் செய்தி
யாதொன்றும் தெரிய
வில்லையே. தூரதேசத்திற்குச் சென்ற
தம் காதலர் திரும்பி வரக்
குறித்த நாளை நினைத்துக்கொண்டு, அவர்
வரும்வரை உயிரைத்
தாங்கி வருந்தும் மாதர்க்கு, ஒரு
நாளானது பலநாள் போல
நீண்டதாகக் காட்டுமன்றோ!
அத்தகைய தன்மைக் குட்பட்ட

வளாகிய என்னருங்காதலி பிரிவு பொறுமல் எங்ஙனம் வருந்தி இறந்துபடுகின்றளோ? தெரியவில்லை. ஆதலால், நான் விரைந்து செல்லவேண்டியது மிகவும் அவசியமல்லவா? இன்றேல், அவள் நம்மைப் பெற்றலும் அல்லது சேர்ந்தாலும் என்ன பயன்?"

எனப் பலவாறு பன்னிப் பன்னிப் பரிதவிக்கலாயினன்.

---

# 109-ஆம் அதிகாரம்

# குறிப்பறிவுறுத்தல்

---

தலைவன் தலைவி தோழி என்ற இவர்கள், ஒருவர் குறிப்பினை ஒருவர்க்கறிவுறுத்தலே, 'குறிப்பறிவுறுத்தல்' எனப்படும்.

தலைவன், தான் மேற்கொண்ட தொழிலை முடித்து

யாககாங் காதலி அழகழிந்தும் உடல் மெலிந்தும்

மீண்டுவந்து,

மேனி பசந்

தும் இருப்பதை நோக்கி, ஆசை மிகுதியால் அவளோடு அகத்தொழிலும் புறத்தொழிலும் புதிது புதிதாகப் பலவாறுஞ் செய்தான்.

அப்போது, தலைவி அஞ்சியவளாய், 'அந்தோ! இஃதென்ன வியப்பாக விருக்கின்றது. இவர் என்றும் செய்யாத விளையாட்டுக் களை யெல்லாம் இன்று என்னிடம் செய்கின்றாரே. இதன் காரணம் என்னோ? ஒருகால் இன்னு மொருமுறை என்னை விட்டுப் பிரிய விருக்குமோ?' எனப் பலவாறு ஆலோசித்தாள். அதனைக் குறிப்பா லுணர்ந்தோனாகிய அத்தலைவன் பின்னும் அவள் குணத்தை மெச்சு வானாகி, 'என் கருத்திற் கிசைந்த கற்பகமே! நீ எவ்வளவுதான் மறைத்தாயானாலும் நினது மையுண்ட கண்கள் மறைக்குமோ? மறைக்கா. ஆதலாலன்றோ அவை ஏதோ ஒரு விஷயத்தை எனக்கு எடுத்துக் காட்டி நிற்கின்றன. ஆதலால், அதனை நீயே எடுத்துரைப்பாயாக' எனக் கேட்டான். அதற்கு அவள் சிறிதும் செவிகொடுக்க வில்லை. அப்போது, தலைவன் தோழியை நோக்கி, 'என் கண்ணிறைந்த அழகையும் மூங்கில் போன்ற தோள்களையுமுடைய

உன் துணைவிக்குப் பெண் நீர்மை பெரிது.

அன்றியும், நோக்கப்பட்ட

படிகமணிக்குள்ளிருந்து புறத்தே
விளங்கித் தோன்றும் நூலைப் போல
இம்மடந்தையினது அழகுக்குள்ளிருந்து
புறத்தே விளங்கித்
தோன்றுவதாகிய ஒரு குறிப்புண்டு. ஆனால், அதனை அறிவது எனக் கரிதாக வுளது. ஆகவே, அதனை நீ அறிவிப்பாயாக. அம்மட்டோ!

மொட்டினுள் உள்ளதாய்ப் புறத்தில் தோன்றாத வாசனைபோல உன் மாதினது நகையுள்ளும் அடங்கியுள்ள கருத்தொன்றுண்டு.
அது யாதென் றாராயுங்கால் என்னிடத்தில்
நினைத்தே இவ்வளவும் செய்கின்றா ளென்பது

இல்லாத பிரிவை
எளிதில் விளங்கு அதிகாரம் - கoகூ.]
கற்பியல் சசரு

கிறது. அக்குறிப்புக்குரிய மருந்து, இனி
நான் பிரியேனென் றுரைப்பதேயாம்.
அதனை அவளுக் கறிவிப்பாயாக

என்றுரைத் தான். அது கேட்ட தோழியும் தம்மாருயிர்த் துணைவியைத் தேற்றுவா ளாயினாள்.

தலைவி, தோழி கூறியனவற்றைச் சிறிதுங் கேளாதவளாய், ; தலைவர் வந்து தம் பிரிவினாலாகிய துன்பத்தை மிகவும் நீக்கி நாம் சந்தோஷிக்கும் விதமாகக் கூடுதலானது பின்னும் தலைவர் பிரிந்து போவாரென்பதைக் குறிப்பால் விளக்குந் தன்மையுடையதா யிருக்கின்றது.

னான் இங்ஙனம்

நீ அதனை அறிந்தாயில்லை போலும்! அறிவிக்கவும் அஞ்சாது வந்தனை.

ஆதலாற்

அந்தோ !

இயற்கையில் அறியுந் தன்மையில்லாத என்
அதனை வரையறுத்து வழுத்தா நிற்கின்றன !

வளையல்களுமன்றோ

அத்தலைவர் நம்மை
மெய்யினாலே கூடியிருந்து மனத்தினாலே பிரியுந் தன்மையைக் குறிப்பால் நாமறிதற்கு முன்னே அறிந்து அவைகள் கழல்கின்றன. ஆகவே, அத்தலைவர் அன்றே பிரிந்து போயினா ரென்பது அறிவுறுத்தவும் வேண்டுமோ? ஊன்றி நோக்குமிடத்து, என் னுடம்பு வேற்று நிறமடைந் தேழுநாட்க ளாகின்றனவே' எனக் கூறி எல்லையில்லாத் துன்பத்திலாழ்ந்தவ ளாயினள்.

தோழி தலைவியின் நிலைமையைத் தலைவனுக்கு அறிவிக்க வெண்ணிச்சென்று, அத்தலைவனை நோக்கி, 'ஆ ! இஃதென்ன விந்தையினும் விந்தையாக விருக்கின்றது. அவளை நான் தெளிவித்த இடத்தே தெளியாது, 'அவர் பிரிய நான் இங்கே யிருந்தால் இவை நில்லா' வென்று தன் கை வளையல்களைப் பார்த்தும், 'பின் நில்லா

மைக்குக் காரணமாக இவை மெலியு'மென்று மெல்லிய தோள்களைப் பார்த்தும், பின்னும் 'இவ்விரண்டும் உண்டாகாமல் நீர் நடத்தல் வேண்டு'மென்று தன் கால்களைப் பார்த்தும் கஷ்டப்படுகின்றனளே? அக்குறிப்பை ஆராயுங்கால் நீர் அறிவித்த உண்மை அபத்தமென் றறியக் கிடக்கின்றது. அன்றியும், அங்ஙனம் பிரிந்தால், அவள் உடன் வருதலும் உறுதி யென்பதை உணர்வீராக' எனப் பலவா றுரைத்தாள். அதனை அறிந்த தலைவன் பின்னும் அளவிலாத மகிழ்ச்சி அடைந்தவனாய்த் தமது காமநோயினைத்



தீபாலங்காரம்

தீர்க்குமா று குறிப்பாற் கூறி, 'தந்தோழியரை யிரவாது உடன் போதலைக் குறித்துத் தமது கால்களை யிரத்தல் அக்கன்னியர்க் கியல்பே' எனக் கழன்று, தான் இனிப் பிரியும் தன்மையிலன் எனவும் தக்கவாறு விரித்துரைத் திருந்தனன்.

---

# 110 - ஆம் அதிகாரம்

## புணர்ச்சி விதும்பல்

தலைவனுந் தலைவியும் புணர்ச்சியின்கண்ணே விரைதலே, 'புணர்ச்சி விதும்பல்' எனப்படும்.

தலைவியைப் பிரியேனென்ற தலைவன் அனங்கனுடைய பாணத்தினால் மிகவும் நொந்தவனாய்த் தனது ஆருயிர்க் காதலிபால் அடைதற்குரிய இன்பத்தை அனுபவிக்க வெண்ணி ஆவலுடன் செல்ல, தலைவியும் ஆசை மிகுதியால் அவனோடு பிணங்காது புணர்ச்சிக்கு விரைவாளாயினாள். அது காலே, தோழி அதிசயித்தவளாய்ப் பிரிதற் குறிப்பினனாகிய தலைவனோடு தலைவி பிணங்காமைக்குக் காரணம் யாதெனக் கேட்டாள். அதனைப் பொறாத தலைவி அதன் தன்மையை அறிவிப்பாளாகி, 'ஆ, காதலுக்குள்ள குணம் கள்ளுக்கும்

இல்லையே ! அது தன்னை நினைத்த மாத்திரத்திலேயே எத்தகைய களிப்பை யீயவல்லதா யுளது. அத்தகைய காதலைக் கொண்ட நான் அவரோடு ஊடுவது எங்ஙனம் ? அன்றியும், காமமானது பனையளவினு மிக மகளிருக்கு உண்டாமானால், அவர்கள் தினையளவும் தலைவரோடு ஊடல் செய்யா திருக்க வேண்டுமென்பதையும் நீ யுணராயா ? ஆனால், அவர் நம்மை அவமதித்து நடக்கின்றாரே யெனலாம். ஆழ்ந்துணரின் அதுவும் உண்மையே. ஆயினும், என் கண்கள் அவரை எவ்வகையானுங் காணாதிருப்பதற் கிசையவில்லை. அவைதான் அங்ஙனமெனின், மனது மன்றோ மன்றாடுகின்றது. அவரைக் காணுதற்கு முன், அவர் செய்த குற்றங்களை யெல்லாம் எடுத்துக்காட்டி யிருந்தும், எவ்வகையாலோ அவரைக்

கண்டவுடன் அவைகளை யெல்லா மறந்து புணர்தலிலே விரைந்து செல்கின்றது. ஆதலாலன்றோ, முன்னெல் லாங் கண்டிருந்தும் மை யெழுதும்போது அவ்வெழுதுகோலின்


கருமையைக் காணமாட்டாத கண்ணைப்போல, நாமும் தலைவருடைய குற்றங்களை யெல்லாம் அறிந்திருந்தும் அவரைக் கண்டவிடத்து அக்குற்றங்களைப் பாராட்டாமல் களிப்படையு மியல்புடையவர்க ளாகின்றோம். ஆகவே, நான் அவரைக் காணும்பொழுது குற்றங்களை யும், காணமாட்டாதபோது குற்றங்களல்லாதவைகளையும் அவரிடத்தில் கண்டறியேனென்பது கரதலாமலக மன்றோ ? ஆதலால், நான் பிணங்கியிருப்ப தெங்ஙனம் ? அன்றியும், என்னால் கடைசி

வரை பிணங்கியிருக்க வியலுமா ? தம்மை யிழுத்துக்கொண்டு போதல் அறிந்துகொண்டு, ஓடுகின்ற நீரிலே பாய்வோர் செயல் போல, ஊடல் நிலைக்க மாட்டாதென்ப துணர்ந்திருந்தும் அவரோடு ஊடல் செய்வதால் யாது பயன் ?' எனப் பலவா றெடுத்துரைத்தாள். அவைகளை யெல்லாம் அநுபவமாகவும் கண்டறிந்து ஐயந்திரிபற ஆராய்ந்துணர்ந்தவளாகிய அத்தோழி, பின்னும் அதிசயித்தவ ளாய்த் தம்மாருயிர்த் துணைவியின் காதலனுக் கதனை அறிவிக்கச் சென்று, 'கள்வனாகிய தலைவனே ! எங்களுக்கு உனது மார்பானது, வெட்கம், ஒழுக்கம், உணர்வு, நிறை முதலிய இவைகள் இல்லாமை யைச் செய்தலால், தன்னை உண்டு களித்தவருக்கு அவமானப்படத் தக்க இனிமை யில்லாதவைகளைச் செய்யும் கள்ளைப் போலவே காணப்படுகின்ற தெனலாம். ஆழ்ந்துணரு மிடத்தும் அதனலன்றோ, அது

உண்டவராலே மேன்மேலும் விரும்பப்படுவதாகிய அக் கள்ளைப் போலவே, எங்களையும் மேன்மேலும் விரும்பச் செய்யு மியல்புடையதாக விருக்கின்றது. ஆகவே, நீர் வஞ்சகரென் றெண்ணி வரவேற்கா திருப்ப தெங்ஙனம் ?' என வழுத்தா நின்றனள். நிற்க.

புணர்ச்சிக்கு விரைந்தவளாகிய அத்தலைவி, முன்னம் தம் காதலன் செய்த தவறுகளை அவனுக் கறிவுறுத்துமாறு தீராத வூடலைச் செய்து நின்ருள். ஆசை மிகுதியால் சென்ற அத்தலைவன் அதனைப் பொருதவனாய், ' ஆ ! காம இன்பம் பூவினும் மெல்லியதாகவன்றோ புலப்படுகின்றது. இத்தகைய மெல்லிய இன்பத்தினை எல் லோரும் எளிதிலடைவ தெங்ஙனம் ? குறிப்பும், ஆசையும், அநுப விப்பும் ஒருகாலத்தே ஒத்து இன்பம் அநுபவித்தற்குரிய

இருவர் ஏற்ற இடமும் காலமும்
உபகரணங்களும் பெற்றே அவ்வின்பத்

தீபாலங்காரம்  தினை
நுகரவேண்டும். இவ்வாறின்றி
ஏதேனுமொன்றினாற் சிறிது
மாறுபடுமாயினும் பயனின்றே. முன்னொரு
நாள் புணரச் சென்ற என்னோடு இவள் கண்
பார்வை மாத்திரத்தாலே ஊடல் செய்து,
புணர்தலிலே என்னைப் பார்க்கினும்
விரைவுற்றுக் கண் மாத்திரத்திலே ஊடிய
அதனையும் அப்பொழுதே மறந்து கூடினாள்.
அதற்கு மாறாக இப்போது, எவ்வாறு
வருந்தியும் புணர்ச்சியிலே விரையாது
ஊடல் செய்வதால் இவள் யாரோ ?
தெரியவில்லை' யென்றாலோசிக்கவு மாயினான்

---

# 111 - ஆம் அதிகாரம்
# நெஞ்சொடுபுலத்தல்

---

காரணம் உண்டாய விடத்தும் பிணங்க நினையாது புணர்ச்சி யின் கண்ணே விரைகின்ற நெஞ்சொடு தலைவி பிணங்குதலும் தலைவன் பிணங்குதலுமே, 'நெஞ்சொடு புலத்தல்' எனப்படும்.

தலைவி தன் காதலனிடத்துக் குற்றம் உண்டாகிய விடத்தும் பிணங்க நினையாத தன் நெஞ்சை நோக்கி, 'ஏ! மனமே! தலைவர் மனம் நம்மை நினையாமல் அவர் வசப்பட்டு நிற்றல் கண்டிருந்தும், நீ அவரை நினைந்து என் வசப்பட்டு நில்லாதது என்ன வகையோ? நீயாக ஒரு காரியத்தைச் செய்யாவிட்டாலும் செய்வாரைப் பார்த் தாகிலும் செய்யலாகாதா? அதுவும்

செய்கின்றாயில்லையே. ஆகவே, உன் தன்மை யாதாகும்? அந்தோ பாவம்! அத்தகைய தன்மையி னாற்றான் நம்மிடத்துத் தலைவர்க்கு அன்பில்லை யென்றுள்ளபடி அறிந்தவிடத்தும் நாம் போனால் பழைய தாட்சணியத்தால் கோபியாரென்னும் கொள்கையை மேற்கொள்கின்றாய் போலும். இம்மட்டோ! அவர் மனம் என்னை நினையாது அவர் அளவிலே அடங்கியிருக்க, நீ மட்டும் எனக்கென நில்லாது அவரிடம் செல்லுகின்றாய். இவ்வாறு, அவர் பின் செல்வது உனதியல்போ? அன்றிக் கெட்டார்க்கு நட்டார் ஒருவரும் இல்லையென்னும் உலகவியல் போ? துன்பம் வந்த காலத்து நீயே எனக்குத் துணையாகாவிடின், வேறு யார்தான் துணையாவார்? மாண்பற்ற உன்னோடு

சசகூ

என்னுயிரினும் இனிய நாணத்தை யிழக்கவேண்டி யிருக்கின்றதே. நீ அவரைக் கண்டபோதே இன்பம் அனுபவிக்க நினைப்பதல்லாமல், அவர் குற்றத்தை நோக்கிப் பிணக்கை முன்னுண்டாக்கி, அவ்வின்பத்தைப் பின் அளவறிந்து அநுபவிக்க நினைக்க மாட்டாய். ஆகவே, அப்படிப்பட்ட உன்னோடு யாது செய்வேன்!' என்றுரைத்தாள். அதுகாலே, தலைவனிடமிருந்து தூது வந்த தோழியை நோக்கித் தலைவி பின்னும் சொல்லுவாளாகி, 'ஆ! என்னன்பார்ந்த அருந் தோழியே! என்னேழை நெஞ்சின் இயல்பை யென்னென்றுரைப்பேன்! தலைவரைச் சேராத நாளிலும் சேர்ந்திருப்பதற்கு அஞ்சுகின்றது. சேர்ந்த

நாளிலும் அவர் பிரிவை நினைத் தஞ்சுகின்றது. ஆதலால், என் மனமானது எக்காலத்தும் எவ்வகையானும் நீங்காத துன்பத்தையே அடைகின்ற தென்பது சொல்லவும் வேண்டுமோ ? அம்மட்டோ ! அவரைப் பிரிந்திருக் கும் காலத்து அவர் கொடுமைகளைத் தன்னோடு நினைத்தால், அப் போது, அது என்னைத் தின்பது போலவு மன்றோ துன் பஞ் செய்கின்றது. ஆகையால், இம்மனமானது நம்மைவிட்டு விலகியவராகிய அத்தலைவரோடு ஊடுவ தெங்ஙனம்? ஆதலாலன்றோ தன்னை மறந்த அக்காதலரைத் தான் மறக்க மாட்டாது தவிக்கின் றது. அவரைக் காணாதபோது அவர் கொடுமைகளை நினைத்தும், கண்டபோது அவைகளை மறந்தும், ஒரு நிலையில் நில்லாது கஷ்டப்படுகின்றதே. ஆகவே, அத்தகைய அறிவிலாத

மனத்தோடு கூடிய நான் உயிரினுஞ் சிறந்த நாணத்தை நழுவ விடாதிருப்பதெங்ஙனம்? ஆழ்ந்து பார்க்குமிடத்து, நான் அத்தகைய இயல்பினுலேயே தலைவரைக் கண்டவுடன் புணர்ச்சிக்குப் பொருந்துபவளாகவு மிருக்கின்றேன். ஆகவே, இவைகளெல்லாம் இவ்வறி விலா மனத்தின் செய்கை யல்லவா? ஆனல், இங்கொன்றறியக் கிடக் கின்றது. உயிர்மேல் ஆசையுடைய மனமானது 'நம்மை யிகழ்ந்து சென்ருரென்று நாமும் இகழ்வோமானல், பின்பு நமக்கு அவமானமாம்' என்று எண்ணி, அத்தலைவர் திறத்தையே நினைக்கின்றது.

எனப் பலவாறுரைக்கலாயினள். நிற்க.

தலைவியின் தீராத வூடலை யுணர்ந்தவனுகிய தலைவன் தன் மனம் வாடி யவனய், ' அந்தோ ! எனக்குரித்தாகப்பெற்ற என்

ருள

சுருஎ திருக்குறள் தீயாலங்காரம்

[காமத்துப்பால் நெஞ்சமேனும் எனக்குத் துணையாகின்றதா ? அவள் அன்பில்லாத வள் என்று அறிவுறுத்தினலும், அவள் பால் அனுபவித்த இன்பத் தினையே நினைத் தல்லற்படுகின்றது. ஆகையால், நான் செய்யும் வகை என்னே?" வெனச் சொல்லிப் பின்னும் அம்மனதைத் தேற்று வானகி, 'ஓ! மனமே! உலகில் ஒவ்வொருவருக்கும் உரித்தாக வுடையது அவரவர் மனமேயாகும். அவ்வாறிருக்க, நீ அயலார் உறவை அடைய விரும்புவது அறிவினத்தினும் அறிவினமல்லவா ? ஆராயுமிடத்தும், அத்தகைய அறிவினத்தினலேயே அவளை என் காதலியெனக் கருதி இங்ஙனம்

கஷ்டப்படுத்துகின்றாய் போலும். அந்தோ பாவம் ! அவளாயிருப்பின் என்னை இங்ஙனம் அல்லற்படுத்துவதற்கு அருகளாவளோ ?' என்றறிவிக்கா நின்றனன்.

---

## 112 - ஆம் அதிகாரம்
## புலவி

---

தலைவன் தலைவி என்னும் இருவர்

மனதும் புணர்ச்சியின்
கண்ணே விரையாது பிணங்க நினைந்த வழி
பிணங்கலே, 'புலவி' எனப்படும்.

ஒருவரோடொருவர்

தலைமகனால் தூதாக அனுப்பப்பட்ட தோழி தன் தொழில் முடிதற்பொருட்டுத் தலைவியோடு நகையாடியவளாய், 'ஆ! என தருந்துணைவியே! அக்காதலர் அடையும் துன்பநோயினைச் சிறிது காண்போம். நீ அவரை விரைந்து போய்த் தழுவாமல் இருந்து ஊடல் செய்வாயாக. ஊடல் புணர்ச்சி இன்பத்திற் குகந்ததாகும். ஆனால், அவ்வூடலை அளவுக்கு மிஞ்சி அதிகப்படுத்தினால், உண்ணும் உணவில் உப்பளவு மிஞ்சியதுபோல அவ்வின்பமும் ஒவ்வாததாகும்; புணர்ச்சியும் இன்பம் தாராது என்பது புகலவேண்டியதில்லை' என நவில்வாளாயினாள். அதுகேட்ட தலைவியும் அங்ஙனமே ஊட அவாவுற்றிருந்தாள்.

தலைவன் பரத்தையரிடமிருந்து வந்தபோது, தலைவி உண்மை யாகவே ஊடல் செய்து, கண் சிவந்து, நுதல் வேறுபட்டு, ஆற்



றுக வொணுத் துயரத்தி லாழ்ந்தவளாய், ' அந்தோ பாவம்! அங்கு உங் கள் ஆசை நாயகி ஆற்றுதவளாகி அல்லற்படுவள்; ஆகையால், மீண்டும் அங்குச் செல்ல விரைவீராக. நீர் செல்லாவிடின் அவள்

எங்ஙனம் ஆற்றியிருப்பாள் ? ஆடவர், தம்மை அடையாமற் பிணங்கிய மகளிரை அப் பிணக்கு நீக்கிப் புணராமல் விடுதல், 'முன்னே துன்பமுற்று வருந்தினவருக்கு அதன்மேலும் மிகத் துன்ப நோயைச் செய்ததுபோ லாகு மென்பது உமக்குத் தெரிந்தே யிருக்கலாம். உம்மோடு பிணங்கிய பரத்தையரை நீர் பிணக்குத் தீர்த் துக் கூடா திருந்தால் வாடிய கொடியை அடியிலே அறுத்த தன்மை போலாகுமென்பதையும் நீர் அவசியம் கவனிப்பீராக,' என்றறி வித்து, அளவுகடந்த துயரத்தில் ஆழ்ந்திருந்தாள் . அவ்வாறு மனம் நொந்திரா நின்ற அம்மங்கையை, அவள் மணாளன் அன் பான வார்த்தைகளால் அகங் குளிரச் செய்து அளவு கடந்த இன் பத்தை அநுபவித்து, அவ்வின்பத்திற்கு எதுவாகிய

புலவியை வியந் தவனாய், ' நற்குணங்களாலே தகுதியுடைய தலைவர்க்கு அழகாவது ஒன்றுண்டு. அஃதியாதெனில், மலர்போலுங் கண்களையுடைய மங்கையர்கள் மனத்திலுண்டாகின்ற பிணக்கின் மிகுதியேயாம். ஆகையாலன்றோ ஆழ்ந்துணர்ந்த அறிஞர்களும், காமமானது மிகுந்த கலாமாகிய துனி யில்லாவிட்டால், உண்பார்க்குச் சுவை யுடையதாகிக் கொம்பிலே பழுத்து உதிரும் பருவத்துக் கனிக்குச் சமானமா யிருக்குமென் றெடுத்துக்காட்டி யுள்ளார்கள்? அதனை நாமும் அநுபவமாகக் கண்டோமன்றோ ! ஆகவே, இன்பம் அநு பவிப்பார்க்குக் கலாமாகிய புலவி யில்லாவிட்டால் உண்ணும் பருவமில்லாத கருங்காயைக் கண்டாற்போலக் களிப்பை அளிக்கா தென்பதும் கரதலாமலகமேயாகும். ஆனால், அங்ஙனம் வேண்டப் படுவதாகிய

ஊடலிடத்தும் ஒரு துன்பமுளது. அஃதாவது இனிப் புணர்ச்சியானது நீட்டிக்குமோ ? அல்லது நீட்டியாதோ என்பதேயாம். எனினும், அவ்வெண்ணத்தினாலேயே ஊடல்மாறிக் கூடலுக் கிசைவதாயுளது ' எனப் பலவாறு தனக்குள்ளே சொல்வானாயினன்.

பிறகு, அத்தலைவன் பின்னும் பரத்தையர் சேரியிற் சென்று வர, அதுகண்ட தலைவி அவனிடத்து அளவில்லாத ஊடலைச் செய்



தாள். அதனைப் பல காரணங்களாலும் தீர்க்க முயன்றும் தீர்க்க முடியாத தலைவன், ஆற்றுதவனாய், ' அந்தோ ! இவர் தம்பொருட்டு வருந்தினரென்று அவ்வருத்தத்தை அறிகின்ற அன்பில்லாதவரிடத்து, நாம் வருந்துகின்றதனால் யாது பயன் ?

உயிர்கட்கு இன்றி யமையாத குளிர்ந்த நீரேயாயினும், ஒவ்வாத இடத்திலுள தாயின் அவை இனிமையாகுமோ ? ஆகாது. அதுபோலப் புணர்ச்சிக்கு வேண்டியது பிணக்கேயாயினும், அன்பில்லாத இடத்துண்டாயின் என்ன பயனுடைத்து ? இவள் நம் ஆற்றுமை கண்டும் ஆசையுடையவளாகவில்லை ? எனினும், என் மனமானது இவள் அன்பும் அருளும் அற்றவள் என்றெண்ணுகின்றதா? இல்லையே. ஆதலாலன்றோ அஃது அவளை விட்டகலாததுமன்றி, அவ்வின்பத்திலும் அவாக்கொண்டு என்னை அல்லற்படுத்தும் தன்மையுடையதாகின்றது? ஆயினும் என்ன பயன் ? தான் ஊடலிலே வருந்தி நிற்கவும் தன்னைக் கைவிட்டிருப்பவரோடு என் மனம் கூடக் கடவேனென்று முயற்சி செய்தற்குக் காரணம் தன்னுசையே

அன்றி வேறன்று' எனக்கூறி எல்லையில்லாத் துயரத்தி லாழ்ந்தவ னாயினன்.

---

## 113 - ஆம் அதிகாரம்
## புலவி நுணுக்கம்

---

தலைவனும் தலைவியும் ஒரு சயனத்தில் கூடியிருந்தபோது, அவனிடத்துப் பிணங்குதற்குக் காரணம் இல்லையாகவும், காதல் மிகுதலால் நுண்ணிதாகிய ஒரு காரணம் இருப்பதாக உட்கொண்டு, அக்காரணத்தை அவன்மேல் ஏற்றி அவள் பிணங்குதலே, 'புலவி நுணுக்கம்' எனப்படும்.

தலைவன் தன்னுருயிர்க் காதலியோடு ஒரு படுக்கையிலே கூடியிருக்குங்கால், அத்தலைவி அளவுகடந்த காதலால் தன் காதலன் பொதுமகளுடன் புணர்ந்திருந்தான் என்னும்

பொருமையைக் காட்டிப் புலந்தவளாய், ‘ அந்தோ ! நீர் பரத்தையரிடத்துச் செல்லு தலை யுடையீர். அன்றியும், பெண்ணியல்பினை யுடையாரெல்லாருந் தமது கண்களால் பொதுவாக வும்மை அநுபவிப்பார்களன்றோ! 
சூருங லால், அப்பெண்கள் எச்சிலாகிய உமது மார்பைப் பொருந்தேன் ’ என்றாள். அதுகண்ட தலைவனும் அதிசயித்தவனாய்ப் பின் அவ் வூடலைத் தீர்த்துக் கூடி யகன்றனன். அதுகாலை, அத்தலைவி தான் அநுபவித்த இன்பத்தை நினைந்து அகமகிழ்ந்தவளாய்த் தன தருந் தோழியை நோக்கி, ‘ ஆ ! என தன்பான தோழியே ! அத்தலைவர் கள்ளத்தை யாதென்றுரைப்பேன் ! இன்று நான் அவரோடு ஊடல்செய்து பேசாதிருக்க, அவர் அவ்வூடலையும் அகற்றி நான் அவரை

நெடுங்காலம் வாழ்க வென்றுரைக்கும்படியும் செய்து விட்டார். நான் அவரை வாய்திறந்து வாழ்த்துவே னென்றெண் ணிேய அவர் தும்மினர். நானும் வழக்கப்படி வாழ்த்தினேன்' எனக் கூறினள்

.

அதுகேட்ட தோழி அதிசயமுற்றவளாய்த் தலைவனைக்கண்டு, ' நீங்களிருவரும் கூடியிருந்தும் இவ்வூடல் உண்டாதற்குக் காரணம் யாதென்று கேட்க, அவனும் அதனை அறிவிப்பானுகி, ' அந்தோ ! அதன் விந்தையை நீ அறிந்தாயில்லை போலும். ஒரு நாள் விளைந்த பூமாலையைச் சூடினேன். அதுகண்ட அத்தலைவி 'உம்மால் இச்சிக்கப் பட்ட ஒருத்திக்கு இப்பூ அலங்கரித்தலைக் காட்டுதல் வேண்டிச் சூடினீரோ ?' வென்று கோபியா நின்றனள். அன்றியும், காமம் அநுபவித்தற்கு உரிய

இருவராயுள்ளவர் எவரினும் மிகுந்த காதலையுடையே மென்பது நினைத்து ' யாவரினும் மிகுந்த ஆசை யுடையேம் ' என்று அறிவித்தேன் ; அதனை ஆழ்ந்துணராது, என்றால் விரும்பப்பட்ட மாதர் பலருள்ளும் தன்னிடத்து மிகுந்த காதலையுடையேன் எனக் கூறியதாகக் கருதி நின்றனள். இம் மட்டோ ! நான் என் கண்மணியாகிய அப்பெண்மணிமேல் கொண்ட காதலால், ' இம்மையில் நாம் பிரியோம்' என்றுரைக்க, அதற்கு மறுபிறப்பில் பிரிவோம் என்று நான் பொருள் கொண்ட தாக எண்ணி, அவள் கண்ணிறைந்த நீரைக் கொள்வாளாயினள். இன்னும், அவளைப் பிரிந்திருந்த காலத்தில் அவளையே இடைவிடாது நினைத்தேன் என்னும் கருத்தைக்கொண்டு, ' நான் உன்னையே நினைத்தேன்' என்றுரைக்க, அதனை அவள்

சிந்தியாது, ஒருக் கால் மறந்து பின் நினைந்தேன் என்றெண்ணி, 'என்னை மறந்திருந் தீரோ ?' வென்று சொல்லி முன்னே தழுவுதற்கு நினைந்தவள் தழு



வாதவளாய்ப் புலந்தாள். இன்னும், நாங்கள் இருவரும் ஒருங்கே இரு ந்தபோது, நான் தும்மினேன். அங்ஙனம் தும்மியவென்னை அவள் தன் இயற்கைப்படி வாழ்த்திப் பின் என்னைப் பார்த்து, 'உமது காதலுக்குரிய பெண்களில் எவர் நினைக்க நீர் இப்பொழுது தும்மி னீர்?' எனச் சொல்லி அழுதாள். அதனை அறிந்த நான், இவள் தவ றுக எண்ணுவாள் என்று பின் னும் எழுந்துவந்த தும்மலை அடக்க, அதனை அறிந்த அவள் 'நீர் காதலித்த

பெண் உம்மை இப்போது நினைத்தலே நான் அறிய வொட்டாது மறைக்கப் பார்க்கின்றீரோ !" எனச் சொல்லிப் பின்னும் புலந்தாள். இவைகள் தாமோ ? இன்னும் கேட்பாயாக. இவ்வண்ணம் எவ்வகையானுந் துன்பப் படுகின்றாளே யென்று நம்மேல் ஏற்றிய குற்றங்களை நாம் ஒப்புக்கொள்வதே உசிதமெனத்தேறிப் பிணங்கிய அவளை நான் வணங்கிப் பிணக்குத் தீர்த்தால், அவள் பிறமாதர்கள் பிணங்கிய போதும் இங்ஙனமே வணங்கித் தீர்ப்பேன் என்றெண்ணி வருந்து வாள். இவைகளை யெல்லாம் பார்த்த நான் இவள் எவ்வகையாலும் தெளியாளெனத் தேர்ந்து, அச்செயலும் சொல்லும் இல்லாம லிருந்து அவள் அவயவங்களின் ஒப்பில்லாமையை உற்று நோக்கி ஒருவாறு ஆநந்தித்திருந்தாலும், ' நீர் என் அவயவங்களை

யெல்லாம் எந்தப் பெண்ணினுடைய அவயவத்துக்கு ஒப்பென்று உற்றுநோக்கி உள்ள மகிழ்கின்றீர்?' சொல்லு மென்பாள். ஆகவே, இப்படிப்பட்ட என் காதலி புலப்பதற்கு என்ன காரணம் வேண்டும்?' என்றெடுத்துரைக்க லாயினன்.

---

## 114-ஆம் அதிகாரம்
## ஊட லுவகை

---

ஊடலால் தமக்குக் கூட லின்பம் சிறந்த விடத்து, அச்சிறப் பிற்குக் காரணமாகிய அவ்வூடலைத் தலைவியும் தலைவனும் விரும் பிப் பேசுதலே, 'ஊடலுவகை' எனப்படும்.

தலைவி காரணமின்றியே ஊடுதலை யறிந்த தோழி அதிசயித்த

வளாய்த் தம்மாருயிர்த் துணைவியாகிய அத்தலைவியை நோக்கி, அங்



ஙனம் அவள் காரணமின்றி யூடுவதேன் ? என்று கேட்க, அத் தலைவியும் அதன் காரணத்தை ஐயந்திரிபற அறிவிப்பாளாகி, ' அந்தோ ! எனதருந் தோழியே ! அக்காரணத்தை நீ யறிந்தாயில்லைபோலும். ஆயினும், நான் அறிவிக்கின்றேன் ; கேட்பாயாக. அத்தலைவரிடத்துப் பிழைகளில்லாதிருந்தாலும், நமக்கவர் அருள் செய்வதுபோல மற்ற மாதரும் செய்யப்பெறுவரென்ற பொறாமையே அங்ஙனம் ஊடலை உண்டாக்குகின்றது. எனினும், அதனால் நமக்

குத் துன்பமுண்டாகுமோ? உண்டாகாது. ஊடுதல் காரணமாக

நம்மிடத்துத் தோன்றுகின்ற சிறிய துன்பத்தால், தலைவர் செய்

கின்ற நல்லருள் வாடுமாயினும், பின் பெரிய இன்பம் பயக்குமென்ப

துறுதி. ஆராயுமிடத்தும், அதனைப்போல அரிய இன்பம் அவ்வுலக

மாகிய விண்ணுலகத்தும் இல்லையென்றே சொல்லலாம். ஏனெனில்,

நிலத்தோடு இயைந்த நீரானது அந்நிலத்தின் இயல்பாகவே மாறு

வதுபோல, நம்மோடு ஒற்றுமையுடைய காதலரும் நம் இயல்

பாகவே இருப்பாரன்றோ? ஆகையால், அவ்வூடல் இன்பமே

யென்பதும், எளிதில் நீங்கு மென்பதும் எடுத்துக் காட்டவேண்

டியதில்லை. இப்போது, நீ அவ்வூடல் எதனால் நீங்குமென்னலாம்.

நாம் ஊடியிருக்கும்போது நம் காதலர் பணிந்த மொழிகளாலும், தணிந்த செயல்களாலும் பாராட்டுகின்றார்; அந்த வணக்கமும், வார்த்தையுமே நமதுள்ளத்தை யுடைக்கும் படையாக விருந்து அவ்வூடலைத் தீர்க்கும்' எனப் பலவாறு உவந்துரைப்பாளாயினள்.

நிற்க.

தலைவியை ஊடல்நீக்கிக் கூடிய தலைவன் உற்சாகத்தோடு முக மலர்ந்தவனாய், ' அந்தோ ! அவ்வூடலில் உண்டாகிய இன்பத்திற் கோரளவுண்டோ ? இல்லை. ஆதலாலன்றோ, அறிவுடைய ஆடவர் தம்மால் விரும்பப்படும் மாதரது மெல்லிய தோள்களைக் கூடப் பெறாது ஊடுதலால் சொல்லுதற்கரிய ஓரின்ப முடையவ ராவார் எனச் சொல்லப்படுகிறது.

உயிர்கட்குப் பின் உண்
ணுதலைப் பார்க்கிலும்
முன்னுண்ணப்பட்டது சீரணித்தல்
இன்பமாவது போலக் காமத்துக்கும்
பின் புணர்தலைப் பார்க்
கிலும் முன்னுள்ள குற்றங்காரணமாக
ஊடுதல் இன்பத்தைக்
கொடுப்பதாக விருக்கின்றதென்பதும்
எளிதில் விளங்குகின்றது. ௩௱௰௬

## திருக்குறள் தீபாலங்காரம்

[காமத்துப்பால் அன்றியும், காமம்
அநுபவித்தற்கு உரியவராகிய இருவருள்
ஊடலிற் றோற்றவரே வென்றவராவ
ரென்பதும் வெளிப்படையாக
வுணரப்பெற்றேன். முன்னே முயங்காமல்
ஊடிக்கொண்டவளாகிய இவளுக்கு எதிரே
நிற்க முடியாது இளைத்த நானே
எல்லையில்லா யின்பத்தை அடைய

விருந்தது. ஆ! அவ்வின்பத்தை
யாதென் றுரைக்கலாம். ஆழ்ந்து
பார்க்குமிடத்து, அவ்வுலகத்து இன்பமும்
அதற்கீடாகாதே ' என்றதிசயித்தான்.
பிறகு தலைவன் நெற்றி வியர்வை
யுண்டாகும்படி புணர்ந்த இன்பத்தை
இன்னுமொரு தரம் அநுபவிக்க
ஆவல்கொண்டு, ' அந்தோ! ஆபரணங்களை
அணியப்பெற்ற இம்மங்கையானவள்
இன்னும் ஒருமுறை என்னோடு
ஊடுவாளாக. அங்ஙனம் இவள் ஊடி
நிற்றற்கும் அவ்வூடலைத் தீர்த்தற்பொருட்டு
நான் இவளை யாசித்து நிற்றற்கும்
இவ்விரவு விடியாமல் நீடித்து நிற்கவேண்டும்.
உயர்ந்த இன்பமாவது அதனை
அநுபவித்தற்கு உரியோர்
ஆற்றுமைபற்றித் தம்முள் ஊடுதலும்,

அவ்வூடலை அளவறிந்து நீங்கித் தம்முள் புணர்தலுமாம்' என்று தனக்குள்ளே கூறி, அத்தகைய ஊடலின்பத்தினையும் கூடலின் பத்தினையும் தானே அடைந்தவனென் றெண்ணிப் பின்னும் எல்லையில்லா இன்பத்திலாழ்ந்து எல்லாம் வல்ல கருணை நிதியாகிய இறைவனைப் போற்றுவானாயினான்.

கற்பியல் முற்றிற்று.

காமத்துப்பால் முற்றிற்று.



# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|

| | | | |
|---|---|---|---|
| 8 | 5 | போயினள | |
| 18 | 33 | யும் | |
| | | | போயினள் |

...

## நூல்

| | | | |
|---|---|---|---|
| 14 | 10 | நீா | நீர் |
| ... | 24 | பெறுகிறவரென்பது | பெறுகிறவர்களென்பது |
| 22 | 18 | ஒரே | ஒரு |
| 42 | 19 | செவ்வ | செல்வ |
| 43 | 5 | லிலக்கணமாக | லிலக்கியமாக |
| ... | 6 | உபாசாரம் | உபசாரம் |
| ... | 12 | யடைகிறார் | யடைவார். |
| 49 | 29 | உபகாரமாமே | உபகாரமே |
| 50 | 1 | யுயகாரம் | யுபகாரம் |
| 53 | 2 | சோழ | சோழன் |
| 55 | 8 | முகத்தற்கும் | முகர்தற்கும் |
| 56 | 23 | துரியோதனுதி | துரியோதனனுதி |
| 57 | 1 | கிடக்கின்றது | கிடக்கின்றன |
| 59 | 15 | செருக்காய் | செருக்கால் |
| 63 | 8 | சைாத் | சைரந் |
| ... | 12 | வேறல்லார் | வேறல்லர் |
| 64 | 14 | புறனில் | பிறனில் |
| 66 | 18 | மாடம் | மடம் |

| | | | |
|---|---|---|---|
| ... | 25 | அறங்குபவளை | அறங்குவளை |
| 74 | 28 | பாதங்கங் | பாதகங் |
| 77 | 12 | லிரங்கிய | லிறங்கிய |
| 85 | 22 | வலியறுத்தி | வலியுறுத்தி |
| 89 | 1 | பட்டணங்களையம் | பட்டணங்களையும் |
| 91 | 11 | அதற்குரிய | அவற்றிற்குரிய |
| 93 | 8 | சக்கிரவர்த்தி | சக்கரவர்த்தி |
| 96 | 7 | யாகும் | யாவான் |
| 100 | ... | விழுந்தா | விழந்தா |
| ... | 26 | மடவேனை | மடவோனை |
| 104 | 1 | புகழுொடு | புகழொடு |
| ... | 18 | மறைப்புணடு | மறைப்புண்டு |
| 108 | 24 | யளித்தா | யளித்தார் |
| 116 | 32 | பெரியோரர்களை | பெரியோர்களை |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 122 | 23 | காக்கத்தன் | காக்கதன் |
| 126 | 18 | வாம்மை | வாய்மை |
| 133 | 2 | பீரிட்டுப் | பீறிட்டுப் |
| 140 | 27 | டொழுவோ | டொழுகுவோ |
| 203 | 6 | நான் | நன் |
| 232 | 16 | வரை | வசை |
| 236 | 20 | இராவேணே | இராவணே |
| 250 | 14 | மடியுளான் | மடியுளாண் |
| ... | 25 | மெய்வருந்த | மெய்வருத்த |
| 253 | 30 | பெரியோர் | பெரியோர் |
| 256 | 9 | சுக்கீ | சுக்கி |
| 266 | 17 | வலல | வல்ல |
| 269 | 28 | யானையார்த் | யானையாத் |
| 286 | 10 | வலியுறித்தி | வலியுறுத்தி |
| 304 | 23 | வேண்டும் | வேண்டும் |
| 309 | 10 | வீடுபடுபட்டு | வீடுபட்டு |
| 316 | 8 | செல்வமும | செல்வமும் |
| 326 | 18 | பண்டவர் | பாண்டவர் |
| 328 | 22 | விகழசமை | விகழாமை |
| 336 | 8 | யுள்ளார் | யுள்ளது |
| 348 | 16 | ராயினும | ராயினும் |
| 378 | 25 | தரித்து | தறித்து |
| 380 | 11 | இல்லைப் | இல்லை |
| ... | 21 | செவ்வ | செல்வ |
| 384 | 5 | எருவாவதற்ரும் | எருவாவதற்கும் |
| 386 | 12 | பேதமை | பேதைமை |
| 387 | 2 | செல்வத்தர் | செல்வந்தர் |